


திருவவதார 961 உத்ஸவம்

# நினைவு மலர்

ஸ்ரீ உடையவர் கைங்கர்ய ஸபை, திருவல்லிக்கேணி

ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணர்ணவம் |
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம் ||

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம் |
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தே குருபரம்பராம் ||

யோ நித்ய மச்யுத — பதாம்புஜ — யுக்ம — ருக்ம—
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே |
அஸ்மத்குரோர் பகவதோர்ஸ்ய தயைகஸிந்தோ :
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே ||

•

மாதாபிதாயுவதயஸ்தநயாவிபூதிஸ்
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம் |
ஆத்யஸ்ய ந : குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா ||

srivatsam

பூதம் ஸரச்ச மஹாதாஹ்வய பட்டநாத
ஸ்ரீபக்திஸார குலசேகரயோகிவாஹாந் |
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிச்ராந்
ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம் ||

காஷாயசோபி — கமநீயசிகா — நிவேசம்

தண்டத்ரயோஜ்ஜ்வல — கரம் விமலோபவீதம் |

உத்யத் — திநேசநிபம் உல்லஸதூர்த்வபுண்ட்ரம்

ரூபம் தவாஸ்து யதிராஜ ! த்ருசோர் மமாக்ரே ||

செக்க ருடையுஞ் சிகையின் செழிப்புந் திருக்கரத்தில்

ஒக்க வுயர்த்தமுக் கோலு முபவீதத் தோரெழிலும்

மிக்கு விளங்கக் கதிரி னுயர்நாம மின்னுடனே

புக்கென் விழியுட் பொலியு மெதிபநின் பொன்னுருவே.

srivatsam

[ யதிராசரே ! சிவந்த உடையும், சிகையின் செழிப்பும், திருக்கரத்தில் ஏந்திய த்ரிதண்டமும், யஜ்ஞோபவீதமும், உதிக்கும் சூரியனின் விளங்கும் திருமண் காப்பும் பொலியும் தேவரீரது திருவுருவம் அடியேனுடைய கண்களுட் படிந் துள்ளது ].

பற்ப மெனத்திகழ் பைங்கழ லுந்தன் பல்லவமே விரலும்

பாவன மாகிய பைந்நூல் மாருடை திகழ்ந்த மருங்கழகும்

முப்புரி நூலொடு முன்கையி லேந்திய முக்கோல் தன்னழகும்

முன்னவர் தந்திடு மொழிகள் நிறைந்திடு முறுவல் நிலாவழகும்

கற்பக மேவிழி கருணை பொழிந்திடு கமலக் கண்ணழகும்

srivatsam

காரி சுதன்கழல் சூடிய முடியும் கனகநற் சிகைமுடியும்

எப்பொழுதும் எதி ராசன் வடிவழகென் னிதயத் துளதால்

இல்லை யெனக்கெதிர் இல்லை யெனக்கெதிர் இல்லை யெனக் கெதிரே.

—

# முன்னுரை

அரவரசப் பெருஞ்சோதியாம் ஆதிசேஷன் ஸ்ரீராமாநுஜராகத் திருவவதரித்தமை, திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதிப் பெருமானின் பேரருளாலே என்றும், இப்பெருமானே இங்ஙன் அவதரித்தான் என்றுங் கருதப் பெறுவதால், இந்த ஸந்நிதியில் கோயில்கொண்டுள்ள ஸ்ரீராமாநுஜரது மாதத் திருநக்ஷத்ர உத்ஸவங்களும் வருஷ உத்ஸவமும் மிகவும் சிறப்புடன் நடந்துவருகின்றன.



திருவல்லிக்கேணி ஸ்ரீ உடையவர் கைங்கர்ய ஸபை, ஸ்ரீராமாநுஜராகிய உடையவர் கைங்கர்யத்தில் மண்டிப் பேருக்கத்துடன் உத்ஸவங்களை நடத்தி வருவது யாவரும் அறிந்ததே. இப்பிங்கள வருஷம் ஸ்ரீ உடையவரது 961 வது திருவவதார வருஷமாகலின், இந்த ஸபை இவ்வருஷச் சித்திரை உத்ஸவத்திற்கெனவே நியமிக்கப்பெற்ற தனிக் கமிட்டியின் ஒத்துழைப்பைக் கொண்டு, வருஷ உத்ஸவத்தைப் பெரியோர் பாராட்டும் வகையில் நடத்தி, ஸ்ரீ உடையவரைப் பற்றி இந்நகரில் பல பேட்டைகளிலும் பிரவசனங்களும் மாநாடுகளும் நிகழ்த்தி, ஸ்ரீ உடையவர் தினசரி அணிந்து கொள்ளத் திருவாபரணங்களும் செய்து ஸமர்ப்பித்துள்ளது இந்த உத்ஸவத்தை ஒட்டிய நினைவு மலர் ஒன்றும் உருவாகி அண்மையில் வெளிவரும். இம்மலரில் அடங்குவன : ஸ்ரீ உடையவரது வரலாறு, உபதேசங்கள், இவர் அருளிய நூல்கள், இவரைப் பற்றிய அரிய கட்டுரைகள்.

srivatsam

இம்மலர் ஆஸ்திக அன்பர்களுக்குப் பெரிதும் பயன்படும் என்று மகிழ்கின்றேன். இதில் தினசரிப் பாராயணத்திற்கான ஒரு பெரும் பகுதியும், ஸ்ரீ உடையவர் வாழ்க்கை சம்பந்தமான அரிய சரிதைக் குறிப்புகளுடன், இவர் உகந்த திவ்யதேசங்கள் பலவற்றுள்ளும் ஸந்நிதி அமைப்பு, எம்பெருமான்கள், உடையவர் முதலியன பற்றிய திருமுகப்படங்கள் ஒரு நூறுக்கு மேல் இலங்குகின்றன.

இவ்வருந் தொண்டில் ஈடுபட்டுள்ள ஸபையினரையும், பதிப்புக்குழுவினரையும்—குறிப்பாகச் செயலாளர்கள் ஸ்ரீ C. பார்த்தஸாரதி ஐயங்கார், ஸ்ரீ K. V. ஸ்ரீநிவாஸ ஐயங்கார், பொருளாளர் ஸ்ரீ R. வெங்கடேச ஐயங்கார் இவர்களையும் பாராட்டுகின்றேன். இவர்கள் இம்மலருக்குப் பல பக்தர்களிடமிருந்து ஆதரவு பெற ஓயாது உழைத்து வந்துள்ளனர். இந்த ஸபையின் தலைவர் ஸ்ரீ T.S. ராஜகோபால ஐயங்கார் கட்டுரைகளை ஆய்ந்து, மலரை உருவாக்கும் வகையிலே அரிய தொண்டாற்றியமைக்காகப் பெரிதும் பாராட்டிற்குரியவர். சென்னை சுந்தரம் சாரிடிஸ் ஸ்ரீ T. A. திருவேங்கடாச்சாரியார் வரம்பில்லா ஊக்கத்துடன் அரிய கட்டுரைகளையும், கிடைத்தற்கரியனவான திருமுகப் படங்களையும் சேகரித்து உதவியதற்கு நமது நன்றியைத் தெரிவிக்கின்றேன்.

உடையவரது வைபவம் பற்றி நடந்த பிரவசனங்களில் கலந்துகொண்ட உபயவேதாந்த வித்வான்கள் ஸ்ரீ உ. வே. கே. வரதாசார் ஸ்வாமி, ஸ்ரீ உ. வே. திருக்கள்ளம் நரஸிம்மராகவாசார் ஸ்வாமி முதலியோருக்கும், உபந்யாஸம் நடத்த உதவிய பெரியோர்களுக்கும், குறிப்பாக ஸ்ரீ. உ. வே K. மணவாள ஐயங்கார் ஸ்வாமிக்கும் ஸ்ரீவைஷ்ணவ உலகத்தின் நன்றியை நவில்கின்றேன். ஸ்ரீ உ. வே. T. S. ராஜம், சுந்தரம் மோட்டார்ஸ், பங்களூர், இவ்விழாக்களுக்குக் காட்டும் பேருக்கத்திற்கும், அருளும் பேருதவிக்கும் நமது தலையல்லால் கைம்மாறில்லை.

தமிழ்நாடு அறநிலைய ஆணையாளர் மாண்புமிகு K. பாலசுப்ரமணியம், I. A. S., அவர்கள் இப்பெரு விழாவில் பெருங்களிப்புடன் கலந்துகொண்டு யாவர்க்கும் ஊக்கம் அளித்தமைக்கும், ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி ஸந்நிதியில் நிர்வாஹ அதிகாரி, கைங்கர்யபரர் இவர்கள் செய்த பேருதவிக்கும் நம் பாராட்டும் நன்றியும் உரியன.

ஸ்ரீ K. கணபதி அவர்கள், உரிமையாளர், வசந்தா ஏஜன்ஸிஸ் ஸ்ரீபுரம், சென்னை, இப்பெரிய மலரை அச்சிட்டு மலர் வடிவாக்கி பேருக்கமும் பொறுமையும் கொண்டு, தெய்வத்தொண்டென உதவியமைக்கு நம்முடைய அன்பும் நன்றியும் இவருக்கு உரியன.

இம்மலர் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உற்ற துணையாகும். இதனை ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆதரிக்க விரும்புகிறேன்.

srivatsam

சென்னை,
15-10-76

தலைவர்

N. Krishnaswamy Reddy

[illegible] கமிட்டி.

# FOREWORD

IT is well known that the incarnation of Adisesha as Sri Ramanuja is due to the graces of Sri Parthasarathi Swami of Thiruvallikkeni and that Sri Parthasarathi Himself has incarnated as such. Sri Ramanuja enshrined in this temple is



hence worshipped with all honour and devotion. Sri Udayavar Kainkarya Sabha is the oldest institution in this locality and has been for a long time since conducting with great zeal and fervour the monthly and annual Thiru-nakshatra-utsavams. This Pingala year is the 961 st Thiru avathara year of this great Acharya and the Sabha has, with the full co-operation and guidance of a special committee, conducted the annual utsavam in a highly commendable manner, organised lectures and conferences on the life and teachings of Sri Ramanuja and presented for daily use, Thiru-Abharanams for Sri Ramanuja and is now bringing out a Souvenir comprising articles relating to his life and teachings and his works.

srivatsam

I have very great pleasure in recommending this Souvenir to all devotees' as it contains in particular, pages for daily parayanam, interesting anecdotes of religious and historic significance and various photographs—more than a hundred – of famous shrines with the Srimurthis and Sri Ramanuja.

I congratulate the organisers and the Editorial Board for bringing out this fairly bulky Souvenir. My special thanks are due to the Secretaries, Sri C. Parthasarathi Iyengar and Sri K. V. Srinivasa Iyengar and to the Treasurer Sri R. Venkatesa Iyengar for securing help and support from the public and to Sri T. S. Rajagopala Iyengar, President and Convener of the Editorial Board, for editing the articles and publishing the Souvenir with great care and devotion. A word of thanks is due to Sri T. A. Thiruvenkatachariar, Sundaram Charities, Madras, for securing very rare articles and photographs even from remotest parts.

Our grateful thanks are in no small measure due to the learned pandi
and scholars like Sri U. Ve. K. Varadachar Swami and Sri U. Ve. Thirukkall
Narasimha Raghavachar Swami who readily participated in lectures and confe
ences conducted in the various parts of the city, to enthusiastic devotees f
arranging such lectures and conferences and to well-wishers like Sri U. Ve. K. A. Man
vala Iyengar. Our special thanks are due to Sri U. Ve. T. S. Rajam, Director, T. V S
Bangalore, for his ready support and co-operation in this noble cause.

Last, but not least, our thanks are due to Sri K. Balasubramaniam, I. A. S
Commissioner, H. R. C. E. Board, for his valuable presence during the festival an
to the Executive Officer and Kainkaryaparars of Sri Parthasarathi Swami Templ
but for whom the festival could not have been such a success.

I mention with immense pleasure the name of Sri K. Ganapathi, Proprieto
Vasantha Agencies, Sripuram, Madras, for helping in printing and binding thi
bulky volume with great enthusiasm and patience and piety for this noble caus

srivatsam

I wish very much that this Souvenir is in the hands of every Sri Vaishnava

Chairman,

M. Krishnaswamy Reddy

Madras,
15-10-77

Special Committee.

# ஸ்ரீ உடையவரது 961ஆவது திருவவதார உத்ஸவம்

## திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதிப் பெருமாள் ஸந்நிதியில்

திருவள ரல்லிக் கேணியன் சீதரன்
அருளுடை யிராமா நுசனிவ் வவனியில்
ஒருமுனி யிராமா நுசனென உதித்தனன்
மருளற வவன்றன் மலரடி வணங்குவம்.

இத்தலத்து எம்பெருமான், பலராம னுக்குப் பின்தோன்றலாகலின் இராமாநுசனுவான். இவனே இராமாநுசனாக அவதரித்தான் என்பது பெரியோர்களது திருவுள்ளம். இது கருதியே இந்தக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ உடையவருக்கு ஒவ்வொரு வருஷமும் சித்திரை மாதத் திருவவதார உத்ஸவம் தனிச் சிறப்புடன் நடந்துவருகின்றது. ஸ்ரீ பார்த்தஸாரதிப் பெருமானுக்குப் போலவே இவருக்கும் காலை, இரவு இரண்டு வேளைகளிலும் புறப்பாடு, கங்கைகொண்டான் மண்டபத்தில் திருமண்டபத்துடன் நிகழ்கின்றது; பத்து நாட்களிலும் கண்ணாடி யறையில் எழுந்தருளியிருந்து ஸ்ரீ உடையவர் உத்ஸவம் கண்டருளுகிறார்.

இந்தப் பிங்கள வருஷத் திருவவதார உத்ஸவம் எப்போதும் காணாத சிறப்புடன் நடக்கவேண்டுமென்று ஆஸ்திகப் பெரியோர் விருப்பங்கொண்டதால், திருவல்லிக்கேணி ஸ்ரீ உடையவர் கைங்கர்ய ஸபையினர் உட்குழு ஒன்றை நிறுவினர். அதன் தலைவர் சென்னை உயர்நீதிமன்றம் முன்னாள் நீதிபதி மாண்புடை N. கிருஷ்ணஸ்வாமி ரெட்டியாராவர். குழுவினரது ஊக்கத்தால் உத்ஸவம், உலகம் பாராட்டும் வகையில் நடந்தது. திருவீதிகளில் மாவிலைத் தோரணங்கள் விளங்கின. இரண்டு வேளைகளிலும் பெரிய வாகனங்களில் புறப்பாடு, நாதஸ்வர இசை, வாத்யக்குழு இசை (band) இவற்றுடன் நடந்தது. எம்பெருமானார் கோஷ்டி திருவீதிகளில் அடங்க நிறைந்திருந்தது. இந்நகரத்தின் பல தொகுதிகளிலிருந்தும் பக்தர்கள் திரண்டு ஸ்ரீ உடையவரை ஸேவித்துக் களித்தனர்.

இவ்வுத்ஸவத்தைச் சிறப்பாக நடத்த உதவிய இந்த திவ்ய தேசத்து வாஸிகளையும் உபயக்காரர்களையும் ஏனையோரையும் வாழ்த்தி நன்றி நவில்கின்றோம்.

முதல் உத்ஸவத்தன்று காலையில் ஸ்ரீ உடையவர் தினந்தோறும் சாத்தியருளக் கிரீடம், கடுக்கன், தங்க யஜ்ஞோபவீதம், த்ரிதண்டம் இவை கைங்கர்ய ஸபையினர் ஸமர்ப்பித்தனர். கிரீடம், கர்ணபத்ரம் இவற்றிற்காக ஆடிட்டர் ஸ்ரீ. உ. வே. K. V. நரஸிம்மாசார் ஸ்வாமி பொருளளித்தார்; ஸ்ரீமதி அரவிந்தா, ஸ்ரீ சிங்கராசாரியார் இவர்கள் 4½ பவுனுக்கு யஜ்ஞோபவீதம் செய்தனர். அரையப்பாக்கம் ராஜம்மாள் கர்ணபத்ரத்திற்குத் தங்கமுலாம் பூசப் பொருள் உதவினார். இவர்களுக்கு இச்சபையினரது நன்றி.

ஒவ்வொரு வருஷமும் திருவவதார உத்ஸவம் ஸ்ரீ உடையவர் கைங்கர்ய ஸபையின் மூலமாக நடந்துவருகிறது. உபயக்காரர்களுள் பெரும்பான்மையினர் இந்த ஸபையின் மூலமாக உபயம் செய்து வருகின்றனர். இவ்வருஷம் இச்சபையினரது வேண்டுகோளுக்கிணங்க, அதிகச் செலவு செய்து உபயங்களைச் சிறப்புற நடத்தினர் உபயக்காரர்கள்.

தமிழ்நாடு H.R.C.E. Board அறங்காவலர் மாண்புடை K. M. பாலசுப்ரமணியம், I.A.S. அவர்களும், சென்னை உயர்நீதிமன்றம் முன்னாள் நீதிபதி மாண்புடை N. கிருஷ்ணஸ்வாமி ரெட்டியார் அவர்களும் முதல்

உத்ஸவம் காலையில் விஜயம் செய்து உத்ஸ வத்தைத் துவக்கி வைத்தனர். இவ்வருஷ உத்ஸவத்தின் சிறப்பைக் கருதி ஸ்ரீ பார்த்த ஸாரதிப் பெருமாள் ஸந்நிதியில் கைங்கர்ய பரர்கள் உத்ஸவத்தில் கலந்து கொண்டனர். தேவஸ்தான நிர்வாஹி உயர்திரு E. பொன்னப்ப பிள்ளை, B.Com., B.L. அவர்களும், உயர்திரு A. சேதுரத்னம், B.A. (E. O. in charge) அவர்களும் தேவஸ்தானத்திலிருந்து அதிகப்படி பொருளுதவி செய்து உத்ஸவத்தைச் சிறப்புற நடத்த ஒத்துழைத்தமைக்கு இச்சபையினரது நன்றி உரித்தாகும்.

முதல் உத்ஸவத்தன்று, எம்பெருமானார் கோஷ்டியில் கலந்துகொண்டு வரும் சிறுவர் 31 பேருக்கு ஸ்ரீ உ. வே. K. R. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் ஸ்வாமி, M. A., முன்னாள் தர்ம கர்த்தா, உடைகள் வழங்கினார். பத்தாம் உத்ஸவத்தன்று ஸந்நிதி அத்யாபகர்களுக்கு ஸ்ரீமான் செங்கல்வராய செட்டியார் (குமரன் ஸில்க் ஸ்டோர்ஸ், மாம்பலம்)-முன்னாள் தர்ம கர்த்தா) வேஷ்டி, உத்தரீயம் வழங்கினார். இவ்விருவருக்கும் இச்சபையினரது நன்றி.

இவ்வுத்ஸவத்தில் கலந்து கொண்ட மஹநீயர்கள் ஸ்ரீமத்பரமஹம்ஸ திருப்பதி சின்ன ஜீயர் ஸ்வாமி, மஹாமஹோபாத்யாய காஞ்சீபுரம் ப்ர. ப. ஸ்ரீ.உ.வே. அண்ணங்கராசார் ஸ்வாமி, ஸ்ரீ.உ.வே. சதாபிஷேகம் கோவிந்தாசார் ஸ்வாமி, ஸ்ரீ.உ. வே. புத்தூர் K. கிருஷ்ண ஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி, ஸ்ரீ உ. வே. வாகம்ருதவர்ஷி K. வரதாசார் ஸ்வாமி, ஸ்ரீ. உ. வே. நல்லான் ராம கிருஷ்ண ஐயங்கார் ஸ்வாமி, ஸ்ரீ. உ. வே. கோயில் கந்தாடை வாதூல தேசிகன் முதலியாண்டான் ஸ்வாமி, ஸ்ரீ. உ. வே. திருக்கோவலூர் யதிராஜ ஜீயர் ஸ்வாமி.

வாகம்ருதவர்ஷி ஸ்ரீ. உ. வே. வேளுக்குடி வரதாசார் ஸ்வாமி இந்த ஸபையின் சார்பிலே பின்வரும் இடங்களில் எம்பெருமானாரைப் பற்றிப் பிரவசனம் செய்தார்.

ஸ்ரீ வானமாமலைமடம்-திருவல்லிக்கேணி
மேட்டுப்பாளையம்
தேசிக பவனம், மயிலை
கேசவப் பெருமாள் கோயில், மயிலை
உடையவர் கோயில்-வட சென்னை
புரசவாக்கம்
எழும்பூர்.

20—3—77 அன்று வீனஸ் காலனி, ஆழ்வார் பேட்டையில் நடந்த மாநாட்டில் ஸ்ரீ. உ. வே ப்ர. ப அண்ணங்கராசார் ஸ்வாமி, ஸ்ரீ உ. வே உத்தமூர் வீரராகவாசார் ஸ்வாமி ஸ்ரீ. உ. வே. தூப்புல் லக்ஷ்மிநரஸிம்மாசார் ஸ்வாமி, ஸ்ரீ. உ. வே. பிள்ளைலோகம் பாஷ்யகாசார் ஸ்வாமி மற்றும் பல பெரியோர்கள் கலந்து கொண்டனர்.

23-4-77 அன்று ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி ஸந்நிதியில் சிறப்பு மாநாடு ஒன்று நடந்தது.



srivatsam

# மடாதிபதிகளின் மங்களாசாஸநம்

**ஸ்ரீமதே ராமாநுஜாய நம :**

**ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய**

**ஸ்ரீ வானமாமலை ராமாநுஜ ஜீயரின் மங்களாசாஸநம்**





srivatsam

எம்பெருமானார் வைபவம் என்பது வாசாம கோசரம். உபய விபூதி நாதனான பெரிய பெருமாள், காஞ்சியில் தேவப் பெருமாள் கைங்கர்யத்தில் ஈடுபட்டிருந்த எம்பெருமானாரை நிர்ப்பந்தமாக அழைத்துவந்து, அவரை ஆசாரியராக வரித்து, ஆசார்ய ஸம்பாவனையாகத் தன்னையும் உபயவிபூதிகளையும் எம்பெருமானாருக்கு உடைமையாக்கி, அதற்குச் சேர எம்பெருமானாருக்கு "உடையவர்" என்கிற திருநாமத்தையும் சாத்தியருளினார்.

இந்த வைபவத்தைப் பின்னுள்ளாரும் தெரிந்து அநுபவிக்கும்படி, எல்லா திவ்ய தேசங்களிலும், கோஷ்டிகளிலும் "இராமாநுச னுடையார்" என்று அருளப்பாடிட்டருள நியமித்து, இராமாநுசனுடையாரில் தாமும் ஒருவராகத் திருவுள்ளம் பற்றி உகக்கின்றார்.

இப்படிப்பட்ட எம்பெருமானாருடைய பெருமையைப் பேசத்தானாவதுண்டோ?

"குரும் ப்ரகாசயேத்" என்கிறபடி எம்பெருமானார் பெருமையை எல்லோரும் அநுபவிக்கும்படி, ஆங்காங்கு சபைகளை நிறுவியும், திவ்ய தேசங்களில் எம்பெருமானுடைய அவதார உத்ஸவத்தை மிகச் சிறப்பாக நடத்தி வைத்தும், வித்வான்களைக் கொண்டு அவர் வைபவங்களை உபந்யஸிக்கச் செய்தும், மலர்களில் அரிய பெரிய வைபவங்களை வெளியிட்டும், பத்திரிகைகள், செய்தித்தாள்கள் எல்லாவற்றிலுமே எம்பெருமானார் வைபவமாகவே நிறைந்து, வாசிப்பவர்கள் ஆனந்திக்கும்படியாகப் பெற்ற பேறும் "அவனதின்னருளே".

"ஸர்வதேச தசா காலேஷு" என்கிறபடியே "ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்தாம்" என்றும் தழைத்து, ஓங்கி அதனால் "அடியார்கள் வாழ", மண்ணுலகம் வாழ இன்னருள் புரிய நம் அரங்கநகரப்பனை அடிபணிந்து, ப்ரார்த்தித்து மங்களா சாஸநம் செய்கிறோம்.

ஸ்ரீ ராமாநுஜன்



திருமலை திருப்பதி — [பெரிய ஜீயர்] ஸ்வாமி

வான் திகழும் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல் ஆன்ற தமிழ்மறைகளாயிரத்தையும் ஈன்ற முதல் தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமாநுசன் நல்லருளால் நாடெங்கும் வாழ்ந்துய்யுமாறு அலர்மேல் மங்கையுறைமார்பன் அடிபணிந்து பிரார்த்திக்கிறேன்.

ஸுந்தர ராமாநுஜ பெரிய ஜீயர்



**திருமலை திருப்பதி சின்னஜீயர் ஸ்வாமி**
**அப்பன் ஸ்ரீ கோவிந்த ராமாநுஜ சின்ன ஜீயர் ஸ்வாமி.**

srivatsam

திருவல்லிக்கேணி ஸ்ரீ உடையவர் கைங்கர்ய ஸபையினருக்கு நமது மங்களாஸநம் ஸ்ரீ உடையவரது 961 வது திருவவதார உத்ஸவத்தையொட்டி நினைவு மலர் உருவாகி வருவது கேட்டு மகிழ்ச்சியடைகிறோம். ஸ்ரீ உடையவரது திருவுள்ளத்திற்கு உகப்பான கைங்கர்யங்களை நடத்து வருவது பாராட்டத்தக்கது. எப்போதும் இந்த ஸபையினர் இவ்வாறான கைங்கர்யங்களில் ஈடுபட்டு ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தத்தை நாடு முழுதும் பரப்பவேணுமென்று திருமலையப்பன் ஸந்நிதியில் ப்ரார்த்திக்கிறோம்.

**அப்பன் கோவிந்த ராமாநுஜ சின்ன ஜீயர்.**

**திருநாராயணபுரம்—யதுகிரி யதிராஜ நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி**



திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸந்நிதியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ உடையவருடைய 961 வது அவதார உத்ஸவ கமிட்டியாருக்கு மங்களாசாஸநம். நீங்கள் அனுப்பிய ஸ்ரீ உடையவர் உத்ஸவக் கொண்டாட்டப் பத்திரிகை சேர்ந்தது. உடையவர் இவ்வுலகத்தில் அவதரித்ததற்கு, ஸ்ரீ கேசவ ஸோமயாஜி ஸ்வாமியும் ஸ்ரீ காந்திமதியும், ஸ்ரீ திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதியை ப்ரதக்ஷிண நமஸ்காரம் பண்ணி, ஸ்ரீ பார்த்தஸாரதியின் க்ருபையாலே உடையவர் அவதாரமும் ஆகி, ஸ்ரீ ரங்காதி திருநாராயணபுரம் முடிவாக எல்லா திவ்ய தேசங்களிலும் தளிரும் முளிருமாக பலித்து வருகிறது. திருவல்லிக்கேணி நிவாஸிகளான நீங்கள் எல்லோரும் உடையவர் போலவே ஆஸேதுஹிமாசலம் பர்யந்தம் புகழ்பெற்றுப் பல்லாண்டு பல்லாண்டாய் எழுந்தருயிருக்க வேணுமென்று, தானுகந்த திருமேனியுடன் எழுந்தருளியிருக்கும் இவ்விடத்திய உடையவரிடம் ப்ரார்த்திக்கிறேன்.

நாராயண ராமாநுஜ யதுகிரி யதிராஜ ஜீயர் – திருநாராயணபுரம்



ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

ஸ்ரீ எதிராஜ ஜீயர்மடம் - ஸ்ரீபெரும்பூதூர்

# ஸ்ரீமத் பரமஹம்ஸ இத்யாதி ராகவ யதீந்த்ரப்ரவண யதிராஜ ஜீயர் ஸ்வாமி

srivatsam

புண்யாம்போஜ விகாஸாய பாபத்வாந்தக்ஷயாய ச |
ஸ்ரீமாநாவிரபூத் பூமௌ ராமாநுஜ-திவாகர : ||

ஸ்ரீ எம்பெருமானாருடைய 961 ஆம் பிங்கள வருஷத் திருநக்ஷத்ரத்தை அநுஸரித்து மலரும் மலரைப் பார்த்தேன். இதில் பல ஆசார்ய ஸார்வபௌமர்கள் திருவாய் மலர்ந்தருளிய திருவுள்ள மலர்கள் (ஸ்தோத்ரங்கள்) ஸேவித்தேன். ஸ்ரீராமாநுஜ திவாகர உதயங் கண்டே பல ஆசார்யர்கள் திருவுள்ள மலர் மலர்ந்த திருவாய்மொழிகள் (ஸ்தோத்ரங்கள்) விகஸித்துள்ளன. இம்மலர் ராமாநுஜன் அடிப்பூவில் விண்டு வாடா மலராக விளங்க, ஸ்ரீவைஷ்ணவ உலகம் ப்ரார்த்திக்கிறது.

ரா. யதீந்திரப்ரவண ஜீயர்

ஸ்ரீ ஸுந்தர பரிபூர்ணாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## ஸ்ரீமத் பரமஹம்ஸ இத்யாதி ஸ்ரீ பேரருளாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி, மடாதிபதி, திருக்குறுங்குடி மடம்



srivatsam

ஸ்ரீ ஸ்வாமி எம்பெருமானாரின் திருவவதாரத்துக்கு ஹேதுவாய், திருவல்லிக்கேணியில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ பார்த்தஸாரதியை மங்களாசாஸநம் செய்தருளிய காமருசீர்க்கலியன், "பள்ளியிலோதிவந்த சிறுவன்" என்ற பாசுரத்தில் தெள்ளிய சிங்கத்தை மங்களாசாஸனம் செய்தருளினார்.

திருமழிசைப் பிரான் "இரண்டதோளிரணியன் சினங்கொளாகமொன்றையும் இரண்டு கூறுசெய்து கந்த சிங்கமென்பதுன்னையே" என்று மங்களாசாஸநம் செய்தருளினார். "உகந்த சிங்கமென்பதுன்னையே" என்பதற்கு, "இவனுடைய விரோதி போகப் பெற்றோமே என்று உகந்த" என்பது வ்யாக்யானம்.

இப்படி மங்களாசாஸநம் செய்யப்பட்ட வீரத்தோடு எழுந்தருளியிருக்கும் தெள்ளிய சிங்கமே திருக்குறுங்குடியில் எழுந்தருளியிருக்கிறார் என்று சொல்லத்தடையில்லை.

ஸ்ரீ பார்த்தஸாரதி, தெள்ளிய சிங்கம் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் திவ்ய தேசமோ ஸ்ரீஸ்வாமி எம்பெருமானார் திருவவதாரத்துக்கு ஹேதுவானது. ஸ்ரீ வைஷ்ணவ நம்பி கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் இத்திவ்ய தேசமோ (திருக்குறுங்குடி) ஸ்ரீ ஸ்வாமி உடையவரின் சிஷ்யனாய் நின்று, அடிபணிந்து, மந்த்ரோபதேசம் பெற்று, "ஸ்ரீ வைஷ்ணவ நம்பி" என்ற தாஸ்ய நாமம் பெற்றது.

இவ்வளவு மேன்மை படைத்ததான திருவல்லிக்கேணி திவ்ய தேசத்தில் ஸ்ரீ உடையவர் ஸபையில் ஸ்ரீ ஸ்வாமியின் 961 ஆம் வருஷத் திருவவதாரத்தை முன்னிட்டு ஸ்ரீ ஸ்வாமியின் திவ்ய சரித்திரம் வகையறாக்கள் அடங்கிய நறுமலர் வெளியிட இருப்பது உடையவரின் திருவுள்ளத்திற்கு மிகவும் உகப்பாகவே இருக்கும்.

இவ்விதம் பெருமையுள்ளதான ஸ்ரீ உடையவர் கைங்கர்ய ஸபையானது மேன்மேலும் வளர்ந்து, வழுவிலா அடிமை செய்து, அநேக கைங்கர்யங்கள் நடத்தி வரவேண்டும் என்று பேரருளாளனை குறுங்குடி ஸ்ரீ வைஷ்ணவ நம்பியின் தளிர் புரையும் திருவடிகளிலே ப்ரார்த்தித்துக் கொண்டு, "பொலிக! பொலிக" என்று மங்களாசாஸநம் செய்கிறோம்.

ஸ்ரீ ராமாநுஜன்

**ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ ஸ்ரீ ரங்கநாராயண ஜீயர் ஸ்வாமி**
**(49வது பட்டம்) ஸ்ரீரங்கம்**



srivatsam

ஸ்ரீ எம்பெருமானாரின் 961 வது வருஷோத்ஸவம் சென்ற சுமார் ஒரு சம்வத்ஸரமாக திருவரங்கப் திருப்பதியில் இரு எம்பெருமானார்களும் (ஸ்ரீ இராமாநுசரும் ஸ்ரீ அருளாளப் பெருமான எம்பெருமானாரும்) பல வருஷங்கள் பொன்னடி சாற்றியருளியிருந்த) இம்மடத்திலேயே, இராமாநுச மிஷன் சார்பில் ஐம்பது உபந்யாஸங்களுக்குமேல் மொழியைக் கடக்கும் பெரும்புகழ் பெற்ற ஸ்ரீ எம்பெருமானாருடையவும் அவரைப் பற்றியதுமான க்ரந்தங்களுடையவும் மேன்மை இரு கலையாரைச் சார்ந்த பல வித்வான்களால் வெகு அழகாக உபந்யஸிக்கப்பட்டன. அழகிய மணவாளன், நோற்ற நோன்பிலேனும் நுண்ணறிவிலேனுமான அடியேன், அவன் ஏரார் கோலத்திருந்தடிக் கீழ் நின்றே ஆட்செய்ய நினைத்தற்கேற்ப, அவ்வுபந்யாஸங்களைக் கேட்கும் பாக்யம் பெற்றேன். தென்னரங்கன் செல்வமுற்றும் திருத்தி வைத்தும், தன் திவ்யாக்ஞை கோயிலிலும் மற்ற திவ்ய தேசங்களிலும் இதுசாறும் நடந்துவருவதொன்றே அவர் பெருமைக்குச் சான்றாகும். ''ஸ்ரீராமாநுஜ பக்த ஹஸ்தபூஷண''த்தில் ஸ்ரீ காஞ்சி ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியால் தொகுக்கப்பட்ட விஷயங்கள் அத்யத்புதம். அவ்வண்ணமே திருவல்லிக்கேணி ஸ்ரீ உடையவர் கைங்கர்ய சபையாரால் வெளியிடவிருக்கும் விசேஷ மலரானது சர்வஜன சிரோ பூஷணமாகவும் சர்வோஜ்ஜீவனமாகச் செல்ல கிருபை செய்யுமாறு எம்பெருமானைப் பிரார்த்திக்கிறேன்.

ஸ்ரீ ரங்கநாராயண ஜீயர்.



9

# எம்பெருமானார் ஜீயர் மடம், ஆழ்வார் திருநகரி



திருவல்லிக்கேணி ஸ்வாமி உடையவர் கைங்கர்ய சபாவின் சார்பாக எம்பெருமானா ரது 961ம் திருவவதார வருஷத்தை உதேசித்து நினைவு மலர் வெளியிடுவது மிகவும் சிறப்பான தொரு பணியாகும் "பண்டரு மாறன் பசுந் தமிழ் ஆனந்தம் பாய்மதமாய் விண்டிட எங் கள் இராமாநுச முனிவேழம்" என்றும், "கலி மிக்க செந்நெல் கழனிக் குறையல் கலைப்பெரு மாள் ஒலிமிக்க பாடலை யுண்டு தன்னுள்ளம் தடித்து அதனால்வலிமிக்க சீயம்" என்றும், திரு வரங்கத்தமுதனாராலும் நம்ஸ்ரீவைஷ்ணவ சமூ கத்தாலும் இன்றளவும் கொண்டாடப்பட்டு வருகிற எம்பெருமானாருக்கு எண்ணற்ற கைங் கரியங்களைச் செய்யவே ஸ்ரீ உடையவர் கைங் கரிய சபா என்ற பெயரில் பணிபுரிந்து வரும் இச்சபையையும் சபையார்களும் "பொருந்திய தேசும் பொறையும் திறலும் புகழும் நல்ல திருந்திய ஞானமும் செல்வமும் சேரும் செறு கலியால் வருந்திய ஞாலத்தை வண்மையினால் வந்தெடுத்தளித்த அருந்தவன் எங்கள் இரா மாநுசனை அடைபவர்க்கே" என்று எம்பெரு மானார் திருவடிகளில் பிரார்த்திக்கிறேன்.

ஆழ்வார் திருநகரியிலே மாறனடி பணிந் துய்ந்தவரான எம்பெருமானார் கோவில் கொண்டுள்ள பகுதி இராமாநுஜ சதுர்வேதி மங்கலம் என வழங்கப்படுகிறது. இப்பகுதியில் எம்பெருமானார் ஜீயர் மடம் தோன்றிப் பல் லாண்டுகளாகியுள்ளன. மணவாளமாமுனிக ளின் ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளை பவிஷ்யதாசார்யரான எம்பெருமானாரைப் பி திஷ்டை செய்வித்து பவிஷ்யதாசார்யரான எம்பெருமானார்க்கு ஆராதனம் செய்வதற் ஒரு ஜீயர் ஸ்வாமியையும் நியமித்து இராமா நுஜ சதுர் வேதி மங்கலம் என்று நாலு வீ களுக்கும் பெயரிட்டு உடையவர் ஸன்ன முன்பாகத் தமக்குத் திருமாளிகையும் அமை கொண்டு வாழ்ந்து வந்தார்.

மணவாள மாமுனிகளும் இந்த பவிஷ் தாசார்ய விஷயமாக யதிராஜ விம்சதி என் க்ரந்தத்தை விண்ணப்பம் செய்தார்.

ஆனதால் நம்மாழ்வார், மாறனடிபணி துய்ந்தவரான பாவிஷ்யதாசார்யரான உடை வர், மணவாள மாமுனிகள் ஆகியோர் அ தரித்ததால் இத்தலத்திற்கு முப்புரி ஊட்டி திவ்ய தேசம் என்று வழங்கப்பட்டு வருகிறது

இளையாழ்வார், எம்பெருமானார், லக்ஷ்மண முனி, இராமாநுஜ முனி, யதிராஜர், உடை யவர், பாஷ்யகாரர் என்று போற்றப்படு இராமாநுஜ நுரு 961வது திரு நக்ஷத்ரத்தில் ப்ல ள வருஷத்தில் வெளிவரும் மங்களமான நி மலர் மலர்ந்து மணம் பரப்பிப் பலவகையிலு சிறப்புடன் திகழப் ஸ்ரீபொலிந்து நின்றபிரான் நம்மாழ்வார், இராமாநுஜர் இவர்களது தி வடிகளில் பிரார்த்திக்கிறேன்.

பொலிக பொலிக பொலிக.

எம்பெருமானார் ஜீய

**ஸ்ரீ திருவேங்கட ராமாநுஜாசாரியார், ஸ்ரீத்ரிவிக்ரமஸ்வாமி ஸந்நிதி ஆதீன தர்மகர்த்தா, ஸ்ரீ எம்பெருமானார் ஜீயர் மடாதிபதி, திருக்கோவலூர்**


srivatsam

அநேக மங்களாசாஸநம். ஸ்ரீவிசிஷ்டாத்வைத ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வபௌமரான ஸ்ரீ பாஷ்யகாரர் திருவவதாரஞ் செய்தருளிய இவ்வாண்டிலே நம் ஸ்வாமியான நம் இராமாநுசனைத் தொழும் பெரியோர்களுடன் கூடி அண்ணல் இராமாநுசனை அனுபவிப்பது நம் ஸ்வரூபமாகும். இவ்வாண்டில் சித்திரையில் செய்ய திருவாதிரையில் கண்டருளிய மஹோத்ஸவங்கள் மிக மிக விலக்ஷணமாக ஆங்காங்கு திவ்யதேசங்களில் நடைபெற்றாலும், ஸ்ரீ பெரும்பூதூரிலும் திருவல்லிக்கேணியிலும் நடைபெற்றது வாசாம கோசரம். ஸ்ரீபார்த்தசாரதி எம்பெருமான் ஸந்நிதியில் நடைபெற்ற திருவவதார உத்ஸவம் விலக்ஷணமாக நடைபெற்றது. அவனுடைய அருளாலே, அடியேனுக்கும் பாக்கியம் கிடைத்தமைக்கு மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். மேற்படி ஸ்வாமி திருவவதார மஹோத்ஸவத்தை நடத்திவரும் ஸ்ரீ உடையவர் கைங்கர்ய ஸபையார் ஸ்ரீ எம்பெருமானாருக்குப் பல கைங்கர்யங்கள் இவ்வாண்டில் செய்து வருவதுபற்றியும், மேற்படி கைங்கர்யங்கள் சீக்ரமாகப் பூர்த்தியாகவும், ஸ்ரீபார்த்தஸாரதி எம்பெருமான் கடாக்ஷத்தினால் இச்சபையாருக்கு ஸகல ச்ரேயஸ்ஸும் உண்டாக வேணுமாயும் ஆசாஸிக்கிறேன்.

பொலிக! பொலிக! பொலிக!

குறிப்பு : இம்மடம் ஸ்ரீ ராமாநுஜரது 74 ஸிம்ஹாஸனாதிபதிகளுள் ஒருவரான திருக்கோவலூர் ஆழ்வான் என்பவரால் நிர்மாணம் செய்யப்பெற்றது. பின்பு ஸ்ரீமணவாள மாமுனிகளது திருவடிகளில் ஆச்ரயித்த லக்ஷ்மணமுனிகள் என்ற அவதார புருஷரால் மீண்டும் இது ஜீர்ணோத்தாரணம் செய்யப்பெற்று, ஸ்ரீ ஆயனருளால் ''திருக்கோவலூர் எம்பெருமானார் ஜீயர் மடம்'' என்னும் திருநாமம் பெற்று நாளது வரையில் ஆதீன பரம்பரையாக இந்த ஸந்நிதியும் மடமும் பரிபாலிக்கப்பட்டு வருகின்றன.



10

# ஸ்ரீமத் அஹோபில மடம் ஜீயர்

முகாம் : செம்பூர், பம்பாய் - 77

ஸ்ரீமதே லக்ஷ்மீந்ருஸிம்ஹபரப்ரஹ்மணே நம : |
ஸ்ரீமதே ஸ்ரீவண்சடகோப-ஸ்ரீவேதாந்த தேசிக-யதீந்த்ர மஹாதேசிகாய நம : |

நமாமி யதிராஜம்தம் அச்யுதாங்க்ர்யாப்ஜ ஷட்பதம் |
த்ரயீ ஸம்ரக்ஷிதா யேந பரைர்ஷித்வம்ஸிதா ப்ருசம் ||



மங்களகரமானது இட்பிங்கள வருஷம் இவ்வாண்டிலன்றோ பெரும்பூதூர் வள்ளலான எதிராசர் அவதரித்தது இவர் நமது விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தைச் செழிப்புடன் வளர்த்து ஓங்கச் செய்து ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தத்தை ஸ்தாபித்தவர். மதத்ரய ஆசார்யர்களில் பிரதானமாகக் கருதப்பட்டவர். இவர் செய்த உபகாரங்கள் வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாதவை. நம் ஸம்ப்ரதாயத்தில் சேதனம், அசேதனம், ஈச்வரன் என மூன்று தத்துவங்கள் உள்ளன. இம்மூன்றுக்குமே அததற்குத் தக்கபடி ஒவ்வொரு வகையில் உதவி புரிந்திருக்கிறார்.

இம்மஹானுடைய 16 வது ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவத்தை முன்னிட்டு ஒரு நினைவு மலர் வெளியிடமுடிவு செய்திருக்கிறதாம், திருவல்லிக்கேணியிலுள்ள ஸ்ரீ உடையவர் கைங்கர்ய சபை. இந்தமலர் அற்புதமான சில கரந்த வெளியீடுகளுடனும், திருவுருவப் படங்களுடனும் வ்யாஸங்களுடனும் பரிமளிக்கப் போகிறது. இச் சிறந்த கைங்கர்யத்தை ஆவலுடன் ஏற்றுக் கொண்டு உலக மக்களுய்ய எண்ணி உபகரிக்க வந்த இந்தச் சபை மேன்மேலும் அபிவிருத்தமாக வேண்டுமென்றும் ஆஸ்திகப் பிரபுக்கள் அனைவரும் தங்களாலான பொருளுதவி செய்து இக் கைங்கர்யத்தை முடித்துத் தரவேண்டுமென்று நாம் ஸ்ரீலக்ஷ்மி ந்ருஸிம்மனை ப்ரார்த்தித்துக்கொள்கிறோம். இந்தப்படி ஸ்ரீ அழகிய சிங்கர் அனுக்ரஹித்த மங்களா சாஸன ஸ்ரீமுகம்.

பணமுகை : வீரவல்லி நரசிம்ஹாச்சாரி.

ஸ்ரீ மதே ராமானுஜாய நம :
ஸ்ரீரங்கநாத திவ்யமணி பாதுகாப்யாம் நம :

# ஸ்ரீமத் ஸ்ரீ ரங்கம் ஆண்டவன் ஸந்நிதி



ச்ரிய : பதியான ஸர்வேச்வரன் இந்த நாவலம் பெரிய தீவினில் பொருந்தி உறையும் பதிகள் பல உள்ளன. அவைகளுள் இப்பாரத பூமியில் பாரதப் போரில் பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு பார்த்தன்தன் தேர்முன் நின்றான் நித்யவாஸம் பண்ணப் பெற்றதாய் மன்னுதண் பொழிலும் வாவியும் மதிளும் மாட மாளிகையும் மண்டபமும் தென்னன் தொண்டையர் கோன் செய்த நன் மயிலைத் திருவல்லிக்கேணி என்றும், ஒப்பவரில்லா மாதர்கள் வாழும் திருவல்லிக்கேணி என்றும் பலவாறாகப் பேசப்பட்ட திருவல்லிக்கேணி என்னும் திருப்பதி பலபடியாலும் புகழ்பெற்று விளங்குவது நாடு நகரமும் நன்கறிந்த விஷயமே !

இந்நகரில் ஸ்ரீராமானுஜ கைங்கர்ய ஸபை என்று நலத்தால் மிக்கார் பலர் வளர்த்து வரும் அவை ஒன்றுண்டு என்றும், அவ்வவையுள் பலர் போற்றும் பல கைங்கர்யங்கள் நடந்து வருகின்றன என்றும் கேட்டு மகிழ்வுற்றோம். நமது ஸ்ரீ வைஷ்ணவ மதம், ''நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் பஹுபிருபசிதம் யாமுனேய ப்ரபந்தை! ஸம்யக்த்ராதம் யதீந்த்ரை :'' என்னும் படி ஸ்ரீ பகவத்ராமானுஜரால் நன்கு காக்கப்பட்டது என்பது பலரும் அறிந்த விஷயமே. நமது குருபரம்பரையிலேயே ஸ்ரீ ராமானுஜர் நடுநாயக மணியாய் விளங்குகிறார் என்பது ''யதிராஜேந நிபத்த நாயக ஸ்ரீ மஹதீ–குரு -பங்க்திஹாரயஷ்டி: விபுதாநாம் ஹ்ருதயங்கமா விபாதி'' என்று பேசப்பட்டது

''பெரும்புதூர் வந்த வள்ளல்'' என்றும், ''ஆரண நூல் வழிச் செவ்வையழித்திடும் ஐதுகர்க்கு ஏர் வாரணமாய் அவர் வாதக்கதலிகள் மாய்த்தபிரான் ஏரணிகீர்த்தி யிராமாநுச முனி' என்னும், ''தேசமெல்லாம் உகந்திடவே பெரும்புதூரில் சித்திரையில் ஆதிரை நாள் வந்து தோன்றிக் காசினிமேல் வாதியரை வென்று வந்த எதிராஜர்'' என்றும் போற்றப்பட்ட இவ்வாசார்யனுக்கு இராமானுஜன், எம்பெருமானார், உடையவர், ஸ்ரீ பாஷ்யகாரர், இளையாழ்வார், என்று பல திருநாமங்களுண்டு.

''மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து எங்கள் மாதவனே கண்ணுற நிற்கிலும் காணகில்லா உலகோர்களெல்லாம் அண்ணல் இராமானுசன் வந்து தோன்றிய வப்பொழுதே நண்ணருஞானம் தலைக்கொண்டு நாரணற்காயினர்'' என்கிற பெருமை இவருக்கு அஸாதாரணமானது

''தற்கச் சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ்சடையோன் சொற்கற்ற சூனியவாதரும் நான் மறையும் நிற்கக் குறும்பு செய் நீசரும் மாண்டனர்'' என்றும் ''காதா தாதாகதாநாம் கலதி கமனிகா காபிலீ க்வாபி லீநா'' என்றும், 'பரமநிரஸனம் செய்யும் பெருமை இவருக்கு இன்றியமையாதது. இவ்வாசிரியர் அவதாரம் செய்த வருஷம் பிங்கள வருஷம். இப்போது நிகழும் வருஷமும் பிங்களவருஷமே. இவர் தோன்றி 960 ஆண்டுகள் ஆயின.

திருவல்லிக்கேணியில் அமைந்த இந்த ஸபை ஸ்ரீ பகவத் ராமானுஜ கைங்கர்யத்தில் ஈடுபட்டுப் பல கைங்கர்யங்கள் செய்து வருகிறது

இச்சபையிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களே ''இக்குற்ற கீர்த்தி இராமானுசன் என் செய்வினையாம் மெய்க்குற்றம் நீக்கி விளங்கிய மேகத்தை மேவும் நல்லோர் எக்குற்றவாளர் எதுபிறப்பேதியல்வாக நின்றோர் அக்குற்றம் அப்பிறப்பு...நம்மையாட் கொள்ளும்'' என்னும்



11

கண்கண்ட நம்மை யாளும் பரமர் என்பது
திண்ணம்.

இச்சபையார் பார்த்தன் தேர்முன் நின்
றான் கோயிலில் அர்ச்சையாய் எழுந்தருளி
யிருக்கும் ஸ்ரீராமானுஜனுக்கு மாதந்த திரு
நக்ஷத்ர உத்ஸவங்கள் வார்ஷிக மஹோத்ஸவங்
கள் நடத்தி வருவது மிகவும் போற்றத்தக்கது.

அவதார வருஷமான இந்தப் பிங்கள
ஆண்டில் சித்திரைத் திங்கள் தொடங்கி ஆசார்
யனுடைய குணங்களையும் அவரியற்றிய கிரந்
தங்களின் பெருமைகளையும், பக்தியையும், அவர்
உலகிற்குச் செய்த உபகாரங்களையும், திருமேனி
யின் அழகையும், வீடளிக்கும் பெருமையும்.
பாரோரறியும்படி ஊர் பல புக்கு ஆங்காங்கு
உபந்யாஸங்கள் மூலம் பரவச் செய்யும்
பெருமை இச்சபையோர்களுக்குப் பெரும்
தொண்டாக விளங்குவது கண்டு மிகவும் மகிழ்
வுறுகிறோம்

ஆசார்ய ஸம்பாவனா வைபவத்தில் ஒருமலர்
அச்சிட்டுப் பிரசாரஞ் செய்வதையும் கேட்டுப்
பேரின்பமடைகிறோம்.

இச்சபை பாரெங்கும் பரவும் புகழ்பெற்று
பல பண்டிதர்கள் நிறைந்து விளங்கி நம் விசிஷ்
டாத்வைத மதத்தைப் பலருக்கு உபதேசித்து
நீண்ட காலம் விளங்கவேண்டுமென்று அரங்
கத்தின்னமுதையும் அவனது திருவடி நிலைகளை
யும் அடிபணிந்து இறைஞ்சுகிறோம்.

ஸ்ரீரங்கநாத திவ்யமணி பாதுகா ஸ்ம்ருதி :

srivatsam



# ஸ்ரீமதுபய வேதாந்தாசார்ய பீடம் ட்ரஸ்டு, ஸ்ரீரங்கம், திருச்சி ஜில்லா

**Founder : His Holiness Sri Thridandi Sreemannarayana Ramanuja Jeeyar.**

**Camp : ஸ்ரீரங்கம் 20 – 9 – 77**



அநேக மங்களாசாஸநம்

பிங்கள வருஷம் ஸ்வாமி எம்பெருமானாரின் அவதார வருஷம். இந்த மங்களமான வருஷத்தில் திருவல்லிக்கேணி உடையவர் சபையானது சென்னையில் பல இடங்களில் உபன்யாசங்கள் ஏற்பாடு செய்தும், திருவல்லிக்கேணி உடையவருக்கு நித்யப்படிக்கான முக்கியமான யஜ்ஞோபவீதம் முதலியன சமர்ப்பித்தும், மேற்படி உத்ஸவத்தை பிரபலமாக நடத்தியதோடு அல்லாமல் அந்த உத்ஸவங்களை என்றென்றும் சேவிக்கும்படி போட்டோக்கள் எடுத்து, அத்தோடு ஸ்வாமி அனுபவித்த திவ்ய தேசங்களின் எம்பெருமான்களின் போட்டோவுடன் உடையவரின் படங்களுடனும் ஸ்வாமி சாதித்ததும் அவருக்குப் பின்னால் அவதரித்த ஆசாரியார்கள் ஸ்வாமியைப் பற்றி ஸாதித்த ஸ்தோத்திரங்கள் அத்தனையும் தொகுத்தும் ஸ்வாமி சாதித்த நவரத்னமான க்ரந்தங்களை விவரிக்கும் வகையில் கட்டுரைகள் கொண்ட மலரை தயாரித்ததைக் கேட்டு ரொம்ப சந்தோஷப்படுகிறோம் இந்த மலர் எல்லா வைஷ்ணவர்களிடமும் இருக்க வேணும்

இந்த சபை ஸம்ப்ரதாயத்திற்கு நல்ல பல காரிய க்ரமங்களைச் செய்து கொண்டு இருக்க வேணும் என மங்களாசாசனம் செய்கிறோம்.

ஸ்ரீமந்நாராயண ஜீயர்.

மஹாமஹோபாத்யாய உபய வேதாந்த வித்வான்

## ஸ்ரீ உ. வே. ப்ர. ப. அண்ணங்கராசார்யர் ஸ்வாமி, காஞ்சீபுரம்



### மங்களாசாஸனம்

ஸ்வாமி எம்பெருமானார் விஷயமாகத் திருவவதரித்த துதி நூல்களில் தலைமை பெற்றது இராமானுச நூற்றந்தாதி அதில் (90) நினையார் பிறவியை என்னும் பாசுரத்தில் இந்நிலத்தே யெனையாள வந்த விராமானுசனை இருங்கவிகள் புனையார் என்பதனால் ஒரு பெருங் குறையை வெளியிட்டுள்ளார் (அதாவது) பண்டிதர்களாயிருப்பவர்கள் எம்பெருமானார் விஷயமாகத் துதி நூல்களை இயற்றாமலிருக்கின்றார்களே! என்பதாம். அக்காலத்தில் திருமலை அனந்தாழ்வான், வடுகநம்பி, கருட வாஹன பண்டிதர் போல்வார் ஸ்வாமி விஷயமான துதி நூல்களை இயற்றியிருந்தும் ஸ்வாமியின் பெருமைக்கு அவை ஏகதேசம் என்ற திருவுள்ளத்தினால் அமுதனார் அப்படியருளிச் செய்தபடி அந்தக் குறை தீர இந்த மலர் அவதரிப்பது நாடு நகரமும் நன்கு போற்றத்தக்கது. பிங்களவாண்டு முடிவு பெறுவதற்குள் இத்தகைய மலர்கள் இன்னும் பல பல வெளிவருமாறு ஆசாஸிக்கிறேனடியேன்.

திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதிப் பெருமான்
திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ உடையவர்

## ஸ்ரீப்ருந்தாரண்ய க்ஷேத்ரமாஹாத்ம்யம்-தேவஸ்தானப் பதிப்பிலிருந்து ஒரு பகுதி (AN EXTRACT)



A special importance is attached to Sri Ramanuja of this temple — founder of Visishtadvaita Philosphy. It is stated by Sri Pillailokam Jeer in his work Ramanuja Divya Sarithai that Asoori Sarvakrathu Kesava Dikshitar, the father of Sri Ramanuja, performed Putrakameshti (yagam) in the shrine of Ramanuja — the Gitopanishad Acharya, another name of Sri Pathasarathy Swamy, praying to Him to be blessed with a son and Sri Parthasarathy Swamy appeared in his dream and blessed him that He would Himself be born as His son with His name as Ramanuja in order to give the real import of the teachings of his Geetha for the benefit of the humanity. During the birthday festivals of Sri Ramanuja in the month of Chitrai (April—May) independent processions are done without being accompanied by the Main Deity—Sri Parthasarathy Swamy, which is not the case for other Alwars and Acharyas of this temple.

Srimathe Ramanuj ya Namaha

*With the best compliments from :*

SRI RAMANUJA SUPRABHATHA GOSHTI COMMITTEE

Niyamakulu : "HIS HOLINESS TRITHANDI SRIMAN SRIMANNARAYANA RAMANUJA JEEYAR SWAMI.

President : "Kainkarya Priya" Sriman Pabbichetty Ramanujam Garu.

Vice Presidents : Sri. Acha Sarvopak r Chetty Garu.
Sri. Makam Dayananda Jeeyar Dasan Garu.

Founder & Hon Secretary : Sri. Chidella. Ramanujam Chetty Guru.

Hon. Secretary : Sri. Mamidi Ramanujam Garu. (Sri. M. Gopalakrishna Chetty).

Hon. Treasurer : Sri Ka'argi Krishnamurthy Garu.

Co-option Memters : Sri. Keorapati Srinivasulu Guru.
Sri. Jampala. Ramanujam Garu.
Sri. Nathella Udayavarulu Chetty Garu
Sri. Veampalli Venkata Ragavlu Chetty Garu.
Sri. Vuppu Jayachandran Garu.
Sri. Pothuru Ranganatham Garu.
Sri. Guntur Narasimmlu Garu.

srivaishnavam

**BALAJI POWER PRESS**

PRINTERS & BINDERS

Specialists in school and college record Books for Chemistry, Biology & Physics



**Phone : 841312**

**89 Big Street**

Madras-600005

# ஸ்ரீ உடையவர் கைங்கர்ய ஸபை, திருவல்லிக்கேணி

## வரலாற்றுக் குறிப்பு

---

நெடுங்காலமாக இயங்கிவரும் இச்சபையின் வரலாறு 1910 ஆம் வருஷம் முதல் குறிப்பேடுகளிலிருந்து ஒருவாறு தெரிந்துகொள்ளலாகும். ஸ்ரீபார்த்தஸாரதிப் பெருமாள் கோயிலின் கணக்கு முதலியன தெள்ளிய சிங்கப் பெருமானாகிய ஸ்ரீ நரஸிம்மனின் பேரில் வழங்கி வருவதாலும், ஸ்ரீபார்த்தஸாரதிப் பெருமாளே ஸ்ரீ உடையவராக அவதரித்ததாகக் கருதப்பெறுவதாலும், ஸ்ரீ நரஸிம்மன், ஸ்ரீ உடையவர் இவர்களது வருஷ உத்ஸவங்கள் தேவஸ்தானத்தாராலேயே நடத்தப்பெற்று வந்துள்ளன. எக்காரணத்தாலும் இவர்களது உத்ஸவம் நிறுத்தப்படலாகாது என்பது தேவஸ்தானக் குறிப்பேடுகளில் காணப்படுகின்றது. தேவஸ்தானத்திலிருந்தே ஸ்ரீ உடையவர் உத்ஸவத்திற்குச் செலவு செய்யப்பெற்றுவந்தமையால், இந்த உத்ஸவத்தை அவ்வப்போது நடத்திவந்த குழுவினர் தேவஸ்தானத்திலிருந்து உதவி பெற்றனர். எடுத்துக்காட்டாக, 1910 ஆம் வருஷக் கணக்கின் குறிப்பொன்றிலிருந்து : எண்ணெய் : $3\frac{3}{4}$ வீசை ரூ. 14-4-0, திவட்டித்துணி: $3\frac{3}{4}$ மணங்கு ரூ 3-8-0; புஷ்பம் ரூ 5-0-0. உத்ஸவத்திற்குக் கைங்கர்யமாகப் பக்தர் பலர் பண உதவி செய்து வந்தனர்.

1967 ஆம் வருஷம் வரையில் ஸ்ரீ உடையவர் கைங்கர்யத்தில் ஈடுபட்டவர்கள் Festival Fund (உத்ஸவ நிதி) என்ற பேரால் உத்ஸவத்தை நடத்தி வந்தனர். 15-4-1967 இல் இந்த ஸபை ஸ்ரீ உடையவர் கைங்கர்ய ஸபை என்ற பேரில் ரிஜிஸ்டர் செய்யப்பட்டது.

நெடுங்காலமாக ஸ்ரீ உடையவர் கைங்கர்யங்களில் ஈடுபட்டிருந்த ஸ்ரீ வைஷ்ணவர்களுள் அஷ்டகோத்திரத்தினர், மண்டயத்தார் இவர்கள் அதிக ஊக்கத்துடன் கைங்கர்யங்களை இயக்கிவந்தனர் என்று தெரிகின்றது. அஷ்டகோத்திரத்தினர் ஸ்ரீ உடையவர் உத்ஸவத்திற்கும், ஸ்ரீ பார்த்தஸாரதி, ஸ்ரீ நரஸிம்ஹன், ஸ்ரீ மணவாள மாமுனிகள் இவர்களது உத்ஸவங்கள் சிலவற்றிற்கும் வீடுகள் தர்ம சொத்தாக எழுதிவைத்துள்ளனர். பஞ்சபர்வக் கேடயம், கருடவாகனத்திற்கு ப்ரபை, உடையவருக்குக் கேடயம், கல்லிழைத்த திரிதண்டம் இவைபோல்வன செய்து ஸமர்ப்பித்துள்ளனர்.



# 1910 ஆம் வருஷம் முதல் இச்சபையில் பணியாற்றியவர்கள்

## 1910 முதல் 1928 வரை

**கார்யதர்சிகள் :** மேட்டுப்பள்ளி அத்தங்கி திருவேங்கடாசார்யுலு &
ந ச. சிங்கராசார்யுலு

1928 — 1938 : ந. ச. ராமாநுஜாசார்யர், M.A. ஸ்ரீநிவாஸாசார்யர்

1938 — 1957 : தலைவர் : S. R ஸ்ரீநிவாஸ ஐயங்கார்
கார்யதர்சிகள் : C. ஸ்ரீநிவாஸ வரதாசாரியார், C. கிருஷ்ணமாசாரியார்

1957 — 1968 : தலைவர் : S. R. ஸ்ரீநிவாஸ ஐயங்கார்
கார்யதர்சிகள் : C. ஸ்ரீநிவாஸ வரதாசாரியார், C. பார்த்தஸாரதி ஐயங்கா

1968 — 1975 : தலைவர் : S. R ஸ்ரீநிவாஸ ஐயங்கார்
கார்யதர்சிகள் : C. பார்த்தஸாரதி ஐயங்கார், K. V. ஸ்ரீநிவாஸ ஐயங்கார்
நிர்வாகக் குழுவினர் : S. A. T. திருமலாசார்யுல ஐயவாருலகாரு,
C. S. பார்த்தஸாரதி ஐயங்கார்,
T. P. அழகர் ஐயங்கார், M. K. கிருஷ்ணமாசாரியா

16 - 2 - 1975 : தலைவர் : S. R. ஸ்ரீநிவாஸ ஐயங்கார்
கார்யதர்சிகள் : C. பார்த்தஸாரதி ஐயங்கார்
நிர்வாகக் குழுவினர் : S. A T. திருமலாசார்யுல ஐயவாருலகாரு,
T. P. அழகர் ஐயங்கார், M. K. கிருஷ்ணமாசாரியா
T. S. ராஜகோபால ஐயங்கார்

18 - 7 - 1975 முதல் : தலைவர் : T. S. ராஜகோபால ஐயங்கார்
கார்யதர்சிகள் : C. பார்த்தஸாரதி ஐயங்கார், K. V. ஸ்ரீநிவாஸ ஐயங்கா
நிர்வாகக் குழுவினர் : T. P. அழகர் ஐயங்கார், M. K. கிருஷ்ணமாசாரியா
R. வெங்கடேச ஐயங்கார், S. R. ஸ்ரீநிவாஸ ஐயங்

srivatsam



# இவ்வருஷத் திருவவதார உத்ஸவ உபயக் காரர்கள்

**முதல் உத்ஸவம்** 15—4—77

காலை : திருப்பல்லக்கு — ஸ்ரீ M.R. ஸம்பத் குமாரன், M.A.

இரவு : ஆனந்தவிமானச் சப்பரம் ஸ்ரீ S. கோவிந்தராஜுலு (அதிகப்படி உபயக்காரர்) சுந்தரம் சாரிடீஸ், மதராஸ்.

**இரண்டாம் உத்ஸவம்** 16—4—77

காலை : திருப்பல்லக்கு

இரவு : ஸிம்ஹ வாஹனம் முழுநாளும்-ஸ்ரீமான் நாதெள்ள ஸம்பத் செட்டியார்.

**மூன்றும் உத்ஸவம்** 17—4—77

காலை : திருப்பல்லக்கு — யாதவ கமலம்மாள் ட்ரஸ்ட்

இரவு : ஹம்ஸ வாகனம் புஷ்பவல்லித் தாயாரம்மாள் சாரிட்டிஸ் (அதிகப்படி) ஸ்ரீ K.V. ஸ்ரீநிவாஸ ஐயங்கார், M.A. வெங்கட கிருஷ்ண ஐயங்கார்.

**நான்காம் உத்ஸவம்** 18—4—77

காலை : திருப்பல்லக்கு

இரவு : யாளி வாகனம் முழுநாளும் - ஸ்ரீமதி தேக கண்ணம்மாள்

**ஐந்தாம் உத்ஸவம்** 19—4—77

காலை : திருப்பல்லக்கு ஸ்ரீமதி ஜீவரத்ன அம்மாள் ட்ரஸ்ட் (அதிகப்படி) Dr. T. P. ராஜகோபால்

இரவு : சேஷவாகனம் — ஸ்ரீ R. ரங்கஸ்வாமி செட்டியார் (அதிகப்படி) ஸ்ரீ முத்துக்கிருஷ்ண ராமாநுஜ தாஸர்

srivatsam

**ஆறும் உத்ஸவம்** 20—4—77

காலை : குதிரை வாகனம் — வெள்ளை சாத்துப்படி

இரவு : ஆனந்த விமானம் முழு நாளும்-யதுகிரி யதிராஜ ஜீயர் மடம், திருவல்லிக்கேணி

**ஏழாம் உத்ஸவம்** 21—4—77

காலை : திருப்பல்லக்கு

இரவு : புஷ்பப்பல்லக்கு முழு நாளும் — T. K. K. N. N. வைச்யா சாரிட்டிஸ், திருவல்லிக்கேணி

**எட்டாம் உத்ஸவம்** 22—4—77

காலை : திருப்பல்லக்கு

இரவு : யாளை வாகனம் முழு நாளும் — M. V. கன்னைய செட்டி சாரிட்டிஸ், சென்னை

**ஒன்பதாம் உத்ஸவம்** 23—4—77

திருத்தேர் — ஸ்ரீமத் பரமஹம்ஸ சின்ன ஜீயர் ஸ்வாமி, திருப்பதி

**பத்தாம் உத்ஸவம்** 24—4—77

காலை : திருப்பல்லக்கு

இரவு : மங்களகிரி முழு நாளும் ஸ்ரீ. உ. வே. அத்தங்கி ஸ்வாமி S. A. T. திருமலாசார்யுல ஐயவாருகாரு, திருவல்லிக்கேணி



# ஆசார்யர்கள் ஈடுபாடு

ஸ்ரீரங்கம் கரிசைல மஞ்சனகிரிம் தார்க்ஷ்யாத்ரி ஸிம்ஹாசலௌ
 ஸ்ரீகூர்மம் புருஷோத்தமஞ்ச பதரீ நாராயணம் நைமிசம் |
ஸ்ரீமத்த்வாரவதீம் ப்ரயாகமதுரா-அயோத்யா கயா புஷ்கரம்
 ஸாளக்ராமகிரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோயம் முநி: ॥

ஸர்வதேச-தசாகாலேஷ்வவ்யாஹத-பராக்ரமா |
ராமாநுஜார்ய-திவ்யாஜ்ஞா வர்த்ததா மபிவர்த்ததாம் ॥

ராமாநுஜார்ய-திவ்யாஜ்ஞா ப்ரதிவாஸர முஜ்வலா |
திகந்தவ்யாபிநீ பூயாத் ஸா ஹி லோகஹிதைஷிணீ ॥

சீராரு மெதிராசர் திருவடிகள் வாழி
 திருவரையில் சாத்திய செந்துவராடை வாழி
ஏராரும் செய்யவடி வெப்பொழுதும் வாழி
 இலங்கிய முந்நூல் வாழி இணைத்தோள்கள் வாழி
சோராத துய்ய செய்யமுகச் சோதி வாழி
 தூமுறுவல் வாழி துணைமலர்க் கண்கள் வாழி
ஈராறு திருநாம மணிந்த எழில் வாழி
 இனிதிருப்போ டெழில்ஞான முத்திரை வாழியே.

அறுசமயச் செடியதனை அடியறுத்தான் வாழியே
 அடர்ந்துவரும் குதிர்ட்டிகளை அறத்துறந்தான் வாழியே
செறுகலியைச் சிறிதுமறத் தீர்த்துவிட்டான் வாழியே
 தென்னரங்கர் செல்வமுற்றுந் திருத்திவைத்தான் வாழியே
மறையதனில் பொருளனைத்தும் வாய்மொழிந்தான் வாழியே
 மாறனுரை செய்ததமிழ் மறைவளர்த்தோன் வாழியே
அறமிகுநற் பெரும்பூதூர் அவதரித்தான் வாழியே
 அழகாரும் எதிராசர் அடியிணைகள் வாழியே

srivatsam

சங்கர பாஸ்கர யாதவ பாட்ட ப்ரபாகரர் தங்கள்மதம்
 சாய்வுற வாதியர் மாய்குவ ரென்று சதுமறை வாழ்ந்திடு நாள்
வெங்கலி இங்கினி வீறு நமக்கிலை என்றுமிகத் தளர்நாள்
 மேதினி நம்மை ஆறுமெனத்துயர் விட்டு விளங்கியநாள்
மங்கைய ராளி பராங்குச முன்னவர் வாழ்வு முளைத்திடு நாள்
 மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடு நாள்
செங்கயல் வாவிகள் சூழ்வயல் நாளும் சிறந்த பெரும்பூதூர்ச்
 சீமான் இளையாழ்வார் வந்தருளிய நாள் திருவாதிரை நாளே.

ஸ்ரீமத்மஹாபூதபுரே ஸ்ரீமத்கேசவயஜ்வந; |
காந்திமத்யாம் ப்ரஸூதாய யதிராஜாய மங்களம் ॥



# நமது நன்றி

திருவல்லிக்கேணி ஸ்ரீ உடையவர் கைங்கர்ய ஸபையினர் பின்வரும் பெரியோர்களது அரிய சேவையைப் பாராட்டி அவர்களுக்குத் தங்களது நன்றியை வணக்கத்துடன் தெரிவிக்கின்றனர்.

1. மஹாமஹிம உபாத்யாய—காஞ்சி ஸ்ரீ. உ. வே. ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார் ஸ்வாமி இந்த 961வது திருவவதார உத்ஸவம் நாடு முழுவதும் நடக்க வேண்டுமென்ற திருவுள்ளத்தை வெளியிட்டருளினார்.

2. சென்னை உயர்நீதி மன்றம் முன்னாள் நீதிபதி ஸ்ரீ மாண்புமிகு N. கிருஷ்ணஸ்வாமி ரெட்டியாரவர்கள் விசேஷக் கமிட்டியின் தலைவராகப் பலவகைகளிலும் பெருக்கத்துடன் தொண்டாற்றி வருகிறார்.

3 ஸ்ரீ. உ. வே. வாகம்ருதவர்ஷி வேளுக்குடி வரதாசார் ஸ்வாமி, பல பேட்டைகளிலும் இச்சபையினருக்காக ஸ்ரீ எம்பெருமானாரைப் பற்றி உபந்யாஸம் செய்து வருகிறார்.

4. இந்த ஸபையின் திட்டங்கள் பற்றிச் செய்தித் தாள்களிலும் சஞ்சிகைகளிலும் விளம்பரம் செய்துதவிய பத்திரிகை யாசிரியர்கள் :

ஸ்ரீ ராமானுஜன் : ஸ்ரீ. உ. வே காஞ்சீபுரம் ப்ர. ப. அண்ணங்கராசார் ஸ்வாமி.
ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம் : ஸ்ரீ. உ. வே கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி,
ஸ்ரீ நருஸிம்ஹப்ரியா : ஸ்ரீ. உ. வே. திருக்கள்ளம் நரஸிம்ஹ ராகவாசார் ஸ்வாமி.
தினமணி, எக்ஸ்பிரஸ், சுதேசமித்ரன், இந்து—இவற்றின் ஆசிரியர்கள்
ஸ்ரீ ரங்கநாத பாதுகை, மதராஸ — ஆசிரியர்

5. மலரில் அச்சிட விளம்பரங்கள், நன்கொடைகள் உதவியவர்கள்.

விளம்பரம் திரட்டியவர்கள்: ஸ்ரீ. T.A திருவேங்கடாசாரியார், ஸ்ரீ K. V. ஸ்ரீ நிவாஸ ஐயங்கார், ஸ்ரீ. K. V. வேணு கோபாலன், ஸ்ரீ. R. வெங்கடேச ஐயங்கார், ஸ்ரீ.C. பார்த்தஸாரதி ஐயங்கார். ஸ்ரீ N C. ராகவாசாரியார் (Advocate), ஸ்ரீ P. ரகுவீர், K. V. ரங்கராஜன், ஸ்ரீ C. ரங்கராஜன், ஸ்ரீ. A. கோபாலகிருஷ்ணன், ஸ்ரீ G. பார்த்தஸாரதி, ஸ்ரீ R. ஜகந்நாதன்.

6. மலரில் பிரசுரிக்கத் திருமுகப்படங்கள் (Photographs, blocks) உதவியவர்கள் ஸ்ரீ T. A. திருவேங்கடாசாரியார், ஸ்ரீ கல்யாண ராம ஐயங்கார், ஸ்ரீ மதுரை N. ராமஸ்வாமி ஐயங்கார், Dr. V V. ராமானுஜம், ஸ்ரீ பார்த்தசாரதி ஸ்வாமி தேவஸ்தானம் நிர்வாக அதிகாரி E. பொன்னப்ப பிள்ளை, B. Com B.L., பி. வெங்கட கிருஷ்ண பட்டாசாரியர், கே. வி. பாஷ்யம், ஸ்ரீமதி. பிரகாசம், Dr. C. நாகஸ்வாமி. M. K. ரங்கஸ்வாமி ஐயங்கார் அவர்கள் சேர்த்துவைத்திருந்த போட்டோ படங்கள் சிலவற்றை உதவிய ஸ்ரீ M R மாதவன், பதிப்பாசிரியர், இந்து பத்திரிகை.

7. இம்மலரின் அட்டைப் படத்திற்கு வண்ண ஓவியம் வரைந்து கொடுத்த ஓவிய வல்லுநர் (artist) திரு K. சரவணபவாநந்தம், G. D Arts, தமிழக V. T. I. நிறுவனத்தில் 1974 ஆண்டு தென்னகத்தில் முதல் பரிசு பெற்றவர்.

8. இம்மலரை அச்சிட்டு நூல்வடிவாக்கி உதவியவர் உயர்திரு K. கணபதி அவர்கள், உரிமையாளர் Vasantha Agencies Sripuram, Madras-14.

9 கட்டுரைகள் உதவிய பெரியோர்கள்.

10. ஸ்ரீ M. N கிருஷ்ணஸ்வாமி ஸ்ரீ உடையவர் புறப்பாடுகளில் புகைப்படம் பெருக்கத்துடன் எடுத்து உதவினார்.

11. திருமலை திருப்பதி தேவஸ்தான நிர்வாக அதிகாரி திருவேங்கடமுடையான் அலர்மேல்மங்கைத் தாயார் இவர்களுடைய படத்தை அச்சிடுவித்துக் கொடுத்தார்.

12. ஸ்ரீ S B. P. V. பட்டாபி ராம ராவ், ஸ்ரீ சபாபதி ராவ் குடும்பத்தினர் ஸ்ரீவைகுண்டநாதர் படமும் இது பற்றிய ச்லோகவிவரமும், B N K (P) Ltd. அவர்கள் ஆண்டாள் திருக்கல்யாணம் பற்றிய சித்திரம் ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீ உடையவர் ஸந்நிதியில் இருப்பதைப் படமாக அச்சிட்டு இலவசமாக அளித்துள்ளனர்.

srivatsam

திவ்ய தேசங்கள் பலவற்றிலும்

ஸ்ரீ ரங்கம் கரிசைல மஞ்ஜநகிரிம் என்ற ச்லோகத்தில் வரும்

பெரும்பான்மையான திவ்ய தேசங்களிலும்,

எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்கள், உடையவர் இவர்களது

திருமுகப் படங்கள் இம்மலரில் உள்ளன.

— : o : —

srivatsam



முதல் உத்ஸவம் இரவு - ஆனந்த விமானச் சப்பரம்
உபயம் : ஸ்ரீ S. கோவிந்தராஜலு நாயுடு.
விசேஷ உபயம் : சுந்தரம் சாரிடீஸ், மதருஸ்.



சாற்றுமறை உத்ஸவம்.  இரவு மங்களகிரி  உபயம் ஸ்ரீ அத்தங்கி ஸ்வாமி



சென்னை (வினஸ் காலனி) ஆஸ்திக ஸமாஜத்தில் ஸ்ரீ உடையவர் வைபவம்பற்றி மாநாடு

23-4-77ல் திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸந்நிதியில் ஸ்ரீ உடையவர் வைபவம்பற்றி மாநாடு
(9-வது உற்ஸவத்தன்று)

நாலாம் உத்ஸவம், இரவு உபயம் & விசேஷ உபயம்,
ஸ்ரீமதி தேசு கண்ணம்மாள்

ஐந்தாம் உத்ஸவம், இரவு உபயம் ஸ்ரீ ரங்கஸ்வாமி செட்டி
விசேஷ உபயம். ஸ்ரீ முத்துக்கிருஷ்ண ராமாநுஜ தாஸர், திருவல்லிக்கேணி

srivatsam

ஸ்ரீ உடையவர் கைங்கர்ய ஸபை
33, தேரடித் தெரு
திருவல்லிக்கேணி, சென்னை.

## ஒரு வேண்டுகோள்

இந்தச் சபையின் விதிகளின்படி வருடச்சந்தா ரூ. 6, ஆயுள் சந்தா (**Life Membership**) ரூ. 100. இந்தத் தொகை மூலதனத்துடன் சேர்க்கப்பட்டு, வட்டி மாத்திரம் அந்த அந்த வருஷ உத்ஸவங்களுக்குப் பயன்படுத்தப் படும். பக்தர்கள் ஆயுள் உறுப்பினர்களாக (**Life members**) வேணுமென்று ப்ரார்த்திக்கின்றோம்.

கமிட்டியார்

srivatsam

*Tell the world through NEON SIGNS*

Grams : "Neonsigns" Phone : 30870

**The Coimbatore NEON SIGNS Industry**
Kuniamuthur P. O. Coimbatore-641008
S. INDIA

**Mfrs Neon Signs, glow signs, scientific glass**
*(Quality manufacturers in India)*

**Apparatus and novelty displays etc.**
**Electrical Engineers and Contractors**

Phone 26165 Grams: 'PULIPATI' OMSRI

*Best compliments from*

**M/S Pulipati Somasundara Rao & Co.,**

Rice, Oils, Vanaspathi & General Merchants
126/c, Audiappa Naick Street., Madras-1
Res: 130, Varadamuthiappan Street., Madras-1

*Selling Agents for*
'Indhra Dhanush' & Annapoorna
Gingelly oil

Mfrs :- M/S Bhora Mills, Delhi
M/S Krishna & Co., Erode

'Keps' Brand Cocoanut Oil
Mfrs :-M/S Kalpaka Enterprises Pvt Ltd.,
Cochin

*Branch:* 3 & 4 Thayiman Chetty Street, Ponneri
Dalmia Cement Distributors

*With the best Compliments from*



**PALANIAPPA CHETTIAR & CO**
No, 6 Kumarappa Chetty St,
Madras — 3.
Phone No: 32515.

Dealers in Tannery & Finished leather goods
Importers & Exporters

## பொருளடக்கம்

### முதற் பிரிவு



### இரண்டாம் பிரிவு



### மூன்றும் பிரிவு (பாராயணப் பகுதி)



srivatsam

நான்காம் பிரிவு



srivatsam

# 1. எம்பெருமானார் வைபவம்

கவிரத்ன கண்டீரவ, செஞ்சொற்கவி
T.S. ராஜகோபாலன், B. A., L. T.

**முன்னுரை**

நாம் ஈச்வரனை அறிந்துகொள்வது ஆசார்யனாலே. நமக்கும் ஈச்வரனுக்கு முள்ள தொடர்பை ஆசார்யன் நமக்கு உபதேசம் செய்து நம்மை நல்ல நெறியில் செலுத்தி, ஈச்வரனை அடைந்து எப்போதும் இன்புற்றிருக்கும்படி செய்வான், நாதமுனிகள் காலம் முதற்கொண்டு தொடர்ந்து வந்துள்ளது, நம்முடைய ஆசார்யர்களின் பரம்பரை. இந்தப் பரம்பரைக்கு நாயகமாக விளங்குபவர் உடையவர். இவருக்கு மற்றைத் திருநாமங்களுள் முக்கியமானவை எம்பெருமானார், ராமாநுஜர். எதிராஜர். இவர் ஆதிசேஷனது அவதாரம். ராமாவதாரத்தில் லக்ஷ்மணனாகவும், கிருஷ்ணாவதாரத்தில் பலராமனாகவும் அவதரித்தவர், இந்த ஆதிசேஷனே. இவர் ஸ்ரீபெரும்பூதூரில் அவதரித்தார்; துறவு பூண்டு, ஸ்ரீரங்கம் சேர்ந்து ஸ்ரீவைஷ்ணவ நெறியை வளர்த்தார். இவரது அவதாரத்தைக் குறித்து ரிஷிகள் முன்னமேயே ''கலௌ கச்சித் பவிஷ்யதி'' (கலியிலே ஒருவன் தோன்றப் போகிறான்) என்றனர். இவருக்கு முன்னால் அவதரித்த நம்மாழ்வார், ''கலியுங் கெடும் கண்டுகொண்மின்'' என்று இவரது அவதாரத்தை, வெளியிட்டு இவரால் கலியுகம் நீங்கி, க்ருதயுகம் பரவும் என்று இசைத்துக் களித்தார். இதனை நாதமுனிகள் நம்மாழ்வாரிடம் கேட்டுத் தமக்கு இத்தகைய மஹாபுருஷனைக் காண வாய்ப்பில்லை; தம்முடைய பேரனார் காண்பார் என்று ஞானத்தால் கண்டு, தம்முடைய சிஷ்யர்களிடம் சொல்லி வந்தார். ஆக, உடையவர், தமக்குமுன் வாழ்ந்த ஆசார்யர்களாலும், தமக்குப் பின்வந்த ஆசார்யர்களாலும், பாராட்டப் பெற்று ஒப்பில்லாத பெருமை வாய்ந்தவர். உயிர்களிடத்து இவருக்குக் கருணையும் பரிவும், இறைவனது கருணையையும் பரிவையும்விட விஞ்சியிருந்தன. இவர் உத்தாரகர் — அதாவது ஸம்ஸாரமாகிற கடலினின்றும் நம்மைக் காப்பாற்றுபவர் என்று இவரது திருவடிகளையே நாடுகிறோம். ''எம்பெருமானார் திருவடிகளே சரணம்'' என்பது ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனும் சொல்லும் மந்திரம்.

**அவதாரம்**

ஸ்ரீபெரும்பூதூரில் ஆஸுரி வம்சத்தில் கேசவாரியர் என்ற பெரியவர் வாழ்ந்து வந்தார். அவர் வேதங்களைக் கரைகண்டவர்; வேள்வி செய்து வைக்குமாறு சாஸ்த்ர ஆராய்ச்சிகள் வல்லவர். அவர் திருமலைநம்பி என்ற பெரியவர் ஒருவரது குமாரத்தி காந்திமதியை மணந்து கொண்டார். நெடுங்காலமாக மகப்பேறு இல்லாததால், ஹஸ்திகிரி வரதராஜப் பெருமாளது ஆணைப்படி புத்ரகாமேஷ்டி என்ற யாகத்தைச் செய்தார். யாகம் திருவல்லிக்கேணியில் கைரவிணி என்ற புஷ்கரிணிக் கரையில் நடந்தது. தேவர்கள் யாவரும் ஆகாசத்தில் கூடினர்; கேசவாரியரை வாழ்த்தினர்.

ஸ்ரீவைகுண்ட நாதன் தனது ஆஸனமான ஆதிசேஷனிடம், ''அரவரசனே! பூமியிலே கலியின் கொடுமை ஓங்கி வருகின்றது. நாம் பல அவதாரங்கள் செய்தோம் மக்களை நல்ல வழியில் செலுத்த, அவர்கள் திருந்தவில்லை. நீ பூமியிலே பிறந்து இருநூறு வருஷம் வாழ்ந்து ஸ்ரீவைஷ்ணவ நெறியைப் பரப்புவாய். உனக்கு உதவிக்காக நித்யஸூரிகளுள் பலர் பிறப்பார்கள்'' என்றான். ஆதிசேஷனும் உடன்பட்டுக் கேசவாரியருக்குக் குமாரனாகப் பிறக்க விரும்பினான்.

சகவர்ஷம் தொள்ளாயிரத்து முப்பத்தொன்பதான பிங்கள, சித்திரை, சுக்ல பக்ஷம், பஞ்சமி, வியாழக் கிழமை, திருவாதிரை நக்ஷத்ரத்தில் கேசவாரியருக்கு அரவரசன் மகனாக

srivatsam

அவதரித்தான். இது கேட்டுத் திருமலைநம்பி குழந்தையைப் பார்க்க வந்தார். குழந்தையின் மேனியையும், முகத்தையும் உற்று நோக்கி, "இவனது பிறப்பு விசேஷமானது. இளைய பெருமாள் எனப்பெறும் லக்ஷ்மணனிடம் வாய்ந்த அருங்குணங்கள் இவனிடம் காணலாம். இவனுக்கு இளையாழ்வார் என்ற பேர் மிகப் பொருந்தும்" என்றார். ரகஸ்யமாகக் குழந்தையின் மேனியில் இறைவனது திவ்யாயுதங்கள் ஐந்தைக் கைவிரலால் குறித்துக் கேசவன் முதலாகிய பன்னிரண்டு திருநாமங்களையும் ஓதினார்; பெரிதும் உகந்து ஆசீர்வாதம் செய்தார்.

### யாதவப்ரகாசரை நாடியமை

கேசவாரியர் குழந்தைக்கு நாமகரணம் முதலியவற்றை முறைப்படிச் செய்து, ஐந்தாம் பிராயத்தில் அக்ஷராப்யாஸமும் செய்வித்தார். இளையாழ்வார் தமது தகப்பனாரிடம் வேதங்கள், சாஸ்த்ரங்கள் முதலியன பயின்று வந்தார். தமது பதினாறுவது பிராயத்தில் தஞ்சம்மாள் என்ற கன்னிகையை மணம்புணர்ந்து இல்லறம் இனிது நடத்தி வந்தார்.

திருப்புட்குழியிலே யாதவப்ரகாசர் என்ற அத்வைத ஸந்யாஸி ஒருவர் வேதாந்தப்பாடம் சொல்லி வந்தார். அவரிடம் படிப்பதற்காகச் சென்றார் இளையாழ்வார். தமது தாயாரின் ஸகோதரியின் புதல்வரான கோவிந்தப் பெருமாளும் அங்குக் கல்வி ஏற்க வந்ததால், மிகவும் மகிழ்ந்தார் இளையாழ்வார்.

சுருதி வாக்கியங்களுக்கு யாதவப்ரகாசர் கூறிவரும் அர்த்தங்களை இளையாழ்வார் ஏற்றுக் கொள்ளாமல், "பொருள் இப்படி இருக்கலாம்" என்று அடிக்கடி சொல்லி வந்ததால், ஆசிரியர் இளையாழ்வாரை வெறுக்கத் தொடங்கினார். ஒருநாள் இளையாழ்வார் ஆசிரியருக்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டிருக்கும்போது, ஆசிரியர் "கப்யாஸம் புண்டரீக மேவ அக்ஷிணீ" என்ற சுருதி வாக்யத்திற்குக் கருத்தாக, "இறைவனது கண்கள் குரங்கின் பின்புறம் போன்றிருப்பன" என்றார். இது கேட்டு மனம் புழுங்கினார் இளையாழ்வார். "தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவுந் தலைமகனை" என்று ஞானிகள் வாழ்த்தும் பரம் பொருளின் கண்களை இவ்வாறு இழித்துக் கூறியது, இவரது மனத்தில் பேரிடிபோல் தாக்கியது. கண்கள் கலங்கின; வெப்பநீர் தரையில் பாய்ந்தது. கண்ணீர்த் துளிகள் இரண்டு ஆசிரியரின் தொடைமேல் விழுந்தன; அனற்பொறியோ என்று நோக்கினார் ஆசிரியர். மனக்கலக்கத்துடன் யாதவப்ரகாசர் இளையாழ்வாரைப் பார்த்து, "சிஷ்யனே! உன் கண்ணீரா இது? உன் மனத்தில் இருப்பதை ஒளிக்காமல் சொல்லுவாய். நாம் உமக்குக் குரு. நம் ஆணை மீறலாகாது" என்றார். இளையாழ்வார், "ஐயனே! கம் பிபதி இதி கபி; ஆஸ உபவேசநே. நீரைப் பருகுவதால் ஸூர்யனுக்கு கபி என்பது பொருந்தும்; அவனது கிரணங்கள் சேர்வதால் மலர்வது தாமரைப்பூ. ஆதலால் பரம்பொருளின் கண்கள் தாமரை மலர் போல்வன என்பதே ஏற்றதாகும்" என்று விளக்கினார். இளையாழ்வாரைப் பார்த்துச் சீறினார் ஆசிரியர்; "நீ குருவை விஞ்சிய சிஷ்யனாகிவிட்டாய், நம்மிடம் நீ கல்வி ஏற்க அவசியமில்லை" என்றார்.

srivatsam

### ஆசிரியரது வஞ்சகம்

இளையாழ்வாரால் தமக்குக் கீர்த்தி குறையும் தம்முடைய மதமும் குலையும் என்று கருதினார் யாதவப்ரகாசர். அவரை முடிக்கும் வகையை நினைந்து, தம்முடைய அந்தரங்க சிஷ்யர்களோடு ஆலோசனை செய்தார். சிஷ்யர்களுடன் காசியாத்ரை செல்லுவதென்றும் அங்குக் கங்கையில் இளையாழ்வாரை ஆழ்த்துவதென்றும் முடிவு கொண்டார்; கங்கை புனிதமான தீர்த்தமாகையாலே அதில் விழுந்து இறப்பவர்களுக்கு துர்மரணம் என்பதில்லை; தாம் நினைத்தபடி முடித்தால் தமக்குப் பாவமும் நேராது எனத் துணிந்தார் அவர்.

காசியாத்ரை என்று கேட்டதும் சிஷ்யர்கள் கொண்ட குதூகலத்திற்கு எல்லையேயில்லை. யாவரும் ஆசிரியருடன் புறப்பட்டனர். வழியிலே புண்ய நதிகளில் நீராடி, க்ஷேத்திரங்களில் இறைவனை வழிபட்டுப் பேருக்கத்துடன் நடந்தனர். விந்தியமலைப் பள்ளத்தாக்கில் இளையாழ்வாரைத் தனித்து அழைத்தார் கோவிந்தப் பெருமாள்; ஆசிரியரது தீ மனத்தை வெளியிட்டு அவரைத் தொடர வேண்டாம் என்று எச்சரித்தார்.

## பேரருளாளன் பேரருள்

அதுகேட்டு இளையாழ்வார் பின்தங்கி விட்டார். அவ்விடத்திலே துணை ஒருவரும் இல்லாததால் தனித்துச் செல்ல அஞ்சினார். ஓரிடத்தில் ஒரு மரத்தின் நிழலில் அமர்ந்து யாது செய்வதென ஆலோசனை செய்தார். மாலைப் போதிலே சூர்யன் விரைந்து அஸ்தமிக்க, எங்கும் இருள் பரவலாயிற்று. அத்தருணம் அங்கு வேடன் ஒருவன், கையில் வில் ஒன்றை ஏந்தி வருவதைக் கண்டார். அவன் புருஷ லக்ஷணங்கள் வாய்ந்தவன்; கம்பீரமாக நடையிட்டு வந்தான். அவனுடன் அவனது மனையாளும் வந்தாள். அவள் திருமகளைப் போல் விளங்கினாள். அவள் தனித்து நின்ற இளையாழ்வாரைக் கருணையுடன் நோக்கினாள். இளையாழ்வார் அந்த வேடனை அணுகி, "வேடுவர் திலகமே! நான் தெற்கினின்றும் இங்குப் போந்தேன். தனியாக இங்கிருக்க நேர்ந்தது. காட்டில் எனக்கு வழி சிறிதேனும் தெரியாது. என்னை இக்காட்டினின்றும் வெளியே சேர்க்கவேண்டும். என்னைக் காப்பதற்கெனவே ஸர்வேச்வரன் உம்மை இங்கு அனுப்பினான் போலும்" என்றார். அவ்வேடுவனும், "நீர் அஞ்சவேண்டா, உம்மை இந்தக் கொடிய காட்டைவிட்டு அகற்றிச் செல்லுகிறேன். நீர் பெரிய ஞானி என நினைக்கிறேன். இவ்விரவு இந்த மரத்தடியிலேயே தங்கி, விடியற்காலத்தில் புறப்படுவோம்" என்றான். மூவரும் அம்மரத்தடியிலே அமர்ந்து வரதராஜனுடைய புகழை ஓதியும் பாடியும் பொழுது போக்கி வந்தனர். நள்ளிரவில் அவ்வேடுவச்சி வேடனைப் பார்த்து, "நாதா! எனக்குத் தாகம் அதிகரிக்கின்றது. பருகச் சிறிது தண்ணீர் வேண்டுமே" என்றாள். வேடன், "அன்பே! இந்தக் காரிருளில் எங்குச் செல்ல முடியும்? பொழுது விடிந்ததும் அருகிலுள்ள ஒரு கிணற்றினின்றும் தண்ணீர் முகந்து கொண்டு வந்து கொடுக்கிறேன்" என்றான். இளையாழ்வார் மிகவும் வருத்தம் கொண்டார். தம்மைக் காத்த வேடனின் மனையாளது தாகத்தைத் தீர்க்க வாய்ப்பில்லையே என்று மனம் கலங்கினார். சிறிது நேரத்திற்கெல்லாம் களைப்பாலே அயர்ந்து நித்திரை செய்தார்.

srivatsam

அருணோதயம்; பறவைகள் களித்து அங்குமிங்கும் கூவிக்கொண்டு பறந்தன. இளையாழ்வார் கண் விழித்தார். தம்முடன் படுத்துறங்கிய இருவரையும் காணவில்லை. தாம் இருக்கும் இடம் முன்னாள் தங்கிய இடமன்று எனக் கண்டு வியந்தார். அருகில் ஜனசஞ்சாரம் இருப்பது கண்டு அவ்விடம் நடந்து சென்றார். அங்குக் கிணறு ஒன்றைக் கண்டு, "அந்தோ! அந்த வேடுவச்சிக்குத் தண்ணீர் முகந்து அளிக்கும் பாக்யம் இல்லையே எனக்கு. நேற்றிரவு இந்தக் கிணறு இருப்பது தெரியவில்லையே" என்று பலவாறு நினைந்தார். அருகில் உள்ளவர்களைப் பார்த்து, "இது எந்த ஊர்?" என்று கேட்டார். அவர்கள், "நீர் இந்த ஊருக்குப் புதிதாகப் போந்தீரோ? எதிரே நீர் காண்பது புண்யகோடி விமானம்; இந்த ஸ்தலம் ஹஸ்திகிரி" என்றனர். இதுகேட்டு இளையாழ்வார் பெரிதும் வியந்தார். இறைவனது பெருங் கருணையை நினைந்து ஆனந்தக் கண்ணீர் உகுத்தார். நாம் விந்தியப் பிரதேசத்தில் கண்ட இருவரும் பேரருளாளனும் பெருந்தேவியுமே என்று உணர்ந்தார். ஹஸ்திகிரியிலேயே தங்கிப் பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதென முடிவு செய்தார். தினந்தோறும் அந்தக் கிணற்றினின்றும் தீர்த்தம் முகந்து பேரருளாளனுக்கும் பெருந்தேவிக்கும் ஸமர்ப்பித்து வந்தார். அந்தக் கிணறு இப்போது சாலைக்கிணறு என்று வழங்கப்படுகிறது.

## இளையாழ்வாரது முதன்மை வெளிவந்தமை

யாத்ரையில் இளையாழ்வாரைக் காணவில்லையே என்று யாதவப்ரகாசர் பெரிதும் வருத்தமுற்றார். "இளையாழ்வாருக்கு இக்கொடிய காட்டில் என்ன நேர்ந்ததோ? இவரை மறுபடியும் நாம் காணக்கூடுமோ?" என்று கண்ணீர் உகுத்தார். யாத்ரையை முடித்துக்கொண்டு மீண்டு, தமது சிஷ்யர்களுடன் வரதராஜனை வணங்க வந்தார். அங்கு இளையாழ்வாரைக்கண்டு, "நடுக்காட்டினின்றும் இங்கு வந்தது எவ்வாறு? உன்னைக் காணவில்லையே என்று பெரிதும் கலங்கினோம்" என்றார். இளையாழ்வார் நிகழ்ந்ததெல்லாம் கூற, ஆசிரியர், "என்னே! வரதனுடைய அருள்!" என்று வியந்தார். அங்கேயே சிஷ்யர்களுடன் தங்கி முன்போல் வேதாந்தம் நடத்திவந்தார். இளையாழ்வாரும் அவரிடம் பாடம் கேட்டு வந்தார்.

ஒருகால் அவ்வூர் அரசனின் பெண், பேய் ஒன்றால் பிடிக்கப்பட்டு வந்தாள். யாதவப்ரகாச தமது பேரைக் கேட்டு அந்தப் பேய் தானே அகலும் என்று அரசனுக்கு ஒருவர் மூலமாக சொல்லி அனுப்பினார். அந்தப் பேய் அதனைச் சிறிதேனும் லக்ஷ்யம் செய்யவில்லை. ஆதலா ஆசிரியர் அரண்மனைக்கு இளையாழ்வாருடன் சென்றார். அந்தப் பெண்ணின் முன் மந்திரங்க ஜபித்தார், ஆசிரியர். பேய் அவரைக் கண்டு நகைத்தது, "அடா, நீ ஓதும் மந்திரம் இதுவாகும்" என்று மந்திரத்தைச் சொல்லி, "உன்னுடன் இருப்பவர் ஆதிசேஷனின் அவதாரம். அவருடை திருவடி என் தலைமேல் சேருமானால், நான் இவளை விட்டு நீங்கி நானும் உய்வேன்" என்றது யாதவப்ரகாசர் இளையாழ்வாரை நோக்க, இளையாழ்வார் தமது வலது திருவடியை அந்த பெண்ணின் தலையில் வைத்தார். பேய் நீங்கியது; அந்தப் பெண் பண்டை நிலையைப் பெற்றாள் யாவரும் இளையாழ்வாரைப் பாராட்டினர்.

## இளையாழ்வாரும் ஆளவந்தாரும்

நாதமுனிகளின் பேரனாராகிய ஆளவந்தார் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் தலைவரா ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்து வந்தார். அவர் வயது முதிர்ந்தவர். தமக்குப்பின் அப்பதவியை ஏற்ப யார் என்று ஆலோசிக்கலானார். அவரது பாட்டனாராகிய நாதமுனிகள் நம்மாழ்வாரிடம் தா கேட்டிருந்த தொன்றை தமது சிஷ்யர்களிடம் சொல்லி வைத்திருந்தார்—அதாவது "ஓர் அவதா புருஷன் தோன்றுவான்; அப்புருஷனை எனது பேரன் நேரில் காண்பான்" என்று. இதனைக் கேட் ஆளவந்தார் அந்த அவதார புருஷன் யாராக இருக்கக்கூடும் என்று நெடுநாளாக நினைந் வந்தார். ஒருநாள் ஹஸ்திகிரியினின்றும் வந்த இரண்டு வைஷ்ணவர்கள் ஆளவந்தாரிட இளையாழ்வரைப் பற்றிக் கூறினார்கள். இளையாழ்வாரது மேனியின் எழிலையும் புகழையு புத்தி கூர்மையையும், விரக்தி முதலியவற்றையும் கேட்ட ஆளவந்தார், அவரை நேரில் காண ஹஸ்திகிரிக்குப் புறப்பட்டார். ஹஸ்திகிரியில் ஆளவந்தாரது சிஷ்யர்கள்—திருக்கச்சிநம்பி முதலியவர்கள் அவரை உரிய மரியாதைகளுடன் வரவேற்று, வரதராஜனை சேவிக்க அழைத்துச் சென்றனர். கோயிலில் யாதவப்ரகாசர் தமது சிஷ்யர்களுடன் நிற்க கண்டு ஆளவந்தார், திருக்கச்சி நம்பிகளைப் பார்த்து, "இந்தச் சிஷ்யர்களுள் இளையாழ்வா யார்?" எனக் கேட்டார். நம்பியும், "சிஷ்யர்களினிடையே சிவந்த மேனியுடையவராய் உயர்ந்தவராய், ஆஜாநுபாஹுவாக நிற்பவரே" என்று சுட்டிக் காட்டினார். ஆளவந்தா இளையாழ்வாரைக் கடாக்ஷித்து, "இவர் ஸ்ரீவைஷ்ணவ சமயத்திற்குத் தலைவராவர்" என சொல்லி, வரதராஜனைத் தொழுது, "பெருமானே! இந்த இளையாழ்வார் நம் தர்சனத் தலை ராகுமாறு அருள் செய்யவேண்டும்" என்று இறைஞ்சி விடைகொண்டார். இளையாழ்வாரை அணுகி, அவரிடம் பேசவில்லை.

srivatsam

சிறிது காலம் செல்லத் தமது வாழ்நாள் குறுகியுள்ளது என்பதை உணர்ந்த ஆளவந்தார், தமது சிஷ்யரான பெரிய நம்பியைப் பார்த்து, "நாம் இளையாழ்வாரைக் காண விரும்புகிறோம் அவரை அழைத்து வருவீர்" என்று ஆணையிட்டார். பெரிய நம்பியும் ஹஸ்திகிரியில் ஒ வீதியில் நின்று கொண்டு, ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ர ரத்னத்தை ஓதிக்கொண்டிருந்தா அப்போது இளையாழ்வார் சாலைக் கிணற்றிலிருந்து தீர்த்தம் முகந்து வந்தார். ச்லோகங்களின் இனிமையை அறிந்து அவர், "ஸ்வாமீ! இந்த ச்லோகங்கள் யார் அருளியவை? அப்பெரியோரை பார்க்க எனக்கு வாய்ப்பு உண்டோ?" என்று கேட்டார். நம்பியும், "இப்போதே அழைத்து செல்லுகிறேன்; வாரும். அவர் ஆளவந்தார்; ஸ்ரீவைஷ்ணவ ஸமூகத்திற்குத் தலைவர்; அரி மேதை; வேதவேதாந்தப் பொருள்களை யாவர்க்கும் எளிதில் வழங்கும் இயல்பினா வேந்தர்களால் வணங்கப்படும் வித்தகர்" என்றார். இளையாழ்வார் வரதராஜனிடம் விடை கொண்டு நம்பியுடன் ஸ்ரீரங்கத்திற்குப் பயணமானார்.

ஸ்ரீரங்கத்தில் வடக்குக் காவிரியின் வடகரையிலே நின்று அவர்கள் தெற்கு நோக்கின எதிர்க்கரையில் ஜனங்கள் பெருந்திரளாக நிற்பதைக் கண்டனர். ஆளவந்தார் விண் புகுந்தா அவரைத் திருப்பள்ளி படுத்த (அடக்கஞ் செய்ய) அவர்களது சிஷ்யர்கள் கூடியிருப்பதா அறிந்தனர். இதுகேட்டுப் பலவாறாகப் புலம்பினார் பெரிய நம்பி.

" புரையற்ற கலைக்கடலே! புலன் தகையுந்
தவமுனியே! புவனந் தன்னுள்
கரையற்ற அருட்கடலே! கருதரிய
தரிசனத்தின் கண்ணே! முன்னேப்!
வரையற்ற சுவைவந்த செந்தமிழின்
வளமெல்லாம் ஓதி விண்பால்
தரையுற்ற தரமெல்லாம் பகரவெனச்
சார்ந்தனையோ?'' என்ருன் நம்பி.

இளையாழ்வார் ஆளவந்தாரை முன்னமேயே சேவிக்கப் பெறவில்லையே என்று வருந்தினர். "கைக்கெட்டியது வாய்க்கு எட்டாமல் போயிற்றே. என்னே, நான் செய்த பாவம்!'' என்று வருந்தினர்.

துயரத்தில் ஆழ்ந்த இவ்விருவரும் கால் பின்னக் காவிரியைக் கடந்து அடியார்களது கூட்டத்தில் புகுந்தனர்.

பொன்னொளிரு மம்பரத்தில் பொன்மேனி
ஓவியத்தி னொளிரக் கண்டார்
மின்னொளிருங் கண்ணிணைகள் வீய்ந்திலதால்
இவனருள்என் றிலங்கக் கண்டார்
தன்னருளே மண்ணுய்ய வளர்தருமால்
தாழ்ந்திலதே என்று காட்டும்
பொன்னடியே புவனியெலாம் உய்யவெனத்
தாமரைபோல் பொலியக் கண்டார்.

இளையாழ்வார் ஆளவந்தாருடைய திருமேனியை உற்று நோக்கிச் சேவிக்கும்போது வலக்கை விரல்கள் மூன்று முடங்கியிருக்கக் கண்டு, அருகிலிருந்தவர்களை, "இவனுக்கு விரல்கள் எப்போதும் இவ்வாறு இருப்பனவோ?'' எனக் கேட்டார். அவர்கள், "இதனை இப்போதுதான் கண்டோம்'' என்றனர். "இவருக்குக் குறைகள் எவையேனும் உளவோ?'' என்று கேட்டார் இளையாழ்வார். அவர்கள், "இவருக்கு வ்யாஸரிடமும் பராசரரிடமும் ஆராத அன்பு உண்டு; நம்மாழ்வாரது திருவாய்மொழி எங்கும் பரவவேண்டும் என்று விரும்புவார்; வ்யாஸ ஸூத்ரங்களுக்கு பாஷ்யம் தோன்றவேண்டும் என்று அடிக்கடி சொல்லுவார்'' என்றனர். இதுகேட்ட இளையாழ்வார், தமது கரங்களைக் குவித்து, "இந்த மஹானின் அருளும், ஸ்ரீரங்க நாதனின் கடாக்ஷமும் நேருமானல் இக்குறைகளை நான் நீக்கிவிடுவேன்'' என்ருர். ஆளவந்தாரின் கையில் முடங்கியிருந்த மூன்று விரல்கள் எப்போதும்போல் நிமிர்ந்து நின்றன. இது கண்டு பெரியோர்கள், "நம் தர்சனத்திற்கு (மதத்தினர்க்கு)த் தலைவர் இனி இவரே'' என்று ஆசி கூறினர்.

## அருளாளன் அருளிய ஆறு வார்த்தைகள்

ஆளவந்தாரைப் பள்ளி படுத்திய பின்னர் இளையாழ்வார் காவிரியில் அவபிரதம் (துறவிக்கு ஆகும் அடக்கம் நிகழ்ந்தபின் நீராடுவது) ஆடி ஹஸ்திகிரிக்குப் பயணமானர். ஆளவந்தாரை இழந்த துயரத்தால் அவர் ஸ்ரீரங்கநாதனையும் சேவிக்கவில்லை. ஹஸ்திகிரியில் திருக்கச்சி நம்பியிடம் நிகழ்ந்ததைச் சொல்ல, நம்பியும் தமது ஆசாரியரான ஆளவந்தாருக்குத் தாம் செய்ய வேண்டுவனவற்றைச் செய்து, அவரது பெருமையையே நினைந்து வந்தார்.

இளையாழ்வாருக்கு நம்பியிடம் நாளுக்கு நாள் பிரேமம் மேலோங்கி வந்தது. அவர் நம்பியையே பற்றி உய்யலாம் என்றும் நினைத்தார். ஒருநாள் நம்பியைத் தம் அகத்திற்குச் சாப்பிட அழைத்தார். நம்பி அமுதுசெய்த (சாப்பிட்ட) சேஷத்தைத் தாம் ஏற்று உண்ண

விரும்பினார் இளையாழ்வார். நம்பியும் இளையாழ்வாரது அகத்திற்குச் சென்றார். ஸந்நிதியில் கைங்கர்யம் இருந்ததால் இளையாழ்வார் வருவதற்கு முன்னமேயே போஜனம் செய்து திரும்பி விட்டார். இளையாழ்வார் தம் மனைக்கு மீளும்போது மனைமுழுதும் சுத்தம் செய்யப் பெற்றுச் சமைத்த பாத்திரங்களும் கழுவி வைக்கப் பெற்றிருந்தன. அவர் திடுக்கிட்டார். தம் மனையாளைப் பார்த்து, "இந்த அடியார் உண்டு புனிதமான மீதியை நான் ஏற்றுக்கொண்டு உய்யவேண்டும் என்று நெடுங்காலமாகப் பார்த்துக் கொண்டிருந்தேன். என் ஆசை குலைந்துவிட்டதே. பர்த்தாவின் விருப்பத்தின்படியல்லவோ பத்னி ஒழுகவேண்டும்?" என்று பலவாறாகக் கடிந்தார்.

ஆளவந்தாரது திருவுள்ளத்தை இயக்கும் வகையை ஆராய்ந்தார் இளையாழ்வார். திருக்கச்சி நம்பியை வணங்கி, "பேரருளாளனிடம் உரையாடும் பெருமை வாய்ந்தவரே! என் மனத்துள் உள்ள எண்ணங்கள் சில; அவைபற்றிப் பெருமானது ஆணை வேண்டும். வரதராஜனைக் கேட்டு என்னிடம் அருளிச்செய்ய வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார். அன்று நம்பி வரதராஜனிடம் இதை விண்ணப்பம் செய்யப் பெருமானும், "நம்பீ! இளையாழ்வாரது உள்ளத்தில் உள்ளனவற்றைச் சொல்லுகிறோம்; அவரிடம் கூறுவீர்: (1) நாமே பரம்பொருள், (2) இறைவன் ஜீவர்களினின்றும் வேறுபட்டவன், (சிதசிதீச்வர-பேதமே தர்சனம்) (3) பக்தியினும் சிறந்தது ப்ரபத்தி, (4) மக்களின் இறுதிக் காலத்திலே நாமே அவர்களைப் பற்றி நினைப்பதால், அந்திமஸ்ம்ருதி (அவர் இறுதிக் காலத்திலே நம்மை நினைப்பது) அவசியமன்று. (5) சரீரம் முடியும்போது பக்தர்களுக்கு மோக்ஷம் நிச்சயம், (6) பெரிய நம்பியை அண்டி இளையாழ்வார் உபதேசம் பெறவேண்டும்." இளையாழ்வார் இவற்றைக் கேட்டார்; யாவும் தாம் நினைந்தனவே என்று மகிழ்ந்து நம்பியையும் வரதராஜனையும் வாழ்த்தினார்.

**பஞ்சஸம்ஸ்காரம் (ஐம்பால்-சடங்கு)**

வரதராஜனது நியமனப்படி பெரிய நம்பியை ஆசாரியராகப் பெறுவதற்காக, இளையாழ்வார் ஸ்ரீரங்கத்தைக் குறித்து நடந்தார். பெரிய நம்பியும் இளையாழ்வாரைத் தனக்குச் சீடராக்கிக் கொள்ள ஹஸ்திகிரிக்குத் பயணமானார். இவ்விருவரும் மதுராந்தகத்தில் சந்தித்தனர். இளையாழ்வார் நம்பியின் திருவடிகளில் படிந்து, "அடியேனுக்குப் பஞ்சஸம்ஸ்காரம் அருளவேண்டும்" என்று வேண்டிக்கொண்டார். நம்பி, "க்ஷேத்ரங்களுள் சிறந்ததான ஹஸ்திகிரியில் செய்வேன்" என்றார். இளையாழ்வார், "ஸ்வாமீ! சரீரம் நிலையற்றது. மின்னின் நிலையுமில்லை என்பது தேவரீர் அறிந்ததே! ஆளவந்தாரைச் சேவிக்க விரும்பி நடந்தோம்; உயிரோடு சேவிக்கவில்லை என்பதும் அறிந்ததே. ஆகலின், இப்போதே அருள வேண்டும், என்று கேட்டுக்கொண்டார். பஞ்சஸம்ஸ்காரம் ஏரி காத்த இராமன் ஸந்நிதியில் மகிழ மரத்தடியில் நடந்தது. ஆளவந்தாரைத் துதித்துக் கொண்டு நம்பி இளையாழ்வாருக்குச் சங்கு சக்கரப் பொறியைப் புயங்களில் பொறித்தார், திருமண்காப்பு இட்டார், தாஸ்ய நாமம் அளித்தார், திருமந்த்ர உபதேசம் செய்தார், திருவாராதனம் செய்யும் வகையும் உபதேசித்தார்.

பஞ்சஸம்ஸ்காரம் பெற்றபின் இளையாழ்வார் நம்பியை ஹஸ்திகிரிக்கு அழைத்துச் சென்றார். அங்குத் தமது மனையை அடுத்த ஒரு மனையில் நம்பியை வசிக்கச் செய்தது, அவருக்கு வேண்டிய வசதிகள் யாவும் அளித்து வந்தார். நம்பி அவருக்கு ஸ்ரீவைஷ்ணவ சமய சம்பந்தமான விஷயங்களை உபதேசித்து வந்தார். ஒரு நாள் இளையாழ்வார் வரதராஜன் ஸந்நிதியினின்றும் திரும்பும்போது, நம்பி ஸ்ரீரங்கத்திற்குப் புறப்பட்டு நெடுந்தூரம் சென்றிருப்பார் எனக் கேட்டுக் கலங்கினார். அதன் காரணம் தம் மனையாளுக்கும், நம்பியின் தேவிக்கும் ஏற்பட்ட சிறிய சச்சரவேயாம். நம்பியின் தேவி, கிணற்றினின்றும் தண்ணீர் முகக்கும்போது, அதில் சிறிது தஞ்சம்மாள் வைத்திருந்த குடத்தில் தெறித்தது. தஞ்சம்மாள் அளவு கடந்து பேசிவிட்டாள். இதுகேட்ட நம்பி, தமக்கு இளையாழ்வாரிடம் மனஸ்தாபம் ஏற்படும் என்று பயந்து, உடனே அவ்வூரை விட்டு வெளியேறினார். இளையாழ்வார் தமது மனையாளைக் கடிந்து, நம்பியை நேரில் கண்டு மீண்டும் அழைத்துவர விரைந்தார். நம்பியைக் காணவில்லை. இளையாழ்வாருக்குத் தன் மனையாளிடத்துச் சீற்றம் மேலும் ஓங்கியது. அதற்கு முன் தம் விருப்பத்தைத் தம் மனையாள் செய்யவில்லை என்ற குறையும் வளர்ந்துவந்தது. ஆதலால் அவர் துறவு ஏற்று வைஷ்ணவ மதத்தை வளர்க்க விரும்பினார். மனையாளை அவளது பிறந்தகத்துக்கு அனுப்பிவிட்டார்.

**துறவறம் ஏற்றமை**

இளையாழ்வார் அனந்தஸரஸிலே நீராடி, வரதராஜனது முன்பு வணங்கி நின்று "பெருமானே! நான் இல்லறம் துறந்தேன். இனி நீயே எனக்கு எல்லா உறவும் முறையும். எனக்குக் காஷாய த்ரிதண்டங்களை அளிக்க வேண்டும்" என்று இறைஞ்சினர். வரதராஜனும் அவற்றை அளித்து, "இளையாழ்வீர்! இனி நீர் ராமாநுஜமுனி ஆவீர்" என்று பகர்ந்து, ஆதரத்துடன் நோக்கினன். ஆங்குக் கூடியிருந்த அன்பர், "இவர் ஆளவந்தாரைப் போலே சிறந்தவர்" என்றனர்; ஸ்ரீவைகுண்டத்திலே நித்யஸூரிகள், "இனி பூமியும் வைகுண்டம் போல் சிறப்புடையதாகும்" என்றனர்; நம்மாழ்வார், "நம் திருவாய்மொழி முதலிய ப்ரபந்தங்கள் பரவி மக்கள் உய்வர்" என்று களித்தார்; பூமிப் பிராட்டி, "நமது சுமை கழியும்" என்று நினைந்தாள்.

வரதராஜனது ஆணைப்படி பெரியோர்கள் ராமாநுஜ முனிவரை மரியாதைகளுடன் மடத்திற்கு அழைத்துச் சென்றனர். ராமாநுஜரும் ஆளவந்தாருடைய திருவுள்ளத்தை நிறைவேற்றும் வகையை ஆராய்ந்து வந்தார்.

**சிஷ்யர்கள்**

இல்லறத்தில் தமக்கு பந்துவான கோவிந்தப் பெருமாள் சிவ தீக்ஷை ஏற்றுக் காளஹஸ்தியில் பூஜை செய்து வருவதாகக் கேள்வியுற்றார், ராமாநுஜர். அவரை வைஷ்ணவ நெறியில் சேர்த்துக் கொள்ளுமாறு திருமலை நம்பிக்கு விண்ணப்பம் அனுப்பினர். நம்பியும் அருமுயற்சி கொண்டு, கோவிந்தப் பெருமாளை மீட்டு, உபநயனம் செய்வித்துத் தமது சிஷ்யராக்கிக் கொண்டார்.

புருஷ மங்கலம் என்ற ஸ்தலத்திலே தாசரதி என்ற பெரியவர் வாழ்ந்து வந்தார்; அவர் இளையாழ்வாரது தாயாரின் ஸகோதரியின் குமாரர். இளையாழ்வார் துறவு பூண்டதைக் கேட்டு, அவருக்குச் சிஷ்யராகி அவருடனே வாழ விரும்பினர், அவர். அப்படியே ராமாநுஜரை வணங்கி, அவரது சிஷ்யரானர். ராமாநுஜரின் சிஷ்யர்களுள் அவர் முதல்வராகையாலே அவரை முதலியாண்டான் என்று ஸ்ரீவைஷ்ணவர்கள் இன்றும் பாராட்டுகின்றனர்.

கூரம் என்ற ஸ்தலத்திற்குத் தலைவராய் வாழ்ந்து வந்தார் ஓர் அரிய மேதை. அவர் ஆழ்வான் என்று திருநாமம் உடையவர். அவரும் ராமாநுஜருடன் வாழ விரும்பி அவரைப் பணிந்து, அந்த மடத்திலே தங்கினர். ராமாநுஜர் அவ்விருவரையும் மிகுந்த ஆதரத்துடன் ஏற்றுக்கொண்டார்; முதலியாண்டானைத் தமது முக்கோல் (த்ரிதண்டம்) என்றும், ஆழ்வானைத் தமது (வலக்கை) பவித்ரம் என்றும் பாராட்டி வந்தார்.

யாதவப்ரகாசரது தாயார் அவரை ராமாநுஜனுக்குச் சிஷ்யராகுமாறு பணித்தாள். யாதவப்ரகாசருக்கும் இவ்விருப்பம் வளர்ந்து வந்தது. எனினும் ஸ்ரீவைஷ்ணவ ஸந்யாஸியாவதற்குப் பூணூல் அவசியம் வேண்டும். மறுபடியும் உபநயனம் செய்து கொள்வதானல் முன்பு பூணூலைத் துறந்ததற்குக் கழுவாயாக (ப்ராயசித்தமாக) பூப்ரதக்ஷிணம் செய்ய வேண்டும் ஆதலால் என்ன செய்வது என்று தயங்கினர். வரதராஜன் அவரது கனவில் தோன்றி, "நம் ராமாநுஜனை ஒருமுறை ப்ரதக்ஷிணம் செய்தால் பூமியை வலம் வருவதற்குச் சமமாகும். ஆதலால் ராமாநுஜனை ஒரு முறை வலம்வந்து, சிஷ்யனுவாய்" என்றான். யாதவப்ரகாசரும் அவ்வண்ணமே செய்தார். ராமாநுஜர் அவரை அன்புடன் ஏற்றுக் கொண்டு, கோவிந்த ஜீயர் என்றழைத்தார்.

**ஸ்ரீரங்கம் சேர்ந்தமை**

இளையாழ்வார் துறவேற்றது கேட்டு, ஸ்ரீரங்கத்தில் ஆளவந்தாரது சிஷ்யர்கள் பெரிய நம்பியை அடைந்து, "ஸ்வாமீ, நம் ஆளவந்தாரது கடாக்ஷம் பெற்ற ராமாநுஜ முனிவரை இங்கு அழைத்து வந்து வைஷ்ணவ நெறியை வளர்க்கச் செய்வீர்" என்றனர். அவர் ஸ்ரீரங்கநாதனை வணங்கி, "ராமாநுஜர் இங்குப் போம்படி அருள் செய்யவேண்டும்" என்று இறைஞ்சினர்,

ஸ்ரீரங்கநாதன் ஹஸ்திகிரிப் பெருமானுக்கு ஓலை ஒன்று விடுத்தார்; அதில், 'மக்கள் திருந்தி நன்னெறி பரவுவதற்கு ராமாநுஜன் இங்கு வந்து சேருமாறு ஆணையிடவேண்டும்'' என்று குறித்திருந்தது. வரதராஜன் அதனைப் படித்து, ''நாம் எப்படி நம் ராமாநுஜனைப் பிரிவது அவனுக்கு நம்மிடம் அன்பு குறைந்தாலன்றோ, நாம் அவனைவிட்டுப் பிரியலாம்?'' என்று புகன்றான். இதுகேட்ட பெரியநம்பி திருவரங்கப் பெருமாள் அரையரை ஹஸ்திகிரிக்கு அனுப்பி வரதராஜனைத் தேவகானத்தால் மகிழ்வித்து ராமாநுஜரை அழைத்து வருமாறு வேண்டிக் கொண்டார். அரையரும் ஸ்ரீரங்கநாதனிடம் விடைபெற்று ஹஸ்திகிரி வந்து சேர்ந்தார்.

ஸ்ரீரங்கநாதனுக்கு இசைவழங்கும் அரையர் வந்திருக்கிறார் என்று பெரியோர்களும் பாமரர்களும் வரதராஜனது ஸந்நிதியில் கூடினர். அரையர் தேவகானத்தில் ''அத்தியூரான்,'' ''துணிவினியுனக்கு'' என்பன போன்ற பாசுரங்களைத் தேவ கானத்தில் இசைக்க, வரதராஜன் மெய்ம்மறந்து, தான் அணிந்திருந்த முத்துத் தாமம், பீதாம்பரம், முதலிய வரிசைகளை அளித்தான் அரையருக்கு. ''எனக்கு இவை ஒன்றும் வேண்டா. நான் கேட்பது ஒன்றே; அதை அளித்தருளவேணும்'' என்றார் அரையர். ''ஆகுக; சொல்லிக் காணீர்'' என்றான் இறைவன். அரையர் அருகே நிற்கும் ராமாநுஜரைச் சுட்டிக் காட்டி, ''இவரை அளிப்பாய்'' என்றார்.

'' ஒருவன் நின்கழ லருமை ஓர்நன்
மருவு நன்னெறி யுற்றவன்
பொருவி லன், மதியிருங்கடல், பலர்
தெருளன் என்றிடு புந்தியன்
அருகு நிற்குமித் துறவ னன்பனை
அவனி உய்ந்திட அருளுதி
திருஅணைதரு பெருமா'' என்றனன்
திருவரங் கனின் அரையரோ.

srivatsam

வரதராஜன் சிறிது தயங்கினான். அரையரும், ''பெருமானே! நீ வரதனுவாய். வாக்களித்ததை மறுக்கவோ!'' என்றார். பெருமானும், ''ஆகில் தந்தோம்'' என்றான். ராமாநுஜர் வரதராஜனை வணங்கி, முதலியாண்டானுடனும், ஆழ்வானுடனும் அரையரைப் பின்தொடர்ந்தார். திருக்கச்சி நம்பி ஆசி பகர்ந்து ராமாநுஜரைச் சிறிது தொடர்ந்து வழியனுப்பினார், யாவரும் ஸ்ரீரங்கம் சேர்ந்தனர்.

### உடையவர் என்ற திருநாமம்

முனிவர் காவிரியில் நீராடி, அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, கரையில் ஏறி, நகரத்தை வணங்கி நின்றார். ''இதுவோ ஸ்ரீவைகுண்டத்தினும் சிறந்தது'' என்று மொழிந்தார். இளங்காற்று எங்கும் பரவியது; சூழ்ந்துள்ள சோலைகளினின்றும் பரிமளம் படர்ந்தது; பறவைகள் களிப்புடன் பறந்தன; பொழில்களில் வண்டுகள் பொம்மென ஆர்த்தன. ராமாநுஜர் வந்தது கேட்டுப் பெரிய நம்பியோடு ஸ்ரீ வைஷ்ணவர்கள் அவரை எதிர்கொண்டனர். ஸ்ரீரங்கநாதனது கைங்கர்யபரர் மறைகளை ஓதி மாலை முதலியன ஏந்திச் சென்றனர். வாத்தியங்கள் முழங்கின. யாவரும் முனிவரை வணங்கி, ''மெய்த்தவனே! வருக. வளர்கதிர் மேனியனே! வருக. வரையிலா மேதையனே! வருக. மண்ணவர் உய்ய வந்த பேரளியோய்! வருக'' என்று ஆர்த்தனர். ராமாநுஜர், ''இவர்கள் இறைவனுக்குத் தொண்டு செய்பவர்கள்; நித்யசூரிகளினும் மேம்பட்டவர்கள்'' என்று அவர்களது முன்பு தரையில் படிந்து வணங்கினார், வீதிகளின் வழியே மெல்ல மெல்ல நடந்து, மாளிகைகளையும், மாமதிள்களையும், கோபுரங்களையும் கண்டு வணங்கிக் கோயிலுட் சென்றார். அங்குக் கிரமப்படி ஸந்நிதிகளில் வணங்கி, உள் சுற்றில் ப்ரணவாகார விமானத்தின் முன் கீழே படிந்து, வலம் வந்து ஸ்ரீரங்கநாதனது ஸந்நிதியின் முன்னே நின்றார். திருமாலை, பீதாம்பரம் முதலிய மரியாதைகளைப் பெற்றார். ஸ்ரீரங்கநாதன் (உத்ஸவ மூர்த்தி) கைத்தலத்தில் எழுந்தருளி ராமாநுஜருக்கு ஸேவை அருளினான், ராமாநுஜர் பெருமானை



ஸ்ரீரங்கம் : ராயர் கோபுரம்



திருவரங்கம் பெரிய கோயில் : கோபுரங்கள்



திருவரங்கம் பெரிய கோயில் : கோபுரங்கள்



திருவேங்கடமலை : மலையடிவாரம், உடையவர் திருமலை நம்பிகளிடம் ஸ்ரீ ராமாயண காலக்ஷேபம் கேட்ட இடம்





srivatsam

திருப்பதி கோவிந்தராஜர் கோயில் கோபுரங்கள்



srivatsam



திருவேங்கட மலை : நடைபாதையிலுள்ள ஸந்நிதியில்
ஸ்ரீ உடையவர், ஸ்ரீநிவாஸனது திருவடிகள்.
(டோக் உடையவர் ஸந்நிதி)



ஸ்ரீ காஞ்சி வரதராஜன்: சக்ரவர்த்தித் திருமகன் திருக்கோலம்



காஞ்சீபுரம் உடையவர், மூலவர், உத்ஸவர்



காஞ்சீபுரம் உடையவர் திருமாளிகை



காஞ்சீபுரத்தில் ஸ்ரீ உடையவர் திருமாளிகை
புதுப்பித்தது

srivatsam



திருமாளிகைக் கிணறு
பெண்டிரால் பெருஞ் சண்டை நிகழ்ந்த இடம்



மதுராந்தகம் சக்ரவர்த்தித் திருமகன் ஸந்நிதி
ஸ்ரீ உடையவர் பஞ்சஸம்ஸ்காரம் பெற்ற திவ்ய தேசம்





ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீ பாஷ்யகாரர் ஸந்நிதி
கோபுரவாசல்



ஸ்ரீ பெரும்பூதூர் புஷ்கரிணி

இதுவோ பெரும்பூதூர் இங்கே பிறந்தோ எதிராசர் எம்மிடரைத் தீர்த்தார்,-
இதுவோ தான் தேங்கும் பொருநல் திருநகரிக் கொப்பான ஓங்கு புகழுடைய வூர்.
(மணவாள மாமுனிகள்)

srivatsam



srivatsam

*Alagar on Horse Vahanam taken in procession during Chitrai Festival* *Courtesy: T.V.S. & Sons Ltd., Madurai.*

நெடுநேரம் உற்றுநோக்கி அவனது எழிலைக் கண்களால் பருகினார். இறைவனும் கைத்தலத்தில் நெடுநேரம் அமர்ந்து, தேசாந்தரத்தினின்றும் மீண்ட மகனைத் தகப்பன் நோக்குவதுபோல் நோக்கிக் களித்தான். ராமாநுஜரை வாழ்த்தி, ''அன்பனே! நீ இங்கேயே வாழ்ந்து வைஷ்ணவ நெறியைப் பரப்புவாய் நம் உடைமையான மண்ணுலகமும் விண்ணுலகமும் உன் உடைமை யாவன. ஆதலால் உன்னை யாவரும் உடையவர் என்று அழைப்பர்'' என்றான்.

**உடையவரது ஆணை**

உடையவர் பெரிய நம்பியை வணங்கி, ''தேவரீரது திருவடிகளில் பொருந்தப் பெற்ற அடியேன் பெற்ற பெரும் பயன் இது; பெரியார்க்கு ஆட்பட்டதால் பெருத பயன் பெற்றேன்'' என்று ஓதி மகிழ்ந்தார். நம்பியும், ''நீர் ஸ்ரீரங்கநாதனது கைங்கர்யங்களை நன்கு வகுத்து வருவீர்'' என்றார். உடையவர், பெருமானுக்குத் தொண்டு செய்பவர்களைப் பத்துக் கொத்தாக வகுத்து, நித்யம் நடக்கும் பூஜை, விசேஷ காலங்களில் நடக்கும் பூஜை, திருவிழாக்கள் இவை போல்வனவற்றை நடத்தும் வகையை ஆராய்ந்து, நிலங்களையும் பரிபாலித்து வந்தார். ''தென்னரங்கர் செல்வமுற்றும் திருத்திவைத்தான் வாழியே'' என்று இவரை நாம் இன்றும் வாழ்த்தி வருகிறோம்.

ஆழ்வார்களையும், நாதமுனிகளையும் இவர் அர்ச்சையில் ப்ரதிஷ்டை செய்தார். அருளிச் செயல்களை ஓதிவரும் வகையையும் ஆராய்ந்தார். உத்ஸவ காலங்களிலே ஸ்ரீ வைஷ்ணவர்கள் வீதிகளிலே பெருமானுக்கு முன்பாக இயற்பா என்ற பகுதியில் நாளும் ஒரு பிரிவாக ஓதி வருமாறு நியமித்தார். இவ்வாறு ஸ்ரீவைஷ்ணவர்கள், ஆழ்வார்களது நிலையிலே ஓதுவதால் இவர்களது கோஷ்டி ஆழ்வார் கோஷ்டி என்று பாராட்டப்பெறும், எம்பெருமானார்கோஷ்டி என்று உடையவருடைய திருநாமத்தாலும் போற்றப்படும். ஸந்நிதியில் அருளிச் செயல்களை ஓதுவது அரையரது பணி என ஆணையிட்டார்.

அன்றியும் பெருமானுக்கு உரிய ஆபரணங்கள், பட்டு முதலியனவற்றைப் பராமரிக்க வும், பசுக்கள், குதிரைகள், யானைகள் முதலியவற்றைக் காப்பதற்கும் உடையவர் ஆணை வகுத்தார். ஸ்ரீரங்கம் ஸ்ரீ வைகுண்டம்போல் சிறந்து விளங்கியது.

srivatsam

ஆர்ந்தன ரெங்கும் நெறியுடை அடியா ரவ்வுறைவில்
நேர்ந்த எல்லாம் நியதியி லியக்கி மகிழ்ந்தனரால்
மாந்தரு மின்பம் மல்கிடு வானின் மாட்சியினும்
ஏந்திய தரிதா மிப்பதி செவ்வி முனியருளால்

**உடையவரும் திருக்கோஷ்டியூர் நம்பியும்**

உடையவர் நம்பியை வணங்கி ''தேவரீர் ஆளவந்தாரிடம் பெற்ற அரும் பொருள்களை அடியேனுக்கு அருளவேணும்'' என்று ப்ரார்த்தித்தார். ''முதன்முதலிலே நீர் திருக்கோஷ்டியூர் நம்பியிடம் சென்று சில அரிய பொருள்களை உபதேசமாகப் பெறுவீர்'' எனக் கூறி த்வயம் என்ற மந்திரத்தின் பொருளை உபதேசித்தார் நம்பி.

உடையவர் திருக்கோஷ்டியூருக்குச் சென்று, அங்குத் திருக்கோஷ்டியூர் நம்பியின் முன்னர் வணங்கி நின்று. ''அடியேனைப் பெரிய நம்பி இங்கு அனுப்பினார்; அரிய அர்த்தங்களை அருளவேண்டும்'' என்றார். ''நம்பி இவரைக் கண்ணெடுத்தும் பாராமல், ''நவிலுதல் யாருக்கு! என்றார்; வேறொன்றும் சொல்லவில்லை. உடையவர் ஸ்ரீரங்கத்திற்கு மீண்டார்.

ஒருநாள் திருக்கோஷ்டியூர் நம்பி ஸ்ரீரங்கநாதனைத் தொழுது நிற்கும்போது, பெருமான் அவரைப் பார்த்து, ''நம் இராமாநுஜனுக்கு அரும்பொருள்களை ஓதுவீர் என்ன. நம்பியும், ''உபதேசம் பெறுமவனை ஒரு வருஷகாலம் தம்மிடம் இருத்திச் சோதனை செய்து ஓதுவர் பெரியோர்'' என்றார். இறைவனும், ''சிஷ்ய லக்ஷணங்கள் யாவும் இவரிடம் குறைவற வாய்ந் துள்ளன; இவருக்கு அருள்வீர்'' என்றார். நம்பி ராமாநுஜரைத் திருக்கோஷ்டியூருக்கு வருமாறு பணித்தார்.

ராமாநுஜர் திருக்கோஷ்டியூர் சென்று நம்பியை வணங்கினர். நம்பி ஒரு "வார்த்தை" ஓதி, "இன்று இவ்வளவுதான்; மீண்டு வருவீர்" என்று அனுப்பி விட்டார். ராமாநுஜர் ஸ்ரீரங்கம் மீண்டார். இதுமாதிரி பதினெட்டு நடை திருக்கோஷ்டியூர் சென்றார் ராமாநுஜர். ஒவ்வொரு நடையிலும் நம்பி புதியதாக ஒரு "வார்த்தை" ஓதினர். இவ்வாக்கியங்கள் வேதாந்தக் கருத்துக்கள் வாய்ந்தன; ஆதலின் சிறப்புடையன; இந்தப் பதினெட்டு வார்த்தைகள் வருமாறு;

1. மண்ணில் பிறக்கும் புழு மண்ணைவிட்டு நீங்குவதுபோல், நாம் மண்ணை விட்டு நீங்கவேண்டும் (மண்ணில் வாழ்க்கையில் ஆசை நீங்கவேண்டும்.)
2. விளக்கு எரிவதற்குக் காற்று அவசியம்; அதுபோல் நாம் உய்வதற்கு (மேலே எழுவதற்கு) ஸத்வகுணம் அவசியம்.
3. அகங்கார மமகாரங்கள் நீங்காமல் நமக்கு உடலின்பால் ஆசை நீங்காது.
4. அகங்கார மமகாரங்கள் நீங்குவதற்கான வலிமை இல்லாவிடில் ஆத்மஞானம் இல்லை.
5. ஆத்மஞானம் இல்லை எனில், போக (ஸுகமாக வாழவேண்டும்) இச்சை நீங்காது
6. இந்த இச்சை நீங்காமல் இறைவனிடம் அன்பு ஏற்றல் இல்லை.
7. இறைவனிடம் அன்பு நமக்கு இல்லை எனில், பற்று நீங்குதல் இல்லை.
8. பற்று நீங்குதல் இல்லை எனில், நாம் இறைவற்காக வாழ்வது இல்லை.
9. இறைவற்காக வாழ்வது இல்லை எனில், காமம் நீங்காது.
10. காமம் நீங்காதெனில் வைஷ்ணவத்வம் இல்லை.
11. இது இல்லை எனில், ஸாத்விகம் உறுதல் இல்லை.
12. இது இல்லை எனில், அடியவர் தாள்களில் அன்பு இல்லை.
13. இது இல்லை எனில், இறைவன் தாள்களில் அன்பு இல்லை.
14. இது இல்லை எனில், இறைவனுக்குத் தொண்டு விரும்பி ஏற்றல் இல்லை.
15. இதனை ஏலாதவன் இறைவனைச் சேஷியாக ஏற்கமாட்டான்.
16. இதனை ஏலாதவன் இறைவனே சரணமென்று ஏற்கமாட்டான்.
17. இதனை ஏலாதவன் இறைவனுக்கே உரியனாகமாட்டான்.
18. இறைவனுக்கே உரியவன்தான் அவனுடைய மந்த்ரமாகிய திருவெட்டெழுத்தை ஏற்றற்கு உரியவன்.

srivatsam

திருக்கோஷ்டியூர் நம்பியிடம் உபதேசம் பெறவில்லையே என்று கலங்கிக் குறையுடன் உடையவர் ஸ்ரீரங்கத்திற்கு மீண்டும் மீண்டும் திரும்பி வந்தார். ஒருநாள் நம்பி உடையவரிடம் ஒருவர் மூலமாக, "இப்போது அரிய பொருளை உபதேசம் செய்வோம், உடையவர் தண்டும் பவித்ரமுமாக வரவேண்டும் என்று அவரிடம் சொல்லும்" என்று செய்தி அனுப்பினர். அதாவது உடையவர் மாத்திரம் வரவேண்டும்; வேறு ஒருவருடனும் வரலாகாது என்பது தோன்றக் கூறினர். உடையவர் முதலியாண்டானையும் ஆழ்வானையும் அழைத்துக்கொண்டு திருக்கோஷ்டியூர் சென்றார். நம்பியின் முன் இம் மூவரும் வணங்கி நின்றனர். நம்பி உடையவரைப் பார்த்து "நாம் உம்மைத் தனித்து வருமாறன்றோ பணித்தது; தண்டும் பவித்ரமுமாகவே வருவீர் என்றேனே" என்றார். உடையவர், "ஸ்வாமீ; இவர்களுள் ஒருவர் (முதலியாண்டானைச் சுட்டி) எனக்குத் தண்டு போன்றவர், மற்றவர் (ஆழ்வானைச் சுட்டி) பவித்ரம் போன்றவர், இவர்களை விட்டு அடியேன் பிரிவதில்லை" என்றார். "ஆகில் நீர் ஒரு மாதம் உபவாசம் இருக்கவேண்டும் அன்னபானமில்லாமல். பின்பு உபதேசம் செய்கிறோம்" என்றார் நம்பி.

பதினைந்து நாட்களில் உடையவரது மேனி மெலிந்தது. இது கண்டு சிலர் நம்பியிடம் சென்று "அறக்கற்றவரே! உமக்கு இந்தக் கொடிய நெஞ்சம் எதற்கு? உம்மால் ஒரு துறவி உயிர் நீங்குவாரோ என்று பயப்படுகிறேன்" என்றனர். நம்பியோ சிறிதும் ஆதரம் காட்டாமல் "இவர் நம்மிடம் இப்பொருள்களை ஏற்றாலும் ஏற்கட்டும், அன்றி நம் ஆசார்யரான ஆளவந்தார்

...டமே ஏற்கட்டுமே. இனி அவர் தீர்த்தம் மாத்திரம் பருகலாம். உபவாசம் முடிந்தபின் நம்மிடம் வரட்டும்'' என்றார்.

குறித்த காலத்தில் உடையவர் தமது சிஷ்யர்கள் இருவருடன் நம்பியிடம் சென்றார். நம்பியும், ''உடையவரே! நாம் இன்று வெளியிடும் அர்த்தம் மிகவும் அரிது. அதனை வேறு ஒருவர்க்கும் ஓதலாகாது'' எனக் கூறித் திருமந்த்ரத்தின் பொருளை உபதேசித்தார்.

உடையவர் திருமந்த்ரத்தின் எளிமையையும் அதில் அடங்கியுள்ள பொருள் செறிவையும் நினைந்து நினைந்து வியப்புற்றார். தமக்குள் பின்வருமாறு நினைந்தார்: பல ஊழிகள் உடம்பை ஒடுக்கித் தவம் செய்தாலும் இந்த அரும்பொருள் பெறுவது அரிது. இந்தச் சிறந்த பொருளை இது வரையில் ஆசாரியர்கள் ஒருவருக் கொருவராக உபதேசித்துப் போந்தார்கள். இது வெளியில் பரவவில்லையெனில், இந்த அரும்பொருள் வீணாகுமே. இதை அறிந்தால் மக்கள் உய்வது நிச்சயம். எனினும் நம்பியின் ஆணை, இதை வெளியிடலாகாது என்பது!

அன்றிரவு முழுதும் இதே எண்ணந்தான் இவருக்கு.

பொழுது புலர்ந்தது. உடையவர் பேருக்கத்துடன் திருக்கோஷ்டியூர்ப் பெருமானின் ஸந்நிதிக்குச் சென்றார். அங்குக் கைதொழ வரும் அடியார்களை அழைத்தார், அரும்பொருள் ஒன்று ஓதுவதாக. அவரது மேனியையும், மேனி ஒளியையும், புன்னகையையும் பார்த்த அன்பர் திரண்டனர்:

''பரந்த கண்ணினன், பரிதி போற்கதிர்
பரவு மேனியன், முகமெலாம்
பரந்த மூரலன், அண்ணல், பாவனன்,
பார்ப டைப்பவ னெப்பவன்
பரந்த சிந்தையன், படிவன் நல்லறம்
பகர்வன்'' என்றனர் பரிவோடும்
பரந்த பத்தியிற் பரம(ன்) நாரணன்
நாம மோதிடு பண்பரே.

உடையவர் அவர்களுக்குத் தாம் கேட்ட திருமந்த்ரப்பொருளை வெளியிட்டார்.

இதை அறிந்த நம்பி உடையவரைத் தம்மிடம் அழைத்து, ''ஆசாரியனாக நம்மை வரித்து, நம்பால் மந்த்ர உபதேசம் பெற்று நம் ஆணையை மீறி அதை வெளியிட்டீர். இதன் விளைவு அறிவீரோ?'' என்றார். உடையவர், ''அறிவேன். சிஷ்டர்கள் அடியேனை வெறுப்பர். தேவரீரது ஆணையை மீறியது கொடும் பாவம்; அதனால் நரக வாழ்க்கையும் யமனின் சீற்றமும் விளைவன, எனினும் இவ்வரிய பொருளைக் கேட்டு நாடடங்க நற்கதி பெறும்போது, அடியேன் ஒருவன் நரகில் சேர்ந்து வருந்தினால்தான் என்? என்று துணிந்தேன்'' என்றார். இதனைக் கேட்ட நம்பி உடையவரை அணைத்து, ''இந்தப் பரந்த நோக்கு எனக்கு இல்லையே. நீர் எமக்குப் பெருமான் ஆயினீர். இன்று முதல் உலகம் உம்மை எம்பெருமானார் என்று பாராட்டும்'' என மொழிந்தார்.

பின்பு உடையவரைத் தனியாக அழைத்து, வீட்டின் கதவுகளைத் தாளிட்டுக்கொண்டு, சரமச்லோகப் பொருளை உபதேசித்து, அதனை ஒருவருக்குஞ் சொல்லலாகாது என்று ஆணையிட்டுச் சபதமும் செய்யச் சொன்னார் நம்பி. உடையவர் அதனை ஆழ்வானுக்கு வெளியிட அனுமதி கோரினார்; ஒரு வருஷ காலம் ஆழ்வானை அடிமை கொண்டு பின்னர் உபதேசிக்குமாறு நம்பி பகர்ந்தார்.

நம்பியை வணங்கி உடையவர், ''தேவரீரது திருவுள்ளத்தில் எப்போதும் நிறைந்துள்ளது யாது? தேவரீர் ஓதும் மந்த்ரம் யாது?'' எனக் கேட்க, நம்பியும், ''என் மனத்தில் எப்போதும் நிறைந்திருப்பது ஆளவந்தாரது திருமேனியின் புகர்; நான் ஓதுவது அவரது திருநாமமே'' என்றார்.

எம்பெருமானார் முதலியாண்டானுடனும் ஆழ்வானுடனும் ஸ்ரீரங்கத்திற்கு மீண்டார். ஆழ்வான் சரமச்லோக அர்த்தத்தை விரைவிலே பெற விரும்பினமையால், அவரை ஒரு மாத காலம் உபவாஸம் ஏற்கச் செய்து உபதேசம் செய்தார். முதலியாண்டானை நம்பியிடம் அனுப்பி சரமச்லோகார்த்தத்தை உபதேசம் பெறுமாறு பகர்ந்தார். திருக்கோஷ்டியூர் நம்பியிடம் சென்றார் முதலியாண்டான். ஆறுமாதகாலம் வரையில் அவருக்கு ஒன்றும் ஓதவில்லை நம்பி. ஒருநாள் நம்பி ஆண்டானைப் பார்த்து, "உலகில் முக்குறும்புகள் என்று கழிப்பர் பெரியோர். பெருங்குடியில் பிறந்ததால் செருக்கு, நல்ல கல்வி ஏற்றமையால் கர்வம், அதிகச் செல்வம் படைத்தமையால் வரும் ஆணவம் இவை உம்மிடம் இல்லையெனில், நீர் எம்பெருமானாரை அடைந்து அவரிடமே பெறலாம்" என்று சொல்லி அனுப்பிவிட்டார். ஆண்டான் இதை எம்பெருமானாரிடம் விண்ணப்பம் செய்ய, எம்பெருமானார் தமது சிஷ்யர்களிடம், "ஆண்டான் நம்பி ஸந்நிதியில் ஸ்வரூப சிக்ஷை பெற்று வந்த வேஷம் இருந்தபடி பாருங்கோள்" என்று அருளிச் செய்து, ஆண்டானுக்கு அந்த அரும் பொருளை உபதேசித்தார். "இப்போதன்றோ நமக்குத் தண்டும் பவித்ரமும் கைபுகுந்தது!" என்று சொல்லி மகிழ்ந்தார் எம்பெருமானார்.

### உடையவரும் திருமாலையாண்டானும்

ஆளவந்தாரது சிஷ்யர்களுள் ஒருவர் திருமாலையாண்டார். அவர் உடையவருக்குத் திருவாய்மொழிப் பொருள் உபதேசிக்க வேணுமென்பது ஆளவந்தாரது ஆணை.

ஒருநாள் திருக்கோஷ்டியூர் நம்பி திருமாலையாண்டானுடன் ஸ்ரீரங்கத்திற்கு வந்தார். உடையவரைப் பார்த்து நம்பி, "இவர் திருமாலையாண்டான்; இவரிடம் திருவாய்மொழிப் பொருளைக் கேட்பீர்" என்றார். திருமாலையாண்டான் உடையவருக்குத் தினந்தோறும் திருவாய்மொழி ஓதிவந்தார். ஆண்டான் பாசுரங்களுக்கு விளக்கம் ஓதும்போது சில இடங்களில் "பொருள் இவ்வாறுகலாம்" என்று உடையவர் கூறிவந்தமையால், ஆண்டான் சினங்கொண்டு, "என் இது? ஆளவந்தார் கூறாதவற்றை நீர் சொல்லுகிறீரே" என்று கடிந்தார். "அறியாக் காலத்துள்ளே" என்று தொடங்கும் பாசுரத்திற்கு உடையவர் அரிய பொருள் ஒன்றை விளம்ப, ஆண்டான் சீறி, "இதென்ன விச்வாமித்ரச்ருஷ்டி! இனி நாம் ஓதுவதில்லை" என்று அகன்றார். சில நாட்கள் கழித்து அங்குத் திருக்கோஷ்டியூர் நம்பி ஆண்டானைச் சந்தித்து, நிகழ்ந்தனவற்றை அறிந்துகொண்டார். அவர் ஆண்டானைப் பார்த்து, "எம்பெருமானார்சொல்லும் பொருள்கள் யாவும் ஆளவந்தார் சொல்லக் கேட்டிருக்கிறேன். இவர் ஆதிசேஷனுடைய அவதாரம் என்பதை நீர் உணர்ந்து மேலும் திருவாய்மொழிப் பொருள்களை ஓதிவருவீர்" என்றார். ஆண்டானும் அவ்வண்ணமே செய்தார். அவர் எம்பெருமானாரிடம், "நீர் ஆளவந்தாரோடு பேசியதுமில்லை. அவர் அருளிய பொருள்களை நீர் எவ்வாறு அறிவீர்?" என்று கேட்டார். எம்பெருமானார், "நான் ஆளவந்தாருக்கு ஏகலைவன்" எனப் பகர்ந்தார்.

### எம்பெருமானாரும் திருவரங்கப்பெருமாளரையரும்

திருவாய்மொழி ஓதிச்சாற்றிய பின்பு, பெரிய நம்பி எம்பெருமானாரிடம் சென்று, "நீர் திருவரங்கப் பெருமாளரையரிடம் ஏற்கவேண்டிய அரும்பொருள் ஒன்று உண்டு. அவரிடம் அதனைப் பெறுவீர்" என்றார். எம்பெருமானார் அரையருடன் ஆறுமாதகாலம் வசித்து, அவருக்கு ஏற்ற பணிவிடைகள் செய்துவந்தார். அவரது பேரன்பைப் பாராட்டி அரையர், "எம்பெருமானாரே! உமக்கு ஓர் அரும்பொருள் ஓதுவோம். ஆசார்யனே தெய்வமாக நினைத்திரும், மதுர கவியாழ்வாரைப் போலே. திமனம் கெடுப்பவன் ஆசார்யன், எம்பெருமானை மருவித்தொழும் மனம் தொடுப்பவன் ஆசார்யன்; ஆதலால் உறங்கும் பெருமானே உலாவும் பெருமாளாய் வந்தார் என்று ஆசார்ய விச்வாஸம் கொள்வீர்" என்று உபதேசித்தார். கர்ம ஞான பக்தி ப்ரபத்தி ஆகிய நான்கினிலும் சிறந்தது ஐந்தாவது உபாயமாகிற ஆசார்யநிஷ்டை என்பதை வெளியிட்டார் அரையர்.

### கிடாம்பி யாச்சான் பரிவு

திருவரங்கனது கோயிலில் கைங்கர்யங்களை ஆய்ந்து, செய்வித்து வந்தார் உடையவர். ஸந்நிதியில் பணியாற்றும் சிலர் அவரிடம் பகைமை கொண்டனர். உடையவர் தினந்தோறும்

மாதுகரத்திற்காக (பிக்ஷை ஏற்பதற்காக)ச் சில ஸ்ரீவைஷ்ணவர்களது மாளிகைகளுக்குப் போவது வழக்கம். ஒருநாள் ஒரு மாளிகையில், அம்மனைக்குரியாள் பிக்ஷையை அளித்து, எம்பெருமானாரின் திருவடிகளில் விழுந்து, "முனிவரே! இதனை உட்கொள்ளவேண்டாம். என் தலைவர் உம்மிடம் பகைமை கொண்டுள்ளார்" என்றாள். இதுகேட்ட எம்பெருமானார் அன்றுமுதல் உபவாஸம் கொண்டார். இதனை அறிந்த திருக்கோஷ்டியூர் நம்பி எம்பெருமானாரைக்காண ஆவல்கொண்டு அங்கு வந்தார். அவரை எதிர்கொள்ளச் சென்றார் எம்பெருமானார். அவரைக் கண்டதும் மணலில் படிந்து வணங்கினார். அவருக்கு அருகிலிருந்த கிடாம்பியாச்சான் என்பவர், நம்பியிடம், "ஸ்வாமீ, கருமுகைப்பூமாலைபோல இவரது திருமேனி வாடுகிறதே. இவரை அணைப்பீர்" என்றார். அவருடைய பரிவை உணர்ந்த நம்பி, "இனி நீரே எம்பெருமானாருக்கு ஆகாரத்தைச் சமைத்து அளிப்பீர்" என்று கவலை நீத்துத் தமது ஊருக்குமீண்டார்.

### யஜ்ஞமூர்த்தி சிஷ்யனானமை

யஜ்ஞமூர்த்தி என்ற அரிய மேதை ஒருநாள் ஸ்ரீரங்கத்திற்கு வந்தார். அவர் பலகலைகளை ஐயந்திரிபறக்கற்றவர், வாதம் செய்வதில் வல்லவர்; தாம் கற்றவற்றைப் பல நூல்களாக வெளியிட்டவர், சிஷ்யர் செல்வத்தால் குறைவற்றவர். அவர் பல ஸ்தலங்களுக்கு யாத்திரையாகச் சென்று மாயாவாதத்தை வளர்த்துவந்தார். அவர் எம்பெருமானாரை வாதஞ்செய்ய அழைத்தார். எம்பெருமானார் வாதுசெய்ய ஒப்புக்கொண்டார். வாதம் பதினெட்டு நாட்கள் நடக்கவேண்டும் என்பது ஒப்பந்தம். யஜ்ஞமூர்த்தி, "நான் தோற்றால் உம் அடிகளில் வணங்கி உமக்குச் சிஷ்யனாவேன்" என்றார். எம்பெருமானார், "நான் தோற்றால், நான் கற்ற கலைகள் அனைத்தையும் கைவிடுவேன்" என்றார்.

வாதம் பதினெட்டு நாட்கள் நடந்தது. மத்த கஜங்கள் சண்டையிடுவதுபோல் அவ்விருவரும் மதப்போரில் ஆழ்ந்தனர்; ஒருவரும் சிறிதேனும் சளைக்கவில்லை. இரவில் எம்பெருமானார் தமது ஆராதனப் பெருமானை வரதராஜனை வணங்கி, "பெருமானே! என்னாலே இந்த ஸ்ரீவைஷ்ணவ சமயமானது குலையும் என்று அஞ்சுகிறேன். நாதமுனிகள், ஆளவந்தார் இவர்கள் வளர்த்து வந்த நெறியை முடிப்பதற்கோ நான் பிறந்தது?" என்று பெருந்துயருடன் கூறப் பெருமானும், 'நீர் அஞ்சவேண்டா. ஆளவந்தார் அருளிய மாயாவாத கண்டனம் என்பதை ஓதும்" என்று கனவிற்கூறி மறைந்தார்.

மறுநாட் காலையில் எம்பெருமானார் வாதத்தைத் தொடர்ந்தார். வார்த்தைகள் பெருமதகு திறந்தாற்போல் பொங்கிக் கிளர்ந்தன. யஜ்ஞமூர்த்தி அவரைப் பார்த்து, "பெரியோரே! நான் தோற்றேன். நீர் கண்ணபிரானின் மெய்யடியார் என்பது உணர்ந்தேன். என்னை ஏற்றுக் கொள்வீர்" என்று பாதத்தில் படிந்து வணங்கினார். எம்பெருமானார் அவரை வாரியணைத்து, அவருக்கு அருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்ற பேரை அருளி, முக்கோல், காஷாயம் முதலியவற்றையும் கொடுத்தார். இவ்வாறு திருந்திய கலைஞர் எம்பெருமானாருடன் வாழ்ந்து வந்தார்.

### அனந்தாழ்வானது தொண்டு

ஒருநாள் எம்பெருமானார் "ஒழிவில் காலமெல்லாம்" என்ற திருவாய்மொழியை விளக்கம் செய்யும்போது, "சிந்து பூமகிழுந் திருவேங்கடம்" என்ற இடத்தில் அர்த்தம் அருளிச் செய்து, "திருவேங்கடமலை புஷ்பமண்டபம் எனப்பெறும்; அதில் திருவேங்கடத்தானுக்கு உகப்பாகப் புஷ்ப கைங்கர்யம் செய்வது சிறந்த தொண்டாகும்; மலையிலே நந்தவனம் ஒன்று நிறுமித்துப் பெருமானுக்குத் திருமாலைகள் கட்டி ஸமர்ப்பிக்க விரும்புபவர் எவரேனும் உண்டோ?" என்ன, அனந்தாழ்வான் என்பவர், "அடியேன் செய்கிறேன்" என்று கூறி எம்பெருமானாரிடம் விடை கொண்டு திருமலைக்குச் சென்று, நந்தவனக் கைங்கர்யம் நடத்திவந்தார். நந்தவனத்திற்கு இராமாநுசன் எனப் பெயரிட்டார்.

நெடியோன்றன் பேரோதி நிலந்தன்னைச்
சமமாக்கி வண்ட லிட்டு
மடியாத பரிவுடனே மலர்போர்த்த
செடிகொடியும் மரமும் மல்க
அடியானங்(கு) உழைத்தனனல் அப்பொழில் (இ)
ராமாநுசனனென் றன்பால்
வடிவாய பெயரோதி முனிவரன்றன்
வரவுதனை நாளும் நோக்கி

அந்த நந்தவனத்தைப் பார்க்க விரும்பினர் எம்பெருமானர். ஸ்ரீரங்கநாதனிடம் விடை கொண்டு திருவேங்கடத்திற்குப் பயணமானர். வழியில் திருக்கோவலூரிலும், ஹஸ்திகிரியிலும் இறைவனை வணங்கினர். திருவேங்கட மலையின் அடிவாரத்தில் நின்று, மலையின் அழகைக் கண்ணால் பருகி, இறைவனுடைய சில குணத்தை நினைந்து நினைந்து மெய்ம்மறந்து தொழுது நின்றார். ஆழ்வார்களது அருளிச் செயல்களை ஓதி, "என்னே அடியேன் இன்று பெற்ற பேறு" என்று களித்தார். அன்பர் அவரை மலைமேல் ஏறி இறைவனைச் சேவிக்க அழைத்தனர். அவர் "இம்மலை ஆதிசேஷனே என்று பெரியோர் கூறுவர். இதன்மேல் ஏறுவது சரியன்று என்று ஆழ்வார்கள் அடிவாரத்திலேயே நின்று கொண்டு இறைவனை ஏத்தினர்" எனப்பகர்ந்தார். அன்பர், "அடியோங்களது விண்ணப்பத்தைச் செவியேற்கவேண்டும். நம்மாழ்வார் 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி, வழுவிலா அடிமை செய்யவேண்டும்' என்றருளிச் செய்தார். மலைமேல் சேராமல் அடிமை எவ்வாறு செய்யமுடியும்? அன்றியும் தேவரீர் மலையின்மேல் ஏறாவிடில், மலைமேல் ஏறுவது தகாது என்று யாவரும் ஏற விரும்பமாட்டார்கள். இறைவனது கைங்கர்யம் குறைபடும்" எனக் கரங்குவித்து ஓதினர். "ஆகில் வருகிறேன்" என்றார் எம்பெருமானர்.

மோக்ஷம் பெறுமவன் ஸ்ரீவைகுண்டத்தில் திருமாமணிமண்டபத்தில் ஆதிசேஷனது மேனியில் கால்வைத்து ஏறி, இறைவனது மடியிலே அமர்ந்து வணங்குவான் என்று சாஸ்திரம் கூறும். இதனையே நினைந்து எம்பெருமானர் தமது கரங்களைப் கூப்பிக் கொண்டு இறைவனது திருநாமங்களை ஓதி மலையில் ஏறினர். கோனேரி புஷ்கரிணியில் நீராடி, ஆதிவராகனைச் சேவித்து, ஸந்நிதிக்குள் சென்றார். ஆனந்த விமானத்தின் கீழ்ப் படிந்து, பொன்மயமான வாசலில் த்வாரபாலகர்களை வணங்கி நின்றார். அன்பர்கள் அவரை வரவேற்று உள்ளே நடத்திச் சென்றனர். அவர் இறைவனது மேனியைச் சேவித்துப் பரவசரானர்.

மரையன்ன பதமோடு பொன்வந்த வண்ணத்து பட்டாடையும்
வரையன்ன மணிமார்பில் மலர்மங்கை தன்னேடு மணியாரமும்
உரைமன்ன வெண்சங்கு கூராழி செவ்வாய்ம லர்க்கண்களும்
விரைமன்னு துளவேறு முடியன்ன வியப்போடு கண்டான் முனி

"அகலகில்லேன்" என்ற பாசுரத்தால் பெருமானை வாழ்த்தினர். திருவேங்கடமுடையான் எம்பெருமானருக்கு ஆசி அருளினன், "இந்த நீள் நிலத்தில் உயிர்கள் உய்யுமாறு நீ நெடுங் காலம் வாழ்வாயாக" என்று.

மலையின் மேலே ஆகாரமில்லாமல் உபவாஸமாக மூன்று நாட்கள் தங்கினர் உடையவர். அனந்தாழ்வான் நிருமித்த நந்தவனத்தைக் கண்டு உகந்தார்; அவரது அரிய தொண்டைப் பாராட்டினர்.

மலையினின்றும் இறங்கி அடிவாரத்தில் ஒரு வருஷம் தங்கி, திருமலை நம்பியிடம் ராமாயணத்தின் அரும் பொருள்களை ஏற்றார்.

srivatsam

திருமலை நின்றும் இறங்கிய தெள்ளியன்
திருமலை நம்பி செப்பிட ஏற்றனன்
ஒருசிலை உயிர்த்துத் திருவினைப் புணர
ஒருசிலை ஒசித்தான சரிதையின் உட்பொருள்.

நம்பியிடம் விடைகொண்டு, ஸ்ரீரங்கத்திற்குப் பயணமானார். வழியில் திருப்புட்குழி, வெஃகா, ஹஸ்திகிரி இவற்றில் பெருமானை வணங்கி ஸ்ரீரங்கம் சேர்ந்தார்.

### காச்மீரம் படர்ந்தமை

ஆளவந்தாரது திருவுள்ளத்தையே மனத்திற் கொண்ட எம்பெருமானார் ப்ரஹ்மஸூத்ரப் பொருளை ஆராய்ந்து வரைய விரும்பினார். நம்மாழ்வாரது பாசுரங்களின் ஆழ்பொருள்களை ஆராய்ந்தார். ப்ரஹ்மஸூத்ரத்திற்குப் போதாயனர் அருளிய வ்ருத்தி உரை காச்மீரத்தில் இருப்பதாகக் கேள்வி யுற்று, அங்கு ஆழ்வானுடன் சென்றார்.

ஆங்கு வாழ்ந்து வந்த பெரியோர்களுக்கு எம்பெருமானார் ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தை விளக்கினார். அவர்கள் அவரது மேனியின் எழிலையும், புகரையும், அவர் உரைநயத்தையும் பாராட்டினர். "வேதங்கள் யாவும் இவருக்கே ஆவோம் என்று இவரிடம் மண்டியவோ? கலைகள் யாவும் இவரையே தேடிச் சார்ந்தனவோ? நெறியெல்லாம் இவரே நமக்கு என்று இவரிடம் மன்னியவோ? இவரது சொல்லின் நயம் என்ன? அவை சுரக்கும் சுவைதான் என்ன? இவர் தேவ குருவாகிய ப்ருஹஸ்பதியோ, அல்லது நாராயணன்தானோ, அல்லது அவனுறையும் அரவரசோ?" என்றுப் பலவாறாக மொழிந்தனர். அவர்களுள் சிலர் அவரை வாதுக் கழைத்தனர். சிலர் தர்க்கம் ஓதினர். சிலர் நியாயம் ஓதினர், சிலர் வேதாந்தம் ஓதினர். அவர்கள் ஓதிவந்த வற்றைக் கொண்டே மேற்கோள்கள் எண்ணிறந்தவை காட்டித் தம் மதத்தைப் பரக்க விளக்கினார், எம்பெருமானார். அவர்கள் யாவரும், "இவர் பெரும் புலவர், இவருக்கு நிகர் ஒருவரு மிலர்" என்று ஆர்த்தனர்.

எம்பெருமானார் அவர்களிடம் போதாயன வ்ருத்தியுரை வேண்டும் என்று சொல்ல, அவர்கள் அதைக் கொடுக்க விரும்பாமல், "அதனைச் செல்லரித்து விட்டது, கையால் எடுப்பதற்கில்லை" என்றனர். எம்பெருமானார் தம்முடைய பயணம் பலிக்கவில்லையே என்று கவலையுற்றார். ஸ்ரீ ரங்கநாதனை நினைந்து, "பெருமானே! நீயே எனக்கு கதி. என் மனோரதம் நிறைவுறும்படி அருள் செய்வாய்" என்று வேண்டினார். ஸரஸ்வதி அவரது முன்தோன்றி அந்த வ்ருத்தியுரையை அளித்து மறைந்தார். எம்பெருமானாரும் அங்கு இருந்தால் அந்த நூலை இழக்க நேரிடும் என நினைந்து ஆழ்வானுடன் புறப்பட்டார்.

மறுநாள் புலவர்கள் வாசக சாலையில் நூல்களை வகுக்க முற்பட்டனர். அதில் வ்ருத்தியுரையைக் காணாமல், "இது அந்த ஸந்யாஸி செய்த வேலை. எப்படியோ இந்த அரிய நூலை எடுத்துக் கொண்டான். அவனை விடாதீர்கள். பின் தொடர்ந்து நூலைப் பற்றுங்கள்" என்று ஆரவாரித்தனர். பலர் எம்பெருமானாரைப் பின் தொடர்ந்தனர். நெடுந்தூரம் நடந்து, அவரைக் கண்டு அவரிடமிருந்து அதை வலியப் பற்றிக் கொண்டனர். எம்பெருமானார் மிகவும் துயர முற்றார்; கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லையே, நான் முழுதும் படிக்கவில்லையே; என் செய்வேன்!" என்று புலம்பினார். ஆழ்வான், "ஸ்வாமி! பதறவேண்டா. நான் முழுதும் பார்த்து விட்டேன். இரண்டாற்றின் நடுவில் உரை முழுதும் விண்ணப்பம் செய்வேன்" என்றார். எம்பெருமானார் தேறுதல் பெற்று வழி நடந்தார்.

எம்பெருமானார் ஸ்ரீரங்கத்திற்கு மீண்டு ப்ரம்ஹஸூத்ரத்திற்கு பாஷ்யம் அருளினார். ஆளவந்தாரது குறைகளுள் ஒன்று இங்ஙனம் நீங்கியது.

### திக்விஜயம்

ப்ரஹ்மஸூத்ரத்திற்கு உடையவர் அருளிய பாஷ்யத்தை ஸ்ரீபாஷ்யம் என்று பாராட்டுகின்றனர் பேரறிஞர்கள். ஸ்ரீ ரங்கநாதன் உடையவரை வாழ்த்தி, "முனிவரே! நீர் செயற்கரிய தொன்றைச் செய்தீர். ஸ்ரீ பாஷ்யத்தை அளித்து, ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தை வளர்த்தீர். இந்த

தர்சனம் (சமயம்) உம்முடைய பேரால் எம்பெருமானார் தர்சனம் என்று சிறப்புறும். நீர் பூமி முழுதும் இந்த தர்சனத்தைப் பரப்புவீர்'' என்றான். உடையவரும் தம்முடைய சிஷ்யர்களுடன் தெற்கு நோக்கிப் பயணமானார்.

போகும் இடங்களில் பிற மதத்தினரோடு வாதம் செய்து அவர்களை வென்று, ஸ்ரீவைஷ்ணவ மதத்தை நிலை நிறுத்தினார்.

தருக்கு வல்ல சமண ரோடு சாக்கி யத்தி லாழ்நரும்
செருக்கி நின்ற சூன்ய வாதி யர்கள் தாழும் செப்புவ
அருக்கன் கண்ட மஞ்ச தன்ன அவனி யெங்கு மையென
உருக்கு லைந்தொ ழிந்த வா(ல்) இப் புனிதன் தோன்றி ஓதலால்

திவ்யதேசங்கள் பலவற்றுள்ளும் இறைவனைத் தொழுது, தமது மதத்தை, ப்ரவசனம் செய்து திருக்குருகூர் சேர்ந்தார். அங்கு நம்மாழ்வாரை வணங்கி, "உலகு உய்ய வந்த உத்தமனே! மறையாகிய பெருங்கடலை உனது நாவாகிய மந்திரத்தால் கடைந்து, தமிழாகிய அமுதத்தை உலகினர்க்கு நல்கினை. ஆதலால் இங்குறைவோர் சுரர் ஆனார். அவர்கள் நீ அருளிய மறையை ஓதி வருவதாலே ஸ்ரீ வைகுண்ட நாதன் இங்கேயே நிலையாகப் பொருந்தினன். நீ அவதரித்து நரகம் புல்லெழுந்தது.'' என்று வாழ்த்தினர்.

"வளரும் இருசுடராய் வந்த முதல்நீயே
கிளரும் நில வணியும் புளியின் கிளையின்கீழ்
வளருங் கதிருடனே மதியும் பிரசமிட
அளரும் புல்லெழவே அமர்ந்தாய் பரிவெழவே''

என்றார்.

srivatsam

நம்மாழ்வார் உடையவரைக் குளிரநோக்கி, "உலக முதல்வனுக்கு மணியாஸநமும் படுக்கையுமாக வளரும் நாகராஜனே! உலகம் முழுதும் உன் படத்தின்மேலே தாங்குவாய் நீ. ஆதலால் உலகம் முழுதும் உன் உடைமை. கலியின் கொடுமை கெட நீ இங்கு அவதரித்தாய்; உனது அரு முயற்சியால் அறநெறி வளர்ந்து அஞ்ஞானமாகிய இருள் நீங்கும். நீ நெடுங்காலம் வாழ்வாய்'' என்று ஆசி அருளினார்.

உடையவர் திருக்குறுங்குடியில் வைஷ்ணவ நம்பி என்று திருநாமம் வாய்ந்த பெருமானை வணங்கி நின்றார். பெருமான், "உடையவரே! நாம் ஒன்று கேட்போம்; மாற்றம் சொல்ல வேண்டும். நாம் உலகினரை உய்விப்பதற்காகப் பல அவதாரங்கள் செய்தோம்; படாதன பட்டோம். நம் விருப்பம் பலனுறவில்லை. நீ இக்குறுகிய காலத்திலே உலகைத் திருத்தியது எவ்வாறு?'' என்றான். உடையவர், "கேட்கும் முறைப்படி கேட்டால் நாம் சொல்லுவோம்'' என்றார். நம்பி உடையவரை ஓர் ஆசனத்தில் இருக்கச் செய்து அருகே நாணி நிற்க, அவர் தம்முடைய ஆசார்யரான பெரிய நம்பியை நினைந்து, நம்பியின் திருச்செவியில் த்வயத்தை ஓதினார். உடையவரது சிஷ்யர்கள், "என்ன ஆச்சர்யம்! முழுமுதற் கடவுளான இந்தப் பெருமான் நம்முடைய ஆசார்யரிடம் உபதேசம் பெறுவதே! இப்போதுதான், இவனுக்கு நம்பி என்ற திருநாமம் பொருளுடையதாயிற்று. 'நின்றவனுக்குங் குறிப்பாகில் கற்கலாம் கவியின் பொருள்தானே' என்று திருமங்கையாழ்வார் திருக்கண்ணமங்கைப் பெருமான் முன் இசைத்தது, இன்று இங்கு பலிப்பதே!'' என்று இறைவனையும் உடையவரையும் பாராட்டினர்.

பின்னர் உடையவர் தமது சிஷ்யர்களுடன் வடநாட்டிற்குப் பயணமானார். வடமதுரை, அயோத்தி, த்வாரகை, இவை போன்ற பல ஸ்தலங்களில் தங்கி வைஷ்ணவநெறியைப் பரப்பி வந்தார். ஒருநாள் ஸரஸ்வதிதேவி அவரை அணுகி, "முனிவர் பெருமானே! கப்யாஸம் புண்டரீகமேவ அக்ஷிணீ என்ற ச்ருதி வாக்யத்தின் பொருளைக் கூறுவீர்'' என்றாள். உடையவர் கூறிய பொருளைக் கேட்டு அவள், "அரிது இப்பொருள். இது வரையில் இவ்வாறு கூறியது ஒருவரும்

...ர். உம்முடைய ஸ்ரீபாஷ்யம் மிகச் சிறந்தது என அறிந்தோம். உமது திருநாமம் ...பாஷ்யகாரர் எனச் சொல்லி மறைந்தாள்.

...ஓரிடத்தில் வாதில் தோற்றவர் சிலர் எம்பெருமானாரிடம் அசூயை கொண்டனர். அவரைக் ...றித்து அபிசார வேள்வி நிகழ்த்தினர். அவர்களது எண்ணம் நிறைவேறவில்லை; அவர்கள் ...த்துப் பிடித்துத் திரியலாயினர். அவர்கள் எம்பெருமானாரை வணங்கி, "பெரியோரே, நாங்கள் ...செய்த தீமையின் பயன் இது. எங்களைக் காப்பாற்றுவீர்" என்று வேண்டினர். எம்பெருமானார் ...அவர்களிடம் கருணை காட்டி அவர்களை மன்னித்தார்; அவர்கள் பித்து நீங்கி அவரை அடி ...பணிந்து வாழ்த்தினர்.

### திருமலையப்பன் சங்காழி ஏற்றமை

வட நாட்டினின்றும் மீளும்போது உடையவர் திருவேங்கட மலையில் பெருமானைத் ...திருவடி தொழச் சென்றார். ஆங்குச் சைவர் பலர் திரண்டு, மலையில் எழுந்தருளியிருப்பவன் ...நாராயணன் அல்லன், சிவனே என்று முழக்கினர். பேயாழ்வாரே "தாழ்சடையும் நீண்முடியும் ...ஒண்மழுவுஞ் சக்கரமும், சூழரவும் பொன்னாணுந் தோன்றுமால்—சூழுந் திரண்டருவி பாயுந் ...திருமலை மேல் எந்தைக்கு, இரண்டுருவும் ஒன்றா யிசைந்து" என்று பாடியிருக்கிறாரே என்றனர். ...உடையவர் அவர்களோடு நெடுங்காலம் வாதாடினார், மேற்கோள்கள் பல எடுத்தோதினார்; "...அகலகில்லேன்" என்ற பாசுரத்தை விளக்கினார். தாழ்சடையும் என்ற பாசுரத்தையும் ...விளக்கினார்; ஸித்தமான வேஷத்தையும் ஸாதகமான வேஷத்தையும் ஒக்க தரிப்பதே! இஃதொரு ...வைத்தையே! ஒன்று ஸாதகமாய், ஒன்று ஸித்தமானால் சேராச் சேர்த்தியாயிருக்குமோ என்னில் ...இரண்டு உருவும் இசைந்து ஒன்றாயிருக்கும், பொருந்தியிருக்கும் என்று ஓதினார். அங்குக் ...கூடியிருந்த சைவர்கள் பிடிவாதமாகத் தாங்கள் சொல்லியதையே மீண்டும் மீண்டும் சொல்லி, ...எம்பெருமானாரை, "நீர் இங்கு இருக்க வேண்டாம்" என்றனர். எம்பெருமானார் அவர்களிடம், ...இன்றிரவு இறைவனுக்கு முன்பாக மானும் மழுவையும், சங்கு சக்கரங்களையும் வைப்போம்; ...காலையில் அவன் கரங்களில் எந்த எந்த ஆயுதங்கள் இருக்கின்றன எனப் பார்த்து நமது ...தர்ச்சரவை முடித்துக் கொள்வோம்" என்றார். அவர்கள் உடன்பட்டனர். இறைவனது முன்பு ...மானும் மழுவையும், சங்கு சக்கரங்களையும் வைத்துக் கதவைச் சாத்திப் பூட்டிக்கொண்டு ...வெளியேறினர், யாவரும்.

விடியற்காலத்தில் அன்பர் கதவைத் திறந்து ஆவலுடன் உள்ளே சென்றனர். இறைவனது ...கரங்களில் சங்கு சக்கரங்கள் இலங்கக் கண்டனர். அன்பர் ஆடினர், ஆர்த்தனர், அண்ணலின் ...அடியிணையில் வணங்கினர்; அவனது புகழைப் பாடினர்; வீதிகளிலே பரந்து வெற்றி முழக்கம் ...செய்தனர். வைஷ்ணவர் கணக்கில்லாதவர் திரண்டனர், திருமலை அப்பனை வணங்க. எம் ...பெருமானார் பெருங்களிப்புடன் வேங்கட வாணனை வணங்கி ஸ்ரீரங்கம் நோக்கிப் படர்ந்தார், ...தமது சிஷ்யர்களுடன்.

> " மஞ்சு தழைக்கும் வண!நின் றன்
> மார்பி லுறைவாள் வதனமெனும்
> கஞ்ச மவிழ்ந்த கதிரனைய
> நேமி யதனால் கண்டீலம்
> எஞ்ச லிலதாம் மதிபுரையும்
> பணில மிலங்க விரிந்தனவே
> தஞ்ச மிவையே" என முனிவன்
> தொழுது மகிழ்ந்தான் தாதருடன்.

### வெள்ளை யுடுத்து மேனாடு படர்ந்தமை

சோழ மன்னன் தீவிரமான சிவபக்தனாக வாழ்ந்து வந்தான். சிவனைக் காட்டிலும் ...உயர்ந்த தெய்வம் இல்லை என்பது அவனது கொள்கை. இதனை வைஷ்ணவர்களும் ஏற்றுக்

கொள்ள வேண்டும் என்ற நோக்கத்துடன் வைஷ்ணவ மதத்தைப் பரப்பும் பெரியோர்க
''சிவனைக் காட்டிலும் சிறந்த தெய்வமில்லை'' என்று ஓலையில் பொறித்துக் கையொப்பம்
வற்புறுத்தி வந்தான். ஒருநாள் தன்னுடைய ஏவலர்களை உடையவரது மடத்திற்கு அனுப்
அவரைக் கையோடு அழைத்துவருமாறு ஆணையிட்டான். அவர்கள் மடத்து வாசலில் நின்றன
இதை அறிந்து ஆழ்வான் பெரிதும் பதைத்தார்; உடையவருக்கு என்ன நேருமோ என்
கலங்கினார்: அவரை எப்படியாவது காப்பாற்ற வேண்டும் என்று முடிவு கொண்டார். அவர
த்ரிதண்ட காஷாயங்களைத் தாம் தரித்துக் கொண்டு, உடனிருந்த பெரிய நம்பியுட
ராஜசபைக்கு நடந்தார். உடையவர் அவ்விடம் விட்டு உடனே நீங்கவேண்டும் என்
வற்புறுத்திச் சொல்லி அனுப்பி, மடத்தைவிட்டு நீங்கினார்.

உடையவர் அப்போது மடத்தின் பின்புறத்தில் இருந்தார். ஆழ்வான் சொ
யனுப்பியது கேட்டு வெளியே வந்து நிகழ்ந்தனவற்றை உணர்ந்தார். தாம் அங்கிருந்தால் உ
வாழ்வது என்பது இல்லை; தாம் இத்தனை காலம் வளர்த்து வந்த நெறியும் குலையும்; ஸ்ரீர
நாதனின் கோயிலிலும் குறைபாடு நேரும். ஆதலால் அவ்விடத்தினின்று வெளியேறுவதே செ
என்று முடிவு செய்தார். ஸ்ரீரங்கநாதனைக் கண்ணுங் கண்ணீருமாகச் சேவித்து, விடைகொண்
வெள்ளையுடை உடுத்து மேற்குநோக்கிப் பயணமானார். அவரைச் சிலரே பின்தொடர்ந்தன

நிகழ்ந்ததை அறிந்தனர் அரசனது ஏவலாளர்கள். கிளர்ந்த சீற்றத்துடன் உடையவரை
பிடிக்கத் தொடர்ந்தனர். வழி தவறி மீண்டனர், ஏமாற்றத்துடன்.

எம்பெருமானாரைத் தேடித் திரிந்த அன்பர் ஒருவர், வேடுவர் வாழும் சிற்றூர் ஒன்
தங்கியிருந்தார். அவ்வேடுவர் நல்லான் சக்ரவர்த்தியின் சிஷ்யர்கள், அவர்கள் எம்பெருமானா
பயணத்தைக் கேட்டு, ''இவரை நாங்கள் எவ்விதம் காக்கலாம்?'' என்று தமக்குள்ளே ஆய்
கொண்டிருந்தனர். அந்த ஊருக்குத் தமது சிஷ்யர்களுடன் எம்பெருமானார் ஒருநாள் சூ
அஸ்தமன சமயத்தில் வந்தார். எங்கும் இருள் சூழ்ந்தது; மழை பெய்தது. வேடுவர்க
இவர்களை அன்புடன் வரவேற்று, ''பெரியோர்களே! நம்முடைய எம்பெருமானார் ஸௌக்யமா
இருக்கிறாரா?'' என்று கேட்டனர். எம்பெருமானார் தம்மை அறிமுகம் செய்து கொண்டா
அவர்கள் மிகவும் களித்து, அவரை வணங்கி,

''நாத! நல்லாய்! வாழ்க'' என்றே நாகுழற,
''யாத வங்கள் செய்தோம் நின்னோடுற''

என்றார்கள். எம்பெருமானும் அவரது சிஷ்யர்களும் குளிர்காய்வதற்கு நெருப்பு மூட்டி அ
தனர்; அவர்களுக்குத் தேனும் தினைமாவும் கொடுத்தனர். மறுநாட் காலையில் எம்பெருமா
அவர்களை வாழ்த்திப் பின்னும் மேற்கு நோக்கிப் படர்ந்தார். வழியில் மிதிலாபுரி, சாளக்ரா
என்ற ஸ்தலங்களில் தங்கினார். சாளக்ராமத்தில் வடுகநம்பி என்ற சிஷ்யர் அவரைப் பரிவு
ஏற்று உபசரித்தார்.

ராமாநுஜர் தமது சிஷ்யர்களுடன் தொண்டனூர் சேர்ந்தார். அந்த நாட்டு மன்னனின் ம
பேயால் பீடையுற்று வருந்தி வந்தாள். ராமாநுஜர் வந்ததைக் கேட்ட மன்னன், அவரது பா
களில் வணங்கித் தனது கவலையைக் கூறினன். அவர் தனது பாததீர்த்தத்தைக் கொடுத்
அதனை அப்பெண் சிரத்தில் ஏற்றாள்; பேய் அவளைவிட்டகன்றது. மன்னன் முனிவ
பாராட்டி அவருக்குச் சிஷ்யனானான்; விஷ்ணுவர்த்தனன் என்ற பேரும் ஏற்றான்.

### சமணரை வென்றமை

சமண மதத்தைத் தழுவிய மன்னன், ராமாநுஜரது சிஷ்யனானான் என்று அ
சமணர் சீற்றங்கொண்டனர், பலர் ராமாநுஜரைக் கண்டு, ''எங்களை வாதில் வெல்லாம
எவ்வாறு எங்களது மன்னனைச் சிஷ்யனாக்கிக் கொள்ளலாம்? நாங்கள் இதோ மந்த்ரம் ஜபி
றோம். நீ இனி உயிர்வாழ்வதில்லை'' என்று ஆரவாரித்தனர். கடலின் அலைபோலச் சமண
கூட்டங் கூட்டமாக முனிவரது முன்னே நின்று, ''வாது செய்வாய்! வாதுக்கு வருவாய்!'' எ
ஆர்த்தனர். முனிவர் சிறிது கலங்கினார்: ''என்னே என் துயரம்! ஸ்ரீரங்கநாதனது சேவை
இழந்தேன்; அடியார்களுடன் பழகுவதும் இழந்தேன்; ஆழ்வானை விட்டுப் பிரிந்தேன். இ

srivatsam

னக்கு மேன்மேலும் இன்னல்! தேளின் விஷத்திற்கு அஞ்சிப் பாம்பின் வாயில் விழுந்தேனே; மினலுக்கு அஞ்சியவன் இடிக்கு இரையானதுபோல் ஆயிற்றே என் கதி!'' என்று பலவாறாகப் புலம்பினார். சிஷ்யர்களுள் ஒருவர், ''ஸ்வாமீ! உம்மை நீர் அறியவில்லையோ? அல்லது சாதாரண மனிதன் போலே பாசாங்கு செய்கிறீரோ? உமது பேரரவின் வடிவை ஏற்று இவர்கள் யாவரை யும் வெல்லுவீர்'' என்றார். முனிவர் ஆங்கு ஒரு திரையை இடச் செய்தார். அதற்குள்ளே சேர்ந்து தம்முடைய உருவை ஏற்றுக்கொண்டு சமணர்களுடன் வாது செய்தார்.

சமணர் பலர் ஒரே காலத்தில் கேள்விகள் பல அடுக்கினர், சிலர் முனிவரை இகழ்ந்தனர், லர் வன்சினம் பகர்ந்தனர். ராமாநுஜ முனிவரோ தமது இணைநா ஆயிரங்களாலும் விடைகளை விரைந்து விடுத்தார்; அவர்களினும், சீற்றம் மிகுந்து ஆர்த்தார். சமணர் அனைவரும் செய்வது யாதென அறியாமல் நா வொடுங்கினர்; முனிவரை வணங்கினர். தம்மை மன்னிக்குமாறு வேண்டினர். முன்பு ராமபிரான் ஆயிரமாயிரமாகக் கணைகள் பெய்து பதினாலாமாயிரம் அரக்கர்களைப் போரில் முடித்தான்; ராமாநுஜரோ தமது இயல்பான வடிவினை ஏற்று, ஆயிரங்களான நாவினாலே சொற்போரில் ஆயிரமாயிரமாகத் திரண்டுள்ள சமணர்களை வென்று, வெற்றிச் செல்வத்துடன் விளங்கினார்.

## ராமாநுஜரும் திருநாராயணனும்

ஒரு நாள் அணிந்துகொள்ளத் திருமண் வேண்டுமென்று ராமாநுஜர் விரும்ப, அன்றிரவு கனவில், ''முனிவரே! நீர் யதுகிரிக்கு வருவீர். அங்கு உமக்குத் திருமண் கிடைக்கும். நாம் திருநாராயணன்; நம்முடைய ஸேவையும் பெறுவீர்'' என்று ஒருவர் பகரக் கேட்டார். இதனை விஷ்ணுவர்த்தனனுக்கு ஓத, அம்மன்னன் ராமாநுஜரைத் தொடர்ந்தான். ராமாநுஜர், யதுகிரி யில் வேத புஷ்கரிணிக் கரையில் பரிதானம் என்ற சிலையினருகில் காஷாயமும் த்ரிதண்டமும் மீண்டும் ஏற்றார். அந்தத் தலத்தில் அவர் இறைவனையும் காணவில்லை, திருமண்ணும் காண வில்லை; அதனால் பெரிதும் கலக்க முற்றார். அன்றிரவு கனவில் திருநாராயணன் தோன்றி, ''முனிபுங்கவரே! நாம் கல்யாணி புஷ்கரிணித் தென்கரையில் சண்பகக் காவில் ஒரு மகிழமரத் தடியில் ஒரு புற்றுக்குள்ளே இருக்கிறோம். அங்கேயே நீர் திருமண்ணும் பெறலாம். நாம் இருக்குமிடம் வரையில் பாதையில் எங்கும் திருத்துழாய் மணம் கமழும் என்பதை நினைவிற் கொள்ளும்'' என்றான்.

ராமாநுஜர் மன்னனுடனும் தமது சிஷ்யர்களுடனும் அவ்விடம் நோக்கி நடந்தார். பாதை யில் இரண்டு அருகிலும் திருத்துழாய்ப் புதர்கள் அடர்ந்திருந்தன. ஆவலுடன் படர்ந்தார். ஆங்கு ஒரு மகிழமரத்தின் அடியில் பெரிய புற்றைக் கண்டு வணங்கினார். அதனுள் திருநாராயணனது திருமேனியைப் பார்த்தார்; திருமண்ணும் அடர்ந்திருப்பது கண்டு மெய் சிலிர்த்து வேத மந்த்ரங்கள் ஓதினார். பெருமானுக்குத் தமது கரங்களாலே மூன்று நாட்கள் பூஜைசெய்து, அர்ச்சகர்களிடம் ஒப்புவித்தார். விஷ்ணுவர்த்தனன் ஒரு கோயிலை எழுப்பி அதனுள் திருநாராயணனை ப்ரதிஷ்டை செய்வித்தான். அங்கு நகரையும் நிர்மாணம் செய்தான். எம்பெருமானார் அவ்விடத்திலேயே தங்கித் திருநாராயணனுக்கு நித்யநைமித்திகங்கள் குறைவற நடத்திவந்தார். நம்மாழ்வார் அருளிய ''ஒருநாயகமாய்'' என்ற திருவாய்மொழி திருநாராயண னுக்கு உரியதாகும் எனப் பகர்ந்து, அதனை ஓதி யாவரும் வணங்குமாறு ஆணையிட்டார்.

ஒரு நாள் கனவில் திருநாராயணன் தோன்றி, ''யதிவரரே! நம்முடைய உத்ஸவ மூர்த்தி ராமப்ரியர் டில்லியிலே இருக்கிறார். அவரையும் நம்முடன் சேர்ப்பீர்'' என்று விளம்பினான். எம் பெருமானார் தமது சிஷ்யர்களுடன் மறுநாளே பயணமானார். டில்லியில் சுல்தானது சபையிலே அவர், ''அறம் வழுவாமல் காக்கும் பெருவேந்தே! நீ வாழ்வாய் உன் நாடும் க்ஷேமமுறும். உலகங்களைப் படைத்துக் காக்கும் முழு முதல்வனுடைய திருஉருவம் உன் அரண்மனையில் இருப்ப தாகக் கேள்வியுற்று இங்கே போந்தோம். அப்பெருமானை மீட்டு முறைப்படி பூஜை செய்விக்க விரும்புகிறோம்'' என்றார். சுல்தானும், ''பெரியோரே! நாம் தொழும் தெய்வம் போலே நீர் இங்கு நிகரில்லாச் சோதி பிறங்க வந்தீர். உம்முடைய உள்ளத்தை நிறைவேற்றுவதே எனது பணி. மூர்த்தி ஒன்று நமது அந்தப்புரத்தில் உள்ளது. இங்கேயே இருந்து அதனை உம்மிடம்

srivatsam

போதுமாறு அழைப்பீர்; அது வந்தால், நீரே எடுத்துக் கொள்வீர்'' என்றான். எம்பெருமானு
''நான் அவரை அழைத்துப் பெறுவேன்'' என்றார்.

வேந்தனது சபையிலிருந்தவர்கள் எம்பெருமானுரைக் கண் இமைக்காமல் நோக்கின சபையில் அமைதி நிலவியது எம்பெருமானு அவரது மேனியின் புகரைக் கண்டு வியந்தனர். ''போதர் கண்டா ''தன்முகக்கிண்கிணியார்ப்ப'' என்று தொடங்கும் பாசுரத்தை இசைத்து, ''போதர் கண்டாய்'' என்று ஓதும்போதே இங்கே போதர் கண்டாய், போதரேன் என்னாதே போதர் கண்டாய்'' என்று ஓதும்போதே என்ற ஒலி எழுந்தது. யாவரும் ஒலி வருந் திசையை உற்று நோக்கினர். ஒரு சோதிக் கற் யினிடையே, பெருஞ்சோதியுடனே ஒரு குழந்தை தளர்நடையிட்டு வருவதைக் கண்டனர். அ குழந்தை முனிவரை நோக்கி நடந்து வந்தது. முனிவர் தமது கரங்களை நீட்டிக் கொண்டு அ குழந்தையை யணுகி, அணைத்தணைத்து, ''என் செல்வப் பிள்ளாய்!'' என்று முத்தமிட்டார். அ குழந்தை முனிவரது கரங்களில் படிந்து அவரது கன்னங்களில் மாறிமாறி முத்தம் பொழிந்த
(எம்பெருமானாரது சிஷ்யர்கள்)

நவையி லாவடி யார்கள் ஆர்த்தனர்,
''நம்மு டைவர(ன்) அருந்தவன்
நவையி லான்திரு நார ணன்றனை
நன்ம கன்னெனப் பெறுவதே!''

எம்பெருமானுர் ராமப்ரியரை மீட்டுக் கொண்டு திருநாராயணபுரத்தில் ப்ரதிஷ்டை செய் தார். உரிய காலங்களில் உத்ஸவங்களைச் சிறப்புற நடத்தி மகிழ்ந்து வந்தார்.

## திருவரங்கம் மீண்டமை

srivatsam

எம்பெருமானுர் திருநாராயணபுரத்தில் பன்னிரண்டு வருஷகாலம் தங்கியிருந்தார். தத் சேஷச்ச தநுதே சேஷவ்ருத்திம் யுகே யுகே | அசேஷசேஷிணே மஹ்பம் சேஷாசந முகை ஸஹ | அநந்த: ப்ரதமம் ரூபம் லக்ஷ்மணச்ச தத: பரம் | பலபத்ரஸ் த்ருதீயஸ்து கலௌ கச்சி பவிஷ்யதி || என்றவாறு முதல் யுகத்தில் ஆதிசேஷன் தன்னுடைய வடிவோடும், பின்பு லக்ஷ்மண னுகியும், பின்பு பலபத்ரனுகியும், கலியில் ராமாநுஜனுகவும் வணங்கிய ஏற்றமுடையது திரு நாராயணபுரம். இதன் திருநாமங்கள் நான்கு. க்ருதயுகத்தில் ஸநத்குமாரர் விமானத்தோடு இக் கோயிலை ஸத்யலோகத்தினின்றும் கொண்டு வந்து அமைத்ததால் நாராயணகிரி எனப் பெயர் பெற்றது. த்ரேதாயுகத்தில் தத்தாத்ரேயர் வழிபட்டதால் வேதகிரி எனப் பெயர் பெற்றது. த்வாபரயுகத்தில் பலராமன் கண்ணனேடு வணங்கியதால் யாதவகிரி எனப் பெற்றது; கலியில் ராமாநுஜர் கோயிலை நிர்மாணஞ் செய்து வணங்கியதால் யதிகிரி எனப் பெற்றது.

ஒருநாள் ஸ்ரீரங்கத்தினின்றும் வந்த ஒரு ஸ்ரீவைஷ்ணவர் எம்பெருமானுரை வணங்கி, அங்கு நிகழ்ந்தன எல்லாம் விண்ணப்பம் செய்தார். விஷ்ணுவை வெறுத்த சோழன் மாண்டான் என்பது கேட்டார் எம்பெருமானுர்; திருவரங்கனை ஸேவிக்க வாய்ப்பு வந்தது எனக் களித்தார். பெரிய நம்பி விண்புகுந்ததையும், ஆழ்வான் கண் இழந்ததையுங் கேட்டு மிகவும் கலங்கினர். தமக்காகக் கண்களை இழந்த ஆழ்வானை உடனே காணவேண்டும் என்று அவரது உள்ளம் துடித்தது. திருநாராயணன், செல்வப் பிள்ளை, அழகிய சிங்கர் இவர்களைத் திருவடி தொழுது அடியார்களிடம் விடைபெற்றுக் கொண்டு பயணமானுர். செல்வப் பிள்ளையின்பால் பாசம் தம்மைப் பின்னே இழுக்க, இறைவனுகிய ஸ்ரீரங்கநாதனைக் காணவேண்டும் என்று பேரவா முன்னே தள்ள, மெள்ளமெள்ளப் படர்ந்தார், முனிவர்.

ஸ்ரீரங்கத்தில் காவிரியில் நீராடி அநுஷ்டானங்களை முடித்துக் கொண்டு உள்ளே விரைந் தார் உடையவர். ஸ்ரீரங்கனது திருமுன்னர் கண்ணுங் கண்ணீருமாய் நின்றார்; ஆழ்வார்களது அருளிச் செயல்களை ஒதி இறைவனைக் கண் இமைக்காமல் சேவித்தார். தம் உள்ளத்தில் உறைந் தனவற்றை விளம்ப முற்பட்டார்; நா குழறியது. ''பெருமானே! பன்னிரண்டு வருஷங்கள் கழிந் தாவது நான் உன்னைச் சேவிக்கப் பெற்றேனே. என் மனக்குழப்பம் நீ அறிவாய். எனது உயிருக் கும் உயிராகிய பெரிய நம்பியை இழந்தேன். ஆளவந்தாரது கடாக்ஷம் பெற்றதும் அவரா

எட்டெழுத்தினை ஏற்றதும் அவர்பால், சிட்டர் திருவடிகளில் படிந்ததும் அவரால் சிறந்த கலை
யை ஏற்றதும் அவர்பால் திருக்கோட்டியூர் நம்பியின் நல்லருள் பெற்றதும் அவரால்; என் வாழ்
விற்கே முழுக் காரணமானவர் அவரே. அவரை இழந்து நான் வேதனைப் படுகின்றேன். என்னை
விட்டுப் பிரியாத ஆழ்வானையும் பிரிந்தேன்; அவருக்கு நேர்ந்தது என் நெஞ்சை வாட்டுகின்றது.
என் செய்வேன்" என்று புலம்பினார்.

பெருமானை மங்களாசாஸநம் செய்து வெளிவந்து ஆழ்வானைக் காண விரைந்தார் உடைய
வர். அவர் வருவதை அறிந்து ஆழ்வான் அவரை நோக்கி வேகமாக நடந்தார், தாயை நாடும்
கன்று போலே. அவரது திருவடிகளில் வேரற்ற மரம்போலே விழுந்து, "ஒப்பில்லாத பெரு
மானே! தேவரீரைக் காணாமல் இதுவரையில் துயரத்தில் ஆழ்ந்தேன். வாட்டமில்லாத தண்ணளிய
தேவரீரை இன்று நான் பெற்றேன்; இன்று நல்விடிவாயிற்று எளியேனுக்கு" என்று புலம்பினார்.
உடையவர் ஆழ்வானைத் தமது இருகரங்களாலும் வாரி எடுத்து அணைத்துப் பெரிய ஆதரத்
துடன் நோக்கி, கண்களில் நீர்ததும்ப, "உத்தமரே! உம்மைப் போன்ற சிஷ்யர் எங்கேனும்
உண்டோ? எனக்காக உமது கண்களை இழந்தீரே; இதனையொத்த த்யாகம் எங்கேனும் காண
முடியுமோ? அன்று ராஜசபையில் நிகழ்ந்தன யாவும் கேள்வியுற்றேன் திருவரங்கனையும்
ஸ்ரீவைஷ்ணவ சமயத்தையும் பெரியதோர் ஆபத்தினின்றும் காத்த பேரண்ணல் நீரன்றோ!"
என்று பலவகையாகப் புலம்பிப் பாராட்டினார்.

## திருமலையடிவாரத்தில் கோவிந்தராஜப் பெருமாள்

எம்பெருமானார் மீண்டு எழுந்தருளியது கேட்டு அவரைப் பார்க்கப் பக்தர்கள் திரண்டனர்,
அவரது உள்ளத்தில் கிளர்ந்தெழுந்த துயரைப் பலவாறாக ஆற்றுவிக்க முயன்றனர். ஒருநாள்
தில்லைச் சித்ரகூடத்தினின்றும் போந்தவர் சிலர், அந்த திவ்யதேசத்து உத்ஸவமூர்த்தி, கோவிந்த
ராஜப் பெருமாள், அப்போது திருப்பதி மலையடிவாரத்தில் இருப்பதாக விண்ணப்பம் செய்து,
குறும்பர்களால் விளைந்த இன்னல்களையும் எடுத்தோதினர். இதுகேட்டுப் பொறுதவராய்
ராமாநுஜர் தமது சிஷ்யர்களுடன் திருவேங்கடத்திற்குச் சென்று, அங்கு கோவிந்தராஜப்
பெருமாளுக்கு ஓர் ஆலயம் எழுப்பி, அதில் மூலவரை அவதரிப்பித்து அவருடன் உத்ஸவரையும்
பிரதிஷ்டை செய்தருளினார். நகரையும் நிர்மாணம் செய்து, அதில் கைங்கர்யபரர்களையும்
குடியேற்றி, தினசரித் திருவாராதனம், உத்ஸவங்கள் முதலியன குறைவின்றி நடக்க ஏற்பாடும்
செய்தார். திருமங்கையாழ்வார் பெரிய திருமடலில், "தென்தில்லைச் சித்திரகூடத்தென்
செல்வனை, மின்னி மழைதவழும் வேங்கடத்தென் வித்தகனை" என்றருளிச் செய்ததுபோல் இந்த
இரண்டு திவ்யதேசங்களும் இணைந்தனவே எனக் கூறிக் களித்தார்.

## துறவியின் செல்வம்

சோழமன்னனின் புதல்வன் ராமாநுஜரை வணங்கி; "முனிவர் முதல்வ! என் தந்தை
செய்தனவற்றைச் சிந்தையில் தேக்க வேண்டா. இந்த ஸ்ரீரங்கச் செல்வம் உம்முடையது. இதை
எப்போதும்போல் பரிபாலித்து வரவேண்டும்" என்று வேண்டிக் கொண்டான். ராமாநுஜர்
முன்போல் ஸ்ரீரங்கநாதனது தொண்டில் ஆழ்ந்து வந்தார். ஸ்ரீரங்கம் ஸ்ரீவைகுண்டத்தினும்
சிறப்புற்றது. வைஷ்ணவ அடியார்கள் ஆயிரக்கணக்கில் அங்கு வாசம் செய்தனர். ஸந்யாஸிகள்
எழுநூறு பேர் எம்பெருமானாரது திருவடிகளில் வணங்கி அவரது ஆணையை நடத்தி வந்தனர்.
அதனால் எதிராஜர் என்ற திருநாமம் பெற்றார் எம்பெருமானார்.

உலகு (இ)கந்த உத்தமன்
உலகு (உ)கந்த உரவனாய்
உலக நாத னுடைமையால்
உலகின் ஆதி ஆயினன்.

## முனிவரின் மொய்புகழ்

ஆளவந்தாரது குறைகளுள் ஒன்று தீர்ந்தது, உடையவர் ஸ்ரீபாஷ்யம் அருளியதால்.
ஆழ்வானுக்கு அவதரித்த இரண்டு குமாரர்களுக்கும் வேதவ்யாஸர், பராசரர் என்று திருநாமம்

srivatsam

வழங்கி, வியாஸ பராசரர்களுடைய பெயர் என்றும் நிலை நிற்குமாறு செய்தார் உடையவர். இதனால் ஒரு குறை நீங்கியது. நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழியின் பொருளைப் பரப்பவேண்டுமென்று உடையவர் தமது அடியார்களுக்கு ஆணையிட்டார். அதுவும் நிறைவேறியது; மூன்றாவது குறையும் தீர்ந்தது.

ஆசார்யர்களுள் ஒருவருக்குமில்லாத பெருமை எம்பெருமானாருக்கு உண்டு. அவருக்கு முன் வாழ்ந்த ஆசார்யர்கள் அவரது அவதாரத்தை முதலிலே அறிந்து, அவருடைய அவதாரத்தை நினைந்து பெருமையுற்றனர். ஆளவந்தார் தாம் அதிகரித்த அரும்பொருள்களைத் தமது சிஷ்யர்களுள் ஐந்து பேர் மூலமாக எம்பெருமானுக்கு அளித்து உதவியதால் வைஷ்ணவ நெறி சிறப்புற்றது. அவர்களுடைய கடாக்ஷத்தால் எம்பெருமானார் இடையறாமல் பரப்பி வந்ததால் வளர்ந்த வைஷ்ணவ நெறி, ''எம்பெருமானார் தரிசனம்'' என்று ஸ்ரீரங்கநாதனால் புகழப்பெற்று, யாவராலும் பாராட்டப்பெற்று வருகின்றது.

வானிலே அடரும் கருமுகில் மலைமீது பொழிய, அந்த நீர் மலையினின்றும் கீழே பல அருவிகளாகப் பாய்ந்து பேராறாகப் பெருகி ஓர் ஏரியிலே தேங்க, அந்த ஏரியின் மதகுகள் வழியே தண்ணீர் பாய்ந்து பயிர்கள் வளர்வதுபோல், இறைவனது பேரருள் திருவாய்மொழியாகப் பொழிய நாதமுனியாகிய மலையில் தண்ணீர் அருவிகளாகப் பாய்ந்து பேராறாகப் பெருகி எம்பெருமானாராகிய ஏரியாயிற்று. அவரது அடியார்களாகிய எழுபத்துநான்கு ஸிம்ஹாஸநாதிபதிகள் அவர் வெளியிட்ட ஞானத்தை உலகில் பரப்பி வந்ததாலே உலகில் பக்தி வளம் பெருகியது. இதனையே நாம் மனத்துள் கொண்டு, ''ராமாநுஜார்ய-திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்'' என்று நடோறும் வாழ்த்தி வருகிறோம். எம்பெருமானாரது பேரருளாலே திவ்யதேசங்களில் இறைவனுக்குத் திருவாராதனமும் உத்ஸவங்களும் முறைப்படி நடந்து வருகின்றன.

srivatsam

எம்பெருமானாரது தனிப்பெருமைக்கு வேறொரு காரணம், திருக்குறுங்குடி நம்பிக்கு குருவாகி, செல்வப்பிள்ளைக்குத் தந்தையாகித் திருவேங்கடமுடையானுக்குச் சங்காழி நல்கியதாகும்.

ஒருவற்கும் உறவேது மாகாத இறையோனும்
ஒருவற்குக் குருவாகி, ஒருவற்குத் தகப்பனுமாய்
ஒருவற்குச் சங்காழி அளித்ததனி உத்தமனுப்
ஒருவற்கும் நிகரில்லா இம்முனிவன் ஒளிர்ந்தனனே.

**பங்குனித் திருவுத்திரம்**

ஒருவருஷம் பங்குனித் திருவுத்திரத்தன்று எம்பெருமானார் ஸ்ரீரங்கநாதனையும் ஸ்ரீரங்கநாயகியையும் சேர்த்தியிலே வணங்கி நெடுநேரம் கண்ணீர் உகுத்து நின்றார். ஸ்ரீரங்கநாயகியை வணங்கி, ''உலகமுதல்வன் நாராயணனது திருவுள்ளத்திற்குப் பாங்காக உயர்ந்த உத்தமியே! புகரும், ரூபமும், கட்டழகும், இளமையும், உயர்ந்த பண்பும், தகவும், கருணையும், சீலமும் வாய்ந்த பெருமாட்டீ! கோகனகாய்! உலகங்களுக்கெல்லாம் ஒரு தாயே! அடியேனுக்கு அன்னாய்! ஆரமுதே! துயருற்றார்க்கு அடைக்கலமே! அடியேன் உன்னிடம் வேண்டுவது விண்ணப்பம் செய்கிறேன். அடியேனுக்கு உன்னிடமும் இறைவனிடமும் பக்தி மேன்மேலும் பெருக வேண்டும்; உங்கள் சேர்த்தியில் நான் வழுவிலா அடிமை செய்யவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். பிராட்டி ஸ்ரீரங்கநாதனைப் பார்த்து, முனிவரை நோக்கி, ''அறிவுப் பெருங் கடலே! நீர் நினைப்பன யாவும் கைகூடும்'' என்றாள்.

பின்னர் எம்பெருமானார் ஸ்ரீரங்கநாதனிடம் விண்ணப்பம் செய்தது: திருமகள் கேள்வனே! திருவரங்கனே! கணக்கற்ற குணநலன்களுக்கு நீ இருப்பிடமாவாய்; இழியன உன் திருநாமத்தைக் கேட்டவாறே குலைவன. உன் திருமேனி ஸௌந்தர்யமும், ஞானம், பலம், இறைமை, சக்தி, வீர்யம், புகர் இவைபோன்ற குணங்களும், அடியாரிடம் அன்பு, பரிவு, ஆர்வம் இவைபோன்ற எண்ணிறந்த பண்புகளும் உன் அடியார்களுக்கு இன்பத்தை விளைவிப்பன. உன்னுடைய

திவ்யாயுதங்களைக் கண்டு அன்பர், தங்களது இன்னல்கள் ஒயும் என்று மகிழ்வர். நீ அன்பர்க்காகவே இங்குக் கோயில் கொண்டுள்ளாய்.

தந்தை யாகித் தாயு மாகித் தார மக்கள் யாவுமாய்ச்
சிந்தை கொண்ட ஞான மாகிச் செப்பு கின்ற குரவனாய்
உந்து மன்பின் நட்பு மாகி உலகு தன்னைக் காக்குநீ
அந்த மற்ற பரிவி னாயென் அகத்து ளார்வ கேட்டியால்.

நான் முக்கரணங்களாலும் இழைத்த தீமைக்கு அளவேயில்லை. செய்ய வேண்டுவ செய்யாமல், செய்யத் தகாதன பல செய்தேன்; தீவினைகளை மலைபோல் குவித்தேன். என்னை இப்பிறவியினின்றும் நீங்கும்படி கடாக்ஷித்து, உன் திருவடிகளிலே கைங்கர்யம் செய்ய ஏற்றவனாகச் செய்வாய்.

ஸ்ரீரங்கநாதன், "எதிபதியே! நீர் நம்பால் விரும்பும் கைங்கர்யத்தை அளிப்போம். உம்மிடம் பக்தியுடையோர் அனைவரும் நீர் பெறும் பேற்றைப் பெறுவர்" என்றான். "எம்பெருமானார் திருவடிகளே சரணம்" என்றிருப்பவர்கள், அவர் பெற்ற பேற்றைப் பெறுவர். நம்மிடம் இறைவன் காட்டுவது க்ருபை; எம்பெருமானார் காட்டுவது பரமக்ருபை. ஆகலின் எம்பெருமானாரை க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யர் என்று நாம் பாராட்டுகிறோம்.

### ஸ்ரீரங்கம் பெற்ற பேறு

ஒருநாள் ஸ்ரீரங்கநாதன் எம்பெருமானாரைப் பார்த்து, "உடையவரே! நீர் அறுபது வருஷ காலமாக ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்தைப் பரப்பப் பலவாறு உழைத்து வந்தீர். நிலம் முழுதும் பரவி நடந்து பிற மதத்தினரை வென்று நன்னெறியை நிலைநாட்டினீர். இனி நீர் இங்கேயே இருந்து நமக்கான கைங்கரியங்களைச் செய்து மகிழ்வீராக" என்றான். எம்பெருமானாரும் அங்கேயே இருந்து ஸ்ரீவைஷ்ணவ நெறியைப் பரப்பினார். முதலியாண்டான், ஆழ்வான் முதலிய பேரறிஞர்கள் அவருடனே வாழ்ந்து வந்தனர். கலி ஒய்ந்தது, நன்னெறி ஓங்கியது. பெரியோர்கள் பலர் எம்பெருமானாரது ஆணைப்படி நன்னெறியைப் பரப்பி வந்தனர். மக்கள் இறைவனிடம் அன்பு கொண்டு உய்ந்தனர். ஸ்ரீரங்கம் பரமபதம்போல் சிறந்தது.

மலிந்தது பதிதனில் மறைவரை நெறியே
மலிந்தது நலனது வளமொடு மின்பம்
மலிந்தனர் அடியவர் மாலவன் மகிழ
மலிந்தன புகழ்தமை மனமெழ இசைத்தே.

எம்பெருமானார் தம் அடியார்களுக்கு விடுத்த ஆணை: (1) நாம் பிறவியினின்று நீங்க, இறைவனது திருவடிகளன்றி வேறு புகல் இல்லை. (2) விருப்பம், வெறுப்பு இவை இல்லாமல் நமது கடமையை நாம் செய்யவேண்டும்; பலன் நம்மிடத்து இல்லை. (3) நமது பிறவி, பதவி இவைபோல்வன முன்னைப் பிறவிகளின் பயனாவன. (4) நாம் ஸ்ரீபாஷ்யத்தை அதிகரிக்க வேண்டும், (5) அன்றேல் ஆழ்வார்களது அருளிச் செயல்களை ஓதவேண்டும், (6) அன்றேல் திவ்ய தேசங்களுள் ஒன்றில் வாழவேண்டும். (7) திருநாராயணபுரத்தில் சிறிய குடிசையேனும் அமைத்து வாழ்தல் நன்று. (8) இவை ஒன்றும் நேராவிடில் ஓர் ஆசார்யனை அண்டி, அவன் உபதேசிக்கும் த்வயத்தை ஓதி வாழவேண்டும். (9) திருமாலடியார்களே நமக்கு அன்பர், மற்றவர்கள் மாற்றார்போல. (10) நீசரை அடைவது வேங்கையை அணுகுவது போலாம். ஆதலால் திருமாலடியாரிடம் அன்புகொள்ள வேண்டும்; எனினும் ஏனையோரை வெறுத்தல் தகாது.

### அர்ச்சை ஒளி

எம்பெருமானார் அவதரித்து ஏறக்குறைய நூற்றிருபது ஆண்டுகள் ஆயின. ஒருநாள் அவர் ஸ்ரீரங்கநாதனை வணங்கி, "நாதனே! அடியேனை வானேற்றி, நாதமுனி, ஆளவந்தார் இவர்களிடம் சேர்ப்பாயாக. அவர்களது திருவடிகளை வணங்கி, அவர்களோடு பெருமானுக்குப் பணிவிடை செய்ய வேண்டும் என்ற அவா நாளுக்கு நாள் ஓங்குகின்றது" என்று வேண்டிக்கொண்

டார். ஸ்ரீரங்கநாதனும், ''உடையவரே! நாம் உம்மைவிட்டு எங்ஙனம் பிரிந்திருப்போம்? இன்னும் சிறிது காலம் உம்மைக் கொண்டு இவ்வுலகைத் திருத்தப் பார்த்தோம்; அறப் பதறுகிறீரே!'' என்ன, எம்பெருமானார், ''காலக் கழிவு செய்ய வேண்டாம்; உன் பொன்னடியில் சேர்த்துக் கொள்வாய்'' என்று மேலும் மேலும் இறைஞ்சப், பெருமானும், ''ஆகில் நாம் செய்வதென்? இற்றை ஏழாவது நாள் நம் பெரு வீட்டை அளிப்போம்'' என்றான்.

எம்பெருமானார் பெருமகிழ்ச்சியுடன் தமது மடத்திற்குச் சென்றார். அவர்களது அடியார்கள் நிகழ்ந்தது கேட்டு மனங் கலங்கினர்; ''அடியோங்களை விட்டுச் செல்லுவது தேவரீருக்கு நியாயமோ? இன்னும் சிறிது காலம் இங்கு இருந்து எங்களுக்கு இதம் அருளலாகாதோ?'' என்று பலவாறு விளம்பினர். எம்பெருமானார் தமது அடியார்களைத் திரட்டி அவர்கள் செய்யவேண்டிய கைங்கர்யங்களைக் குறைவறச் செய்ய நியமித்தார். அவர்களுக்கு உபதேச மொழிகளை அருளினார்.

ஸ்ரீரங்கநாதன் குறிப்பிட்ட நாளிலே மாலை, திருப்பரிவட்டம் முதலியன வாத்யங்களுடன் மடத்திற்கு வந்து சேர்ந்தன. அடியார்கள் வேதம் ஓதினர். எம்பெருமானார் யோகத்தில் அமர்ந்தார். சிறிது நேரத்தில் அடியார், ''நம் கண்ணை இழந்தோம்; நம் தலைவர் விண் எழுந்தார்'' என்று கடுந்துயரில் ஆர்த்தனர். ஸ்ரீரங்கநாதன் ஆற்றொணாத் துயரத்தில் ஆழ்ந்தான்.

எம்பெருமானார் எழுந்தருளியிருந்த இடத்திலேயே அவரது திருமேனி திருப்பள்ளி படுத்தப் பெற்றது. ஆங்கு மூலமூர்த்தியும் உத்ஸவமூர்த்தியுமாக இன்று அவரை அடியார்கள் சேவித்து மகிழ்கின்றனர்.

அவரது அவதார ஸ்தலமாகிற, ஸ்ரீபெரும்பூதூரிலே அடியவர்கள் அவரைப் போன்ற உத்ஸவமூர்த்தியை அமைத்திருந்தனர். அதனை அவர் உகப்புடன் அணைந்து, தமது சக்தியையும் ஒளியையும் இணைத்தார். அந்த மூர்த்தி தானுகந்த திருமேனி எனப்படுகின்றது. திருநாராயணபுரத்தில் அடியார்கள் ஒரு மூர்த்தியை ப்ரதிஷ்டை செய்தனர்; அது தமருகந்த திருமேனி எனப்படும். திருவேங்கடமலையின்மீது, எம்கபருமானது ஸந்நிதியினருகில், சின்முத்ரையோடு உடையவரது மூர்த்தி விளங்குகின்றது. நாதமுனிக்கு நம்மாழ்வார் அருளிய உடையவர் திருமேனி, பவிஷ்யத் ஆசார்ய விக்ரஹம் எனப்படும். அவதரிக்கப்போகும் ராமாநுஜருடைய திருமேனி எப்படி இருக்கும் என்பதைத் தமது ஞானக்கண்ணாலே கண்ட நாம்மாழ்வார், ஓரிரவு சிற்பி ஒருவனுக்குக் கனவில் காட்ட, அந்த மூர்த்தி உருவாயிற்று. அந்தத் திருமூர்த்தி இப்போது திருக்குருகூரில் உடையவர் ஸந்நிதியில் உள்ளது என்பர். கருணைக் கடலான எம்பெருமானார் எல்லா திவ்ய தேசங்களிலும் உறைந்து அடியார்களுக்குக் காட்சியருளி அவர்களை உய்வித்துக் களிக்கின்றார். இம்முனிவர் பெருமானை ஒரு முறை வணங்கினால், பல திவ்யதேசங்களிலும் உறையும் இறைவனை வலம் வந்து வணங்கும் பலனை யளிக்கும்.

srivatsam

அரங்க மத்தியும் அஞ்ச னக்கிரி
நார ணன்மலை சிம்மமாம்
பிறங்கல் கூர்மமும் வதரி நைமிசம்
துவரை சீர்பிர யாகையும்
வரங்கொள் மாமது ரைய யோத்தியும்
புட்க ரம்அனை தலங்களே
தரங்கொள் சீரினன் முனிவன் மன்னிடு
தகவு வேய்ந்துள தரணியில்.

**ஊனமில் நித்தியர் முன்னவன் உகப்புடன்**
**மானவர் தம்மிடை வந்தறம் வளர்த்தவன்**
**மானவன் மேதையர் மன்னவன் எதிகள்தம்**
**கோனவன் கொள்கெனப் பாடுவம் மங்கலம்.**

——★——

## இரண்டாம் பிரிவு

# 1. ஸ்ரீ எம்பெருமானார் திருமஞ்சன கட்டியம்

[ஸ்ரீ பெரும்பூதூரில்]

**ஸ்தபநத்தின்போது**

நாயன்தே! நாயன்தே!

காஷாயசோபி-கமநீய-சிகாநிவேசம்
தண்டத்ரயோஜ்ஜ்வலகரம் விமலோபவீதம் |
உத்யத்-திநேசநிப முல்லஸதூர்த்த்வபுண்ட்ரம்
ரூபம் தவாஸ்து யதிராஜ! தசோர் மமாக்ரே ||

அப்பனுக்குச் சங்காழி அளித்தருளும் பெருமாள்!
அறமிகுநற் பெரும்பூதூர் அவதரித்த பெருமாள்!
அறுசமயச் செடியதனை அடியறுத்த பெருமாள்!
"அருளாழி வரிவண்டே!" என்று ஆழ்வார் அழைக்கும் பெருமாள்!
அருள்மாரி யடியிணைக்கீழ் அன்பு பூண்ட பெருமாள்!
அஞ்சுகுடிக்கொரு சந்ததியாம் ஆண்டாள்தமக்கும் அண்ணரான பெருமாள்!

அரங்கர்மௌலி சூழ்கின்ற மாலையைச் சூடிக்கொடுத்தவள்
தொல்லருளால் தாழ்வின்றி வாழும் பெருமாள்!
அடியார் வினைத்தொடரை அருள் என்னும் ஒள்வாள்
உருவிக் கிட்டிக் கிழங்கொடு வெட்டிக் களைந்த பெருமாள்!
நம் தேசிகசிகாமணிப் பெருமாள்!

1. தேவரீர் திருவடித் தாமரைகளின் தாஸ்யார்ஹ-ஸாரஸ்ய-தாநார்த்தமாக ஆஸநாரவிந்தத்தில் அழுத்தியிட்ட இடது கழலும்,
2. இடத் துடையின்மேல் வளர்த்திக் கண்ணுரக் கண்டு கழிவதோர் காதலுற்றார்க்குக் காட்டியிட்ட வலக் கழலும்,
3. ஸாக்ஷாத் மந்மத-மந்மதாயமான மதுமதந-விஜய-தூணீர யுகளம்போல் இணைத்து வைத்த கணுக்கால்களும்,
4. கீழ்நோக்கும் ஒளிவெள்ளம் மறியுண்டு சுழித்தாற்போல் இரண்டருகும் திரண்டுருண்டு மடியுண்ட முழந்தாள்களும்,
5. கந்தளித-கதலீ-காண்ட-கரிகர-கல்பகங்கள் போலே அதிம்ருதுள-மாம்ஸலங்களாய் விளங்குகின்ற திருத்துடைகளும்,
6. ஸந்த்யா-ரஞ்ஜித-சாரதாப்ரத்தில் தனித்தெழுந்ததோர் கொடிமின்னல் நிலைநின்று வளர்ந்தாப்போல் ஆஜங்கம் தழைத்துடுத்த அரைச் சிவந்த ஆடையின்மேல் வளர்ந்து வந்து, நிகுநிகென்று பொன்னரை நாண் பூண்ட அழகும்,

7. பாங்காக ஆஜங்கம் தழைத்துடுத்த அந்திபோல் நிறத்தாடையும்,

8. ஸௌவரஸ-பரிப்ராமித-மதி-மந்தார-மாமத்யமாந ஸௌந்தர்ய-துக்தவிந்துதார நடுக்குழித்திட்ட சுழிபோல் ஸுந்தரமாம் உந்தி மலரும்,

9. மஞ்ஜுளதர-மாயூரசிர லாலஸ்யஜந-வீஜ்யமாந-திவ்ய தரங்கங்கள்போல் இரு பாலும் திகழ்கின்ற தூப-குமிகுமித-மந்தகந்த-வஹ-தோதூயமாந-திவ்ய த்ரிவளிகளும்,

10. அபிநவதர-தர-விகஸ்வர-ஸரஸிஜவர-முகுள தளத்தளாயமாநநிஜாங்குலி கொங்குளீ சோபையை நிஜஹ்ருதய-ஜலஜதள-ரஸிக-ஹார்த-ஜநார்தனனுக்கு அவநமித்துக் காட்டுவதுபோல் நெஞ்சுக்கு நேராகக் கொஞ்சம் சாய்த்து அஞ்ஜலித்த தடக்கைகளும்,

11. தங்க வளைமேல் தங்கித் தொங்குகின்ற சங்கிலிகளோடு இணக்கமுற்ற கணுக்கைகளும்,

12. முறுக்கியிட்ட முன்கைகளோடு உள்விம்பிப் புறங்குவிந்து மடியுண்ட முழங்கைகளும்,

13. கநகமய குலதரங்களைக் கடைந்தெடுத்து மடுத்தாற்போல் இரண்டருகும் திரண்டு நீண்ட பாஹுதண்டங்களும்,

14. வைகுண்டாதிப்ரஹ்ம கோசங்கள் வந்திருக்கும் மாணிக்கப் பண்டாரமான நெஞ்சு மாகிய நீணகர்க்கோர் கநகமய கவாடம் போலப் பளபளவென்று அகன்று காட்சி யூடமாய்த் திகழ்கின்ற திருமார்பின் அழகும்,

15. அம்மார்பின் அழகில் ஆழங்காற்பட்டு மயங்கிவிடும் மநோநயநங்களைத் தோளழகில் துவக்குவிக்கும் அவலம்ப ஸூத்ரம்போல் இலங்குகின்ற முந்நூலழகும்,

16. ஸேச்வரவிபூதித்வயமும் இளைப்பாறும் நிழல்தடமாய் வளர்ந்துயர்ந்த திண்டோள் களும்,

17. கண்டவ்யஸ்த-தாராக்ஷரங்கள் புறம்பொசிந்து காட்டினாற்போல் ரேகாத்ரய பத்தாங்கமாய் வலம்புரியின் சுழி ஒழுங்கைப் பழித்தெழுந்த கழுத்தின் அழகும்,

18. மறுக்கழுத்திய சந்த்ர மண்டலத்தையும், அப்போதலர்ந்த செந்தாமரைப் பூவையும் அத:கரித்துக் கிட்டினாரை மையலேற்றி மயக்கும் மாயமந்திரமாய் விளங்குகின்ற ஸ்மயமாந-முகாரவிந்தமும்,

19. இசைந்து கனிந்த த்ராக்ஷாத்வயம்போல் வகுப்புண்ட சுபுக-விகாஸமும்,

20. அதிருசிர-பாவ-கர்ப்பமானதொரு வார்த்தை சொல்லத் தொடங்கித் துடிப்பது போல் விளங்குகின்ற திருப்பவளங்களும்,

21 அபிமத ஜநாநந்த வேகத்தால் அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து விம்மி விம்மி விழுகின்ற அவ்யக்த-மதுர-மந்தஹாஸ விலாஸமும்,

22. ஸ்படிகமய-முகுர-மண்டலங்கள்போல் தளதளென்ற திவ்ய கபோலங்களும்,

23. கந-கநக மகரகுண்டல த்வயத்தால் தழைந்து, வளர்ந்து, படிந்து, வடிவிட்டுச் சுருண்டு நீண்டு, தோளளவும் தொங்குகின்ற கர்ணபாசங்களும்,

24. ''மாட்டுயர் கற்பகத்தின் வல்லியோ? கொழுந்தோ?'' என்று நித்யஸந்தேஹ ஜநகமான கோலநீள் கொடிமூக்கின் அழகும்,

25. மிதோபத்த-ஸ்புரித-சபரத்வந்த-லலிதங்களாய்ப் புடைபரந்து, மிளிர்ந்து, நீண்ட தண்டாமரைக் கண்களும்,

26. குணோத்கர்ஷ குண்டலிதமான திருச்சார்ங்கம்போல் வளைந்த திருப்புருவ வட்டங்களும்,

27. அஷ்டமீசந்த்ரனின் அம்ருதப்ரவாஹங்கள் கற்பகக் கொடியடியில் பெருகிவந்து தேங்கினாற்போல், திருநுதல்மேல் இலங்குகின்ற நாஸிகாமூல-த்ருத-ஸ்ரீராமாநுஜ-தீவ்யத்-திவ்யோர்த்வபுண்ட்ர விசேஷமும்,

28. அதினிடையில் உபயவிபூதி – ஸாம்ராஜ்யபட்டாபிஷேக – லக்ஷ்மீவிஹார–நிக்ஷிப்த–பதகமல–லாக்ஷாபங்கம்போல், சிவந்து படிந்து விளங்குகின்ற ஸ்ரீசூர்ண ரேகையும்,

29. உயர்ந்து மலர்ந்த திருமுடியும்,

30. வளர்ந்து, மடிந்து, வ்யக்தாவ்யக்தமாய் விளங்குகின்ற திருக்குழல் ஒழுங்கும்.

31. சுற்றிச் சுழற்றிக் குழைத்திட்டு முடித்துத் தொங்கவிட்ட சிகாபந்தமும்,

32. பின்னெடுத்த பிடரி யழகும்,

33. திருவனந்தாழ்வான் பின்படம்போல் நடுப்பதிந்து விசாலமாய் நெரித்திட்ட திருமுதுகும்,

34. வலவருகின் முன்னாட்டித் தாங்கியிட்ட த்ரிதண்டாக்ரமும்,

35. சீரியதோர் நிதிபோலே திருமுன்பே நோக்கிக்கொண்டிட்டு வைத்த திருவடி நிலைகளுமாய்,

இப்போது தேவரீர் திருமஞ்சனம் கொண்டருள எழுந்தருளியிருக்கும் அழகிது,

ஏதேனும் சிந்தை மருளோ?
ஜகந்மோஹந மந்த்ர ப்ரபாவமோ?
ஸகல ரஸகுளிகா விலாஸமோ?
ஸர்வபோக சிந்தமணி ப்ரகாசமோ?
அகிலஜகத் ஸுஹ்ருத் விபாகமோ?
நிகில கல்பலதா ப்ரஸாரமோ?
ஸமஸ்தஸம்பத் ஸாம்ராஜ்ய வேஷமோ?
ஸர்வமங்கள ஸந்தான ப்ரஸவமோ?
அகில ஜகஜ்ஜீவந மூலமோ?
அதுலாநந்த கந்தாவதாரமோ?
ஸகலகலா ரஹஸ்ய ஸர்வஸ்வமோ?
ஸர்வேச்வர ஆபத் தநமோ?
ஈதெல்லாம் திரண்டெழுந்து கொண்டதோர் வடிவோ?
இதுவுமன்றி, அப்ரமேய தேஜஸ்ஸோ?

நாங்கள் ஏதொன்றறியா இவ்வழகுடன் தேவரீர் ஊழிதொறும் ஊழிதொறும் வாழ்ந்திடுகவே! யதிஸார்வபௌமனே! திருமஞ்சனம் கண்டருள்கவே! ஜயவிஜயீ பவ!

குறிப்பு: திருவல்லிக்கேணியில் ஸ்ரீ உடையவர் திருமஞ்சன கட்டியம், இதுவே சிறிது சுருங்க அமைந்துள்ளது.

## திருமஞ்சன கட்டியம்

அநந்த-கருடாதிபி : ஸகலஸூரிபிஸ் ஸேவித :
விஹாய பரமம் பதம் விநத-ரக்ஷணே தீக்ஷித : |
அநந்த குலபூஷணம் யதிபதிம் ஸதா நந்தயந்
அநந்தஸரஸீ தடே விஹரதி ச்ரியா கேசவ : ||

ப்ராக், பராக்! துஷ்டநிக்ரஹசிஷ்டபரிபாலநா! பராக்!

பாஷண்டத்ருமஷண்ட-தாவ-தஹந : சார்வாக சைலாசநி :
பௌத்வத்வாந்தநிராஸ வாஸரபதி : ஜைநீப-கண்டீரவ : |
மாயாவாதிபுஜங்கபங்க-கருடத்ரைவித்ய சூடாமணி :
ஸ்ரீரங்கேச ஜயத்வஜோ விஜயதே ராமாநுஜோயம் முநி : ||

பராக், பராக்! தர்சந-ஸ்தாபநாசார்யா ப்ராக்!

பரிவுடனே நூற்றெட்டுத் திருப்பதியும் சேவித்து
வாழ்வித்த வேர்வை ஆரவோ,
பாகவத சாஸ்த்ர ப்ரபந்தங்கள் அனைத்தும்
பகர்ந்திட்ட வேர்வை ஆரவோ,
தரணியில் இருளகல மாயாவாதிகளுடன்
தர்க்கித்த வேர்வை ஆரவோ,
சமய கோலாகலஞ் செய்து முக்கோல்களையும்
தாங்கும் விடாய் தீரவோ,
ஹரி நமோ நாரணா என்னும் மந்த்ரத்தை
அநுஸந்தித்த வேர்வை ஆரவோ,
ஆளவந்தார் தமக்கு அன்புடனே அளித்த
ஸ்ரீபாஷ்யமிட்ட வேர்வை ஆரவோ,
ஆசூரி ப்ரபுவான தர்சநஸ்தாபநாசார்ய!
ஸ்ரீபெரும்பூதூர் தழைக்கவே
ஜகமேழும் குளிர தேவரீர் திருமஞ்சனம் கண்டருளவே,
ஜயவிஜயீ பவ!

## 2. நித்ய விபூதி, லீலா விபூதி

[ஸ்ரீபெரும்பூதூரில்]

1. தென்புறம் நோக்கிக் கோயில் மங்களாசாஸநம்

எச்சரிகை! ஸ்வாமி, எச்சரிகை!

ஆராமம் சூழ்ந்த அரங்கநகர் வாழ, அன்பொடு தென்திசை
நோக்கி யருளவேணும்.
உபயவிபூதி-நாயகா! எச்சரிகை!

பராக்! ஸ்வாமீ! பராக்!

துளங்கு நீண்முடி அரசர்தம் குரிசில்
தொண்டை மன்னவன் திண்டிற லொருவற்கு
உளங்கொள் அன்பினே டின்னருள் சுரந்து
அங்கோடு நாழிகை ஏழுட னிருப்ப

வளங்கொள் மந்திரம் மற்றவர்க் கருளிச்
செய்தவாறடியேன் அறிந்து, உலகம்
அளந்த பொன்னடியே அடைந்துய்ந்தேன்
அணிபொழில் திருவரங்கத் தம்மானே!

பல்லாண்டு...அப்பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே,

[அருளப்பாடு திருவரங்கச் செல்வனார் செங்கோல்
செலுத்தும் விபூதித்வய-அதிகாரிகள்!]

நாயன்தே—நாயன்தே!

[ஸ்ரீவாஸுதேவ உபநிஷத்]

ஹரி : ஓம். ஸ வா ஏஷ மஹாநஜ ஆத்மா அந்நாதோ
விந்ததே வஸு |

யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச்ச
ப்ரஹிணோதி தஸ்மை | தம் ஹ தேவ மாத்மபுத்தி-ப்ரகாசம்
முமுக்ஷுர்வை சரண மஹம் ப்ரபத்யே |

Srivatsan

இதி ஹோ வாச |
விஷ்ணு சயநம் ப்ரபத்யே | ஸத்குரூந் ப்ரபத்யே |
ஸாத்விகாந் ப்ரபத்யே | ருசோ வாசம் ப்ரபத்யே |
மநோ யஜு: ப்ரபத்யே | ஸாம ப்ராணம் ப்ரபத்யே |
சக்ஷு: ஸ்தோத்ரம் ப்ரபத்யே | வாகோஜஸ்ஸஹ
ஓஜோ மாம் ப்ரபத்யே |
ப்ராணாயாமம் ப்ரபத்யே | ப்ரணவம் ப்ரபத்யே
ஸத்யம் ப்ரபத்யே | ச்ரத்தாம் ப்ரபத்யே |
பரமாத்மநே ப்ரபத்யே | வாஸுதேவம் ப்ரபத்யே |
பாகவதாய ப்ரபத்யே | பக்தாநாம் ப்ரபத்யே |
ஓம் ப்ரபத்யே | நம: ப்ரபத்யே ச்ரீ ப்ரபத்யே |
ச்ரியம் ப்ரபத்யே | யத்வேதா திவ்யகாயத்ரீ ஜயதி |
ததேஷாப்யுக்தா | ததேவபூதம் |
ததுபாஸிதவ்யம் | ஸத்யம் தத்த்வயம் |

ஸ்ரீமந்நாராயண...ப்ரபத்யே |

இதம் பூர்ண மத: பூர்ணம் பூர்ணாத் பூர்ண
முதச்யதே | பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவசிஷ்
யதே | ஸர்வம் பூர்ணம் ஸஹோம் |

ஸ்ரீமதே நாராயணாய நம: |

கம்ப்ரஹ்மா | கம் வாயு: | கம் புராணம் |
கம் க்ராயணீபுத்ர: |
வேதோயம் ப்ராஹ்மணோ விது: | வேதேநாநேந வேதி
தவ்யமிதி | ய ஏவம் வேத | இத்யுபநிஷத் | ஹரி: ஓம் |

**வாழி எதிராசன் வாழி எதிராசன்**
**வாழியெதி ராசெனன வாழ்த்து வார்—வாழியென**
**வாழ்த்துவார் வாழியென வாழ்த்துவார் தாளிணையில்**
**தாழ்த்துவார் விண்ணோர் தலை.**

சாரு வாகமதம் நீறுசெய்து சமணச செடிக்கனல் கொளுத்தியே
சாக்கியக் கடலை வற்றுவித்து மிகு சாங்கியக்கிரி முறித்திட
மாறு செய்திடு கணாத வாதியர்கள் வாய்தகர்த்தற மிகுத்துமேல்
வந்த பாசுபதர் சிந்தி ஓடும்வகை வாதுசெய்த வெதிராசனார்
கூறு மாகுரு மதத்தொ டோங்கிய குமாரிலன் மதவவற்றின்மேல்
கொடிய தர்க்கசரம் விட்டபின்குறுகி மாயவாதியரை வென்றிட
மீறி வாதில்வரு பாற்கரன் மதவிலக்கடிக்கொடி எறிந்துபோய்
மிக்க யாதவமதத்தை மாய்த்த பெருவீரர் நாளும் மிக வாழியே!

ஜயவிஜயீ பவ!

srivatsam

**வடபுறம் நோக்கி—திருவேங்கடமுடையான் மங்களாசாஸநம்**

**எச்சரிகை! ஸ்வாமி, எச்சரிகை!**

**வடதிசை மதுரை சாளக்கிராமம் வைகுந்தம் வேங்கடங்கள் வாழ வடதிசை நோக்கியருள வேணும்**

**உபய விபூதி நாயகா! எச்சரிகை!**
**பராக்! ஸ்வாமீ, பராக்!**

அகலகில்லேன் இறையுமென் றலர்மேல் மங்கை யுறைமார்பா!
நிகரில் புகழாய்! உலகமூன்றுடையாய்! என்னை யாள்வானே!
நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே!
புகலொன்றில்லா அடியேன் உனனடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே.

**பல்லாண்டு... அப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டே**

**[அருளப்பாடு—பராசர, பாராசர்யாதி ப்ரணீத-நிகில ஸம்ஸ்க்ருத-நிகம-ரஹஸ்யாதிகாரிகள்]**

**நாயந்தே! நாயந்தே!**

**[த்வயோபநிஷத்]**

ஹரி : ஓம் |
ஸஹநாவவது | ஸஹநௌ புநக்து | ஸஹவீர்யம்
கரவாவஹை | தேஜஸ்விநாவதீதமஸ்து மாவித் விஷாவஹை |
ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: |

அதாத: ஸ்ரீமத்-த்வயோத்பத்தி: |
வாக்யோ த்விதீய: | ஷட்பதாநி |
அர்த்தா தச | பஞ்சவிம்சதி: அக்ஷராணி |
பஞ்சதசாக்ஷரம் பூர்வம் | தசாக்ஷரம் பரம் |
நவாக்ஷரம் ப்ரதமபதம் |
த்விதீய-த்ருதீய-சதுர்த்தே த்ர்யக்ஷராணி |
பஞ்சாக்ஷரம் பஞ்சமம் | த்வ்யக்ஷர: ஷஷ்ட: |
ஏகாக்ஷரபத: ப்ரதம: | ஏகாக்ஷரோ த்விதீய: |
சதுரக்ஷர: த்ருதீய: | சதுர்த்த-பஞ்சம
ஷஷ்ட-ஸப்தமா ஏவம் த்ர்யக்ஷராணி |
அஷ்டம: சதுரக்ஷர: | த்வ்யக்ஷரோ நவம:
தசமோ த்வ்யக்ஷர: | ஏதந் மந்த்ரச்ச ப்ரபத்தி: |
பூர்வோ நாராயண: ப்ரோக்த: அநாதி ஸித்தோ மந்த்ர
ரத்ந: ஸதாசார்ய மூல: |
ஆசார்யோ வேதஸம்பந்நோ விஷ்ணுபக்தோ விமத்ஸர: |
மந்த்ரஜ்ஞோ மந்த்ரபக்தச்ச ஸதா மந்த்ரார்த்தவிச் சுசி: ||
குருபக்தி ஸமாயுக்த: புராணஜ்ஞோ விசேஷத: |
ஏவம் லக்ஷணஸம்பந்நோ குருரித்யபிதீயதே ||
யத்ஸக்ருதுச்சாரித: ஸம்ஸார விமோசநோ பவதி |
ஸப்தஜந்ம-க்ருதம் பாபம் தத்க்ஷணாதேவ நச்யதி ||
ஸர்வபுருஷார்த்த ஸித்திர்பவதி |
ஸர்வவேதபாராயண புண்யம் லபதே |
ஸ்ரீமந்நாராயணஸ்ய ப்ரியோ பவதி |
ய ஏவம் வேத இத்யுபநிஷத் |
ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: |

**முதல் உத்ஸவம்**

ஸ்ரீ விஷ்ணுபுராணே பராசர:

யோநந்த: பட்யதே ஸித்தை: தேவதேவர்ஷி-பூஜித: |
யஸ்ஸஹஸ்ரசிரா: வ்யக்த: ஸ்வத்ஸிகாமலபூஷண: || 1 ||

கந்தர்வாப்ஸரஸ ஸித்தா: கிந்நரோரகசாரணா: |
நாந்தம் குணாநாம் கச்சந்தி தேநாநந்தோய மவ்யய: || 2 ||

ஸ்ரீப்ராஹ்மபுராணே குருகா மாஹாத்ம்யே ப்ரஹ்மாணம்
ப்ரதி பகவாந் :

காலாந்தரே து மச்சக்த்யா பூயோ புஜக - நாயக: |
நிர்நித்ர - திந்த்ரிணீ - ஸத்வம் ஏஷ்யத்ர மயேரித: || 3 ||

ஸ்ரீமந்மஹாபூதபுரே ஸ்ரீமத்கேசவ யஜ்வந: |
காந்திமத்யாம் ப்ரஸூதாய யதிராஜாய மங்களம் || 4 ||

ஜயவிஜயீ பவ.

**இரண்டாம் உத்ஸவம்**

நாரதீய புராணே ஸ்ரீயாதவகிரி மாஹாத்ம்யே:

அநந்த: ப்ரதமம் ரூபம் த்ரேதாயாம் லக்ஷ்மணஸ்ததா |
த்வாபரே பலபத்ரஸ்து கலௌ கச்சித் பவிஷ்யதி ||1||

தத: கலியுகஸ்யாதௌ வைசாக்யாம் விச்வபாவந: |
விஷ்ணுபக்தி - ப்ரதிஷ்டார்த்தம் ஸேநேசோவதரிஷ்யதி ||2||

தத: காலேந மஹதா விநஷ்டாம் புவிதத்க்ருதிம் |
நாத நாமா முனிவரோ யோகஜ்ஞோ தவாப்ஸ்யதி ||3||

தத: காலே பஹூதிதே விநஷ்டாம் விஷ்ணு வர்த்திநீம் |
த்ரிதண்டமண்டிதோ தேவ: முநி: ப்ரவ்யக்தயிஷ்யதி ||4||

ஸ்ரீமந்மஹாபூதபுரே...மங்களம் | ஜயவிஜயீ பவ ||

**மூன்றும் உத்ஸவம்**

ஸ்காந்த புராணே வைஷ்ணவ ஸம்ஹிதாயாம் ஸ்கந்தாகஸ்த்ய ஸம்வாதே ஹாரிதம் ப்ரதி பகவாந்:

srivatsam

ராஜந் கலியுகே ப்ராப்தே தர்மே நஷ்டே ச்ருதீரிதே |
மத்பக்த: ஸர்வதர்மஜ்ஞ: தவகோத்ர ஸமுத்பவ: ||1||

சாரீரக மஹாபாஷ்ய - க்ரந்த - கர்த்தா ஜிதேந்த்ரிய: |
வேதாந்தவித்தம: கச்சித் மஸ்கரீ ப்ராஹ்மணோத்தம: ||2||

அஸ்மிந் மஹாபூதபுரே பவிஷ்யதி ந ஸம்சய: |
தஸ்ய ஸம்பாவிந: சிஷ்யா: ஸூராணாமபி துர்கமம் ||3||

மாம் ப்ராப்ய ப்ராப்தநிர்வாணா: பவிஷ்யந்தி கலௌ யுகே |

ஸ்ரீமந்மஹாபூதபுரே...மங்களம் | ஜயவிஜயீ பவ ||

## 3. எச்சரிகை

**[ஸ்ரீபெரும்பூதூரில் மங்களாசாஸநத்தின்போது]**

**திலைக்கண்ணாடிக்கு எதிரில்**

சார்வாக - கர்வ - நிர்வாபண - தூர்வஹா!
எச்சரிகை, ஸ்வாமி எச்சரிகை!

**திரும்பும்போது**

ம்ருஷாமத - விஷாடவீ - தவ - ஹூதாவஹா!
எச்சரிகை, ஸ்வாமி எச்சரிகை!

பௌத்த - த்வாந்த - வித்வம்ஸந - விகர்த்தநா! எச்சரிகை...

மத்வமத - வித்வம்ஸகா! எச்சரிகை...

சங்கராதி - குமதி - கூக - பயங்கர - திவாகரா! எச்சரிகை...

படியேற்றத்திற்குப்பின்

பவ - பயாபிதப்த - ஜந - பாகதேய - வைபவ - பாவி
தாவரணு! எச்சரிகை...

உபய - விபூதி - ஸாம்ராஜ்ய - பட்டாபிஷேக - லக்ஷ்மீ
ஸம்பந்தா! எச்சரிகை...

மாயாவாதி - ஹ்ருதய - தோதாவஹா! எச்சரிகை...

நம்பிள்ளை ஸந்நிதியில்

அகிலஜகத் - ஹிதாநுசாஸந - ப்ரவ்ருத்தி - ச்ருதி - நிகர
சிகராந்தர்ஜ்வர - பிஷக்வரா! எச்சரிகை...

நம்பிள்ளை இன்புற நான்மறைநூல் விரித்த தேவா! எச்சரிகை...

நம்மாழ்வார் ஸந்நிதியில்

srivatsam

பூமன்னு மாது பொருந்திய மார்பன் - புகழ் மலிந்த
பாமன்னு மாறனடி பணிந்துய்ந்த தேவா! எச்சரிகை...

ஸ்ரீமாதவாங்க்ரி - ஜலஜ - த்வய - நித்ய - ஸேவா - ப்ரேமா
விலாசய - பராங்குச - பாதபக்தா! எச்சரிகை...

ஸ்ரீமத்பராங்குச - பதாம்புஜ - மத்த - ப்ருங்காயிதாந்தரா! எச்சரிகை...

திரும்பும்போது

அணைத்துலகு முடைய அரவிந்த லோசனு! எச்சரிகை...

வாதிமத்தேப - கண்டீரவா! எச்சரிகை...

ஆண்டாள் ஸந்நிதியில்

ஸ்ரீமத் கோதாக்ரஜாபிதாநா! எச்சரிகை...
திருப்பாவை ஜீயர் என்று விருப்பால் உரைத்த
தேவா! எச்சரிகை...

அரங்கர் மௌலி சூழ்கின்ற மாலையைச் சூடிக்
கொடுத்த சுரும்பார் குழல் கோதை
"நம் கோயிலண்ணர்" என்ற தேவா! எச்சரிகை...

ஸ்ரீமந்நந்த நந்தந - ஸுந்தரீ - ஸோதரீ - பாவ - பாவிதா! எச்சரிகை...

**திரும்பும்போது**

முன்னிலும் பின்னழகிய தேவா! எச்சரிகை...

ஸ்ரீமத் விசிஷ்டாத்வைத - ஸித்தாந்த - நிர்த்தாரண - பத்த - கௌதுகா! எச்சரிகை...

ஸ்ரீமத் பாஷ்யகாரா! எச்சரிகை...

**ஸ்ரீமணவாளமாமுனிகளது கம்பத்தருகில் திரும்பும்போது**

ஸ்ரீலக்ஷ்மணயோகி ஸார்வபௌமா! எச்சரிகை...

ஸ்ரீபகவத் ராமாநுஜார்ய - வர்யா! எச்சரிகை...

**பெருமாள் ஸந்நிதியில்**

ஸந்தத - ஸாக்ஷாத்க்ருத - கம்பீராம்பஸ் - ஸமுத்பூதஜ ஸம்ம்ருஷ்டநாள - ரவிகர - விகஸித - புண்டரீக - தளாமல - ஆயதேக்ஷணா! எச்சரிகை...

அத்திகிரி அருளாளர் அத்தாணிச் சேவகத்தால் பெருந்தேவியாருடைய பெருந்தாகம் தீர்த்த தேவா! எச்சரிகை...

srivatsam

அருளாளர் ஆறு வார்த்தை அரும்பொருளால் மறைவிரித்துப் பெரும்புகழ்கள் படைத்த தேவா! எச்சரிகை...

**திரும்பும்போது**

ஸ்ரீ மத்யதிஸார்வபௌமா! எச்சரிகை...

**திருக்கச்சி நம்பி ஸந்நிதியில்**

பஞ்சாசார்ய - பதாச்ரயா! எச்சரிகை...

திருக்கச்சி நம்பி யன்பைப் பெருக்கச் செய்துகந்த தேவா! எச்சரிகை...

ஸ்ரீமத்காஞ்சீஸுரி - பூர்ணபிமாந - பாத்ரபூதா! எச்சரிகை...

**ஆளவந்தார் ஸந்நிதியில்**

"எதிகட்கிறைவன் யமுனைத் துறைவன் இணையடியாம் கதிபெற்றவர்க்கு நாம் ஏகலைவன்" என்ற தேவா! எச்சரிகை...

"எம்பெருமானாரே! வாரும்" என்று நம்பி உகந்தணைத்த தேவா! எச்சரிகை...

முடங்கிநின்ற யாமுனர்தம் மூவிரலும் நிமிர்த்து,
முக்குறையும் நீக்கி, மும்முறை விளக்கி,
முக்குறும்பறுத்து, முக்கோல் தரித்து,
மூவுலகும் ஏத்த நின்ற தேவா! எச்சரிகை...

ஆஸ்தானத்திற்குத் திரும்பும்போது

ஸ்ரீமத் - க்ருபாமாத்ர - ப்ரஸந்ந - தேசிகா! எச்சரிகை...

மஞ்சத்தில் கற்பூர ஆரத்தி ஆகும்போது

அப்பனுக்குச் சங்காழி அளித்துகந்திட்ட தேவா! எச்சரிகை...

தாயார் ஸந்நிதியில்

மாலுடனே வேங்கடக்கோன் மார்புறையும் மாமலர்
மேல் மங்கையைப் பெற்றளித்த தேவா! எச்சரிகை...
ஸ்ரீவேங்கடேச - ச்வசுராபிதாநா! எச்சரிகை...

## 4. ஸ்ரீஉடையவர் மங்களாசாஸந எச்சரிகை

[திருவல்லிக்கேணியில்]

srivatsam

ஸ்ரீபார்த்தஸாரதி ஸந்நிதியில்

ஸ்ரீபார்த்ஸூத - க்ருபா - லப்த - நிஜாவதார - வைபவா! எச்சரிகை.

அப்பனுக்குச் சங்காழி அளித்துகந்த தேவா! எச்சரிகை.

ஸ்ரீவேதவல்லித் தாயார் ஸந்நிதியில்

ஸ்ரீவேங்கடேச்வர - ச்வசுரபிதாநா! எச்சரிகை.

வேங்கடக்கோன் மார்புறையும் மங்கையைப்
பெற்றளித்த தேவா! எச்சரிகை.

ஸ்ரீதேவப் பெருமாள் ஸந்நிதியில்

அத்திகிரி அருளாளர்க்கு அத்தாணிச் சேவகத்தால்
பெருந்தாகம் தீர்த்த தேவா! எச்சரிகை!

அருளாளர் ஆறுவார்த்தை அரும்பொருளால் மறைவிரித்துப்
பெரும்புகழ்படைத்த தேவா! எச்சரிகை

ஸ்ரீதிருமழிசைப் பிரான் ஸந்நிதியில்

ஸ்ரீபக்திஸார - பாதயுகள - பக்திஸாரா! எச்சரிக்கை.
இடங்கொண்ட கீர்த்தி மழிசைக் கிறைவன் இணையடி
அடைந்துய்ந்த தேவா! எச்சரிகை.

**ஸ்ரீஅழகிய சிங்கர் ஸந்நிதியில்**

ஸ்ரீப்ரஹ்லாதாஹ்லாதக - ஹிரண்ய - பயங்கரவரேண்ய - ந்ருஸிம்ஹ - சரண்யா! எச்சரிகை.

பள்ளியில் ஓதி வந்த ஒள்ளிய சிறுவனுதி தெள்ளிய சிங்கத்தின் பள்ளியரவான தேவா! எச்சரிகை.

**ஸ்ரீஆண்டாள் ஸந்நிதியில்**

ஸ்ரீமந் - நந்த - நந்தந - ஸுந்தரீ - ஸோதரீ - பாவ- பாவிதா! எச்சரிகை.

திருப்பாவை முப்பதையும் விருப்பால் உரைத்த சுரும்பார் குழற்கோதை, "நம் கோயிலண்ணனே" என்ற தேவா! எச்சரிகை.

**ஸ்ரீநம்மாழ்வார் ஸந்நிதியில்**

ஸ்ரீபராங்குசார்ய - திவ்யஸூக்தி - வ்ருத்திகாரா! எச்சரிகை.

பூமன்னுமாது பொருந்திய மார்பன் புகழ்மலிந்த பாமன்னு மாறன் அடிபணிந்துய்ந்த தேவா! எச்சரிகை.

srivatsam


வாங்கிப் படியுங்கள்

**Vasan's Topclass Guides**

| | |
|---|---|
| கணக்கு<br>அறிவியல்<br>வரலாறு<br>புவியியல் | **4, 5, 6, 7, 8, 9 & 10**<br>ஆகிய வகுப்புகளுக்கு<br>தமிழ் & ஆங்கில மொழிகளில் |
| **வாசன் உரைநூல்**<br>3 முதல் 7 வகுப்பு வரை | **எங்கள் உரைநூல்**<br>8 முதல் S. S. L. C. வரை |

எல்லா ஊர் புத்தகக் கடைகளிலும் கிடைக்கும்

*Phone:* 845618

**VASANTHA AGENCIES**

*1/10*, Sripuram 2nd Street, (near Ajantha Hotel)
ROYAPETTAH :: MADRAS-600014.

Agents: **P. T. BELL & CO.,**
7, Sunkurama Chetty Street, MADRAS-1.

# 5. எம்பெருமானார் பிரபாவம்

தொகுத்தவர் : **ஸ்ரீவைஷ்ணவரத்னம் ஸ்ரீமதி ஸ்ரீதேவி அம்மாள்**

வான்திகழும் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல்
ஆன்ற தமிழ் மறைகளாயிரமும்—ஈன்ற
முதல்தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த
இதத்தாய் இராமாநுசன்

[பெரிய பெருமாளும், திருவேங்கடமுடையானும், பேரருளாளரும், திருநாராயணப் பெருமாளும், அழகரும், திருக்குறுங்குடி நம்பியும், நம்மாழ்வாரும், ஸ்ரீமந் நாதமுனிகளும், ஆளவந்தாரும், பெரிய நம்பியும், திருக்கோட்டியூர் நம்பியும், திருமாலையாண்டானும், ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையரும், மற்றும் ஸ்ரீபாதத்து முதலிகளும், பிரஹ்மரக்ஷஸ்ஸும், ஊமையும் எம்பெருமானார் வைபவத்தை வெளியிட்டார்கள்.]

### 1. பெரிய பெருமாள் வெளியிட்டபடி

பெரிய பெருமாள் திருப்பவளச் செவ்வாய் திறந்து, "உபயவிபூதி ஐச்வரியத்தையும் உமக்கும் உம்முடையார்க்கும் தந்தோம்" என்று அருளிச் செய்தார்.

srivatsam

### 2. திருவேங்கடமுடையான் வெளியிட்டபடி

திருவேங்கட முடையான், "உமக்கும் உம்முடையார்க்கும் உபய விபூதி ஐச்வரியத்வையும் தந்தோம் என்று நம் தெற்கு வீட்டில் சொன்னோமே!" என்று அருளிச் செய்தார்.

உடையவர் திருமலைக்கு எழுந்தருளும்போது, தயிர் விற்பவளாகிய தும்பையூர்க்கொண்டி என்னும் ஆயர்குல மாது தயிரின் விலை கேட்க வந்து உடையவரைச் சேவித்து நிற்க, அவர் அவளுக்குத் தளிகைப் பிரசாதம் சாதிக்கச் சொல்லிக் கிடாம்பியாச்சானை நியமிக்க, அவரும் அப்படியே தீர்த்தமும், பிரசாதமும் சாதிக்க, அத்தீர்த்தப் பிரசாத மஹிமையினால் அவளுக்கு ஞானோதயமுண்டாகி, அவளும், "அடியேனுக்குத் தயிர் விலை வேண்டா; மோக்ஷம் தரவேண்டும்" என்று பிரார்த்திக்க உடையவரும், "அது திருவேங்கடமுடையான் தரக்கடவன்," என்ன, அவள், 'தேவரீர் அவருக்கு ஒரு சிறு முறிச்சீட்டுத் தரவேண்டும்" என்ன, உடையவரும் போர உகந்து தந்தார். அவளும் அதைப் பெற்றுக்கொண்டு திருமலை யேறி த்வரித்து வரக் கண்டு, திருவேங்கடமுடையான் எதிரே வந்து சிறு முறியை வாங்கிக்கொண்டு, சிரசாவஹித்து, அவளுக்குத் திருநாடு பிரசாதித்தார்.

### 3. பேரருளாளர் வெளியிட்டபடி

உடையவர் யஜ்ஞமூர்த்தியுடன் (அருளாளப் பெருமாளெம்பெருமானாருடன்) தர்க்கித்த போது உத்தரஞ் சொல்ல மாட்டாமல் பேரருளாளர்க்கு விண்ணப்பஞ் செய்ய, அப்போது பேரருளாளர் கனவில் எழுந்தருளி, 'உடையவரே! நீர் திகைப்பது ஏதுக்கு? சமர்த்தனாயிருப்பவனான இவனை உமக்குச் சிஷ்யனாகத் தந்தோம்; நீர் உம்முடைய பரமாசாரியரான ஆளவந்தார் அருளிச் செய்திருக்கிற அகண்டமாயாவாத கண்டனத்தைச் சொல்லி ஜயிக்கப்பாரும்,' என்று அருளிச் செய்தார்.

மற்றும் யாதவப் பிரகாசனுக்கு (கோவிந்தஜீயருக்கு) ஸ்வப்னமுகேன, 'நம் இராமாநுஜனைப் போரு ப்ரதக்ஷிணம் பண்ணி, திரிதண்ட சன்யாஸியாவீர்' என்று அருளிச் செய்தார்.

**4. திருநாராயணப் பெருமாள் வெளியிட்டபடி**

தொண்டனூரிலே ஸ்வப்னங் காட்டி அழைத்துக்கொண்டு போய், இவருக்குப் பிரசன்ன ராய்ப் பிரகாசிக்கையால், ''என்னுடைய செல்வப் பிள்ளையோ!'' என்று எடுத்து அணைத்துக் கொண்டு, உபலாளிக்கலாம்படி யதிராஜ குமாரரான செளசில்யம்.

**5 திருமாலிருஞ்சோலை அழகர் வெளியிட்டபடி**

ஒருநாள் திருவோலக்கத்திலே நம் இராமாநுஜனடியார்க்கு அருள்பாடு என்று திருவுள்ள மாய் அருள, 'நாயன்தே!' என்று ஆசாரியர் எல்லாரும் எழுந்திருந்து திருவடிகளிலே சேவிக்க, பெரிய நம்பிவழியில் சிலர் வாராதிருக்க, அழகரும், 'அதுவென்! நீங்கள் நாம் அழைக்க வாரா திருப்பது?'' என்று கேட்டருள, அவர்களும், ''இராமாநுஜனடியார்க்கு அருளப்பாடென்று தேவரீர் திருவுள்ளமாய் அருளுகையாலே, அவர் எங்கள் பெரிய நம்பி சிஷ்யரன்றோ?'' என்று நாங்கள் வாராமலிருந்தோம்'' என்று விண்ணப்பஞ் செய்ய, அழகரும், ''தசரத வசுதேவாதிகள் நம்மைப் புத்ரப்ரதிபத்தி பண்ணினது போலே இருந்தது, நீங்கள் இராமாநுஜனைச் சிஷ்ய ப்ரதிபத்தி பண்ணினது'' என்றார்.

மற்றும், ஒருநாள் கிடாம்பியாச்சானை அருளப்பாடிட்டு 'ஒன்று சொல்லாய்' என்று திருவுள்ளமாயருள, அவரும், ''அபராத ஸஹஸ்ர பாஜனம்'' என்று தொடங்கி ''அகதிம்'' என்று சொல்ல, அழகரும், ''நம் இராமாநுஜனையுடையனாயிருந்து 'அகதிம்' என்று சொல்லப் பொருமோ'' என்று திருவுள்ளமாயருளினார்.

**6. திருக்குறுங்குடி நம்பி வெளியிட்டபடி**

உடையவரும் முதலிகளும் திருக்குறுங்குடி நம்பியை ஸேவிக்க எழுந்தருளினவளவிலே, நம்பியும் திருவோலக்கமாக எழுந்தருளியிருந்து, உடையவரை அருளப்பாடிட்டு, எத்தனை ஜன்மம் பிறந்தோமென்று தெரியாது; அந்த ஜன்மங்கள் தோறும் மூடராய் நம்மை வந்து கிட்டாதே அதமமான கதியை யடைந்தார்கள்; இவ்வாறு மக்களெல்லாரும் உமக்கு அகப்பட்ட விரகை நமக்குச் சொல்லவேணும்'' என்று திருவுள்ளமாக, உடையவரும், ''தேவரீர் கேட்கும் கிரமத்திலே கேட்கில் சொல்லுகிறேன்'' என்ன, நம்பியும் இவருக்கும் ஒரு ரத்ன கம்பளத்தை ஆஸனமாக இட்டு, ''இனிச் சொல்லும்'' என்ன, உடையவரும், அவ்வாசனத்திலே பெரிய நம்பி எழுந்தருளியிருக்கிறதாகப் பாவித்துக்கொண்டு, அவர் திருச்செவியிலே ஹிதத்தை விண்ணப்பஞ் செய்தார். அன்றுமுதல் நம்பியும் ''நம் இராமாநுஜனையுடையோம்!'' என்று அருளிச் செய்து அவரால் வைஷ்ணவநம்பி என்ற அபிதானமுங் கொண்டார்.

**7. நம்மாழ்வார் வெளியிட்டபடி**

இவர் லோகத்தைத் திருத்துவதாக எம்பெருமானோடே மார்தட்டி, ''நின்கண் வேட்கை எழுவிப்பனே'' என்றவர் தாமே, ''ஏ பாவம் பரமே!' என்று கிலேசித்து, ''அகலிடத்தை யாராய்ந்து அது திருத்தலாவதே?'' என்று, ''ஈச்வரன் அவதரித்துத் திருத்தவொண்ணாத லோகத்தை நாமோ திருத்தக் கடவோம்'' என்று கைவாங்கி, ''யானுமென்னெஞ்சு மிசைந் தொழிந்தோம்'' என்று தாமும் தம் திருவுள்ளமுமேயாய், திரிகால ஞானராகையாலே, ''கலியுங் கெடும் கண்டுகொண்மின்!'' என்று உடையவர் திருவவதாரத்தைக் குறித்து அருளிச் செய்தார்.

**8. ஸ்ரீமந் நாதமுனிகள் வெளியிட்டபடி**

''குளப்படியிலே தேங்கினால், குருவி குடித்துப்போம்; வீரநாராயணபுரத் தேரியிலே தேங்கினால், நாடு விளையும்'' என்று அருளிச் செய்தது—உடையவர் திருவவதாரத்தைக் குறித்தே என்னுமிடம், 'பெரிய பெருமாள் ஆகிற பெருங்கடலிலே ஆழ்வார் ஆகிற காளமேகம் படிந்து, தத்கல்யாண குணம்ருதௌகத்தைப் பருகி வந்து, நாதமுனிகளாகிற மஹாமேருவிலே வர்ஷித்து, உய்யக் கொண்டார், மணக்கால் நம்பி ஆகிற அருவிகளாலே இறங்கி, ஆளவந்தார் ஆகிற பேராற்றிலே கூடி, பெரிய நம்பியாகிற வாய்க்காலாலே புறப்பட்டு, எம்பெருமானார் ஆகிற

srivatsam

பெரிய ஏரியிலே வந்து தேங்கி, நம் ஆசார்யர்களாகிற மதகுகளாலே புறப்பட்டு, இச்சம்சார மாகிற கழனிக்கு ஏறிப் பாய்கிறது'' என்று எம்பார் அருளிச் செய்த விடத்தில் ஒத்திருக்கிறது.

9. ஆளவந்தார் வெளியிட்டபடி

(''உடையவராகிய) இம்மஹாநுபாவன் இத்தரிசனத்திலே புகுந்தானுனால் இவன் முதல் வன் ஆம்'' என்று ஆளவந்தார் அருளிச் செய்தார்.

10. பெரிய நம்பி வெளியிட்டபடி

தாமும் (பெரிய நம்பியும்) தம் குமாரத்தி அத்துழாயும் எழுந்தருளியிருக்கிற சமயம் உடையவரும் தம் முதலிகளுமாக எழுந்தருள, பெரிய நம்பி எழுந்திருந்து தெண்டனிட, 'இதுவென்? உடையவர் உமக்குச் சிஷ்யரன்றோ? இப்படிச் செய்யலாமோ?'' என்று அத்துழாய் விண்ணப்பஞ் செய்ய, பெரிய நம்பியும், ''அத் தாளுக்குத் தக்க தலை சகாண் இது'' என்றார்.

மற்றொரு சமயம் உடையவரும் முதலிகளுமாக நீராடி எழுந்தருளும்போது பெரியநம்பி எதிரே கண்டு தாளுந் தடக்கையுங் கூப்பித் தெண்டனிட, உடையவரும் அஞ்சலித்துக் கிருபை செய்தருள, இத்தை முதலிகள் கண்டு, ''இதுவென் ஜீயரே?'' என்ன, உடையவரும், ''இப்போது அவர் இஷ்டம் அநுவர்த்திக்கையன்றோ நமக்குள்ளது'' என்ன, பிறகு அம் முதலிகளும் பெரியநம்பி சந்நிதியிற் சென்று, ''உடையவரை நீர் ஸாஷ்டாங்கப்ரணாமம் பண்ணுகைக்கு அடி என்?'' என்று கேட்க, நம்பியும், ''ஆளவந்தாரும் முதலிகளும் என்றிருந்தேன்,'' என்ன. அவர்களும், ''அதற்கு நிதானம் என்?'' என்ன, நம்பியும், 'ஆளவந்தார்க்குப் பின் அகிலார்த்தஸ்திதி பூர்த்தியுள்ளது இவர்க்கே யாகையாலே, ஸதாசார்ய ஸந்நிதியோடு ஸச்சிஷ்ய சந்நிதியோடு வாசியில்லாமை யாலே சேவித்தேன்' என்று அருளிச் செய்தார். மேலும் தம் குமாரர் புண்டரீகாக்ஷரையும் உடையவர் திருவடிகளிலே ஆச்ரயிக்கச் செய்தார்.

srivatsam

11. திருக்கோட்டியூர் நம்பி வெளியிட்டபடி

தாம் உடையவருக்குத் திருமந்த்ரார்த்தம் பிரசாதிக்கும்போது 'ஒருவர்க்கும் சொல்லாதே கொள்ளும்' என்று ஆஞ்ஞாபித்தருளிச் செய்ய, உடையவரும் அத்தைத் தெற்காழ்வார் திருவோலக்கத்திலே தூளிதானமாக ஸர்வர்க்கும் அருளிச் செய்ய, நம்பியும் இத்தைக் கேட்டுக் கோபித்தவராய், உடையவரை யழைத்து, 'ஆசார்ய ஆஜ்ஞாயாதிலங்கநத்துக்குப் பலம் எது?' என்ன, உடையவரும், 'நரகமே பலம்'' என்ன, நம்பியும், 'அப்படி அறிந்திருந்தும் செய்வானென்?' என்ன, இவரும், 'அடியேன் ஒருவன் மாத்திரம் நரகம் புகுவதும், தேவரீர் சம்பந்தத்தாலே இவ் வர்த்மாக்கள் எல்லாம் உஜ்ஜீவிக்குமென்று சொன்னேன்,'' என்று விண்ணப்பஞ் செய்ய, நம்பியும், போர ப்ரீதராய், 'எம்பெருமானாரே! வாரும்' என்று எடுத்தணைத்துக்கொண்டு, 'இந்த பரஸம்ருத்தி நமக்கில்லையாய் விட்டதே! அவரோ நீர்' என்று அருளிச்செய்து, இன்று முதல் 'எம்பெருமானார் தர்சனமென்னுங்கோள்' என்று அருளிச் செய்தார்.

மேலும், தம் குமாரர் தெற்காழ்வாரையும் அவர் திருவடிகளிலே ஆச்ரயிக்கச் செய்தார்.

12. பெரிய திருமலை நம்பி வெளியிட்டபடி

உடையவர் திருமலைக்கு எழுந்தருளும்போது திருப்பரியட்டப் பாறை அளவில் திருமலை நம்பி எதிரே வந்து தீர்த்தப் ப்ரசாதம் பிரசாதிக்க, உடையவரும் ஸ்வீகரித்தருளி, நம்பியைப் பார்த்து, 'தேவரீரே எழுந்தருள வேண்டுமோ? வேறே சிறியவர் ஒருவருமில்லையோ?' என்ன, நம்பியும், 'நாலு திருவீதிகளிலும் ஆராய்ந்தவிடத்தில் என்னிலுஞ் சிறியவரைக் கண்டிலேன்' என்று சொல்லி, எம்பாரை உடையவருக்கு உதகபூர்வகமாகக் கொடுத்தார்.

மேலும், தம் குமாரர் இராமாநுஜனையும், பிள்ளைத் திருமலை நம்பியையும் அவர் திருவடி களிலே ஆச்ரயிக்கச் செய்தார்,

4

**13. திருமாலையாண்டான் வெளியிட்டபடி**

தம்பக்கல் திருவாய்மொழிக்கு உடையவர் அர்த்தம் கேளாநிற்க, ''அறியாக் காலத்துள்ளே'' என்கிற பாசுரத்துக்கு இவர் உபகாரஸ்ம்ருதி பரமாக அர்த்தம் அருளிச்செய்ய, ஆண்டானும், 'இது விசுவாமித்திர ஸ்ருஷ்டி,' என்று சொல்லி அருளிச் செய்கை தவிர்ந்திருக்க, பின்பு இந்த விஷயம் அறிந்து திருக்கோட்டியூர் நம்பி எழுந்தருளி, ஆண்டானை யழைத்து, ''சாந்தீபன் பக்கலிலே க்ருஷ்ணன் அத்யயனம் பண்ணினதுபோலே காணும், இவர் உம்முடைய பக்கல் திருவாய்மொழி கேட்கிறது, இவ்விரண்டர்த்தமும் ஆளவந்தார் அருளிச் செய்தது காணும்'' என்றார்.

மற்றொரு சந்தர்ப்பத்தில் உடையவரும் பின்னையும் ஓர் அர்த்த ப்ரஸ்தாபத்திலே 'ஆளவந்தார் இப்படி அருளிச் செய்யார்' என்ன, ஆண்டானும், 'நீர் ஆளவந்தாரைக் கண்ணாலும் காணாதிருக்க, இப்படி அருளிச் செய்யார் என்கைக்கு ஹேதுவென்ன?' என்ன, இவரும், 'நான் ஆளவந்தார்க்கு ஏகலவ்யன் அன்றோ?' என்ன, ஆண்டான் தெண்டனிட்டு, 'இதுவுமொரு திருவவதாரமோ!' என்று அருளிச் செய்தார்.

மேலும், தம் குமாரர் சுந்தரத் தோளுடையாரை உடையவர் திருவடிகளிலே ஆச்ரயிக்கச் செய்தார்.

**14. திருவரங்கப் பெருமாளரையர் வெளியிட்டபடி**

தம்பக்கல் உடையவர் ஆறு மாசம் சேவித்திருந்து பாங்காக மஞ்சட்காப்பு அரைத்துச் சாத்தி நீராடப் பண்ணுவித் தருளத் திருவரங்கப் பெருமாளரையரும் ப்ரீதராய், 'என்னுடைய சர்வ சொத்தையும் கொள்ளை கொள்ளவோ நீர் இப்படிச் செய்தது?' என்று உரைத்தருளி, பஞ்சமோபாய நிஷ்டையை அருளிச் செய்தார்.

srivatsam

மேலும், தம் குமாரர் திருவாய்மொழியரையரையும் உடையவர் திருவடிகளிலே ஆசிரயிக்கச் செய்தார்.

### இனி முதலிகள் வெளியிட்டபடி

**15. வடுகநம்பி வெளியிட்டபடி**

''ஆசாரிய பதமென்று தனியே ஒரு பதமுண்டு; அது உள்ளது எம்பெருமானார்க்கே. ஆகையால் எல்லார்க்கும் எம்பெருமானார் திருவடிகளொழிய வேறு உபாய உபேயமில்லை; அவர் திருவடிகளே தஞ்சமென்றிருங்கோள்' என்று அருளிச் செய்தார்.

**16. கணியனூர்ச் சிறியாச்சான் வெளியிட்டபடி**

ஸசேலஸ்நான பூர்வகமாக ஆர்த்தியோடே உபசன்னராய்த் திவ்யாஜ்ஞையிட்டு, 'எம்பெருமானார் திருவடிகளொழிய வேறு தஞ்சமில்லை' என்று அருளினார்.

''ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யம் யதிராஜோ ஜகத்குரு:
ஸஏவ ஸர்வ லோகாநா முத்தர்த்தா நாத்ர ஸம்சய:''

என்று இவர்தாமே பெரிய பெருமாள் திருவோலக்கத்திலே ஸ்ரீ சடகோபனைத் தம் திருமுடியிலே நிறுத்திக்கொண்டு அருளிச் செய்தருளினார்.

**17. அருளாளப் பெருமாளெம்பெருமானார் வெளியிட்டபடி**

இவர், தம் திருவடிகளிலே ஆசிரயித்த எச்சான், அநந்தாழ்வான், தொண்டனூர் நம்பி, மருதூர்நம்பி முதலானவர்களுக்கு ஹிதோபதேசஞ் செய்து, உடையவர் குருவியின் கழுத்திலே பனங்காயைக் கட்டினதுபோலே செய்தருளினார், நீங்கள் 'எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருங்கோள்' என்றருளிச் செய்தருளினார்.

**18. பிள்ளைப் பிள்ளையாழ்வான் வெளியிட்டபடி**

பிள்ளைப் பிள்ளையாழ்வானும் கூரத்தாழ்வானை ஆச்ரயித்தவளவிலே, "ஆழ்வான், ஆசார்ய தக்ஷிணையாக திரிவித கரணங்களையும் பரிஹரித்துக்கொண்டு பாகவதர்களிடத்தில் ஆநுகூல்யைக ரசராய்ப் போந்திரும்." என்றருளிச் செய்ய, அவரும், "இது அடியேனாலே பரிஹரித்து முடியாது" என்று பயப்பட்டு முசித்துக் கிடக்க ஆழ்வான் இவரை அழைத்து, "எதிரியைக் குத்தினால் எதிரி கூடக் குத்தும்; ராஜதண்டமும் வரும்; ஆகையாலே காயிகாபராதஞ் செய்யக்கூடாது; பராப வாதஞ் சொல்லுகிற வாக்கொன்றையே பரிஹரித்துக் கொள்ளும்" என்றருளிச் செய்து, "இனி மனஸ்ஸாலே நினைத்திராகில், அநுதபித்து இது எம்பெருமான் திருவுள்ளத்தில் படாதபடி எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிரும்" என்றருளிச் செய்தருளினார்.

இவ்வாறே முதலியாண்டான், எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, திருக்குருகைப் பிரான்பிள்ளான், கோமடத்துப்பிள்ளான், எங்களாழ்வான், நடாதூரம்மாள், நடுவிலாழ்வான், ஸ்ரீவேதவியாசபட்டர், நடுவில் திருவீதிப்பிள்ளை முதலானவர்களும் மற்றும் விசதவாக்சிகாமணியான ஸ்ரீமந் மணவாள மாமுனிகள் உள்ளிட்ட எல்லா ஆசாரியர்களும் அவரவர் சிஷ்யர்களுக்கு, "எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்று நினைத்துப் போருங்கோள்" என்றருளிச் செய்தார்கள்.

**ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸு வெளியிட்டபடி**

பிரமரக்ஷஸ்ஸு யாதவப்ரகாசனுக்கு உடையவரைக் காட்டி, "இவர் நித்யசூரிகளின் தலைவர்" என்று சொல்லிற்று.

**ஊமை வெளியிட்டபடி**

srivatsam

பெருமாள் கோயிலிலே (காஞ்சியிலே) ஒரு பாகவதனிடத்திலே ஒரு பிள்ளை ஊமையாய்ப் பிறந்து, ஐந்து வயதளவாக வார்த்தை சொல்லாதிருந்து, பின்பு இரண்டு ஸம்வத்ஸரம் காணாதிருந்து, பின்பு எல்லாரும் காணும்படி வந்து, வார்த்தை சொல்ல வல்லவனாக, இவ்வாச்சரியத்தைக் கண்டு எல்லாரும் திரள் திரளாய் வந்து ஊமையை நோக்கி, "நீ இத்தனை நாளும் எங்கே போனாய்?" என்று கேட்க, அவனும், "நான் க்ஷீராப்திக்குப் போனேன்" என்ன, இவர்களும், "அங்கே என்ன விசேஷம்?" என்று கேட்க, ஸ்ரீ சேனாதிபதியாழ்வான் உடையவராக வந்து அவதரித்தருளினார் என்கிற ஒரு விசேஷம்" என்று தெரிவித்தனன்.

"அநந்தரம் அவனைக் கண்டதில்லை" என்று ஸ்ரீபகவத் சேனாபதி ஜீயர் அருளிச்செய்தார்.

இப்படியாக உடையவர் பிரபாவத்தை இவர்கள் எல்லாரும் பிரகாசிப்பித்தனர்.

நந்தா நரகத் தழுந்தாமை வேண்டிடில் நானிலத்தீர்!
எந்தாதை யான எதிராசனைநண் ணும்,'என்றுமவன்
அந்தாதி தன்னை அநுசந்தியும் அவன் தொண்டருடன்
சிந்தா குலம்கெடச் சேர்ந்திரும் முத்திபின் சித்திக்குமே.

**எம்பெருமானார் திருவடிகளே சரணம்**

எம்பெருமானாரின் இரு பவிஷ்யதாசார்ய விக்ரஹங்களின் வைபவம் ஒன்று: ஸ்ரீமதுரகவிகள் நம்மாழ்வார் நியமனம் பெற்றுத் தாம்ரபர்ணி தீர்த்தத்தைக் காய்ச்ச, முதலில் பவிஷ்யதாசார்யரான உடையவர் விக்ரஹம் தோன்றியதாகவும், மறுமுறை காய்ச்சியபொழுது நம்மாழ்வாருடைய விக்ரஹம் தோன்றியதாகவும், அந்த உடையவர் விக்ரஹத்தைத் திருப்புளியாழ்வார் அடியில் பூமியிலே எழுந்தருளப் பண்ணியிருந்ததாகவும், திருவாய்மொழிப் பிள்ளை ஆழ்வார் திருநகரியைக் காடு வெட்டி நாடாக்கியபொழுது, ஸ்வப்நத்திலே விக்ரஹம் இருப்பிடத்தையும், மதுரகவிகள் காலத்தில் தீர்த்தத்திலிருந்து தோன்றிய வரலாற்றையும் அறிந்து, பவிஷ்யதாசார்ய

விக்ரஹத்தைக் கண்டெடுத்து, மாறனடி பணிந்துய்ந்தவராகிய எம்பெருமானாரை இப்பொழு சேவை சாதிக்கும் நம்மாழ்வார் விக்ரஹம் தோன்றுவதற்கு முன்னதாகத் தோன்றியபடியாலே ஆழ்வாருக்குத் தமையனார் என்று சொல்லத் தக்க பெருமை பெற்றிருப்பதால், இவருக்கு தனிக் கோயிலும் "ஸ்ரீராமாநுஜ சதுர்வேதிமங்கலம் என்று பெயர் கொண்ட நான்கு திருவீ கனையும் உண்டாக்கி, அந்த ஸந்நிதியின் முன்னே தமக்கும் திருமாளிகையை அமைத்து கொண்டு, இராமாநுஜனைத் தொழும் பெரியோரையும் ஆதரித்துக் கொண்டெழுந்தரு யிருந்தார் என்கிற சரித்திரம் ஆழ்வார் திருநகரியில் நீண்ட நாளாக வழங்கிவருகிறது.

ப்ராசீன நூல்களிலும் காணப்படுகிறது.

மற்றொன்று : ஸ்ரீமந்நாதமுனிகளுக்கு நம்மாழ்வார் நாலாயிரம் அருளும் காலத்தி "பொலிக பொலிக" என்கிற திருவாய்மொழி (5-2) அருளிச் செய்யும் போ "கலியுங்கெடும் கண்டு கொண்மின்" என்கிற திருவாசகத்தால், எம்பெருமானுடை திருவவதாரத்தை ஸூசிப்பித்து, பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தை எழுந்தருளப் பண்ணி கொடுத்தருளினார்.

இப்படி ஸ்ரீமந்நாத முனிகளுக் கருளிய இரண்டாவது பவிஷ்யதாசார்ய விக்ரஹ ஸ்ரீரங்கம் மணவாள மாமுனிகளின் ஸந்நிதியில் சேவை சாதிப்பதாகக் காண்கிறது. அதுநா உண்மையும் அனுபாவ்யமும் கூட, அதாவது, மாமுனிகள் தம் ஆசார்யராகிய திருவாய்மொழி பிள்ளை உகந்தளித்த முன்னவரான பவிஷ்யதாசார்ய விஷயமாக யதிராஜவிம்சதியை அரு செய்து, அவரையே உபாயமாகப் பற்றிப் பின்னவராகிய ஸ்ரீமந்நாதமுனிகளுக்குக் கிடைத் விக்ரஹத்தைப் பலமாகப் பெற்றுவிட்டார். அது தோன்றவே யதீந்த்ர ப்ரவணர் என்கி திருநாமத்துக்கு உரியவராக ஆனார் என்பது சால வழகிய வைபவமாய் இராமாநுஜனுடைய அனைவராலும் சொலப்புகில் வாயமுதம் பரக்குமாறு அமைந்திருக்கிறது.

srivatsam

ஓராண் வழியாக ஸ்ரீமந்நாத முனிகள் தொடங்கி முடிவு பெறுகிறபடியே ஸ்ரீமந்நாதமுனிக பெற்ற பவிஷ்யதாசார்ய விக்ரஹம் மணவாள மாமுனிகளிடம் வந்து சேரப் பெற்றது என்ப சிறந்த வைபவமேயாம்.

## 6. ப்ரஹ்மஸூத்ரமும் எம்பெருமானாரும்

வாகம்ருதவர்ஷி, உபய வேதாந்த வித்வான் கி. வரதாசார்யஸ்வாமி, சிரோமணி

வேதாபஹாரிணம் தைத்யம் மீநரூபீ நிராகரோத் | ததர்த்தாபஹாரிணஸ் ஸர்வ வ்யாஸரூபீ மஹேச்வர: | (பரம ப்ரமாணமான வேதத்தை அபஹரித்த சோமுகனென் அசுரனை நிரஸிக்க பகவான் மத்ஸ்யமூர்த்தியாகத் திருவவதரித்தருளினாப்போலே, வேதார்த் களை அபஹரித்த ஸாங்க்ய வைசேஷிக பௌத்த ஜைந பாசுபதாதி மதஸ்தர்களை நிரஸிக்க ஸ்ரீ நாராயணன் ஸ்ரீவேதவ்யாஸராக அவதரித்தருளினார்.) ஸ்ரீவேதவ்யாஸ பகவான் அரு செய்த ப்ரஹ்மஸூத்ர க்ரந்தம், சாரீரகமென்றும் ப்ரஹ்மமீமாம்ஸை யென்றும் குலாவப் கிறது. "தஸ்யைஷ ஏவ சாரீர ஆத்மா" என்று வேதாந்தங்களிலே பரமாத்மா சாரீரன் எ கூறப்பட்டுள்ளான். "ஜகத் ஸர்வம் சரீரம் தே" என்று பரமாத்மாவுக்குச் சேதநாசேதந மகமான ஜகத்து சரீரமாகையாலே, சரீரப்ரதிஸம்பந்தியான—ஆத்மாவான பரன் சாரீ எனப்படுகிறான். அவனை யறிவிக்கிற சாஸ்த்ரமாகையால் ப்ரஹ்மமீமாம்ஸா சாஸ்த் சாரீரகம் எனப்படுகிறது. ஸ்ரீபோதாயந மஹர்ஷியும் "ஸம்ஹிதம் ஏதத் சாரீரக என்றருளிச் செய்தார். சாரீரகத்தில் ஸ்ரீவேதவ்யாஸபகவான் அருளிச் செய்த அர்த்தங்க ஸ்வாமி எம்பெருமானார் ஸங்க்ரஹ விஸ்தர பாவத்தாலே ஸ்ரீபாஷ்ய, வேதாந்த தீப, வேதா ஸாரங்கள் மூலமாக வெளியிட்டருளினார். இதுதன்னை ஈண்டு நாம் அநுபவிப்போம்.

ஸகலவேத ஸங்க்ரஹமான திருமந்த்ரத்தில் மூன்று பதங்களாலும் ஸகல ஜீவாத்மாக்களுடைய அநந்யார்ஹசேஷத்வம், அநந்யசரணத்வம், அநந்யபோக்யத்வம் என்ற மூன்று ஆகாரங்களும் வெளிப்படையாகக் கூறப்பட்டன. அப்பதங்களிலேயே பரமாத்மாவினுடைய சேஷித்வ, சரண்யத்வ, ப்ராப்யத்வங்களாகிற ஆகார த்ரயமும் ஆர்த்தமாகக் கிடைக்கும். சாரீரகத்திலே முதலிரண்டு அத்யாயங்களும் பரப்ரஹ்மத்தை ஜகதேக காரணமாயும், சேதநாசேதந விலக்ஷணமாயும், ஸர்வசேஷியாயும் அறுதியிடுகின்றன. இதுவே ப்ரணவார்த்த நிருபணம். மூன்றும் அத்யாயம், ப்ரஹ்மம் உபாயம் என அறுதியிடுகின்றது. இது நமச்சப்தார்த்த நிருபணம். நான்காம் அத்யாயம், பரப்ரஹ்மம் பரமப்ராப்யம் என்று நிஷ்கர்ஷித்தது. இதுவே த்ருதீய பதார்த்த நிருபணம். காரணத்வம், அபாத்யத்வம், உபாயத்வம், உபேயத்வம் என்ற நான்கு அர்த்தங்களும் சாரீரகத்தின் நான்கு அத்யாயங்களின் ஸாரமாகும். வேதாந்தங்களில் ஜகத்காரண வஸ்துவே த்யேயம், சரண்யம், ப்ராப்யம் என்ற நியமம் காட்டப்பட்டுள்ளது. "காரணம் து த்யேய:" என்றும், "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்—தம் ஹ தேவம்—முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே" என்றும், "ப்ரஹ்மவிதாப்நோதி பரம்" என்றுமிறே வேதாந்த கோஷம் இருக்கும்படி. "தாபத்ரயாதுரை: அம்ருதத்வாய ஸ ஏவ ஜிஜ்ஞாஸ்ய:" என்று ஸ்ரீ பாஷ்யகாரரும் அருளிச் செய்தார். இந்த வேதாந்தஸித்தாந்தத்தை உலகில ஸ்தாபிப்பதற்கன்றே ஸ்ரீ வேதவ்யாஸருடைய திருவவதாரமாகும். இவர் அருளிச் செய்த ப்ரஹ்மஸூத்ர ப்ரபந்தம் "ஷௌத்ரீ ஸங்க்யா ஸுபாசி: அதிக்ருதிகணநா சிந்மயீ ப்ரஹ்மகாண்டே" என்கிறபடியே 545 ஸூத்ரங்களும், 156 அதிகரணங்களும், 16 பாதங்களும, 4 அத்யாயங்களும் கொண்டது என அறியலாம. வ்யாஸ சிஷ்யரான ஜைமிநி 16 அத்யாயங்கள் கொண்ட மீமாம்ஸா சாஸ்தரத்தை அருளிச் செய்தார். அது பூர்வ மீமாமஸை, கர்மமீமாம்ஸை எனபபடுகிறது. அதில முதறகண 12 அதயாயஙகளில இஷ்டாபூர்த்தி கர்மங்களை விசாரித்து, மேல 4 அத்யாயங்களில கர்மாராதய தேவதைகளை விசாரிக்கிறார் ஜைமிநி. அவருடைய ஆசார்யரான வ்யாஸர் மேல 4 அத்யாயங்களால பரஹ்ம விசாரம் செய்கிறார். இதுவே உத்தர மீமாமஸை பரஹ்ம மீமாமஸை எனப்படுகிறது. பூர்வ மீமாம்ஸையில 12 அத்யாயங்களில ஜைமிநியால விசாரிக்கபபட்ட கர்மங்களுக்கு ஆராதயமாயும், 4 அத்யாயங்களில விசாரிக்கபபட்ட தேவதைகளுக்கு அந்தராத்மபூதமாயும் உள்ள ப்ரஹ்மத்தை ஸ்ரீவ்யாஸர் சாரீரகத்தில் விசாரித்தார். ஆக மீமாமஸசாஸ்த்ரம் 20 அத்யாயஙகள கொணடது என்று தேறும். ஸர்வகாம ஸமாராதயம், ஸர்வதேவதாந்தராத்மபூதம, பரமபரஹ்ம வேதாந்த வேதயம் என்ற வேதாநதஸித்தாந்தமாகிறது.

பூர்வகாண்டத்தில் சொல்லப்பட்ட கர்மங்களுக்கு ஆராத்யம் உத்தரகாண்டத்தில் சொல்லப்படும பரஹ்மம் எனறு மீமாம்ஸாசாஸ்த்ரங்களுககு ஐகார்த்யம் தேறுகிறது. அங்ஙனன்றிக்கே பூர்வகாண்டோக்த கர்மங்களாகிற அங்கங்களுக்கு உத்தரகாண்டோகதமான ஜ்ஞாநம் அங்கி. கர்மாங்கமான ஜ்ஞாநம் உபாயம் என்ற ஒரே அர்த்தத்தைத் தெரிவிக்கிறபடியால், ஐகசாஸ்த்ர்யம் என்னவுமாம். "அர்த்தைகத்வாத ஏகம் வாக்யம் ஸாகாங்க்ஷம் சேத்" என்கிற பூர்வமீமாம்ஸாஸூத்ரம இங்கே ப்ரமாணமாக அநுஸந்தேயம். பூர்வோத்தரமீமாம்ஸாசாஸ்த்ரங்களுக்கு ஜைமிநி வ்யாஸர் என்று கர்த்ருபேதம உண்டு. கர்மம், ப்ரஹ்மம் என்று விஷயபேதம் உண்டு. அதவா கர்ம ஜ்ஞாநம என்று விஷயபேதம் ஆகவுமாம். ஆயினும் விசிஷ்டார்த்தத்தின் ஒருமையைப் பற்றிப் பூர்வோத்தர மீமாமஸைகளுக்கு ஐக்யம் என்பர் ஐகசாஸ்த்ர்யவாதிகளான வைதிகர். சாரீரக மீமாமஸா சாஸ்த்ரம் நான்கு அத்யாயங்கள் கொண்டது. இவற்றை விஷயத்விகம் அல்லது ஸித்தத்விகம் என்றும், விஷயித்விகம அலலது ஸாத்யத்விகம் என்றும் இரு கூறுகப் பிரித்துள்ளார்கள. நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழியாகிற திவ்யசாஸ்த்ரத்தில் பத்துப பத்துக்கள் உள்ளன. அவற்றுள், முதலட்டு ஐந்து பத்துக்கள் ஸித்த பரங்கள் என்றும், மேலட்டு ஐந்து பத்துக்கள் ஸாத்ய பரங்கள் என்றும பிரித்து அர்த்தம் அருளிச் செய்துள்ளார் ஸ்ரீவாதிகேஸரி ஜீயர் ஸ்வாமி. அதே போல சாரீரக சாஸ்திரத்திலும் விபாகம். அது பக்தாம்ருதம்; இது பாராசர்யவசஸ் ஸுதா. பகவத்விஷயமான ஸித்த வஸ்துவைத் தெரிவிக்கிறபடியால் பூர்வத்விகமான முதலிரண்டு அத்யாயங்கள் விஷயத்விகம், ஸித்தத்விகம் எனப்படுகின்றன. மூன்றாவது அத்யாயத்தில் கூறப்படும் பக்திரூபஜ்ஞாநமான உபாயமும், நான்காவது அத்யாயத்தில் கூறப்படும் பரிபூர்ணப்ரஹ்மாநுபவரூப ஜ்ஞாநமான உபேயமும் விஷயியாயும், சேதந யத்ந

ஸாத்யமாயும் உள்ளபடியால் உத்தர த்விகமான மேலிரண்டு அத்யாயங்களும் விஷயித்விகம் ஸாத்ய த்விகம் எனப்படும். சாரீரகத்தில் ஒவ்வொரு அத்யாயத்திலும் நான்கு பாதங்கள் உள்ளன. ஸ்ரீவேதவ்யாஸர் 16 பாதங்களில் பரமாத்மாவை 16 கல்யாணகுணங்களோடு கூடியவனாக வர்ணிக்கிறார். திருப்பாணாழ்வார் பெரிய பெருமாளைப் பாதாதிகேசாந்தமாக அனுபவிக்குங்கால் "அமலனாதிபிரான்" என்கிற முதற்பாட்டில் 16 விதமாக அனுபவித்திருக்கும் அழகு ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் பரமரஸ்யமாகும். இவ்விஷயம் தேசிகன் அருளிச்செய்த முநிவாஹந போகத்தில் வ்யக்தம். பெரிய பெருமாளுக்கு ஆராதகரான பெருமாளைப் பற்றின வால்மீகி ராமாயணத்தின் ஆரம்பத்தில் "க: குணவான், கச்ச வீர்யவான்" என்று பதினாறு கல்யாணகுணங்கள் பேசப்பட்டுள்ளன, சாரீரகத்தில் 16 பாதங்களில் கூறப்பட்ட 16 அர்த்தங்களை இனி நாம் காண்போம். (1) ஸ்ரஷ்டா, (2) தேஹீ, (3) ஸ்வநிஷ்ட: (அநந்யாதாரன்), (4) நிரவதிமஹிமா, (5) அபாஸ்தபாத:, (6) ச்ரிதாப்த: (பஞ்சகாலபராயணர்களுக்கு ஆப்தன்), (7) காத்மாதே: உசிதஜநநக்ருத் (ஆகாச ஜீவர்களுக்கு ஸ்வரூபவிகார ஸ்வபாவவிகாரரூப ஜநநங்களுக்குக் கர்த்தா, (8) இந்த்ரியாதே: உசிதஜநநக்ருத். (9) ஸம்ஸ்ருதேர் தந்த்ரவாஹீ (ஜாக்ரதாதி அவஸ்தா நிர்வாஹகன்), (10) நிர்தோஷத்வாதி ரம்ய: (அகிலஹேய ப்ரத்யநீக கல்யாண குணைகதாநன், (11) பஹுபஜநபதம் (நாநாவித வித்யோபாஸ்யன்), (12) ஸ்வார்ஹகர்ம ப்ரஸாத்ய: (வர்ணாச்ரமாசாரத்தாலே திருவுள்ள முகக்குமவன், (13) பாபச்சித் )உபாஸகர்களின் உத்தரபூர்வபாபங்களினுடைய அச்லேஷ விநாசகர்த்தா), (14) ப்ரஹ்மநாடி கதிக்ருத் (ஹார்தனான பகவானுடைய அருளாலே ப்ரஹ்மநாடீப்ரவேசம் என்றபடி) (ஆக ஸ்தூலதேஹ யுக்தனுக்கு ஏற்படும் பலத்தைச் சொன்னபடி) இனி ஸ்தூலதேஹாத் உதக்ராந்தனுக்கு ஏற்படும் பலங்களாவன :— (15) அதிவஹந் (அர்ச்சிஸ் முதலான ஆதிவாஹிகர் மூலமாக ஜீவனை உபசரிக்குமவன்) (16) ஸாமயத: (நிரஞ்ஜந: பரமம்ஸாம்ய முபைதி" என்கிறபடியே ஆநந்தத்திலே பரமஸாம்யாபத்தி என்னும் மோக்ஷத்தைக் கொடுக்குமவன் என்றபடி) இவ்விடத்தில் ஸாம்யம் மோக்ஷம் என்று கூறப்பட்டிருந்தாலும், அத்த்ரதிகரண ஸ்ரீபாஷ்ய ஸ்ரீஸூக்தியின்படியும், "முக்தம்ததோஹி பரமம் தவ ஸாம்யமாஹ: த்வத்தாஸ்ய மேவ விதுஷாம் பரமம் மதம் தத்" என்ற ஆழ்வான் ஸ்ரீஸூக்தியின்படியும், பரிபூர்ண ப்ரஹ்மாநுபவமும் அநுபவஜநித ப்ரீதிகாரித ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தோசித அசேஷ சேஷவ்ருத்தியும் மோக்ஷமாகக் கொள்ளத்தகும். இப்படி சாரீரகத்தின் 16 பாதங்களின் அர்த்தங்களைச் சுருக்கமாக அநுபவித்தோம்.

முதல் அத்யாயத்தில் 35 அதிகரணங்கள் உள்ளன. முதலதிகரணமான ஜிஜ்ஞாஸாதிகரணம், ப்ரஹ்ம விசாரம் கர்த்தவ்யம, கர்மவிசாராநந்தரம் கர்த்தவ்யம் என்ற அர்த்தத்தை ஸ்தாபிக்கிறது. 35 வது அதிகரணம் ஸர்வ வ்யாக்யாநாதிகரணம்; பூர்வோக்தந்யாய அதிதேசம். இடையில் 26ஆம் அதிகரணம அபசூத்ராதிகரணம், ப்ரஹ்மவித்யாதிகார பரம். மற்ற அதிகரணங்கள் பரமாத்மா சேதநாசேதந விலக்ஷணன், ஜகதேகாரணபூதன் என்ற அர்த்தத்தை வாத ஸ்தாபிக்கின்றன. சாஸ்த்ராரம்போத்காதம் முதலிட்டு நான்கு அதிகரணங்கள். ஈக்ஷத்யதிகரணம் ஐந்தாவதாகும். இது தொடங்கியே சாரீரக சாஸ்த்ரம் என்பர். ஈக்ஷத்யதிகரணத்தில் அசேதநவைலக்ஷண்யத்தையும், ஆநந்த மயாதிகரணத்தில் சேதநவைலக்ஷண்யத்தையும் காரண ப்ரம்ஹத்திற்கு ஸ்தாபித்தருளுகிறார் வ்யாஸர். இதினுடைய விவரணமே மேலதிகரணங்களாகும். ஈக்ஷத்யதிகரணத்தில் ப்ரஹ்மத்தினுடைய உபாயத்வமும், ஆநந்தமயாதிகரணத்தில் ப்ரஹ்மத்தினுடைய உபேயத்வமும் இவ்விரண்டும் திவ்யமங்கள விக்ரஹ விசிஷ்டனுக்கே யாகையால் அந்தரதிகரணத்தில் பரமாத்மா திவ்யமங்கள விசிஷ்டன் என்று ஸ்தாபித்தார் என்பது ஸம்ப்ரதாயம. திருவாய்மொழியில் முதல் மூன்று பத்துக்களின் அடைவும் இப்படியே. இதினுடைய விவரணமே மேல் ப்ரபந்த சேஷம் என்பர் பெரியோர். காரண வஸ்துவைக் கூறும் வாக்யங்கள் காரண வாக்யங்கள். அவற்றுக்குச் சேதநாசேதந விலக்ஷணமான ப்ரஹ்மத்தினிடத்தில் அந்வயத்தைக் (ப்ரதிபாதகத்வேந ஸம்பந்தத்தை) கூறுகிறபடியால், முதல் அத்யாயம் ஸமந்வயாத்யாயம் எனப்படுகிறது.

இரண்டாம் அத்யாயம், அவிரோத்யாயம் எனப்படும். முதல் அத்யாயத்தில் கூறப்பட்ட அர்த்தத்தை ஸ்திரீகரணம் செய்வது இரண்டாம் அத்யாயம். ப்ரஹமம் ஜகத்காரணம் என்

விஷயத்திலும், ஜகத் ப்ரஹ்மகார்யம் என்ற விஷயத்திலும் விரோதம் இல்லை என ஸ்தாபிக்கிறார் வ்யாஸர். இவ்வத்யாயத்தில் முதல் இரண்டு பாதங்கள் காரணத்வ விசாரபரம்; மேல் இரண்டு பாதங்கள் கார்யத்வ விசாரபரம. ப்ரஹ்ம காரணத்வத்தை அங்கீகரியாமல் ப்ரதான காரணத்வத்தையும் (ப்ரக்ருதிதத்வம் காரணம்), பரமாணு காரணத்வத்தையும் (பரமாணுக்களே ஜகத்காரணம) கூறுகின்ற ஸாங்க்ய, வைசேஷிக, பௌத்த, ஜைந, சைவ மதங்களைக் கண்டித்து, வைதிகமான சேதநாசேதந விலக்ஷண ப்ரஹ்ம காரண வாதத்தைத் தழுவிய பாஞ்சராத்ரத்தைக் கொண்டாடுகிறார், பாரத கர்த்தாவான ஸ்ரீவேதவ்யாஸர். சாரீரகத்தில் இரண்டாம் அத்யாயத்தில் முதல் பாதத்தில் அவைதிக ஸ்ம்ருதி த்யாஜ்யை, வைதிக ஸ்ம்ருதி ஆதரணீயை என்கிறார். இரண்டாம் பாதத்தில் ஸாங்க்யாதி பஞ்ச மதங்களைத் தூஷித்துப் பாஞ்சராத்ரத்தை பூஷிக்கிறார். "பஞ்சேதராணி சாஸ்த்ராணி ராத்ரீயந்தே மஹாந்த்யபி" என்று பாத்ம தந்த்ர வசனத்தின்படி பாஞ்சராத்ரத்தின் ஸந்நிதியில் ஸாங்க்ய, வைசேஷிக, பௌத்த, ஜைந, சைவ மதங்கள் ஐந்தும் ராத்ரியாகின்றன—ஒளியற்றுப் போகின்றன என்றபடி. மதாந்தர தூஷணத்தையும் பாஞ்சராத்ர பூஷணத்தையும் செய்து ப்ரஹ்ம காரணத்தை வலியுறுத்தினார் ஸ்ரீவேதவ்யாஸர். மூன்றாம் பாதமான வியத் பாதத்திலும், நான்காம் பாதமான ப்ராண பாதத்திலும் ஸர்வம் ப்ரஹ்ம கார்யம் என்று ஸ்திரீகரணம் செய்கிறார். வேதாந்தங்களிலே நித்யமாகச் சொல்லப்பட்ட ஆகாசத்திற்கும் ஜீவாத்மாக்களுக்கும் ப்ரஹ்ம கார்யத்வத்தை உபபாதிக்கிறார். அசித்துக்குக் கார்யத்வம் ஸ்வரூப அந்யதாபாவம்; சித்துக்குக் கார்யத்வம் ஸ்வபாவ அந்யதாபாவம் என்று ஸித்தாந்தம் செய்கிறார். இப்படி நியமிப்பார் ஆர் என்னில், உபநிஷத்தே நியாமகமாகிறது. எங்ஙனே என்னில், "போக்தா, போக்யம், ப்ரேரிதாரம் ச மத்வா" என்று உபநிஷத்து ஜீவாத்மாவை போக்தா எனவும், அசித்தை போக்யம் எனவும், ஈச்வரனை நியந்தா எனவும் கூறுகின்றது. அசித்து போக்யமாக வேணுமானால், அது ஸ்வரூப விகாரம் அடைய வேணும். மாம்பூ, மாம்பிஞ்சு, மாவடு, மாங்காய், மாம்பழம் என ஆனாலொழிய அது போக்யமாக மாட்டாது. அதுபோல் ப்ரக்ருதிதத்வம் மஹதஹங்காரபூத பஞ்சாதிகளாகப் பரிணதமாக வேணும். அப்படிப் பரிணமிக்கும்படி ஸங்கல்பிக்கிறவன், காரணபூதனான ஸர்வேச்வரன். ஜீவன் இவற்றுக்கு போக்தா. ஆகையால் ஸ்வரூபத்தாலே நிர்விகாரன் ஆயினும், ஸ்வபாவமான தர்மபூதஜ்ஞானத்தினுடைய விகாஸம் பெற்று அனுபவிக்கிறான். இதுவே ஸ்வபாவ அந்யதாபாவம். இதுவே இவனுடைய கார்யத்வம் ஆகும். இதற்கும் காரணபூதன், நியந்தாவான ஈச்வரனே. அசித்துக்குள்ள ஸ்வரூப விகாரம் சித்துக்கு இல்லை என்றும், சித்துக்குள்ள ஸ்வபாவ விகாரமும் ஈச்வரனுக்கு இல்லை என்றும் ச்ருதி ஓதுகிறது. இப்படி விஷய வ்யவஸ்தை வேதாந்த ஸித்தையாகையால, இவற்றைக்கொண்டு ஜகத்தினுடைய கார்யத்வத்தை ஸ்திரீகரிக்கிறார் ஸ்ரீவேதவ்யாஸர். ஜீவாத்மா வேறு; அவனுடைய தர்மபூதஜ்ஞானம் வேறு. இரண்டும் ஜ்ஞானமே; ஒன்று தர்மி, மற்றொன்று தர்மம். இரண்டும் நித்யம். இரண்டும் த்ரவ்யம. தர்மிக்கு ஸங்கோச விகாஸங்கள் இல்லை. தர்மத்துக்கு அவை உண்டு என்ற ஸித்தாந்தங்களை ஸ்ரீவ்யாஸர் சாரீரகத்தில் பல இடங்களிலே கூறுகிறார். சித்து, அசித்து, ஈச்வரன் எனப்படும் தத்வத்ரயமும் ஸவிசேஷமே என்பது ஸ்ரீவ்யாஸ ஸித்தாந்தம். சேதநாசேதந வைலக்ஷண்யம் கூற ஓரோ அதிகரணத்திலும் ஒரு விசேஷத்தை ஈச்வரனுக்கு உண்டு என்று ஸ்தாபிக்கிறார். ஸங்கல்பம், ஆநந்தம் முதலான விசேஷ குணங்களோடு கூடியதாகவே ப்ரஹ்மத்தை வர்ணிக்கிறார் வ்யாஸர்.

மூன்றாம் அத்யாயத்தில் "உபபத்தேச்ச" என்று பகவான் உபாயபூதன் என்று கூறுகிறார். வ்யாஜங்களாக பக்த்யாதிகள் கூறப்படுகின்றன. பகவத் பக்தி விளையும்போது விஷயாந்தர வைராக்யமும், பகவத் விஷயராகமும் வேண்டும். அதற்காக முதல் பாதம் வைராக்யபாதமாகவும் இரண்டாம் பாதம் உபயலிங்க பாதமாகவும் அமைந்துள்ளன. மூன்றாம் பாதத்தில் ப்ரஹ்ம வித்யைகளில் உபாஸ்ய குணங்களை விசாரிக்கிறார். நான்காம் பாதம், ப்ரஹ்ம வித்யா அங்க பாதம்.

நான்காம் அத்யாயம் பலாத்யாயம்; ப்ரஹ்ம வித்யா நிஷ்டனுடைய பலம் கூறப்படுகிறது இவ்வத்யாயத்தில். முதல் முன்னமே வித்யா ஸ்வரூப சோதனம் செய்து, மேலே வித்யா பலத்தைக் கூறுகிறார். கர்மங்களினுடைய விநாசம் அச்லேஷம், தூநநம், உபாயனம் இவை எல்லாம்

சொல்லப்படுகின்றன. இப்படி சரீரத்தோடு கூடியிருக்கும் காலத்தில் வித்யாபலம் கூறப்பட்டு, மூன்றும் பாதத்தில் அர்ச்சிராதிகதி கூறப்படுகிறது. நான்காம் பாதம், ப்ராப்திபாதம். பரமபத ப்ராப்தியும், அனைத்துலகுமுடைய அரவிந்த லோசனனைத் தினைத்தனையும் விடாதே அனுபவிக்கும் அனுபவத்தையும், கர்மவச்யராய் மறுபடியும் ஸம்ஸாரத்திற்கு வாராமையும் பலமாகக் கூறப்படுகிறது.

ஆக, ஜகதேக காரணமாய், ஸர்வசேஷியாய், சேதநா சேதந விலக்ஷணமான ப்ரஹ்மமே உபாஸ்யம், முக்தப்ராப்யம், முக்திப்ரதம், பரம போக்யம் என்று சாரீரகத்தில் ஸ்ரீவேதவ்யாஸ பகவான் அறுதியிடுகிறார் என்றதாயிற்று. இவை இத்தனையும் ஸ்ரீபாஷ்ய வேதாந்த தீப வேதாந்தஸார வேத்யங்களாம்.

## 7. எம்பெருமானாரின் அநுஷ்டாநம்

[ஸ்ரீஉபயவேதாந்த வித்வான் சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்மாசார் ஸ்வாமி]

ஸ்வாமி எம்பெருமானார் ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தை நன்கு வளர்த்தபடியால் நம்பெருமாள், இந்த ஸித்தாந்தத்தை ''எம்பெருமானார் தர்சநம்'' என்றே பேரிட்டு நாட்டி வைத்தார் என்பதனை மணவாள மா முனிகளின் திருவாக்கால் நாம் அறிகிறோம்.

ஆகவே எம்பெருமானார் தர்சநத்தில் பிறப்பைப் பெற்றிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களான நாம் அறியவேண்டும் அர்த்தங்களையும் அதனடியான அநுஷ்டாநங்களையும், எம்பெருமானார் அருளிய திவ்யக்ரந்தங்களடியாகவே கற்கவேண்டியது இன்றியமையாததொன்று.

srivatsam

நமக்கு இவ்வுபகாரத்தை கத்ய த்ரயத்தாலும் நித்ய க்ரத்தத்தாலுமே எம்பெருமானார் செய்தருளியிருககிறார்.

இவரருளிய மற்ற ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்கள் ஐந்தும், வேதபாஹ்யர்களின் வாதங்களையும் குத்ருஷ்டிகளின வாதங்களையும் தவிர்க்கவே அருளிச செய்யப்பட்டவைகள். அவைகளிலிருந்து தத்வ, ஹித, புருஷார்த்தங்களை ஓரளவு அறியலாமேயொழிய, அவைகளின் உண்மை நிலையை (யாதாதம்யத்தை) நாம் அறிய வகையில்லை.

தாம் அருளிச் செய்த ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களின் அர்த்தங்களே தமக்கு அபிமதமென்று தம்மைச சேர்ந்தவர்கள் எண்ணிவிடப் போகிறார்களே என்று பயந்து தமக்கும் தம்மைத் தஞ்சமெனப்பற்றினவர்களுக்கும் தமக்கபிமதமான அர்த்தமும், அநுஷ்டாநமும் ப்ரபத்தியும் பகவதாராதனமுமே என்பதனை கத்ய த்ரயத்தாலும், நித்ய க்ரந்தத்தாலும் காட்டுகிறார் என்று கத்யத்ரய வயாக்யாந ப்ரவேசத்திலும் ஸ்ரீவைகுண்ட கத்ய வ்யாக்யாந ப்ரவேசத்திலும் பெரியவாச்சான்பிள்ளை அருளுகிறார்.

ஆகவே நமக்கு அநுஷ்டாநத்திற்கு எம்பெருமானார் அருளிச் செய்த கத்ய த்ரயமும் நித்யக்ரந்தமுமே தஞ்சம்.

இனி இந்த திவ்யக்ரந்தங்களில் காணும் விஷயங்களை மிக மிகச் சுருக்கமாக ஈண்டு அநுபவிக்கலாம்.

''கத்யத்ரயம்'' என்பது, ''சரணாகதி கத்யம்,'' ''ஸ்ரீரங்ககத்யம்,'' ''ஸ்ரீவைகுண்ட கத்யம்'' என்று மூன்று கத்யங்களின் தொகுப்பு.

இவைகளில் முதலிரண்டும் ஸ்வாமி எம்பெருமானாரால் ஸ்ரீரங்கத்தில் பங்குனி உத்திர திருநாளன்று அழகிய மணவாளனும் ஸ்ரீரங்க நாச்சியாருமான சேர்த்தியில், அவர்கள் திருமுன்பே விண்ணப்பிக்கப்பட்டவை. மூன்றுவது ஸ்ரீவைகுண்டநாதனை விஷயமாக்கி

ப்ரோபதேச ரூபமாய் அருளிச் செய்யப்பட்டது. இவ்விபாகத்தை ஸ்ரீவைகுண்ட கத்ய வ்யாக்யாந ப்ரவேசத்தில் பெரியவாச்சான் பிள்ளை காட்டியருளுகிறார்.

இவைகளில் சரணாகதி கத்யம், 23 சூர்ணை கொண்டது. இதில் மந்த்ரரத்னமான த்வயார்த்தத்தை சரமச்லோகார்த்தத்துடன் சேர்த்து தம் அநுஷ்டாநத்தால் மிகத்தெளிவாக அறிவிக்கிறார் எம்பெருமானார்.

மந்த்ரரத்நமான த்வயத்துக்கு அர்த்தம் : பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாகக் கொண்டு ஸ்ரீமானான நாராயணனுடைய திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறேன்; அவளும் அவனுமான சேர்த்தியில் எல்லா அடிமைகளையும் செய்யப் பெறுவேனாக வேணும்; அவ்வடிமைகளில் எனக்கென்னும் நினைவு குலையவேணும் என்பதே.

இதில் சொல்லும் சரணவரணத்தை அங்கத்துடன் விதிக்கிறான் கண்ணன். இதர உபாயங்களை அறவே விட்டும் தன்னைப் பற்றுதலையும் உபாயமென்று நினையாமலும் தன்னையே உபாயமாக பற்றச் சொல்லுகிறானாகையால் சரமச்லோகம் த்வயத்துக்கு விவரணமாகிறது. திருக்கோட்டியூர் நம்பிபக்கல் இதன் அர்த்தமறிவதற்காகவே இராமநுசர் 18 தடவை திருக்கோட்டியூர் எழுந்தருளினார். தாம் வருந்திப் பெற்ற அர்த்தத்தை அங்குள்ள ஆசையுடையோர்க்கெல்லாம் கூறி, எம்பெருமானார் என்னும் பெயரையும் திருக்கோட்டியூர் நம்பியால் சூட்டப் பெற்றார்.

ஆகவே இந்த த்வய சரமச்லோகார்த்தங்களையும் இவைகளின் அநுஷ்டாந க்ரமத்தையும் உலகோருக்குக் காட்டவே இந்த கத்யத்ரயத்தை அருளிச் செய்தார்.

சரணாகதி கத்யத்தில் முதலிரண்டு சூர்ணைகளால் பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாகப் பற்றிப் புருஷார்த்தமாகிற பகவத்கைங்கர்யத்தில் ருசியையும், எம்பெருமானாகிற உபாயத்தில் உறுதியையும் விளைவிக்குமாறு ப்ரார்த்திக்கிறார்.

srivaisnam

இதனைக் கேட்ட ஸ்ரீரங்கநாச்சியார், "உமக்கு அப்படியே உண்டாகட்டும்" என்றும், "நீர் பண்ணும் சரணாகதியால் உம்முடைய ஸம்பந்தி ஸம்பந்திகளுக்கும் நீர் பெற்ற பேறு கிடைக்கட்டும்" என்றும் வரமருளுகிறார்.

இதனைக் கேட்ட எம்பெருமானார், இந்தப் பிராட்டி வசநத்தாலும் மேல் நம்பெருமாளின் ப்ரதிவசநத்தாலும் தம் ஸம்பந்தம் பெற்றவர்களுக்கே மோக்ஷமென்பதை நிர்ணயித்து தமக்குப் பிற்பட்டவர்களும் தம் ஸம்பந்தம் பெற தம் சிஷ்யர்களில் எழுபத்து நான்கு பேரை ஸிம்ஹாஸநாதிபதிகளாக நியமித்து அவர்கள் பரம்பரையில் சிஷ்ய பரம்பரையும் ஆச்ரயித்துத் தம் ஸம்பந்தம் பெற்று உஜ்ஜீவிக்க வழி வகுத்தருளினார்.

ஆகவே எம்பெருமானார் "உத்தாரக ஆசார்யர்" என்றும், மற்றையார் "உபகாரக ஆசார்யர்" என்றும் நம் பூர்வர்கள் அருளிச் செய்தார்கள். எம்பெருமானார் செய்த ப்ரபத்தியே தமக்கும் ப்ரபத்தியாய் அமைந்ததால்தான் தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தில் தனித்து பகவத் ப்ரபத்தி பண்ணுவதில்லை.

5வது சூர்ணைமுதல் 9வது சூர்ணைமுடிய த்வயத்தில் பூர்வகண்டார்த்தம் விவரிக்கப்படுகிறது. 10முதல் 16முடிய விரோதிநிவ்ருத்தி பூர்வகமாக கைங்கர்ய ப்ரார்த்தனை செய்யப்படுவதாய் உத்தரகண்டார்த்தம் விவரிக்கப்படுகிறது.

17ஆம் சூர்ணைமுதல் 23ஆம் சூர்ணைமுடிய நம்பெருமாள் எம்பெருமானாரின் சரணாகதியை ஏற்று உபாயமாக்கி எம்பெருமானார்க்குப் பதிலுரைக்கிறார்.

பகவத்ப்ரதிவசநங்களில் முக்யமான அம்சங்கள்—உமக்கு எவ்விதத் தகுதியில்லாமல் போனாலும் ஏதோ ஒரு விதத்தில் த்வயத்தை நீர் சொல்லிவிட்டபடியால், கேவலம் என்

தையாலேயே உம்முடைய குறைகள் எல்லாம் நீங்கி என் திருவடிகளில் எல்லா அடிமைகளையும் செய்யப் பெறுவீர். இப்பேறு த்வயோச்சாரண மாத்ரத்தாலேயே உமக்கு ஸித்திக்கிறது. இவ்வுடலுடன் இந்த விபூதியில் நீர் எவ்வித ஸம்ஸார க்லேசங்களும் அற்று, த்வயத்தை அர்த்தத்துடன் எப்பொழுதும் சொல்லுகிறவராய் இந்த த்ருதீய விபூதியான ஸ்ரீரங்கத்திலேயே ஸுகித்திரும்; சரீராவஸாந ஸமயத்தில் எல்லாத் தகுதிகளும் பெற்று நம் பரமபதமடைந்து நித்ய கிங்கரராகுவீர்; இதில் ஸம்சயம் கொள்ள வேண்டாம்; நான் பொய் சொன்னது கிடையாது; பொய் சொல்லவும் மாட்டேன்; என்னுடைய இரண்டு சரம ச்லோகங்களையும் நினைத்து, நீர் கவலை நீங்கி ஸுகமேயிரும் என்பதாகும்.

ஸ்ரீரங்ககத்யத்தில் —ப்ராப்யமான பகவத்கைங்கர்யத்தை முதலில் ப்ரார்த்தித்து அது பலிக்கவேண்டித் தம் வெறுமையையும் புகலற்ற தன்மையையும் முன்னிட்டுக்கொண்டு, தம் தோஷங்களையும் அறிவித்துக்கொண்டு ஸ்ரீரங்கநாதனின் திருவடிகளை உபாயமாகப் பற்றி, உபாயாத்யவஸாயத்தையும் தந்தருளி தேவரீர் திருவடிகளில் ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தையும் தந்தருள வேணுமென்று ஸ்ரீரங்நாதனை ப்ரார்த்திக்கிறார்.

ஸ்ரீவைகுண்டகத்யத்தில்: பரமபத நாதனை உபாயமாகப் பற்றி, அவனைப் பரமபதத்தில் கிட்டி கைங்கர்யம் செய்யுமளவும் இங்கிருக்கும் நாளைக்கு காலக்ஷேபார்த்தம், அர்ச்சிராதி மார்க்கத்தையும் பரமபத ஸந்நிவேசங்களையும் அங்கு எம்பெருமானைக் கிட்டும் ப்ரகாரங்களையும் பகவத் பரதிவசநத்தையும் சிந்திக்கக்கடவனென்று பரோபதேசம் பண்ணி கத்யத்ரயத்தை முடிக்கிறார்.

ஆக எம்பெருமானார் ஸம்ப்ரதாயத்தவர்களுக்கு அநுஷ்டிக்க வேண்டியது ப்ரபத்தியே தவிர வேறு உபாயங்களன்று. பெறும் பேறும் பரார்த்த கைங்கர்யமே தவிர மற்றை ஸ்வார்த்த கைங்கர்யாதிகளுமன்று. இந்த ப்ரபத்தியில் உறுதியில்லாதவனுக்கு, இந்த ப்ரபத்தி, அஜீர்ணமுற்றவனுக்கு போஜநம் போலே விபரீதமாகுமாகையாலே, ஸ்வாசார்ய மூலமாக எம்பெருமானார் ஸம்பந்தங் கொண்டு எம்பெருமானார் பெற்ற வரத்தால் மோக்ஷமடைவதே முறையாகும்.

இனி, நித்யக்ரந்த ஸாரம்:

எம்பெருமானையே உபாயோபேயமாகப்பற்றியிருக்கும் த்வயார்த்த நிஷ்டனுக்கு "பரமைகாந்தி" எனப் பெயர். அந்தப் பரமைகாந்தி ப்ரதிதினம் அநுஷ்டிக்க வேண்டுவதை ஸ்வாமி எம்பெருமானார் தம் நித்யக்ரந்தத்தில் காட்டியருளுகிறார்.

பகவத்கைங்கர்ய மொன்றிலுமே ருசியுள்ள பரமைகாந்தியானவன் (1) தேஹசுத்தி பண்ணிக்கொள்ளும் க்ரமத்தையும், (2) ஆத்ம சுத்தி பண்ணிக்கொள்ளும் க்ரமத்தையும் காட்டி, பகவதாராதனத்துக்கு வேண்டுமவைகளை சேகரித்துக்கொண்டு, பரமபதத்தில் எம்பெருமான் எவ்வாறு எழுந்தருளியிருக்கிறானோ அந்த ஸந்நிவேசத்தைத் தன் க்ருஹத்தில் எழுந்தருளப் பண்ணியிருக்கும் அர்ச்சாமூர்த்தியில் மானஸிக கல்பனை பண்ணிக்கொண்டு பரமபத நாதனென்றே வைத்துத் திருவாராதனம் ஸமர்ப்பிக்கக்கடவன் என்றருளிச் செய்கிறார் நித்யக்ரந்தத்தில்.

ஆனால் இந்த நித்யக்ராந்தத்தின்படி க்ருஹார்ச்சையில் திருவாராதனம் ஸமர்ப்பிப்பது கஷ்டமாகையால், எம்பெருமானாரின் அபராவதாரமான மணவாள மாமுனிகள் தமிழில் ஒரு திருவாராதந க்ரமம் அருளிச் செய்திருக்கிறார். அதில் "கூர்மாதீந்" என்றும், "ஸவ்யம்பாதம் ப்ரஸார்ய" என்றும் இரண்டு ச்லோகங்களால் பரமபதநாதனாக பாவித்துக்கொண்டு, கோயில், திருமலை, பெருமாள் கோயில், திருநாராயணபுரம் முதலான நூற்றெட்டு திவ்யதேசத்து எம்பெருமான்களும் நித்யஸூரிகளோடு ஸாந்நித்யம் செய்தருள வேணும்" என்று ப்ரார்த்தித்துக் கொண்டு திருவாராதனம் ஸமர்ப்பிக்கும்படி நியமித்தருளுகிறார். இம்முறையே இப்போது அனேகமாக எல்லா தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தவர்களாலும் பின்பற்றப்படுகிறது.

srivatsam

எம்பெருமானின் திருவாராதனத்தை யாகமென்றும், அவனுக்குக் கண்டருளப் பண்ணிய—அல்லது அமுது செய்யப்பண்ணிய ப்ரஸாதத்தை புஜிப்பது அநுயாகமென்றும் சொல்லப்படுவதால், ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனும் தன் போஜநம் அநுயாகமாவதற்காக வாவது எம்பெருமானுக்கு யாகமாகிற திருவாராதனத்தை ஸமர்ப்பிக்கக்கடவன். திருவாராதனம் ஸமர்ப்பிக்காமல் புஜிப்பவன் "பாகத்தை புஜிப்பதில்லை, பாபத்தை புஜிக்கிறான்" என்று கண்ணன் ஸ்ரீகீதையில் நிந்திக்கிறான்.

ஆக ஸ்வாமி எம்பெருமானார் கத்யத்ரயத்தாலும் நித்யக்ரந்தத்தாலும் ப்ரபன்னர்களான நமக்கு :அநுஷ்டாநக்ரமத்தை சிக்ஷித்துக் கொடுத்திருப்பதால் அதன்படியே நாம் ஒழுக வேண்டுவது மிக முக்யம்.

## 8. ஸ்ரீராமாநுஜனும் ஸ்ரீராமாநுஜரும்

ஸ்ரீஉபயவேதாந்த வித்வான் திருக்கள்ளம் நரஸிம்ஹராகவாசார்யர்,
சிரோமணி, ஆசிரியர் ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா

ஸ்ரீக்ருஷ்ணபகவான் நமக்குச் செய்த பரம உபகாரங்களுள் மிகச் சிறந்தது, வேதமாகிய மாடத்தின்மேல் கீதையாகிய தீபத்தை ஏற்றிவைத்ததுதான். ஸ்ரீபாரதஸாரம் ஸ்ரீபகவத்கீதை. இதற்குப் பலர் வ்யாக்யானம் செய்திருக்கிறார்கள்; நம் இராமாநுஜர் அருளிச் செய்த வ்யாக்யானமே சாலச் சிறந்தது; பகவதபிப்ராயத்துக்கு அநுகுணமானது. "காவிரியுள்ள srivatsam முகந்தபிரான் இடைப் பிள்ளையாகி உரைத்த துரைக்கும் எதிவரனார்" என்றும், "யதிபரிப்ருட: பத்தோநாம தர்சயந் ஜ்ஜஸா நிகமபரிஷந்நேதீயாம்ஸம் நிராமய மாசயம்" என்றும் ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகன் அருளிச் செய்திருப்பது கவனத்துக்குரியது. "மாயனன்றைவர் தெய்வத் தேரினிற் செப்பிய கீதையின் செம்மைப்பொருள் தெரியப், பாரினிற் சொன்ன இராமாநுசனைப் பணியும் நல்லோர்" என்ற திருவரங்கத் தமுதனார் திவ்யஸூக்தியும் கவனிக்கத் தக்கது.

கீதாபாஷ்யத்தை அருளத் தொடங்கிய யதிவரனார், "யத்பதாம்போருஹத்யாந" என்கிற சுலோகத்தினால் முதலில், ஆளவந்தார் என்கிற யாமுநாசார்யரை த்யாநம் செய்து, பிறகு, "ச்ரிய: பதி:" என்று தொடங்கி பகவத் த்யாநம் செய்தருளுகிறார். "குருவந்தநம் ஸ்வாத்யம் பகவத் வந்தநபூர்வகம் | க்ஷீரம் சர்க்கரயாயுக்தம் ஸ்வதேஹ விசேஷத:" (சர்க்கரையுடன் கூடிய பால் மிகவும் இனிப்பதுபோல் ஆசார்ய வந்தநபூர்வகம் செய்யும் பகவத் வந்தநம் மிகவும் போக்யமாகும்) என்கிற க்ரமத்தை அநுஸரித்தது இது. தமக்கு ஸாக்ஷாத் ஆசார்யரான பெரிய நம்பிகளை த்யாநிக்காமல் அவருக்கு ஆசார்யரான ஆளவந்தாரை த்யாநம் செய்ததற்குக் காரணங்கள் பற்பல. (1) ஆளவந்தார் கீதார்த்த ஸங்க்ரஹம் என்கிற அத்யத்புதமான க்ரந்தத்தை இயற்றியுள்ளார். அது பகவதபிப்ராயத்தைப் படம்பிடித்துக் காட்டுவதாக அமைந்துள்ளது. அதைத் திருவுள்ளத்தில் கொண்டுதான் எம்பெருமானார் பாஷ்யம் இயற்றினார் என்பது கீதாபாஷ்யத்தில் ஸ்பஷ்டம். (2) பெரிய நம்பிகள் உடையவருக்கு ஆசார்யராக அமைந்ததே ஸ்ரீ ஆளவந்தாருடைய பரிபூர்ண அநுக்ரஹத்தாலேதான். (3) எம்பெருமானார்க்கு ஆசார்யர்கள் ஐவர், ஸ்ரீ ஆளவந்தாருடைய திருவடித் தாமரைகளை த்யாநம் செய்வதால் ஐந்து ஆசார்யர்களும் த்யாநம் செய்யப் பெற்றவர்களாவர். அந்த ஐவரும் ஸ்ரீ ஆளவந்தார் சிஷ்யர்களாகையால், அவர்களை அந்த மஹானின் திருவடிகள் என்னத் தட்டில்லை. (4) ப்ராசார்யனை த்யாநம் செய்தால், அது ஆசார்யனுக்கும் மிக உகப்பாகத்தானே இருக்கும். இதுபோன்ற பல காரணங்களால்தான் ராமாநுஜர் ஆளவந்தாரை முதலில் த்யாநம் செய்தார். ஏகலவ்யன், த்ரோணாசார்யரிடம் நேரில் வித்யாப்யாஸம் செய்யப் பெறும் பாக்யமில்லாமல், அவரை த்யாநம் செய்தே மஹாமேதாவியாக ஆனதுபோல், அடியேனும் ஸ்ரீ ஆளவந்தாரை த்யாநம் செய்தே அவரது அநுக்ரஹத்தால் கீதாஸாரங்களை உணரப் பெற்றேன் என்பது, "த்யாந" என்கிற சப்தத்தால் ஸூசிதமாகிறது.

ஸ்ரிய:பதியான நாராயணனே பரதேவதை. பகவான் வேறு, ஜீவன் வேறு. ஜீவர்கள் அஸங்க்யேயர், அவர்களுக்குள் பரஸ்பரம் பேதம் ஸ்வாபாவிகம். ப்ரக்ருதி, காலம், சுத்தஸத்வமும் என்று அசேதநம் மூவகைப்பட்டது. ஜீவர்கள் பத்தர், முக்தர், நித்யஸூரிகள் என்ற மூவகையினர். சேதநாசேதநமான ப்ரபஞ்சம் எல்லாம் பகவானுக்குச் சரீரம். அவனைப் பெறுவதற்கான ஸாதநம், அவன் திருவடிகளில் செய்யக்கூடிய நிரந்தர பக்தியே—அதாவது அன்புடன் செய்யும் நிரந்தர த்யாநமே. அர்ச்சிராதி மார்க்கத்தாலே வைகுந்தம் சென்று, அடியார்கள் குழாங்களுடன் கூடியிருந்து ஸ்ரீமந் நாராயணனைப் பரிபூர்ணமாக அநுபவித்து, அவ்வநுபவத்தாலே உண்டான ப்ரீதியின் பரிவாஹமாக ஸகல கைங்கர்யங்களையும் செய்து, அவனை உகப்பிப்பதே பரம புருஷார்த்தம். இதுவே விசிஷ்டாத்துவைத ஸித்தாந்தத்தின் ஸாரம். பகவத் கீதை இதைத்தான் தெளிவிக்கிறது. பகவத் கீதையின் ஸாரமே விசிஷ்டாத்துவைத ஸித்தாந்தம். எம்பெருமானார் தமது பாஷ்யத்தில் இவ்வர்த்தத்தை மிகத் தெளிவாக அருளிச் செய்திருக்கிறார்.

ஸ்ரிய:பதியான நாராயணனே தேவாதிதேவன். அவனே பரதேவதை என்பது "பரம் ப்ரஹ்ம பரம்தாம பவித்ரம் பரமம் பவாந்...," "த்வ மக்ஷரம் பரமம் வேதிதவ்யம் த்வமஸ்ய விச்வஸ்ய பரம் நிதாநம்" இத்யாதிகளான அர்ஜுனனுடைய வாக்யங்களாலும், "மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய!", "யஸ்மாத் க்ஷரமதீதோஹம் அக்ஷராதபி சோத்தம: | அதோஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: ‖ இத்யாதிகளான பகவத் வாக்யங்களாலும் ஸித்தம். "பரதரமானது என்னைவிட மற்றொன்றில்லை" என்றதால் ஒத்தாரையும் மிக்காரையும் இலனாகிய மாமாயன் வாஸுதேவன் என்பது மிகத் தெளிவு. "ஸ்ரீமாந் நாராயணோ தேவ: க்ஷீரார்ணவநிகேதந: | நாகபர்யங்க முத்ஸ்ருஜ்யஹ்யாகதோ மதுராம் புரீம்" என்கிற ப்ரமாணம், நாராயணன்தான் கண்ணனாக அவதரித்தான் என்கிறது. ஏதாவதொரு வகையிலும் ஸ்ரீமந் நாராயணனுக்கு நிகரானவர் இல்லை என்றால், ஸர்வப்ரகாரத்தாலும் நிகரானவர் ஸர்வாத்மநா இல்லை என்பதை விளக்கவும் வேண்டுமோ? நிகரானவரே கிடையாது என்றால் உயர்ந்தவர் உளரோ என்ற கேள்விக்கே இடமில்லை.

பகவானுக்கும் ஜீவனுக்கும் உள்ள பேதமானது ஸ்வாபாவிகம். இது முக்தியிலும் மாறாது. "நத்வேவாஹம் ஜாது நாஸம்" என்கிற ச்லோகத்தில் பகவான் இதைத் தெளிவிக்கிறான். இதற்கு முன் நடந்ததான அநாதியான காலத்தில், நான், நீ (அர்ஜுனன்), பீஷ்மாதிகள் முதலான நாம் அனைவரும் இருந்திருக்கிறோம்; இப்பொழுது இருக்கிறோம் என்பதை விளக்கத் தேவை இல்லை. இதற்குமேல் வரப்போகும் அநந்தமான காலத்திலும், இதேபோல் இருக்கப் போகிறோம் என்று அருளிச் செய்கிறபடியால் இப்பொழுதுபோல் எப்பொழுதும் ஜீவேச்வர பேதமும் ஜீவர்களுக்குள் பரஸ்பர பேதமும் ஸ்வாபாவிகமானது—அதாவது மாறுபடாதது என்று தெரிவிக்கப் பெற்றதாகிறது. இந்த பேதமானது அவித்யா பரிகல்பிதம்—அதாவது ஔபாதிகம் என்று அத்வைதிகள் கூறுகின்றனர். இது தவறு என்பதை பகவானே, "ஜ்ஞாநேந து தத்ஜ்ஞாநம் யேஷாம் நாசித மாத்மந: | தேஷா மாதித்யவத்ஜ்ஞாநம் ப்ரகாசயதி தத்பரம் ‖" என்கிற ச்லோகத்தில் தெளிவு படுத்தியிருக்கிறான். எவர்களுடைய "அஜ்ஞானமானது ஜ்ஞானத்தால் அழிக்கப்படுகிறதோ, அவர்களுடைய ஞானமானது" என்கிறான் பகவான். அஜ்ஞானம் விலகிய பிறகுகூட ஜீவர்களுக்குள் பரஸ்பர பேதம் ஒழியவில்லை என்பது, "தேஷாம்"—"அவர்களுடைய" என்கிற பன்மையால் காட்டப்படுகிறது. "தேஷாம் ஞானம்"—"அவர்களுடைய அறிவு" என்பதால் தர்மியான ஆத்மாவுக்கும் தர்மமான அறிவுக்கும் உள்ளதான ஸ்வாபாவிக பேதம் உணர்த்தப்படுகிறது. "பூமி: ஆப: அநல:" என்கிற ச்லோகத்தில் அஷ்டதாபிந்நா (அபரா) ப்ரக்ருதி: மே—என்னுடையது, அதாவது எனக்கு சேஷபூதம் என்றும், "இதஸ்த்வந்யாம்" என்கிற ச்லோகத்தில் "பராம் ப்ரக்ருதிம் மே வித்தி"—"ஜீவன் என்கிற பரையான ப்ரக்ருதியும் எனக்கு சேஷம்" என்றும் கூறியிருப்பதால், அசேதநமான மூலப்ரக்ருதியும், சேதநனான ஜீவனும் பகவச் சேஷபூதங்கள் என்பது தெளிவிக்கப் பெற்றதாகிறது. "அஹமேவாக்ஷய: கால:" என்பதால் மற்றவைபோல் காலமும் பகவத் விபூதி—அதாவது பகவானுக்கு சேஷம் என்று விளக்கப் பெற்றிருக்கிறது.

srivatsam

"க்ஷேத்ரஜ்ஞஞ்சாபி மாம்வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத!" என்கிற ச்லோகத்தில் க்ஷேத்ரஜ்ஞனை, ஜீவனையும், "அபி" சப்தத்தால் குறிப்பிடப்படுகிற க்ஷேத்ரமாகிற சரீரத்தையும் "நாமக"—அதாவது "மதாத்மகங்களாக" (என்னை ஆத்மாவாகக் கொண்டவைகளாக) —அதாவது எனது சரீரங்களாகத் தெரிந்து கொள் என்று அருளிச் செய்திருப்பதால், விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தின் அஸ்திவாரமான அம்சம் இதனால் விளக்கப் பெற்றுள்ளது என்பது மிகத் தெளிவு. பிறர் சொல்லியிருக்கும் பொருள் ஸர்வாத்மநா அஸங்கதம் என்பதை எம்பெருமானார் மிக விரிவாக அருளியுள்ளார்.

பதினைந்தாம் அத்யாயத்தில் "க்ஷர: ஸர்வாணி பூதாநி கூடஸ்த: அக்ஷர உச்யதே | உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத: ‖ யோ லோகத்ரய மாவிச்ய பிபர்த்யவ்யய ஈச்வர: | என்கிற ச்லோகங்களில் லோகத்யரங்களிலும்—அதாவது ப்ரமாண கம்யங்களான, அசேதநம், அசேதநமான ப்ரக்ருதியின் ஸம்பந்தமுள்ள பத்த ஜீவன், முக்த ஜீவன், என்ற மூன்று தத்வங்களிலும் ஆத்மாவாக ப்ரவேசித்து, அவற்றைத் தாங்கி, அவற்றுக்கு ஸ்வாமியாய் விளங்குகிறுன் புருஷோத்தமனன ஸ்ரீமந் நாராயணன் என்று அருளிச் செய்திருப்பதால், "ஸ்வேதர ஸமஸ்த வஸ்து விலக்ஷணன் பகவான்" என்கிற "விசிஷ்டாத்துவைத ஸித்தாந்தம் நிரூபிக்கப் பெற்றதாகிறது.

ஸந்யாஸம் வேறு, த்யாகம் வேறு என்றனர் சிலர். "நியதஸ்ய து ஸந்யாஸ: கர்மண: நோபபத்யதே | மோஹாத் தஸ்ய பரித்யாக: தாமஸ: பரிகீர்தித: |" இத்யாதி ஸ்தலங்களில் ஸந்யாஸ சப்த ஸ்தானத்தில் த்யாக சப்தத்தையும், த்யாக சப்த ஸ்தானத்தில் ஸந்யாஸ சப்தத்தையும் ப்ரயோகித் திருப்பதைக் கொண்டு—அதாவது ஸ்தாநப்ராமாண்யத்தைக் கொண்டு, ஸந்யாஸம், த்யாகம் இரண்டும் ஒன்றே—அதாவது ஸமாநார்த்தகமே என்று ஸ்ரீராமாநுஜர் மிகத் தெளிவாக அருளிச் செய்துள்ளார்.

srivatsam

கீதையில் மோக்ஷ ஸாதநமான பக்தியோகமே ஸாக்ஷாத்தாக உபதேசிக்கப் பெறுகிறது. அதாவது பரப்ரஹ்மமான ஸ்ரீமந்நாராயணனைப் பெறுவதற்கு ஸாக்ஷாத் உபாயமான பக்தியோகத்தை விளக்குவதிலேயே கீதையின் முக்ய நோக்கு. "சாஸ்த்ர ஸாரார்த்த:" என்று ஸ்ரீஆளவந்தாரும் பக்தியோகமே கீதாஸாரம் என்பதைத் தெளிவுபடுத்தியுள்ளார். "பக்தியோகம் அவதாரயாமாஸ" என்ற கீதாபாஷ்ய திவ்ய ஸூக்தி கவனத்துக்கு உரியது. "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்கிற சரமச்லோகத்தின் முதல் யோஜனையில் ஸாத்விக த்யாகம் சொல்லப் பெறுகிறது என்றும், இரண்டாவது யோஜனையில் அங்கப்ரபத்தி விதிக்கப் பெறுகிறது என்றும் ஸ்ரீஎம்பெருமானார் அருளிச் செய்துள்ளார். ப்ரபத்தியானது ஸகலபலஸாதநம். அது அங்கப்ரபத்தியாய், பக்தி விரோதி பாபத்தைப் போக்கி பக்தியைக் கொடுக்கும் ப்ரகாரத்தை ஸ்ரீ கீதாபாஷ்யத்திலும், ஸ்வதந்த்ரப்ரபத்தியாய் மோக்ஷ விரோதி பாபங்களைப் போக்கி மோக்ஷத்தைக் கொடுக்கும் ப்ரகாரத்தை கத்யத்திலும் ஸ்ரீஎம்பெருமானார் நிரூபித்துள்ளார் என்பது நம் முன்னோர்களது திருவுள்ளம்.

அநிஷ்டங்களான ஸகல பாபங்களும் தொலைந்தால், இஷ்டமான பகவத் ப்ராப்தியும், தத்பரிவாஹங்களான கைங்கர்யங்களும் தாமே ஸித்திக்கும் என்பது திண்ணம். அர்ச்சிராதி மார்க்கத்தால் சென்றவன் மறுபடியும் ஸம்ஸாரியாகத் திரும்பமாட்டான் என்பது எட்டாம் அத்தியாயத்தில் ஸித்தம். பலராமாநுஜனை ஸ்ரீகீதாசார்யனின் திருவுள்ளக் கருத்தை நம் ராமாநுஜரைத் தவிரவேறு யார் உணரவல்லார்?

திருவல்லிக்கேணி ஸ்ரீஉடையவர் கைங்கர்ய ஸபையினர் மிகச் சிறந்த கைங்கர்யங்களைச் செய்துவருகின்றனர். அவற்றுள் மிக முக்யமானது இம்மலர் வெளியீடு. இந்த சபையினர் இம் மாதிரியான கைங்கர்யங்களில் ஊக்கத்துடன் ஊன்றி விசிஷ்டாத்துவைத ஸித்தாந்தத்தைப் பெருக்குவார்களாக.

47

# 9. யதீந்த்ரரும் - யதீந்த்ரப்ரவணரும்

[ஸ்ரீ உ. வே. மஹாமஹோபாத்யாய ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி]

மணவாள மாமுனிகளுக்கு யதிவரபுநரவதார பூதரென்னும் ப்ரஸித்தி தொன்று தொட்டு விளங்கி வருகின்றது. எம்பெருமானாரே மீண்டும் மணவாள மாமுனிகளாகத் திருவவதரித்தருளின ரென்றபடி. இதற்குரிய உபபத்திகள் பல வுள. அவற்றை முன்னம் ச்லோக ரூபேண விஜ்ஞாபித்துப் பின்னை வியாக்கியானமிட்டு விளக்குகின்றேன்.

(ச்லோ) வ்யாக்க்யாநக்ரந்ததாநாத் பரிவதநகதாகந்தவைதேசிகத்வாத்
நாநாசாஸ்த்ரார்த்தப்ருந்தப்ரசுரபணிதிபி: ப்ராஜ்ஞஹ்ருத்ரஞ்ஜகத்வாத் |
பூர்வாசார்யோக்திராகாத் சடரிபுமுநிராட்ஸூக்திஸம்வர்த்தகத்வாத்
பீடாதீசப்ரதிஷ்டாபநக்ருதிகரணாத் திவ்யதேசாபிமாநாத் ||

பணிராஜாவதாரத்வாத் ஸ்ரீரங்கஸ்ரீவிவர்த்தநாத் |
யதீந்த்ரப்ரவணஸ் ஸாக்ஷாத் யதீந்த்ரோ பாஷ்யக்ருத் த்ருவம் ||

இதற்கு ஸம்க்ஷேபமான வியாக்கியானம் காண்மின்.

1. வ்யாக்க்யாநக்ரந்த தாநாத். பெரும்பாலும் வியாக்கியானங்களருளிச் செய்வதிலேயே ஊக்கம் எம்பெருமானாருக்கும் மாமுனிகளுக்குமொக்கும்; ஸ்ரீபாஷ்யம், வேதாந்த தீபஸாரங்கள், கீதாபாஷ்யம் என்னுமிவை வியாக்கியான க்ரந்தங்களேயன்றோ. மாமுனிகளின் வியாக்கியான க்ரந்தங்களும் ப்ரஸித்தங்கள். வேதார்த்த ஸங்க்ரஹம், கத்யத்ரயம்—என்று சில மூலக்ரந்தங்களும் ஸ்வாமி ஸாதித்தது போலே மாமுனிகளும் யதிராஜ விம்சதி, உபதேச ரத்தினமாலை முதலிய மூலக்ரந்தங்களுமருளிச் செய்தது ப்ரஸித்தம்.

Srivatsam

2. பரிவதநகதாகந்த வைதேசிகத்வாத். பரிவதநமாவது பரீவாதம்; நிந்தையென்றபடி. அஸ்தாநே நிந்தாபரிஹாஸங்களை நிரப்பி நூல்களெழுதுவாருமுளரே; அங்ஙனம் நிந்தையையோ பரிஹாஸத்தையோ அணுவளவும் புகவிடாமல் பரமபவித்திர ஸ்ரீஸூக்திகளை யருளுந் தன்மை ஸ்வாமிக்கும் மாமுனிகளுக்குமே யொக்கும்.

3. நாநா சாஸ்த்ரார்த்த ப்ருந்தப்ரசுரபணிதிபி: ப்ராஜ்ஞஹ்ருத் ரஞ்ஜகத்வாத்— தொட்ட தொட்ட விடமெங்கும் பலபல சாஸ்த்ரார்த்தத் திரள்களே மலிந்த ஸ்ரீஸூக்திகளினாலே பண்டிதர்களின் உள்ளத்தை உகப்பிக்குந் தன்மை ஸ்வாமிக்கும் மாமுனிகளுக்குமே யொக்கும்.

4. பூர்வாசார்யோக்திராகாத். எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யம் தொடங்கும்போதே "பகவத் போதாயந க்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு; தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே" என்றருளிச் செய்து பூர்வாசார்ய ஸூக்திகளில் தமக்குள்ள அபிநிவேசாதிசயத்தை விளங்கக் காட்டியருளினர். மாமுனிகளும் *முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டு *முன்னவராம் நங்குரவர் மொழிகள் உள்ளப் பெற்றோம் முழுதும் நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம் இத்யாதிகளாலே தமக்குள்ள பூர்வாசார்ய ஸூக்தி பஹுமானத்தைக் காட்டியருளினதோடு நில்லாமல், தம்முடைய வியாக்கியான க்ரந்தங்களைப் பூர்வாசார்ய ஸூக்திமயமாகவே அவதரிப்பித்தருளினர்.

5. சடரிபுமுநிராட்ஸூக்தி ஸம்வர்த்தகத்வாத். ஸ்வாமியின் வாழி திருநாமத்திலே மாறனுரை செய்த தமிழ்மறை வளர்த்தோன் வாழியே என்று ஓதா நின்றோம். *ஆய்ந்த பெருஞ் சீரார் சடகோபன் செந்தமிழ் வேதந்தரிக்கும் பேராத வுள்ளம் பெற—ஏய்ந்த பெரு

...த்தி யிராமானுச முனிவன் வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன் என்று அக்காலத்து ...ஷ்யவர்க்கங்கள் பணிக்கக் காணுநின்றோம். இதுபற்றி மாமுனிகள் திறத்திலே சொல்ல ...வேணுமோ? *சேற்றுக் கமலவயல் சூழரங்கர் தம் சீர்தழைப்பப் போற்றிதொழு ...நல்ல வந்தணர்வாழ விப்பூதலத்தே, மாற்றற்ற செம்பொன் மணவாளமாமுனி வந்திலனேல், ...ற்றில் கரைத்த புளியல்லவோ தமிழாரணமே என்ற வொரு பாசுரம் போதுமே.

6. பீடாதீசப்ரதிஷ்டாபநக்ருதி கரஞ்த். ஸ்வாமி எழுபத்து நான்கு ஸிம்ஹாஸநாதி ...திகளை ஸ்தாபித்தருளி அவர்கள் வழியாக தர்சந நிர்வாஹம் செய்தருள்வது ஸுப்ரஸித்தம். ...லக்ஷ்மீநாதாக்ய ஸிந்தெள சடரிபுஜலதி:* இத்யாதி ச்லோக ரத்னத்தினுலும் இது ...ஸுவ்யக்தம். மாமுனிகளும் "திரமாக திக்கஜகளிட்டருளும் பெருமாள்" என்கிறபடியே ...அஷ்ட திக்கஜாசாரியர்களை ஸ்தாபித்தருளி அவர்கள் வழியாக தர்சந நிர்வாஹம் செய்தருள்வது நாடு நகரமும் நன்கறிந்தது.

7. திவ்யதேசாபிமாநாத். (இதற்கு இரண்டு வகையாகப் பொருள்) *மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடு நாள் என்றும், ஸ்ரீரங்கம் கரிசைல மஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரி ஸிம்ஹாசலௌ...ஸ்ரீரங்கேசஜயத்வஜோ விஜயதே ராமாநுஜோயம் முநி: என்றும் சொல்லுகிறபடியே ஸ்வாமி ஸகல திவ்ய தேசங்களிலும் அபிமானம் காட்டியருளினவர், மாமுனிகளும் *அடைவுடனே திருப்பதிகள் நடந்த வேர்வையாறவோ என்கிறபடியே, திவ்ய தேசயாத்திரைகள் செய்தருளி அவற்றில் அபிமானம் காட்டியருளினபடி ஸுப்ரஸித்தம். (அதவா) திவ்ய தேசாபிமாநமாவது—திவ்யதேச ச்ரேணியில் சேராதிருந்த ஸ்தலத்தை திவ்ய தேசமாக அபிமானித்தல். ஸ்வாமி திருநாராயணபுரத்திற்கு *ஒரு நாயகமாய் என்கிற திருவாய்மொழியை ஸமர்ப்பித்து அத் தலத்தை திவ்யதேசமாக அபிமாநித்தருளினதும், மாமுனிகள் ராஜமன்னார் ஸன்னிதிக்கு *தீர்ப்பாரையாமினி என்கிற திருவாய்மொழியை ஸமர்ப்பித்து அப்பதியை திவ்யதேசமாக அபிமானித் தருளினதும் அநுஸந்தேயம். [*வண்துவராபதிமன்னனை.]

8. பணிராஜாவதாரத்வாத். ஸ்வாமி சேஷாவதாரமென்பது ஸுப்ரஸித்தம். கருட வாஹன பண்டிதர் பணித்த திவ்யஸூரி சரிதத்திலும், வடுகநம்பி பணித்த யதிராஜ வைபவத்திலும் மற்றும் பல பிரபந்தங்களிலும் இது விசதம். மாமுனிகள், வரவரமுநி சதகத்திலே ...துக்தோதந்வத்தவளமதுரம் சுத்தஸத்வைகரூபம் ரூபம் யஸ்ய ஸ்புடயதிதராம் யம் பணீந்த் ...ராவதாரம்* என்றருளிச்செய்தபடியும் மற்றும் சரித்ரப்ரஸித்தியின்படியும் திருவனந்தாழ்வான் திருவவதாரமென்பது ஸுவ்யக்தம்.

9. ஸ்ரீரங்க ஸ்ரீவிவர்த்தநாத். ஸ்வாமி* தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே என்று எண்டிசையும் வாழ்த்துகிறபடியும் கோயிலொழுகு முதலான ...ற்றில் காண்கிற இதிஹாஸ விஸ்தாரப்படியும் ஸ்ரீரங்கஸ்ரீயை வளர்த்தருளினவர் என்பது ...ர்விவாதம். மாமுனிகள் திறத்து மிங்ஙனமேயன்றோ? "அரங்கநகர்வாழ இன்னுமொரு ...நூற்றாண்டிரும்" என்றன்றோ நிச்சலும் வாழ்த்துகின்றதுலகம்.

ஆக இத்தன்மைகளாலே, யதீந்த்ரப்ரவணஸ் ஸாக்ஷாத் யதீந்த்ரோ பாஷ்ய க்ருத் த்ருவம். —யதீந்த்ரப்ரவணரென்று திருநாமம் பெற்ற மணவாளமாமுனிகள் ஸாக்ஷாத் எதிராசரே ...யென்னத் தட்டில்லையென்றதாயிற்று. இங்ஙனே நிர்வஹிக்கக் கூடிய உபபத்திகள் மற்றும் பல வுள. அவற்றை அடியேனுடைய பல நூல்களிற் கண்டுகொள்வது.

# 10. ஸ்ரீவேதார்த்த ஸங்க்ரஹம்

உபய வேதாந்த வித்வான் திருமலை நல்லான் ராமகிருஷ்ணய்யங்கார் ஸ்வாமி

அமுதம் பெறற்கரிது. அதனைப் பெற வானவரும் தானவரும் முயன்றனர். முடி அளவில் சேர்ந்து கடல் கடைந்தனர். கண்ணன் கையால் மலக்குண்ட பின்னரே அமுதம் சுரந்தது கடல். தானவர்கள் அவ்வமுதைக் கண்டனரே யன்றி உட்கொண்டவரல்லர். வானவரும் கண்ணன் பெண்ணாகி அமுதூட்ட உண்டனர். ஒருகால் உண்டு இறப்பு நீங்கினர் வானவர்.

[ப்ரஹ்மஸூத்ராம்ருதம்]

பின்னர், அக் கண்ணனே க்ருஷ்ணத்வைபாயநர் என்னும் பேரில் வேதாந்தமென்னும் கடலைக் கடைந்து ப்ரஹ்ம ஸூத்ரமென்னும் அமுதமெடுத்து நிலத்தேவரை ஊட்டினும் விபுதர்கள் (தேவர்கள், புலவர்கள்) பெருமுயற்சி செய்யினும் பெறலரிய அமுதத்தை க்ருஷ்ணத்வைபாயநர்க்கே சுரந்தது வேதாந்த விரிகடல். ஏனைய புலவர்கள் அவ்வமுதை மேலெழக் கண்டனரே யன்றி உட்கொண்டனரல்லர். போதாயநர் போன்ற பக்தி வாய்ந்த புலவர்களையே தாயாய் அவ்வமுதை ஊட்டினர் க்ருஷ்ணத்வைபாயநர் அவர்கள் பலரும் அவ்வமுதை உண்டு பிறப்பிறப்பு நீங்கினவர்கள் ஆயினர்.

அமிருதம் கொணர்தல்

முன்னர்ச் சொன்ன அமுதம் ஒருகாற் பருகுவது உடம்புக்குப் பூண்கட்டுவது. பின் சொன்னதோ பலகால் மண்டிப் பருகுவது உயிருக்கு உறுதி அளிப்பது. முந்திய அமுதம் தமக்கு பயனின்றிப் பிறர்க்கும் பயன் பெறுதவாறு கட்டும் காவலுமாய்த் தேவர்களாற் பாதுகாக்கப் பட்டு நமக்கு எட்டாத நிலையில் உள்ளது. பிந்திய அமுதமும் பக்தி வாய்ப்பின்றித் தங்கள் புத்தி வாய்ப்பினாலேயே பெற முயன்றிடலாற் பல புலவர்கள் மதி விகற்பாற் பிணங்கி நம்மை பருக ஒண்ணாதபடி செய்திடலால் நமக்கு எட்டாத நிலையிலுள்ளது. வ்ருத்தி (உரை) காரரான போதாயநர் போன்றவர்கள் உட்கொண்டு இவ்வமுதைப் பேணி வந்தாலும் பிற்பட்ட புலவர்களின் மதி விகற்பால் நாம் அதனை அணுக முடியாமற் போய்விட்டதே!

தன் தாயின் அடிமைத் தளை நீங்குவதற்காகக் கருடன் முந்திய அமுதைக் கொணர்ந்தார். தம் குழந்தைகளாகிய நமது அடிமைத் தளை [கர்மத்திற்கு வசப்பட்டிருத்தல்] நீங்குவதற்கு ஸ்ரீ பாஷ்யகாரர் பிந்திய அமுதைக் கொணர்ந்தார். அமுதம் கொணர்ந்த கருடன் த்விஜேந்திரன்; ஸ்ரீ பாஷ்யகாரரும் த்விஜேந்த்ரர் (த்விஜ=பறவை; அந்தணன்) இவ்விடத்தில்

"ஸுதேயம் ஸூத்ர காரேண ஹரிணேவ ஸமுத்ருதா |
ஆநீதா பாஷ்யகாரேண த்விஜேந்த்ரேணேதிசாசய: | | "

என்னும் தத்துவடீகா சுலோகம் அநுஸந்திக்கத் தக்கது.

கருடன் அமிர்தத்தைக் காட்டினனே யன்றி, ஊட்டினனல்லன். "ஸ்நாதா மந்த்ர ஸம்யுக்தா: தத: ப்ராசநீத பந்நகா:" என்க் குளித்துக் குடிக்கும்படி நாகர்களை நோக்கிச் சொல்லி அவர்களை ஏமாற்றினன் கருடன். குளித்து வருவதற்கு முன் அவ்வமுதம் இந்திரனால் எடுத்துச் செல்லப்பட்டது. ஸ்ரீ பாஷ்யகாரரோ தூய மனத்தராய்க் குடிமின்; நாடோறும் குடிமின் என வஞ்சனையில்லாமல் கூறி ஊட்டுகிறார். நெஞ்சில் நஞ்சுடையார் அமுதைப் பருக அருகர் அற்றவர், நல்ல நெஞ்சையுடையவரே அமுதைப் பருகத் தக்கவர் என்றபடி.

## ஸ்ரீ பாஷ்யகாரர் திரட்டிய அமிருதம்

வேதாந்தக் கடலிலிருந்து அதன் பொருளாம் அமுதைத் தாமே திரட்டி நல்ல மனம் படைத்தார்க்கு அதன் இனிமை காட்டி ருசி கண்ட அன்னாரை ப்ரஹ்மஸூத்ரவமுதை நாடோறும் பருகும்படி கூறுகிறார் ஸ்ரீபாஷ்யகாரர். தொடக்கத்திலே ஸ்ரீபாஷ்யகாரர் ருசிகாட்டத் தாமே திரட்டி எடுத்த அமுதமே "வேதார்த்த ஸங்க்ரஹம்" எனப்படுவது.

வேதார்த்த ஸங்க்ரஹஸுதாம் வேதாந்தாப்தேர்ய ஆஹரத் |
ராமாநுஜாய முநயே தஸ்மை பகவதே நம: |

என்று சுருதப்ரகாசிகாசார்யர் வேதார்த்த ஸங்க்ரஹ வ்யாக்யாநத்தில் அருளிச் செய்திருப்பது இங்கு நினைக்கத்தக்கது. நல்லமனம் படைத்தார்க்காகவே வேதார்த்த ஸங்க்ரஹம் அருளிச் செய்யப்பட்டது என்பதை,

ஸாரா ஸார விவேகஜ்ஞா: கரீயாம்ஸோ விமத்ஸரா: |
ப்ரமாண தந்த்ரா: ஸந்தீதி க்ருதோ வேதார்த்த ஸங்க்ரஹ: |

என்னும் சுலோகத்தால் அறியலாம். வேதார்த்த ஸங்க்ரஹத்தில் வேதாந்தப் பொருளாம் அமுதத்தின் இனிமையை நுகர்ந்தவரே ஸ்ரீபாஷ்யத்தில் அமுதை நாடோறும் பருகவல்லவர் ஆகின்றதாயிற்று.

வேதார்த்த ஸங்க்ரஹமே எம்பெருமானார் அருளிய க்ரந்தங்களுள் முதலாவதாகக் கருதப்படுகிறது.

srivatsam

### திரண்ட பொருள்

தொன்மை வாய்ந்த நம் விசிஷ்டாத்வைத மதம் வேதத்தை ஆதாரமாகக் கொண்டது. வேதத்தின் பொருள்களைத் திரட்டிக் காணும்போது உருவாவது நம் மதமே. அப்பணியையே மேற்கொண்டுள்ளது வேதார்த்தஸங்க்ரஹம். விருப்பு, வெறுப்பின்றி வேதப் பொருள்களை ஆராய்ந்து முடிவு கட்டுவதை நாம் இவ்வேதார்த்தஸங்க்ரஹத்திலே காணலாம்.

இனி, வேதார்த்த ஸங்க்ரஹத்தில் கூறப்படும் பொருள்களைக் கவனிப்போம். சேதநனால் வர்ணாச்ரம தர்மத்தை அங்கமாகக் கொண்ட பக்தியினாலோ ப்ரபத்தியினாலோ பெறத்தக்கவன் உபய விபூதியிலுள்ள ஸர்வேச்வரனே என்பது வேதார்த்தஸங்க்ரஹத்தின் திரண்ட பொருளாகும். அந்த ஸர்வேச்வரன் உபய விபூதி நாயகன், உபயலிங்கமுள்ளவன். உபயவிபூதி என்பது ப்ராக்ருத உலகங்களும் அப்ராக்ருதமான வைகுண்ட உலகமும் ஆகும். உபயலிங்கம் என்பது தீயதன்மைகளுக்கு முரண்பட்டதாயும், நல்ல தன்மைகளுக்கு ஒரே கொள்கலமாகவும் இருப்பது. சேதந அசேதந மயமான உலகிற்குச் சேஷியாயிருப்பவனுமனே [சேஷியாயிருத்தலாவது எல்லாப் பொருளையும் தன் விருப்பப்படி நடத்துவதற்கு உரியனாதல்] எல்லாப் பொருள்களிலும் உள்ளும் புறமும் வியாபித்து நிற்றலால் அவன் விஷ்ணு என்றும் பெயர் பூண்டவன். உட்புக்கு வியாபித்து நடத்தலின் உலகனைத்திற்கும் ஆத்மாவாக இருப்பவன் அவன் உட்புக்கு நியமிக்கும் பொருள் ஆத்மா என்றும், அங்ஙன் நியமிக்கப்படும் பொருள் சரீரம் என்றும் சொல்லப்படுதலின் உலகமனைத்தையும் தனக்குச் சரீரமாகக் கொண்டவன். கொள்ளவே சரீரமும் ஆத்மாவும் என்றும் பிரிந்து நில்லாமை பற்றி ஒன்றாய் உரைக்கப்படுவதுபோல, உலகமும், ஈச்வரனும் ஒன்றாக வேதங்களில் உரைக்கப்படுகின்றன. சரீரமும் ஆத்மாவும் உண்மையில் வேறுபட்ட பொருள்களாதலின் வெவ்வேறாகவும் வேதங்களில் ஓதப்படுகின்றன. இங்ஙனம் பேதச்ருதியும் அபேதச்ருதியும் ஒன்றோடொன்று முரண்படாமல் அந்த ஸர்வேச்வரனை அந்தர்யாமியான ஆத்மாவாக உணர்த்திப் பொருந்த விடுகின்றன சில வேத வாக்யங்கள். அவை கடகச்ருதி எனப்படுகின்றன,

இனி, உபய லிங்கஞும் அஃதாவது தீக்குணங்களற்று நற்குணங்களுடையனும் இருந்து பற்றி அவன் சேதநர் பெறவேண்டிய பெரும் பேருகின்ருன். இதனுல் குணமற்றவனுக குணமுள்ளவஞகவும் ஈசுவரனைக் கூறும் வேதவாக்யங்கள் முரண்பாடு தவிர்வது காணலாம். குணமற்றமை தீக்குணங்கள் இல்லாமைபற்றி என்றும், குணமுள்ளமை நற்குணங்கள் உடைமை பற்றி என்றும் பகுத்துணர்க. ஆக நமக்கு பேத, அபேதச்ருதிகளும் சகுண, நிர்குணச்ருதிகளும் எல்லாமே பொருந்தி வேதம் முழுதும் ப்ரமாணமாகின்றன.

இவை அனைத்தும், மற்றும் பிறவும் உய்த்துணரும்படி வேதார்த்தஸங்க்ரஹத்தில் மு மங்கள சுலோகம் அமைந்துள்ளது. சிருதப்ரகாசிகாசார்யருடைய தாத்பர்யதீபிகை என்னு வ்யாக்யாநத்தில் அதனைக் கண்டுகளிக்க.

நல்ல குணம் வாய்ந்திருப்பது மாதிரி நல்ல திருமேனியும் எம்பெருமானுக்கு உண்டு. ந திருமேனியாவது அப்ராக்ருதமான திவ்ய மங்கள விக்ரஹம் "மாசூணச்சுடருடம்பு." அ நித்யேச்சையினல் எடுத்துக் கொள்ளப்பட்ட நித்யதிருமேனியாய் ஸ்வருபத்திலடங்கி அத நிருபகமாய் உள்ளதென்று வாயார வருணிக்கப்படுகிறது. அந்த திவ்யமங்கள விக்ரஹத்துட ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்ட பரமஸ்தானத்தில் (வைகுண்டலோகத்தில்) எழுந்தருளியிருக்கு பகவானே நமக்கு ப்ராப்யனுகின்ருன் என்கிறது வேதார்த்தஸங்க்ரஹம்.

நேர்மையுடன் செய்யப் பெறும் இவ்வர்த்த நிர்ணயத்தை ஏற்றுக் கொள்ளாது பேதச் தியையும், அபேதச்ருதியையும் முரண்படாது பொருந்தவிடமாட்டாத மதங்களின் கொள்கை கூறப்பட்டு அவைகள் கண்டிக்கப்படுகின்றன. இந்த க்ரந்தத்திலே சங்கரர், பாஸ்கர் யாதவப்ரகாசர் மதங்கள் முறையே கண்டிக்கப்படுகின்றன. இவ்விஷயத்தில் இந்த கிரந்தத்தி கையாளப்படும் யுக்திமுதலியன ஸ்ரீபாஷ்யத்தைப்பார்க்கிலும் நமக்கு மிகவும் தெளி பிறப்பிப்பனவாய் உள்ளன.

srivatsam

## சங்கர மதமும் கண்டனமும்

நிர்விசேஷமான [எந்தவிதத் தன்மையுமற்ற] ஞானமே ப்ரஹ்மம்—அது ஒன்றே சத் தோற்றும் மற்றவை அனைத்தும் பொய்யே. ஸத்வித்யையில் [ஸத்ஏவ] என்று வேற்றின இல்லாமையாகிற விஜாதிய பேதாபாவமும் [''ஏகமேவ''] என்று தன்னினம் இல்லாமையாகி ஸஜாதிய பேதாபாவமும் ''அத்வீதியம் என்று தனக்குள்ளும் குணம், குணி என்கின்ற பே பாடில்லாமை யாகிற ஸ்வகதபேதா பாவமும் சொல்லப்படுதலின் ப்ரஹமம் நிர்விசே மாகிறது. அந்த ப்ரஹ்மம் தத்தவமஸி என்று ஜீவனையும், நிர்விசேஷ ப்ரஹ்மத்தை ஒன்று படுத்திக் கூறுதலால் அஜ்ஞானத்தால் மறைக்கப்பட்டு ஜீவனுகி, பந்தத்திற்கு வசப் வதும், ஒன்றுபடுவதால் அது விடுதலை பெறுவதும் தெரிகின்றன. இவ்வனம் ப்ரஹ்மமே, ப படுவதும், விடுதலை பெறுவதும் சாஸ்த்ரத்தாலேயே தெரிகிறது. ஆனுல் ப்ரஹ்மத்தைத் த மற்றவை எல்லாம் பொய்யாகவே கொள்ள வேண்டியிருத்ததால் சாஸ்த்ரமும் பொய் என்கின்றனர்.

இந்த மதம் வேதத்திற்கு ஒவ்வாதது; யுக்திக்கும் பொருந்தாதது என்று நிருபிக்கிறத கிரந்தம். [தத்த்வம் அஸி'] என்பது ஜீவனை நிர்விசேஷ ப்ரஹ்மமாகக் கூறவில்லை. என்னும் சொல் மேற்சொன்ன தன்மைகளுடன் கூடின பொருளைத்தான் குறிப்பிடும். மேற் மத்தில் (தத் ஐக்ஷத) என்று கூறப்பட்ட ஸங்கல்பம் முதலியவைகளை உடைய வி பொருளைத்தான் தத் என்னும் சொல் சுட்டும். இனி, ஒன்றை அறிதலினுல் எல்லாம் அ படுவதை மண் த்ருஷ்டாந்தத்தினுல் காட்டிக் காரணப் பொருளையே ஸத்யமாகவும் கா பொருள்கள் அனைத்தையும் பொய்யாகவும் சொல்லுதலின் ''ஐக்ஷத'' என்பதற்கும், முன் முதன் முதலில் ''ஸதேவ'' என்று நிர்விசேஷமாய்த் தொடங்கின ப்ரஹ்மத்தையே தத் என்



திண்டிவனந்தினருகில் எண்ணாயிரம் என்ற ஸ்தலத்தில்
ஸ்ரீ உடையவர்



ஸ்ரீ அருளாளப் பெருமாள் எம்பெருமானர்,
ஸ்ரீ பாண்டவதூதர் ஸந்நிதி, காஞ்சீபுரம்

srivatsam



திருப்புட்குழி: நாச்சியார் ஸந்நிதி மண்டபத்தில் ஸ்ரீ யாதவ ப்ரகாசரிடம்
ஸ்ரீ உடையவர் வேதாந்தம் பயின்ற இடம்



திருப்புட்குழி, மண்டப சிற்பங்கள்.
யாதவ ப்ரகாசரும், இளையாழ்வாரும்





(திருநாராயணபுரம் : ஸ்ரீ செல்லப் பிள்ளை. ராஜமுடி ஸேவை)

ஸ்ரீ உடையவர் அநுஸந்திக்கும் சலோகம் :

அஜ்ஞாந. ஜன்ம க்ருஹம் ஆத்மகுணைர் விஹீநம்
ஆஜ்ஞாதிலங்கநபரம் யதுசைல நாத ! ।
மித்யா ப்ரபந்நமபி மாம் அவலோகயத்வம்
லக்ஷ்மீம் க்ஷமாம பிருூந் அவலோக்ய பூர்வாந் ॥

சொல் சுட்டுகிறது என்ன ஒண்ணுது. காரியப் பொருள் அனைத்தும் பொய்யாயிருப்பின் அவைகள் அறியப் பட்டவைகளாகக் கூறுவது பொருந்தாது. இருக்கும் பொருள்களைத் தானே அறிய இய லும். இல்லாத பொருள்களை அறிவது எங்ஙனம்? ஆக இந்த மதம் வேதத்துக்கு ஒவ்வாத தாயிற்று. இனி யுக்திக்கும் பொருந்தாமையும் இந்த க்ரந்தம் காட்டுகிறது. ஞான ரூபமான ப்ரஹ்மம் அஜ்ஞானத்தினால் மறைக்கப்பட்டுப் பல பேதங்களைப் பார்த்து பந்தப்படுவதாகச் சொல்வது பொருந்தாது. ஸ்வயம்ப்ரகாசமாய் ப்ரஹ்மம் இருக்கும்போது அஜ்ஞானத்தால் அது எப்படி மறைக்கப்படும்? இருளினால் ஒளி மறைக்கப்படுமா? அப்படி மறைக்கப்படுவதாகச் சொன்னால் ஒளியே அங்கு இல்லை என்பதுதானே பொருளாகும்? நித்யமான ஞானப்ரகாசம் இல்லாமல் போகலாமா? ஞானம் மறைக்கப்படுகிறது என்பது ஞானம் உண்டாகாமல் தடுக்கப்படுகிறது என்னும் பொருளிலா? அல்லது இருக்கும் ஞானம் நாசம் அடைகிறது என்னும் பொருளினா? ஞானம் நித்யமாதலின் உண்டாகாமல் தடுப்பது முடியாத காரியம். ஆகவே ஞான ஸ்வரூபமான ப்ரஹ்மத்தினுடைய நாசம்தான் ஒப்புக் கொள்ள வேண்டியதாக வரும் என்று அற்புதமாக யுக்திக்குப் பொருந்தாமை உபபாதிக்கப்படுகிறது. இது நிரோதன அநுபபத்தி. இதுபோல பல அநுபபத்திகள் இங்கு உரைக்கப்படுகின்றன.

ப்ரமாணமான சாஸ்த்ரமே பொய்யாகக் கொள்ளப்பட்டால் அது கூறுவதை ஏற்பது எங்ஙனம்? தங்கள் மதத்திற்கு ப்ரமாணமே இல்லாதபோது வாதம் செய்வதற்கே தகுதியில்லை என்கிறார் ஸ்வாமி.

## பாஸ்கர மதமும் கண்டநமும்

இவர்களும் யாதவப்ரகாச மதத்தவரும் தாங்கள் கூறுவதற்கு ஆதாரமாக சாஸ்த்ரத்தை ப்ரமாணமாக ஒப்புக்கொள்கின்றனர். இவர்களால் ப்ரபஞ்சமும் பரமார்த்தமாக ஒப்புக் கொள்ளப்படுகிறது. ப்ரமாணங்களில் பரப்ரஹ்மம் ஸகுணமாகக் கூறப்பட்டிருப்பதை மறுக்க ஒண்ணாமையாலே நிர்விசேஷம் என்னாது ஸகுணமாக ஒப்புக்கொண்டுள்ளார்கள். இயல்பினில் அபஹதபாப்மத்வம் முதலிய குணங்களுடையதாக அந்த ப்ரஹ்மம் இருப்பினும் ஜீவப்ரஹ்ம ஐக்யத்தை ப்ரமாணம் உபதேசிப்பது பொருந்துகைக்காக தேவமநுஷ்யாதி உபாதி ஸம்பந்தத்தி னால் அதற்கு ஜீவனாய் இருக்கும் நிலைமை ஒப்புக்கொள்ள வேண்டியதாய் இருக்கிறது. தேவன், மநுஷ்யன் முதலிய யாதேனும் ஓர் உபாதியினால் ப்ரஹ்மம் ஜீவனாகி பத்த தசையை அடைகிறது. பின்னர் முக்த தசையையும் அடைகிறது. இவ்விதம் ப்ரஹ்மமே உபாதியினால் ஜீவ தசையை அடைவதால் ஜீவப்ரஹ்ம பேதம் இயல்பானதன்று, ஔபாதிகம் என்கின்றார்கள். ஜீவப்ரஹ்ம அபேதமே இயல்பான தென்பது அவர்களுடைய கருத்து. அசேதநப் பொருள்களாகவும் அத்தகைய ப்ரஹ்மமே பரிணமிப்பதாகவும் அவர்கள் கூறுகிறார்கள். ப்ரஹ்மம் அசேதநப் பொருளாகப் பரிணமித்தால் விகார தோஷம் வாராதோ என்னில் ஜீவனாவதற்கு உபாதி என்று இருப்பதுபோல அசேதநமாவதற்கு நாம் வேறோர் உபாதியைக் கற்பித்தோமானால் அந்த உபாதி ரூபமாக ப்ரஹ்மம் ஆவதற்கு வேறோர் உபாதி கற்பிக்க வேண்டி வரும். இங்ஙன் ஒரு முடிவு ஏற்படாது அநவஸ்தை ஏற்படும். ஆகப் பரிணாமத்திற்கு ஆஸ்பதமே ப்ரஹ்மம் என்கின்றனர். அசேதநப் பொருளுக்கும் ப்ரஹ்மத்திற்கும் பேதம், அபேதம் இரண்டும் இயல்பானவை என்பது அவர்கள் கருத்து.

உபாதியினால் ஜீவனாக ப்ரஹ்மமே ஆதலின் உபாதி ஸம்பந்தத்தால் வந்த ஜீவனிடமுள்ள தோஷங்கள் அனைத்தும் ப்ரஹ்மத்தையே சாரும். சாரவே அபஹதபாப்மத்வம் சொல்லுகின்ற ச்ருதி முரண்படும். அசேதநமாகப் பரிணமிப்பதால் நிர்விகார சுருதியும் முரண்படும் என்று இம்மதம் தூஷிக்கப்படுகிறது.

## யாதவப்ரகாச மதமும் கண்டநமும்

மோக்ஷத்தில் அபேதம் சொல்லப்படுவதால் ஜீவப்ரஹ்ம அபேதம் ஸ்வாபாவிகம் என்றார் பாஸ்கரர். யாதவப்ரகாசரோ முக்தியில் பேதமும் கூறப்படுவதால் பேத, அபேதங்கள்

இரண்டுமே அசித், ப்ரஹ்மங்களுக்குப் போல ஸ்வாபாவிகங்கள் என்கிறார். இந்த மதத்தில் சி அசித், ஈச்வரன் என்னும் இம் மூன்றும் பரப்ரஹ்மத்தினுடைய அம்சங்களாகக் கொள்ளப் படுகின்றன. ப்ரஹ்மம், அம்சம், மண்ணினுடைய அம்சங்களாக அமைந்த குடம் வா முதலியவை தங்கள் தங்கள் தனிப்பட்ட தன்மைகளுடன் ஒன்றிற்கொன்று குண தோக்ஷ களுடைய கலப்பில்லாமல் காணப்படுவதுபோல ப்ரஹ்மத்தினுடைய அம்சங்களாக அமைந் ஜீவனும் ஈச்வரனும் முறையே தங்களுடைய தனித்தன்மையான அஜ்ஞனாயிருந்தது. ஈசுவர ஸர்வஜ்ஞனாயிருந்தது போன்றவைகளுடன் குண தோக்ஷங்கள் கலக்காமலிருக்கின்றனர். இருக்கவே ஜீவனிடமுள்ள தோஷங்கள் ஈசுவரனிடம் வர எங்கள் மதத்தில் வழியில்லை. தத்வமஸி என்பது ஜீவனை ஈச்வரனுகக் கொள்கிறது என்று அவர்கள் கூறுகிறார்கள்.

ஈச்வரனை ப்ரஹ்மத்தின் அம்சமாக அவர்கள் சொல்வது தவறு. ப்ரஹ்மந்தான் ஈசுவரன், ஜகத் காரணத்வம் ப்ரஹ்மத்திற்கு லக்ஷணம், ப்ரஹ்மம் என்பது ஸாமானியச் சொல். அது நாராயணன் என்கிற விசேக்ஷச் சொல்லுடன் முடிவடைந்து ஜகத்காரணமான ப்ரஹ்மம் நாராயணனே என்று முடிவு கட்டுகிறது. அங்ஙனிருக்க ப்ரஹமம் வேறாகவும் அதன் அம்சமாக ஈச்வரன் வேறாகவும் சொல்வது ப்ரஹ்மத்திற்கு முரண்பட்டதாகும். ஒத்தார் மிக்கார் இல்லாதவன் ஈச்வரன். அவனுக்கு மேற்பட்டு அம்சியாக ப்ரஹமம் இருக்கிறது என்பது ஏற்கத்தகாததே. ஆக நேரடியாக ப்ரஹ்மமே தேவ மநுஷ்யாதி ரூபமாக ஆகும்பொழுது ஜீவனிடமுள்ள தோக்ஷங்கள் ப்ரஹ்மத்திற்கு வருவது இவர்கள் மதத்திலும் தவிர்க்க முடியாததே. இயல்பாக ஜீவ ப்ரஹ்ம பேதத்தை ஒப்புக்கொண்டு தோஷத்தைத் தவிர்க்க முயல்வது இயலாத செயல். அபேதத்தை ஒப்புக்கொண்டிருத்தலின் தோஷம் தவிர்க்க முடியாததே என்க. நாமும் ஜீவ ப்ரஹ்ம அபேதத்தை ஒப்புக் கொண்டிருந்தாலும் சரீரம் ஆத்மா என்கிற ஸம்பந்தத்தைக்கொண்டு ஒப்புக்கொண்டிருத் தலால் சரீரமான ஜீவனிடமுள்ள தோஷங்கள் ஆத்மாவான ப்ரஹ்மத்திடம்வர வழியில்லை என்பது தத்தவமஸியின் உண்மைப் பொருள். ஒரு பொருள் பேதமும் வாய்ந்திருப்பது பொருந்தாதென்று நன்றாக பேதா பேத வாதம் இங்கே கண்டிக்கப்படுகிறது.

srivatsam

## தத்துவமஸியின் உண்மைப் பொருள்

இனி, நமது மதத்தில் "தத்வமஸி" என்பதற்குப் பொருள் உரைக்கப்படுகிறது. ஜீவ ஸ்வரூபத்திற்கும் ப்ரஹ்ம ஸ்வரூபத்திற்கும் ஐக்யம் இங்கே கூறப்படவில்லை. தத் என்பது ஜகத் காரணமாய் அதற்கு உறுப்பான ஸங்கற்பாதிகளோடு கூடின ப்ரஹ்மத்தைச் சொல்கிறது. த்வம் என்பது முன்னிலையிலுள்ள சுவேதகேது என்ற ஜீவனுக்கு அந்தர்யாமியாய் அவனைச் சரீரமாகக் கொண்ட ஆத்மாவான பரப்ரஹ்மத்தைச் சொல்கிறது. ஆக ஜீவாத்மாவான உன்னை ப்ரகாரமாகக் கொண்ட ப்ரஹ்மமும் ஜகத் காரணமாய் ஸங்கற்பாதிகளோடு கூடின ப்ருஹ்மமும் ஒன்றே என்ற தாயிற்று.

வெவ்வேறு ப்ரகாரங்களைக் காட்டும் சொற்கள் ஒரு பொருளைச் சொல்வனவாக அமைந்தால் ஸமாநாதிகரணச் சொற்கள் எனப்படும். ஸமாநாதிகரணம்: ஒரு பொருள். பல சொற்கள் வெவ்வேறு ப்ரகாரத்தாலே ஒரு பொருளைக் கூறுவனவாயிருப்பின் அவை ஸாமாநாதிகரண சொற்களாம். இங்கே தத் என்பது ஜகத் காரணமாய் ஸங்கல்பாதிகளோடுகூடின ப்ரகாரத் தையும் த்வம் என்பது ஜீவனைச் சரீரமாகக் கொண்ட ஆத்மாவாயிருக்கும் ப்ரகாரத்தையும் காட்டும் சொற்கள் ஒரே ப்ரஹ்மத்தைக் கூறுவனவாய் அமைந்துள்ளமை காண்க. இச் சொற்கள் கீழ்ச் சொன்ன மதங்களுக்கு இசைவனவாயில்லை. சங்கர மதத்தில் நிர்விசேக்ஷ ப்ரஹ்ம பொரு ளாக்கம் கொள்ளப்படுவதால் எந்த ப்ரகாரமும் தோற்ற வழியில்லை. பாஸ்கர மதத்தில் குண உடைமை கூறும் தத் என்று ப்ரஹ்மத்தைச் சுட்டுப் சொல்லும் நிறைவறிவற்றமை கூறும் 'த்வம்' என்று ஜீவனைச் சுட்டும் சொல்லும் ஒரு பொருளையே கூறுவதாகக் கொள்ளும்போது அறிவுடைமையும், அறிவில்லாமையும் தோன்றி முரண்படுவது காண்க.

யாதவப்ரகாசர் மதத்தில் ப்ரஹ்மாம்சமான ஈச்வரனே தத் என்பது சொல்வதாகவும் அதே ப்ரஹ்மாம்சமான ஜீவனே 'த்வம்' என்பது கூறுவதாகவும் கொள்ளப்படுகிறது. மண்ணின் அம்சமான குடத்தையும் அதே மண்ணின் அம்சமான வாணையையும் வாணேகுடமே என்று சொல்வது போன்றுள்ளது. அது ஒரு பொருட் பலசொற்களாகுமேயன்றி ஸமாநாதிகரணச் சொற்களாகமாட்டா.

## எல்லாச் சொற்களுக்கும் பொருள் ஈச்வரனே

ஜாதி, குணம் இவற்றைச் சொல்லும் சொற்கள் அவற்றையுடைய பொருள் பர்யந்தம் செல்லும் என்பது நியதி, கோத்வம் (பசுத்தன்மை) என்றும் ஜாதியைக் கூறும் கோ என்றும் சொல்லும், நீலம் என்றும் குணத்தைக் கூறும் நீலம் என்னும் சொல்லும் அவற்றை உடைய பொருள் (வயக்தி) பர்யந்தம் சொல் சொல்வது காண்க. ஜாதி, குணம், இரண்டும் ப்ரகாரங்கள் எனப்படும். ப்ரகாரத்தைச் சொல்லும் சொற்கள் ப்ரகாரி பர்யந்தம் சொல்லும். ப்ரகாரமும் ப்ரகாரியும் (ப்ரகாரத்தை உடைய பொருள்) ஒன்றைவிட்டு ஒன்று பிரியா. ஒன்றையே பற்றி நின்று பற்றப்படும் பொருளின் பயன் இன்றித் தனக்கெனப் பயன் ஒன்றுமில்லாதது ப்ரகாரம் எனப் பெறும் என்க. இந்த லக்ஷணம் ஜாதி குணங்களுக்குப் பொருந்துவதுபோலச் சரீரத்திற்கும் பொருந்தியுள்ளமை கவனிக்கத்தக்கது.

ஆத்மாவையே பற்றி நின்று பற்றப்படும் ஆத்மாவின் பயன் அன்றித் தனக்குப் பயன் ஒன்றுமில்லாதது சரீரம் அன்றோ? ஆகவே ஆத்மாவிற்குச் சரீரம் ப்ரகாரமாயிற்றென்க. எனவே சரீரத்தைக் கூறும் சொற்கள் ப்ரகாரியான ஆத்மா பர்யந்தம் சொல்லுகின்றன.

தேவன் மநுஷ்யன் என்பன போன்ற சரீரத்தைச் சொல்லும் சொற்கள் அவற்றின் ஆத்மா பர்யந்தம் கூறுவதை நாம் காண்கிறோம். இங்ஙனமே உலகனைத்தும் ஈச்வரனுக்குச் சரீரமானால் சேதநப் பொருளோ, அசேதநப் பொருளோ எவற்றைக் கூறும் சொல்லாயினும் அவற்றின் ஆத்மாவான ஈச்வரன் பர்யந்தம் கூறும் என உணர்க. எல்லாப் பொருள்களையும் தனக்குச் சரீரமாக கொண்டமையும் எல்லாச் சொற்களாலும் ஈச்வரனே சொல்லப்படுகின்றான் என்க.

"எப்பொருட்கும் சொல்லானை" என்றார் ஆழ்வார். "விச்வை: சப்தை: ப்ரவாச்ய:" என்றார் ஆசார்யர். இம்முறை கொண்டே 'த்வம்' என்பதற்கு ஜீவனுக்கு ஆத்மாவான ப்ரஹ்மம் என்று பொருள் கூறினோம்.

தேவதாந்தரபரத்வாதியர்களும் கண்டிக்கப்படுகின்றனர். நாராயண பரத்வம் அழகுபட நேரிய வழியிலே ஸ்த்தாபிக்கப்பட்டுள்ளது. நித்ய விபூதி ஸத்பாவம் ஸ்த்தாபிக்கப்பட்டுள்ளது. ஸித்தவஸ்துவை சப்தங்கள் போதிக்கமாட்டா என்றும் மீமாம்ஸா மதமும் கண்டிக்கப்பட்டுள்ளது. இது எல்லா வேதாந்திகளுக்கும் பொதுவான விஷயம். சுருங்கக் கூறின் அறிய வேண்டிய வேதப் பொருளனைத்தும் இந்நூலில் அறிவுறுத்தப்படுகின்றன.

தான் கடைந்தெடுத்த அமுதை ஊட்டினான் கண்ணன்; தான் உட்கொண்டிலன். ஸ்ரீ பாஷ்யகாரர் வேதாந்தக் கடலிலிருந்து திரட்டிய இவ்வமுதம் அவன் செவியின் வழிபுகுந்து உள் நின்றது. அமுதணுகிய வேங்கடவனே கேட்க ஸ்ரீபாஷ்யகாராலே உபந்யஸிக்கப் பெற்ற விஷயமே வேதார்த்தஸங்க்ரஹம். வேங்கடவன்போல இதனைக் கேட்டறிந்து நாமும் அம்ருதத்தன்மையை அடைவோமாக.

# 11. திருநகரிப் பிள்ளை ரஹஸ்யம்

பூர்வாசார்யர்கள் தங்களுக்குத் தஞ்சமாக அநுஸந்தித்ததும், தங்களைப் *பற்றியவர்களுக்கு குஹ்மதமாக உபதேசித்துப் போருவனமுமான சில அர்த்த விசேஷங்கள் உள. அவை எவை எனின், வஸ்து நிர்த்தேசமும், உபாய நிர்தேசமும், உபேய நிர்தேசமும். இனி இவை தம்மை நிர்தேசிக்கும் போது, ப்ரமாணங் கொண்டே நிர்தேசிக்க வேண்டுகையாலே, இவ்வர்த்த விசேஷங்களுக்கு நிர்ணயக ப்ரமாணந்தன்னை ப்ரதமத்திலே நிர்ணயித்துக் கொள்ளவேணும். அதாவது அபௌருஷேயமாய், நித்ய நிர்தோஷமாய், அகிலப்ரமாணோத்க்ருஷ்டமான வேதத்துக்கு ஸங்க்ரஹமான திருமந்த்ரத்திலும், அதனுடைய விவரணமான ரஹஸ்யத்வயத்திலும் உண்டான அர்த்த விசேஷங்களை ப்ரதிபாதியா நின்றுள்ள ஆழ்வார்கள் அருளிச்செய்த த்ராவிட வேதத்துக்குக் கருத்தை அறிவிக்கும் ஆசார்யர்கள் தங்களுக்குத் தஞ்சமாக நினைத்திருக்குமதாய், ரஹஸ்யத்திலும் ஆர்த்தமாக மறைந்து உபதேசிக்கக் கடவ அர்த்த விசேஷங்களை சாப்தமாக ப்ரதிபாதிக்கையாலே, இவ்வர்த்த விசேஷங்களுக்கு நிர்ணயமான ப்ரமாணம் கண்ணினுண் சிறுத்தாம்பாயிருக்கும்.

இனி வஸ்து நிர்தேசமாவது : இந்த ப்ரமாண ப்ரதிபாத்யரான நம்மாழ்வாருடைய ஸ்வரூபத்தை உள்ளபடி உணர்ந்து, இவரே நமக்கு தாரகர் என்று அறுதியிடுகை. அது செய்யுமிடத்தில் இதுக்கு ப்ரமாணம் மூல மந்த்ரமாகையாலும், "மிக்க வேதியர் வேதத்தின் உட்பொருள் நிற்கப் பாடி என் நெஞ்சுள் நிறுத்தினன்" என்று இவர் தாமே அருளிச் செய்கையாலும், இதற்கு வரலாறு திருமந்த்ரம் கொண்டே அறுதியிடவேண்டும். அது நாராயணாய என்று சொல்லா நிற்கவிறே, அதின் அர்த்தானுஸந்தானம் பண்ணுகிற இவரும் "தேவுமற்றறியேன்" என்றதும், திருமங்கையாழ்வாரும், "நின் திருவெட்டெழுத்துங் கற்று நான் உற்றதும் உன் அடியார்க் கடிமை" என்றதும். இவர்கள் இப்படிச் சொல்லுகைக்கு அடி, ஸர்வேச்வரனுடைய நாராயண பூர்த்தி உள்ளபடி அறிந்து பற்றின ஊற்றமிறே. அல்லது நாராயணாய என்று மந்த்ர சரீரத்திலே என்று வ்யக்தமாகச் சொல்லா நிற்க, "தேவுமற்றறியேன்" என்பது "அடியார்க் கடிமை" என்பதாக வொண்ணாதிறே. இத்தனையும் அறியவேண்டுவது உஜ்ஜீவனத்துக்கு. நாராயணத்வ பூர்த்தியாவது தான் ஏதென்னில், நாராயணபதம்,நாரபதத்தாலே பகவத் வ்யதிரிக்த ஸமஸ்த பதார்த்தங்களையும் அயந சப்தத்தாலே ததாச்ரயமான பகவத் ஸ்வருபத்தையும் ப்ரதிபாதியா நின்று கொண்டு, யோக ரூடி ந்யாயத்தாலும், ஸாதாரணமாயும், அஸாதாரணமாயும் இருக்கும். இதிலே வஸ்து நிர்தேசம் பண்ணும்போது ஸாதாராணத்துக்கும் அஸாதாரணத்துக்கும் வாசி அறியவேணும். ஸாதாரணமாவது விதி சிவாதிகளான அஹங்கார யுக்த ஜீவர்களை அதிஷ்டித்துக் கொண்டு, அவர்களைச் சொல்லுகிற வாசகத்தாலே தன்னைச் சொல்லலாம் படியாக நிற்கும் நிலை. அதாகிறது "நான்முகனே! முக்கண்ணப்பா!" என்று ஸம்போதிக்கும் படியாயிருக்கை. இனி அஸாதாரணமாவது அப்ராக்ருதமாய் சுத்த ஸத்வமயமாய் இச்சா க்ருஹீதமான திவ்ய விக்ரஹத்தோடே கூடியிருக்கிற இருப்பு. இவ்விரண்டிலும் நாராயணத்வ பூர்த்தி இல்லை. இனி ஸாதாரண ப்ரமாண விதி சிவாதி வ்யக்திகள் போலே அஹங்கார யுக்தமாயிருத்தல், அஸாதாரண திவ்ய விக்ரஹம் போலே நினைவு அறியாதிருத்தல் செய்கையன்றிக்கே, "தனக்கேயாக" என்ற அத்யந்த பாரதந்த்ர்யத்தாலே "உன்றன் திருவுள்ளம் இடர் கெடுந்தொலும் நாங்கள் வியக்க இன்புறுதும்" என்னும் நினைவறிந்து பரிமாறவல்ல வ்யக்தி ப்ராதான்யத்தாலும் அஸாதாரண திவ்ய விக்ரஹத்தாலும், அவன் உகந்த அந்தரங்க சரீரம் ஆழ்வாராயிருக்கும்.

ஈச்வர ஸ்வரூபந்தான் பரத்வம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமித்வம், அர்சாவதாரம், ஆசார்யத்வம் என்று ஆறு ப்ரகாரத்தோடே கூடியிருக்கும். அதில் பரத்வாதிகள் ஐந்திலும் தத்வத்ரயத்தினுடைய வைசிஷ்யம் இல்லாமையாலே நாரயணத்வ பூர்த்தி இல்லை. இனி ஆசார்யத்வம் என்று கீழ்ச் சொன்னதிலாயிற்று நாராயணத்வம் பூர்ணமாவது. கேவலம் ப்ராக்ருதமான திவ்ய விக்ரஹம் ஒன்றோடுங் கூடியிருக்கையாலே தத்வத்ரயத்தில் அசித்தத்வம் ஒன்றோடுங் கூடியிருக்கிற இருப்பிறே. இது அங்ஙனன்றிக்கே ஆழ்வாரையும் அவர் திருமேனியையும் இரண்டையும் தனக்கு விக்ரஹமாகக் கொண்டு, அவருடைய

அஹந்தை தன்னுடைய அஹந்தையிலே அந்தர்பூதமாயிருக்கிற இருப்பிறே. 'நானும் தானு யோழிந்தானே', 'தானே யான் என்பானாகி', 'தானேயாகி நிறைந்தானே' என்று தத்வத்ரய விசிஷ்டமாயன்றோ ஸகல ஜகத்தும் இருப்பது என்னில், அங்ஙனே சொல்லவொண்ணாது வ்யவஸ்திதமாயிருக்கையாலே. பிராட்டிமார் எல்லாரும் ஒத்திருக்கச் செய்தே, பெரிய பிராட்டியார் அவன் ஸ்வரூபாதிகளுக்கு நிரூபக பூதையாய், ப்ரதான மஹிஷியாய், திருவின் நிழல்போலே யாம்படி அல்லாதவர்கள் தனக்குச் சாயாபரதந்த்ரராம்படி வ்யாவ்ருத்தியாயிருக்குமாபோலே, இதுவும் இவ்விஷயத்துக்கு வ்யவஸ்திதம். மற்றை யாழ்வார்கள் இவருக்கு அவயபூதர். இது "முடியானேயில் ஸுஸ்பஷ்டம். இவ் வாழ்வாருக்கும் இத்தனை ப்ரகாரமுண்டு. "பின்னைகொல்" இத்யாதிப்படியே ஆழ்வாருக்கும் ஈச்வரனுக்கும் உண்டான ப்ரகார ப்ரகாரி ஸம்பந்தைக்யத்தை யதார்சனம் பண்ணினாலாய்த்து "தேவு மற்றறியேன்" என்னலாவது.

இப்படி ஆழ்வாருக்கும் ஈச்வரனுக்கும் உண்டான ஸம்பந்தைக்யத்தை யதார்சனம் பண்ணி "தேவுமற்றறியேன்" என்னும் அதிகாரிக்கும் எம்பெருமானாரைப் பற்ற வேண்டுகிறது. ஆழ்வாரைப் பற்றும்போது அவர் திருவடிகளைப் பற்ற வேண்டுகையாலே. "மேவினேன் அவன் பொன்னடி" என்று மதுரகவிகள் ஆழ்வாரை விட்டு எம்பெருமானாரை ஊன்றுகைக்கடி, தத்தர்மைக்யத்தாலே ஏக விஷயமாகையாலும், ப்ரயோஜனம்சத்தில் நிற்கவேண்டுகையாலும். "யாழின் இன்னிசை பாடித் திரிவன்" "கரிய கோலத் திருவுருக் காண்பன்", "எண்டிசையும் அறிய இயம்புகேன்" என்று பாரித்தபடியே, "தீதில் நன்னெறி காட்டி எங்கும் திரிந்து அரங்கனம்மானுக்கே காதல் செய்து, "ஆழ்வார்க்ருபையே ஸுப்ரஸித்தமாக்குவதாக அவதரித்த படியிறே" "பாமன்னுமாற னடிபணிந்துய்ந்தவன் பல்கலையோர் தாம்மன்னவந்த ராமாநுசனிறே!" பகவத் க்ருபையையும் ஆழ்வார் க்ருபையையும் சீர்தூக்கிப் பார்த்தால், "பாடினான் அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே" என்று ஆழ்வார் க்ருபை விஞ்சியிருக்குமாபோலே, ஆழ்வார் க்ருபையையும் இவருடைய க்ருபையையும் தனித்தனியே விகல்பித்தால், "உன் அருளின் கணன்றிப் புகலொன்று மில்லை" என்னும்படியான க்ருபா வைபவத்தாலும், "யாரானும் யாதானும் செய்ய அகலிடத்தை ஆராய்ந்து அது திருத்தலாவதே" என்று சேதனருடைய அவதேயத்தைக் கண்டு மீளுகையன்றிக்கே, "அவர்பின் படரும்குணன்" என்று ஸர்வாவஸ்தையிலும் சேனரைக் கைவிட்டப்படமாட்டாத வாத்ஸல்யத்தாலும், பெரு வருத்தத்தோடே லபித்த பரமார்த்தத்தைச் சேதனருடைய துர்கதி கண்டு பொறுக்க மாட்டாமல், தம்மை அழிய மாறி உபதேசித்தருளுகையாலும், "உபய விபூதியையும் நீர் இட்ட வழக்காகத் தந்தோம்" என்று பெருமாள் ப்ரஸாதித்தருளப் பெற்ற உடையவராகையாலும் ஸர்வாத்மாக்களை உடையவராகையாலே உடையவர் என்று நிரூபக மாகையாலும், ஆழ்வார் திருவடிகளில் ஸம்பந்தம் உணர்ந்தவர் எல்லாரும் எம்பெருமானாரே தங்களுக்குத் தஞ்சமாக நினைத்திருப்பார்கள். இதுதான் ஈச்வர ஸ்ம்பந்தம்போலே பந்த மோக்ஷங்கள் இரண்டுக்கும் பொதுவாயிருக்கையன்றிக்கே, மோக்ஷத்துக்கே ஹேதுவாயிருக்கும். ஆகையிறே "ஞானப்பிரானை யல்லாலில்லை" "திருக்குருகூரதனை உளங்கொள் ஞானத்து வைம்மின்" என்று தாமே அருளிச்செய்தது.

ஆசார்யபதம் என்று ஒன்றுண்டு. அதுள்ளது எம்பெருமானாருக்கே. "எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம்" என்றுய்த்து வடுக நம்பி உபதேசிப்பது. "எம்பெருமானாருக்கே" என்றது ஆழ்வார் திருவடிகளில் ஸம்பந்தைக்யத்தாலே. அவர் தமக்கு அடிமை ஏதென்னில், கீழ்ச் சொன்ன நாராயணத்வ பூர்த்தி. இப்படி வஸ்து நிர்தேசம் பண்ணின அதிகாரிக்கு அநிருஷ்டமான ஸம்ஸார நிவ்ருத்திக்கும், இஷ்டமான பகவத் ப்ராப்திக்கும் அநுருபமான உபாயம் அநவரதம் அபேக்ஷிதமாயிருக்குமிறே.

ஸ்வரூபத்துக்கும் ப்ராப்யத்திற்கும் சேர்ந்திருக்க வேணுமிறே ப்ராபகம். "தேவு மற்றறியேன்" என்று ஆசார்ய விஷயத்திலே ஊன்றி, அவனுக்குக் கரணத்வ பரதந்த்ரனாகத் தன்னை அநுஸந்தித்திருக்குமவனுக்கு உபாயம் ஆசார்யன் பண்ணின ப்ரபத்தியே யாகக் கடவது. இவனுக்குத் தனித்துச் சரணவரணம் பண்ண வேண்டுவதில்லை. பண்ணினானாகில் ஸம்பந்தம் குலையும். காரணம், தான் தனக்கு ரக்ஷக சிந்தை பண்ணாதே, அநாதி காலம் ஸ்வாபிமானத்தாலே ஈச்வராபி மானத்தைக் குலைத்துக் கொண்ட இவனுக்கு ஆசார்ய அபிமான மொழிய கதியில்லை. ஸ்வாபிமானமாவது :

சரணவத் பரதந்த்ரனும் ஒருவன் அபிமானத்திலே அந்தர்பூதனும் இருக்கக் கடவ இவன், தன்
ப்ருதக்ஸ்திதி பண்ணித் தனக்கென்று ஒரு புருஷார்த்தம் உண்டாகவும் நினைத்து. தத்ப்ராப்த்யு
பாயம் ஈச்வரனே என்றிருக்கை. ஆசார்யாபிமானமொழிய கதியில்லை என்றிருக்கையாவது, தன்
பேற்றுக்குத் தான் ஒரு ப்ரபத்தி பண்ணுகையன்றிற்கே, அவன் பண்ணிய ப்ரபத்தியே தனக்கு
உபாயமாகக் கொண்டு தன்னை அவனுக்குச் சரணவத் பரதந்த்ரனாக அனுஸந்திக்கை. ''தங்கள்
தேவரை வல்ல பரிசு வருவிப்பரேல் அது காண்டும்,'' ''தங்கள் தேவரைப் பற்றியிருப்பாரை
வெல்லும்வகைகொண்டு,'' ''நாதமுநிம் விலோக்ய ப்ரஸீத.''

உபேய நிர்தேசமாவது : ஆசார்ய முகோல்லாஸ ஹேதுவான கைங்ர்யமே புருஷார்த்தம்
என்றிருக்கை. ''திரிதந்தாகிலும்''. இவ்வர்த்த விசேஷங்களை உபதேசித்த ஆசார்ய விஷயத்திலே
உபகாரத்வ ப்ரதிபத்தி. ஆழ்வார் திருவடிகளான எம்பெருமானார் விஷயத்திலே உத்தாரகத்வ
ப்ரதிபத்தி. இவ்வர்த்த உபதேசம் பண்ணின ஆசார்யன் எம்பெருமானார்க்கே சரணத்வ பரதந்த்ர
னுகையாலே அந்த ஐக்யத்தாலும், ஒரு காலத்துக்கு ஒரு சேதனன் முகேந நின்று சேதனனுக்கு
அஜ்ஞாதஜ்ஞாபனம் பண்ணி அங்கீகரித்தருள்வர் என்கிற உபதேசத்தாலும், அவ்வோ வ்யக்தி
விசேஷங்கள்தான் ஞானநுஷ்டான பூர்த்தியாலே. இதர ஸஜாதீயமாய்த் தோற்றுகையாலும்
எம்பெருமானார் திருவடிகளில் ஸம்பந்தத்தை உணர்த்திய அளவிலே கேவலம் உபகாரகத்வ ப்ரதி
பத்தியன்றிக்கே உத்தாரகம் என்று அநுஸந்திக்கக் குறைவில்லை. இவ்வர்த்த விசேஷங்கள்தான்
பலருடைய ஹ்ருதயத்தளவிலே உண்டாயிருந்ததேயாகிலும், ஆசார்யத்வ பூர்த்தியுள்ளது,
காலங்களுக்கு ஒரு வ்யக்தி விசேஷங்களிலேயாயிருக்கும். அவ்யக்தி விசேஷங்கள்தாம் ஞான பக்தி
வைராக்யங்களாலே தத் காலத்தில் அத்விதீயமாயிருக்கும் என்று பிள்ளை பலகாலம் அருளிச்
செய்வர். இவ்வர்த்த விசேஷங்களை யதார்சனம் பண்ணி இதுவே தஞ்சம் என்றிருக்கும்
அதிகாரிகளுக்கு ரஹஸ்யத்ரயத்தில் அநுஸந்தேயம்.

[திருநகரிப் பிள்ளையிடம் பிள்ளை செண்டலங்காரதாஸர் பெற்ற வார்த்தை இது]

srivatsam



# 12. அழகிய மணவாள தாஸர் என்கிற திவ்யகவி பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் அருளிச்செய்த

# எதிராச ரந்தாதி


உரையாக்கம்: வித்வான் C. ஜெகன்னாதாசாரியர்,

M.A., L.T., Dip Geog.

(முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர், விவேகாநந்தர் கல்லூரி, மயிலை


**எதிராச ரந்தாதி** என்ற இத்தொடர், எதிராசரைப் பற்றிய அந்தாதி என விரியும்: இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனும் உடன் தொக்க தொகை. **எதிராசரது அந்தாதி** என விரிப்பின், ஆறும் வேற்றுமைத் தொகையாம் : இத்தொடர் மொழியில் தொக்கு நின்ற ஆறனுருபின் பொருளாகிய சம்பந்தம் விஷயமாகவுடைமை. எதிராசர் விஷயமாக அந்தாதித் தொடையாற் பாடப்பட்ட தொரு பிரபந்தம் என்பது பொருள்.

அந்தாதி—அந்தத்தை ஆதியா கவுடையது. அன்மொழித் தொகை; வடமொழித் தொடர், தீர்க்கசந்தி : **அந்த+ஆதி** எனப் பிரிக்க. அந்தாதியாவது, முன் நின்ற செய்யுளின் ஈற்றிலுள்ள எழுத்தாயினும், அசையாயினும், சீராயினும், அடியாயினும் அடுத்துவரும் செய்யுளின் முதலாக அமையும்படி பாடுவது. இங்ஙனம் பாடும் நூலினது ஈற்றுச் செய்யுளின் அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமையவைத்தல், **மண்டலித்தல்** எனப்படும். இது தொண்ணூற்றுறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்றும். **பதிற்றந்தாதி, நூற்றந்தாதி** என்ற வகைகளில் இந்நூல் பதிற்றந்தாதியைச் சேர்ந்தது. அதாவது, பத்து வெண்பாவினாலேலும், பத்துக் கட்டளைக் கலித்துறையினலேனும் அந்தாதித் தொடையாற் கூறுவது.

இந்நூல், அந்தாதித் தொடையாலமைந்த ஒன்பது கட்டளைக் கலித்துறைகளை யுடையது. பத்துச் செய்யுட்கள் வேண்டியிருப்ப, இங்கே ஒன்பது செய்யுட்களே அந்தாதித் தொடையிலமைந்து மண்டலித்தலைக் காண்கிறோம். எனினும், செட்டித் தெரு, கமுகந்தோப்பு என்பதுபோலே, ஒன்று குறையினும் பதிற்றந்தாதி வகையினது என்னத் தட்டில்லை. இனி, "செய்யுளந்தாதி சொற்றொடர் நிலையே" என்பதற்கேற்ப, இந்நூல் சொற்றொடர்நிலைச் செய்யுள் வகையினது.

இப்பிரபந்தம் தோத்திர ரூபமானது.

### நூல்

1. பூமான் பிறந்து சிறந்தது வேலை புவிபடைத்த
கோமான் பிறந்து சிறந்தது நான்மறை கூடற்சங்கம்
நாமான் பிறந்து சிறந்தது பண்டெதி ராசனென்னும்
சீமான் பிறந்து சரண கதியுஞ் சிறந்ததுவே.

**இதன் பொருள் :**

**வேலை**—கடலானது. **பூமான்**—பூவிலே எழுந்தருளியிருக்கும் இலக்குமி. **பிறந்து—சிறந்தது**—பெருமையுள்ளது. **புவி படைத்த கோமான்**—வான்மீகி முனிவன், புற்றிலேயிருந்து பூத்தவன் என்ற கருத்துப்பற்றி, பூமி தேவி யுண்டாக்கினவன் என்றது. **நான்மறை சிறந்தது**—இராமாயணமாகிய காவிய அர்தனத்தைப் பாடியமையால்; "வேதஃ ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா"

என்றதும் நோக்குக. முனிவனைக் கோமான் என்றது, வாக்கின் சீர்மை நோக்கி; கோ—வாக்கு "கோதா" என்ற விடத்துப் போல. **நாமான்**—நாவிறு படைத்த நம்மாழ்வார். **பிறந்து**—அவதரித்து **கூடற்சங்கம்**— மதுரையிலிருந்த தமிழ்ச் சங்கம். "சேமங் குருகையோ," "ஈயாடுவதோ கருடற் கெதிரே" முதலிய அநுஸந்தேயம்.

"கண்ணன் கழலிணை" என்ற அடி பொறித்த முறியைச் சங்கப் பலகை தாங்கி, அதில் வீற்றிருந்த புலவர்களைப் பொற்றாமரைக் குளத்திலாழ்த்தியமை நினைக.

இங்ஙனம் வேலை, நான்மறை, கூடற்சங்கம் முதலியன சிறந்தன **பண்டு**, ஒவ்வொருத்தராலே. ஆனால், இன்றோ எதிராசன் என்னும் சீமானாய எம்பெருமானார் பிறந்தபின், அவர் ஒருத்தராலே வேலை, நான்மறை, கூடற்சங்கம் மூன்றும் ஒருசேரச் சிறப்புற்றதுடன் **சரணாகதி** என்னும் சிறந்த பிரபத்தி சாஸ்திரமும் சிறந்தது. "சரணாகதியும்"— என்ற உம்மை இறந்தது தழீஇயது.

எம்பெருமானார் ஆதிசேடன் அவதாரமாகலின், (வேலை) திருப்பாற்கடல் சிறப்புற்றது; வேதாந்த தீபம், வேதாந்தஸாரம், வேதார்த்த ஸங்க்ரஹம், ஸ்ரீபாஷ்யம் முதலிய நிதிகளால் நான்மறை சிறப்புற்றது: "மொய்ம்பால் வளர்த்த இதத்தாய்" ஆதலின் கூடற்சங்கத் தமிழ் சிறப்புற்றது தெளிவு.

முதலடியில் **மான்** உவமவாகுபெயர். ஏனைய அடிகளில் **மான்** பெயர் விகுதி. பிறந்து—வினையெச்சம், காரணம் பொருளது. வேலை—வேலா: ஆயீறு ஐயான வடசொல். வேலை—கடற்கரை கடலுக்கு ஆகியது. **சிறந்ததுவே** : குற்றியலுகரம் கெடாமல் வகரவுடம்படு மெய் பெற்று வந்தது

> 2. **சிறந்தது செல்வஞ் சிறவா ததுகலி சில்சமய**
> **மறந்தது மாதவன் பேர்வாழ்த்த வைகுந்த மன்னுமுனி**
> **திறந்தது வாசல் திறவா நரகந் தெரிந்தவையம்**
> **பிறந்தது பூதூரிப் பிறவா முனிவன் பிறந்தபின்னே.**

(இ-ள்) **பிறவா முனிவன்**—நம்மைப்போல் கருமவசியனாகப் பிறவாமல் இச்சாமாத்திரத்தால் சங்கற்பித்துக் கொண்டு அவதரித்த எம்பெருமானார். **பிறந்தது பூதூர்**—இவர் திருவவதரித்த தலம் ஸ்ரீபெரும்பூதூர். (இவர்) **பிறந்த பின்னே**.—**செல்வம் சிறந்தது**—கைங்கர்ய ஸ்ரீ சிறப்புற்றது. "பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட" என்றவிடம் நினைக. **கலி**—கலியின் கொடுமை. **சிறவாதது**—சிறப்பிழந்து நலிந்தது. "கலியுங்கெடும் கண்டு கொண்மின்" என்று பவிஷ்யதாசாரியரைச் சூசிப்பித்ததும் நினைக. **சில்சமயம்**—அற்ப சமயமான சைவம். **மாது அவள் பேர் வாழ்த்த**—பெண்ணை இடப்பாகத்திற் கொண்ட சிவன் பேரையும் சொல்ல. **மறந்தது**—கைவிட்டது; அதனாலன்றோ ஆழ்வானும் பெரிய நம்பியும் கண்ணிழந்தது!" தாழ்சடையோன் சொல் கற்ற சோம்பரும்...மாண்டனர், நீணிலத்தே" என்பதும் "மிகுத்து மேல்வந்த பாசுபதர் சிந்தியோடு வகை வாது செய்த எதிராசனார்" என்பதும் ஈண்டு அநுஸந்தேயம்.

இனி, **மாதவன் பேர் வாழ்த்த** என்பது இடைநிலைத் தீவகமாய், மாதவன்—இலக்குமிக்குக் கணவனாகிய திருமாலின், **பேர் வாழ்த்த**—நாமம் பலவும் நவிலச் செய்ய. **வைகுந்த வாசல் திறந்தது** வைகுந்தம்=திருமாலுலகம்.

**நரகம் (வாசல்) திறவா**—ரௌரவாதி நரகங்களின் வாசல்கள் திறவாதடைக்கப்பட்டன. "நலியும் நரகமும் நைந்த" என்றதும் நினைக. **வையம்**—லீலாவிபூதி. **தெரிந்த**—காணுஞ் சக்தியைப் பெற்றது; உலகில் நல்லறிவு தலைப்படலாயிற்று என்றபடி. "கடல் வண்ணன் பூதங்கள் மண்மேல் பண்தான் பாடிநின்றாடிப்" பரந்து உலவச் செய்தமையாலும், வையம் கண் பெற்றது என்றவாறு.

இவ்வளவு அரிய செயல்களையும் ஆற்றியது ஒரு முனி. அந்த **முனி மன்னும்**; முனி—யாமுனாசார்யர் கன்று; "எங்களிராமாநுச முனி வேழம்" என்றார் அமுதனாரும். **மன்னும்**—நிலைபெறும். "தென்னனாய், வடவானாய், குடபாலானாய், குணபாலமதயானாய்" என்றதற் கேற்ப, ஸ்ரீரங்க

ருவேங்கடம், திருநாராயணபுரம், திருமாலிருஞ்சோலை ஆகிய திவ்யதேசங்களில் எம்பெரு மானர் கோயில் கொண்டு நித்யவாசம் செய்தலை யோர்க.

ஆக, இப்பாடலின் அந்வயம் பிறவா முனிவன் பிறந்தது பூதூர்; அவர் பிறந்த பின்னே செல்வம் சிறந்தது, கலி சிறவாதது; சில சமயம் மாது அவன் பேர் வாழ்த்த மறந்தது; [மாதவன் பேர் வாழ்த்த] வைகுந்த வாசல் திறந்தது, நரகம் (வாசல்) திறவா; வையம் தெரிந்த. இங்ஙன் அருஞ் செயல்களாற்றி, முனி மன்னும் என்பது.

3. பின்னே தொடரும் பிறவிப் பெரும்பிணி பேர்க்குவண்ணம்
இன்னே யிதற்கு மருந்தறிந் தேனிந்த மேதினியில்
தன்னே ரொருவரொவ் வாவெதி ராசன் சரணமென்று
சொன்னே னறிந்திலை யோமன மேயிந்தத் துக்கம் விட்டே.

(இ-ள்) பிறவியைப் பெரும் பிணி என்றது, எழுமை எழுபிறப்பும் பின்னே தொடருமாகலின். பேர்த்தல்-வேரோடு கல்லிக் களைந்தெறிதல். ''எருத்துக் கொடியுடையானும் பிரமனும் இந்திரனும் மற்றும் ஒருத்தரும் இப்பிறவி என்னும் நோய்க்கு மருந்தறிவாரில்லை'' யாயிருப்ப, ஐயங்கார் தாம் "மருந்தறிந்தேன்'' என்கிறார். மருந்தாவது, "எதிராசன் சரணம்'' என்று சொல்லுதல் "எம்பெருமானர் திருவடிகளே சரணம்'' என்று சொன்னலே பிறவி, பிணி யற்று வீடுபேறு கிட்டும் என்றபடி. ஆழ்வான்-ஆண்டாளுக்கும், பட்டருக்கும், சீராமப் பிள்ளைக்கும், "எம்பெருமானர் திருவடிகளே தஞ்ச மென்றிருங்கோள்'' என்று உபதேசம் செய்ததும் நினைக; அன்றியும் சுந்தரத்தோளுடையான் (திருமாலிருஞ்சோலை யழகர்) ''அகதிம்'' என்ற ஆச்சானை நோக்கிக் கூறியதும் ஓர்க.

மேதினி—மேதினீ வடசொல் : திருமாலால் வதைக்கப்பட்ட மதுகைடபர்களின் மேதசினல் [கொழுப்பினல்] நனைந்ததென்பது பொருள். நேர்—ஒப்பு, நான் அறிந்தேன்; நீ அறிந்திலையோ மனமே? என்று தன்னினும் வேறுபடுத்தியது, அதன் சஞ்சல வியல்பு நோக்கி.

4. விட்டது தீவினை மாண்டது கோவமெய்ஞ் ஞானநெஞ்சிற்
பட்டது வேறு பரவச்சந் தீர்ந்தது பாவமெல்லாம்
கெட்டது வீடு தருமென்று கேசவன் றாள்தலைமேல்
இட்டது வெங்களி ராமா நுசனென் றிருப்பவர்க்கே.

[இ-ள்] எங்கள் இராமாநுசனே சரணம் என்றிருப்பவர்க்கே தீவினை விட்டது. கோபம் மாண்டது, மெய்ஞ்ஞானம் நெஞ்சிற்பட்டது; பரவச்சம் வேறு தீர்ந்தது; பாவ மெல்லாம் கெட்டது; கேசவன் [இவர்க்கு] வீடு தரும் என்று தாள் தலைமேல் இட்டது என அந்வயம் செய்து கொள்க.

இருப்பவர்க்கே—ஏகாரம், பிரிநிலை. கோவம்—கோபம்; கோபமே பாவங்களுக் கெல்லாம் தாய் தந்தை யாகலின், அது மாளவே, மெய்ஞ்ஞானம் [தத்துவ அறிவு] தலைப்பட்டது, அந்த அறிவினல் "பாரமாய பழவினை'' யச்சம் தீர்ந்தது. பரம்-பாரம், பழவினை காட்டி வந்தது. பழவினை யச்சம் தீரவே, பாவமெல்லாம் தீயினிற் றூசாயது. பாவம் கெடவே, புடமிட்ட பொன்போலாகக் கேசவன், "வீடு தரும்'' என்று திருவடி சம்பந்தஞ் செய்து தமராக்குவன் என்க. இட்டது வெங்கள்: [மாற்றி]யலுகரங் கெடாது வகரவுடம்படுமெய்பெற்று வந்தது.

5. இருக்கின் பொருளும் அறிவின் பொருளு மெழுத்தெட்டினல்
உருக்கும் பொருளும் உணர்வின் பொருளுமொன் றாகவெல்லாம்
சுருக்கும் பொருளுந் துணிவின் பொருளுந் துணிந்தபின்பு
செருக்கும் பொருளு மெதிராச ராசன் தெரிந்தனனே.

(இ-ள்) **இருக்கு**-ருக்வேதம். அதன் **பொருள்** என்றது கர்மகாண்டத்தை வலியுறுத்துவது. நான்கு வேதங்களுள் இருக்கு வேதம் முதலதாகையால், அதனைத் தலைமையாக எடுத்து "இருக்கின் பொருளும்" என்றார். உபலக்ஷணத்தால் இருக்கு என்பது நான்கு வேதங்களுமாம்.

**அறிவின் பொருள்** என்றது ஞானகாண்டத்தை வலியுறுத்துவது. அறிவு—வேதாந்த உபநிடதங்கள். **எட்டெழுத்தினால் உருக்கும் பொருள்** என்றது - திருமந்திரத்தின் ஆழ்பொருள். எட்டெழுத்து— திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரம். **உணர்வின் பொருள்** என்றது - த்வயம் என்னும் மந்திரத்தின் ஆழ்பொருள். உணர்வு—ஆன்மா; "ஒண்டாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு" என்ற விடத்துப்போல. ஓர் ஆன்மா முக்கியமாக அறிய வேண்டியது பெரிய பிராட்டியாலே பேறென்பதாகையாலே, த்வயத்தில் நோக்கு. இனி, **ஒன்றாக எல்லாம் சுருக்கும் பொருள்** என்றது-சரம சுலோகத்தை. இது பஞ்சம வேதஸாரபூத கீதோபநிஷத் தாத்பர்யமாய் சரம ரஹஸ்யமாயிருப்பது. "இதன் அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளுகைக்காகவே எம்பெருமானார் பதினெட்டுப் பர்யாயம் திருக்கோட்டியூர் நம்பி பக்கல் எழுந்தருளியது."

இனி, **துணிவின் பொருள்** என்றது-ப்ரஹ்ம ஸூத்ரத்திற்குப் பொருள், அதாவது ஸ்ரீ பாஷ்யம் செய்தருளப் பொருள் தெரிந்தமை. **துணிவு** என்றது பிரம்மத்தை இன்னதென்று முடிவு கட்டுதலின் என்க. **துணிந்த பின்பு செருக்கும் பொருள** என்றது, விசிஷ்டாத்வைத சித்தாந்தம் நிறுத்திப், "பிரபத்தியே தஞ்சம்" எனச் சாரதமமான பொருள் தெரிந்து நிறுவியது, இதைக் கத்யத்ரயத்தால் தெரியவைத்தார்.

ஆக, இச்செய்யுளால், எதிராசன் வேதம், வேதாந்தம், முமுக்ஷுவுக்கு அறிய வேண்டிய மூன்று ரஹஸ்யங்களாகிய திருமந்த்ரம், த்வயம், சரமச்லோகம், ப்ரஹ்மஸூத்ரம், விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தின் எல்லை நிலமாகிய பிரபத்தி—இவற்றின் ஆழ்பொருளைத் தெரிந்து உலகில் வெளியிட்டமை தேறுவது, எதிகட்கெல்லாம் ராசனாதலின் தெரிய முடிந்தது என்பது தோன்ற **எதிராசராசன்** என்றது கருத்துடையடைகொளி.

> 6. தெரியாத வாதியர் தேற்றம்விட் டேதிரு வெட்டெழுத்தின்
> உரியா ரருள்பெற வேண்டுதி ரேலுடு வும்பிறையும்
> பிரியா மதிட்பெரும் பூதூர் முனிசொன்ன பேச்சை நெஞ்சில்
> தரியா தவரறி யாரினி வேறில்லை சத்தியமே.

[இ-ள்] **திருவெட்டெழுத்தின் உரியார்**—ஸ்ரீமந்நாராயணன், திருமால். [அவர்] **அருள் பெற வேண்டுதிரேல்**—அவரது கிருபைக்குப் பாத்திரமாக விரும்புவீரானால். **தெரியாத வாதியர் தேற்றம் விட்டு**—தத்துவ ஹித புருஷார்த்தங்கள் இன்னவை என்று அறியாத சமயச் சழக்கர் கத்துக் குளுறவுகளை அறவே உதறித் தள்ளி. **பெரும்பூதூர் முனி சொன்ன பேச்சை நெஞ்சில்-தரி** தரியுங்கள். நிலாவ நிறுத்துங்கள். அங்ஙன் தரிப்பீராயின், **யாது அவர் அறியார்**-தரித்த அவர் அறியாதது எது? அனைத்தையும் அறிவர். **இனி வேறு இல்லை**—இதற்கு மாறு - கிடையாது. **சத்தியம்** தொட்டுப் பிரமாணஞ் செய்வேன்.

**வாதியர்** மாயாவாதியர், கணாத வாதியர் இன்னோரன்ன தொடக்கத்தோர்.

**உடுவும்**-நட்சத்திரங்களும், **பிறையும்**-சந்திரனும். **பிரியா**-விட்டுப்போக முடியாத. **மதிள்** உயர்ந்த மதிள்களையுடைய, **பெரும்பூதூர்**:- ஸ்ரீ பெரும்பூதூர். இங்ஙன் கூறியது. நவிற்சியணி பட.

இச்செய்யுள், சமய வாதியரால் குழம்பித் தத்துவ உண்மை இன்னதென அறியமாட்டாது திகைக்கும் சேதனன் ஒருவனைப் பார்த்துக் கூறுவது போல் அமைக்கப்பட்டுள்ளது.

தரி-முன்னிலை வினைமுற்று. அவர்-முன்னிலையிற் படர்க்கை. இனி, "தரியாதவர் அறியார்" என்று தோற்றும்படி சாடு.

இனி, பெரும்பூதூர் முனி சொன்ன பேச்சாவது: "சகல வேதங்களிலும், சகல சாஸ்திரங்களிலும், சகலமான ஆழ்வார் திவ்யப்ரபந்தங்களிலும், சகலாசார்ய பாசுரங்களிலும் பார்த்த இடத்தில்: ஓர் அதிகாரிக்கு த்வயமொழிய மந்திரமில்லை: மிதுனமொழிய வஸ்துவில்லை; கைங்கர்ய மொழியப் புருஷார்த்தமில்லை! ஆசார்யாபிமானமொழிய மோக்ஷோபாயமில்லை; பாகவத அபசார மொழிய மோக்ஷ விரோதமில்லை" என்பது:

> **7. சத்தியத் தின்பொருள் தத்துவத் தின்பொருள் தன்னினுன்னும்**
> **புத்தியத் தின்பொருள் புண்ணியத் தின்பொருள் பூசுரர்தம்**
> **பத்தியத் தின்பொருள் பற்றறுக் கும்பொருள் பற்றுதலால்**
> **முத்தியத் தின்பொருள் பூதூர் முனிவன் மொழிந்தனனே.**

[இ-ள்.] எம்பெருமானார் மொழிந்த அர்த்த விசேடங்கள் இவை எனப் பட்டியலிட்டுக் காட்டுகிறார், ஐயங்கார். **1. சத்தியத்தின் பொருள்:** சத்தியம்-உண்மை. எம்பெருமானார் தரிசனத்தில் சித், அசித், ஈச்வரன் என்ற மூன்றும் உண்மைகளே எனினும், மேல் **தத்துவத்தின் பொருள்** என்று குறிப்பிருத்தலாலே ஈண்டு **சத்தியம்** என்பது ஈச்வரனைச் சிறப்பாகக் காட்டுகிறது "ருதம் ஸத்யம் பரம் ப்ரஹ்ம" என்பது இங்குக் குறிப்பு. எனவே ஈச்வரனின் பொருள் என்னத் தேறுகிறது. அவனுக்குப் பொருளாவது **அஸங்க்யேய [அளவில்லாத] கல்யாண குணகணங்களோடு ஹேயப்ரத்யநீகனாயிருத்தல் [இழியனவற்றிற்கெல்லாம் எதிராயிருத்தல்] முதலியன.**

srivatsam

2. இனி, **தத்துவத்தின் பொருள்:** தத்துவம் தத்வத்ரயம்: மேலே குறித்த சித், அசித், ஈச்வரன் என்ற மூன்று உண்மைப் பொருள்கள். முன்னர் **சத்தியம்** என்பதாலே ஈச்வரன் சொல்லப்பட்டமையால், ஈண்டு ஏனைய இரண்டு தத்துவங்களும் குறிக்கப்படுவன. சித்-ஜீவாத்மா. சித்தின் பொருளாவன: 1. கன்மேந்த்ரிய ஞானேந்திரியங்களில் வேறுபட்டிருத்தல், 2. சுயம் பிரகாசமாயிருத்தல், 3. ஆநந்த ரூபமாயிருத்தல், 4. சாசுவதமாயிருத்தல், 5. அணுமாத்ரமாயிருத்தல், 6. கட்புலனுக்குத் தோன்றாதிருத்தல், 7. மனத்தினால் நினைக்க முடியாதிருத்தல், 8. நிரவயவமாயிருத்தல், 9. நிர்விகாரமாயிருத்தல், 10. அறிவுக் கிருப்பிடமாயிருத்தல். 11. ஈச்வரனுக்குச் சரீரமாய், அவனிட்டவழக்காயிருத்தல் முதலியன.

இந்த **சித்** என்ற ஜீவாத்மா பத்தர், நித்யர், முக்தர் என மூவகைப்படும்.

இனி, அசித்தின் பொருளாவன : 1. முக்குண வசப்பட்டுக் கிடத்தல், 2. ஞான சூன்யமாயிருத்தல், 3. சாசுவதமாயிருத்தல், 4. ஈச்வரனுக்குப் போகோபகரணமாயிருத்தல், 5. விகாரமுடைய தாதல் முதலியன. இதனைப் பிரக்ருதி, மாயை, அவித்யை எனவும் வழங்குப.

3. **தன்னின் உன்னும் புத்தியத்தின் பொருள்: தன்னின்**-அசித் தத்துவத்தினின்றும் வேறுபட்டு, உன்னும்-நினைவாற்றல் படைத்த. **புத்தியம்**-புத்தி என்னும் ஆராய்ந்து தெளியும் அந்தக்கரணம். புத்தி அல்லது அறிவு என்பது சித்துக்கே உரித்தாகுதலின் **இன்** என்ற ஐந்தனுருபு நீக்கப் பொருளில் வந்தது. ஆகவே **தனி** என்பது அசித்தைக் காட்டுவது. இது கூர்ந்து நோக்கத்தக்கது. **புத்தியம்** என்பதில்: அம் சருவிப்பொருள் விகுதி; "நோக்கம்" என்ற விடத்துப்போல. மேல் நான்கா மடியில் **பத்தியம்** என்றதும் இதுபற்றியே.

இனி, இப் புத்தியின் பொருளாவது: ஜடமாகிய அசித்தினின்றும் வேறுபட்டிருந்தே, அஜடமான ஜீவாத்மாவோடு தான் ஒன்றி நின்று, "**உடல் மிசையுயிர்**" கரந்திருக்கும் தன்மையை வெளிப்

படுத்துவது. இதனால் பெறவைப்பது சரீர-சரீரி சம்பந்தம். இந்தச் சரீர-சரீரி சம்பந்தத்தை கற்று நீளநோக்கின், சித் ஈச்வரனுக்குச் சரீரமாகுந் தன்மையையும் தெற்றென உணரலாம். விழுமியவிசிஷ்டாத்வைத சித்தாந்தத்தின் ஆணிவேராகிய சரீர-சரீரி சம்பந்தத்தைத்தான் "தன்னின் உன்னும் புத்தியத்தின் பொருள்" எனத் திறமுற ஆழ்பொருள்பட வைத்தார்

யாவையும் யவருந் தானாய் அவரவர் சமயந் தோறும்
தோய்விலன் புலனைந்துக்கும் சொலப்படான் உணர்வின் மூர்த்தி
ஆவிசேர் உயிரினி னுள்ளால் ஆதுமோர் பற்றி லாத
பாவனை யதனைக் கூடில் அவனையுங் கூடலாமே.

என்ற திருவாய்மொழிப் பாசுரம் ஒப்பு நோக்கத்தக்கது.

ஆக, சத்தியத்தின் பொருள் என்றதால் ஈச்வர குணங்களையும், தத்தியத்தின் பொருள் என்றதால் சித், அசித் இரண்டின் இயல்புகளையும், தன்னின் உன்னும் பொருள் என்றதால் தத்வங்களினிடையுள்ள சரீர-சரீரி சம்பந்தத்தையும் மொழிந்தபடி காட்டியவாறு. எனவே இம்மூன்றும் ஸ்ரீ பாஷ்யம் குறித்தபடி.

4. இனி, புண்ணியத்தின் பொருள்: புண்ணியம்—க்ருஷ்ணன் "ஸாக்ஷாத் புண்ணியத்தை பாலும் சோறும் இட்டன்றோ வளர்க்கிறோம்" என்றபடியும், "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம் ஸநாதந தர்மம் நீயே யிறே" என்றபடியும் நோக்க, புண்ணியம் என்பது ஈண்டு க்ருஷ்ணனை வந்தது. அச்சொல் கருத்தாவாகுபெயரால் அவன் வெளியிட்ட கீதா சாஸ்த்ரத்துக்காயிற்று. பொருளாவது கீதா சாஸ்த்ரம்.

srivatsam

5. இனி, பூசுரர்தம் பத்தியத்தின் பொருள்: பூசுரர்-அந்தணர், வேதியர், அவரது பத்தியம் வேதம், பத்தியம் செய்யுள். இங்கு வேத மந்த்ரங்களைக் காட்டுவது. வேதியர்க்குச் குல வேதமே. இந்த வேதங்களின் விழுப்பொருளைப் பூதூர் முனிவன் வேதார்த்த ஸங்க்ரஹம், வேதாந்த தீபம், வேதாந்த ஸாரம் ஆகிய திவ்ய க்ரந்தங்களால் மொழிந்தார்.

6. இனி, பற்றறுக்குப் பொருள் சரணாகதி கத்யம், ஸ்ரீரங்க கத்யம் இரண்டிலும் பொருள் பட்ட பொருள். சரணாகதி கத்யத்தின் சுருக்கமே ஸ்ரீரங்க கத்யம் என்பர் சான்றோர்.

7. பற்றறுத்தால் முத்தியத்தின் பொருள் ஸ்ரீ வைகுண்ட கத்யத்தில் மொழியப்பட்ட பொருள். ஆக, இச்செய்யுளின் சாரம்பின்வருமாறு: பூதூர் முனிவன் ஸ்ரீபாஷ்யம், கீதாபாஷ்யம், வேதார்த்த ஸங்க்ரஹம், வேதாந்த தீபம், வேதாந்த ஸாரம், சரணாகதி கத்யம், ஸ்ரீரங்க கத்யம், ஸ்ரீவைகுண்ட கத்யம் என்ற எட்டு திவ்ய க்ரந்தங்களை மொழிந்துள்ளார் என்பது.

[குறிப்பு : இங்ஙனிருப்ப, கத்யத்ரயம் எம்பெருமானாரால் ஆக்கப்பட்டதுதானா என ஆராய புகுவது பேரபசாரமாகும்.]

8. மொழிக்கே கரும்பையுத் தேனையும் வைத்தந்த மொய்குழலார்
விழிக்கே யகப்பட் குழலுகின் றீர்கள் மெய்ஞ்ஞான நெஞ்சிற்
சுழிக்கே கொழிக்கும் யமுனைத் துறைமுனி சொலச்சொன்ன
வழிக்கே நினையுங் கீழ்ர் எதிரேவரும் வைகுந்தமே.

[இ-ள்.] இது "மாதரார் கயற்கண் என்னும் வலையுட் பட்டழுந்து" வாரை அறிவுறுத்தியவாறு. மொய்குழலார் மகளிர். மொழி-அவர்கள் பேசும் பேச்சு. வைத்து-உவமையாகச் சொல்லி வைத்து என்பதால், தாம் ஏற்றுக்கொள்ளாமையைக் குறிக்கிறார், கவி. கரும்பு—கருப்பஞ் சாறு

**அந்த**-என்றது தப்புதலருமை நோக்கி. **உழலுகின்றீர்:** விளி. **யமுனைத் துறைமுனி**—ஆளவந்தார். அவர் நெஞ்சில் மெய்ஞ்ஞானம் சுழிக்கே கொழிக்கும்: **மெய்ஞ்ஞானம்**—தத்துவ உணர்வு. **சுழிக்கே** ஒருங்கே திரண்டு நின்று (Concentrated). ''மார்பால் மனஞ்சுழிப்ப'' என்பது ஈண்டு ஒப்புநோக்கு. **கொழிக்கும்**—செழிப்புறும். **அம் முனி சொல்ல**—அந்த ஆளவந்தார் சொல்ல. ஆளவந்தார் சொல்லியது : பெரிய நம்பி இளையாழ்வாருக்குச் சமாச்ரயணம் செய்விக்க வேண்டும், திருக்கோட்டியூர் நம்பி சரமச்லோகப் பொருளை உபதேசிக்க வேண்டும், திருமாலையாண்டான் திருவாய்மொழிப் பொருளையும், பெரிய திருமலை நம்பி ஸ்ரீராமாயணப் பொருளையும், திருவரங்கப் பெருமாளரையர் திவ்யப்ரபந்தங்கள், ஸ்தோத்ரங்கள், நல்வார்த்தைகள் இவற்றையும் அருள வேண்டும் என்றும் ஆணையிட்டது.

அந்த ஆணையின்படி எதிராசர் பஞ்சாசார்யர்களை யடுத்து உபதேசம் பெற்றார். அங்ஙனம் உபதேசம் பெற்று எதிராசர் சொன்ன வழிக்கே நினையுங்கிடீர் என மேல் இயையும்.

ஆக, ஆளவந்தார் சொல்ல, எதிராசர் சொன்ன வழியை நினையுங்கோள் என்றபடி. **வழி** மார்க்கம், உபாயம்; பிரபத்தி குறித்தபடி: ''த்வத்பாத மூலம் சரணம் ப்ரபத்யே'' என்ற ஸ்தோத்ரரத்நமும், ''வேறு மோக்ஷோபாயங்கள் கூறுபவரோடு உறவறுத்து, எப்போதும் ப்ரபத்தி உபாயத்தையே பின்பற்றி வாழ்வாரோடு உடனுறையுங்கள்'' என்று எதிராசர் திருநாட்டுக்கு எழுந்தருளும் போது அருளிய வார்த்தையையும் [அவர் அருளிய 72 வார்த்தைகளில் இஃது 56 ஆவது] ஸ்மரிக்கவும். ஈண்டு ''உபாயமும் ப்ரபத்தியே''—மோக்ஷத்திற்கு ப்ரபத்தியே சிறந்த உபாயம் என்று பேரருளாளன் அருளிச் செய்த வார்த்தையையும் நினைக.

வழிக்கே : ஏகாரம் பிரிநிலையோடு தேற்றம். நினையுங்கிடீர்—நினையுங்கள்: **கிடீர்**—முன்னிலைப் பன்மை உரையசை. வியங்கோள் விகுதியுமாம். "உழலுகின்றீர்கள்! நினையுங் கிடீர்" என்று முடியும். [ப்ரபத்தி வழி] **நினைத்தால் எதிரே வரும்வைகுந்தமே.** "ஆளவந்தாரோடே நான்கூடியிருந்து குளிரப்பெற்றேனாகில் பரமபதத்திற்குப் படிகட்டியிருப்பேன்'' என்று எதிராசர் பலகாலும் பணித்தபடியை நினைக.

> 9. **வையகத் தேதன்னை வள்ளலென் றேத்தினும் வாய்திறவார்க்**
> **கையகத் தேநின்று கண்குளிர் வீர்கரு ணாகரனை**
> **மெய்யகத் தேவைத்த பூதூர் முனிதன் விரைமலர்த்தாள்**
> **பொய்யகத் தேநிற் கினுமக லாள்மணப் பூமகளே.**

[இ-ள்] **வையகம்.** மண்ணுலகு; [பொருள்களை] வைக்கும் இடம் எனப் பூமிக்குக் காரணப் பெயர். "கையரகத்தே'' என்பது "கையகத்தே'' எனக் குறைந்தது. கையர்—கீழ்மக்கள், மூடர், இனி **கை** என்பது சினையாகுபெயராய் ஆளைக் காட்டிற்று என்றுமாம். ''எத்தனை கை வேலை செய்தன?'' என்ற விடத்துப் போல. அகம்—வீடு, வாசற்கடை, **கண்குளிர்வீர் :** விளி. **கருணாகரன்** இராமபிரான். ''படிகொண்ட கீர்த்தி இராமாயண மென்னும் பக்திவெள்ளம், குடிகொண்ட கோயில்இராமாநுசர்'' என்றதும் காண்க. இராமாநுசனாதலின் இராமனை மெய்யகத்தே வைத்தல் இயல்பேன் **மெய்யகம்**—உண்மையுள்ளம். இனி **கருணாகரன்**—திருமால் என்னவுமாம். **விரை**—பரிமளம். **மலர்த்தாள்**—உவமைத் தொகை. **தாள்**—திருவடிகள். **பொய்யகம்**—வஞ்ச உள்ளம். மணப்பூமகள்—நறுமணம் வீசும் செந்தாமரையில் எழுந்தருளியிருக்கும் இலக்குமி தேவி. **அகலாள்** விட்டு நீங்காள். ''எம்பெருமானார் திருவடிகளே சரணம்'' என்று மனப்பூர்வமாக வன்றிப் பொய்யாக நினைத்தாலும், சகல ஸௌபாக்கியங்களும் லக்ஷ்மீ கடாக்ஷத்தால் ஏற்படும் என மங்களமாகத் தலைக்கட்டியவாறு.

**10. சந்தார் புயத்தெங்க ளாழ்வார் தமக்கும் ததியருக்கும்
அந்தாதி பத்து மணவாள தாச னலற்றியதால்
நந்தாத குற்றமுண் டாகா தவர்க்கொருநாய் கங்கைநீர்
தன்ருப்பந் திரக் குடித்தாலும் தீர்த்தத்திற் ருழ்வில்லையே.**

[இ-ள்] **சந்து**—அழகு, மணம், "நாட்கமழ் மகிழ் மாலை மார்வ" ஞகலின். **புயம்**—தோள். **எங்கள் ஆழ்வார்**—நம்மாழ்வார், பிரபந்நஜநகூடஸ்தராதலின் சொந்தம் பாராட்டுகிருர். திருவரங்கத்தம்மான் "நம் ஆழ்வார்" என்றதால், இவரும் "நம் ஆழ்வார்—எங்கள் ஆழ்வார்" என்கிருர். **தமக்கும் ததியருக்கும்**—ஈரிடத்தும் **உம்** இசை நிறை, நம்மாழ்வாருக்குத் ததியர் எதிராசர், ததியர்—அவனுக்குரியவர்: அடியார். "மாறன் அடிபணிந்துய்ந்தவன்" என்ருர் அமுதனுரும். [அந்தத் ததியருக்கு.]

**அந்தாதி பத்து**—பதிற்றந்தாதி. ஒன்பது செய்யுட்களே காணப்படினும் "அந்தாதி பத்து" என்றது அந்தாதி வகையினை நோக்கி எனத் தொடக்கத்தே குறித்தாம். **மணவாளதாசன்**—அழகிய மாணவாளதாசன் என்கிற திவ்ய கவி பிள்ளைப் பெருமாள் ஐயங்கார். **அலற்றியது**—இடைவிடாமலும் முறையின்றியும் பேசியது. இங்ஙன் கூறியது, பக்திப்பெருக்கு தெரிப்பதற் கென்க "பத்தர் சொன்னவும் பன்னப்பெறுபவோ" என்பதற்கேற்ப எதிராசரிடத்துப் பக்தி மீதூர இவ்வந்தாதி பேசியது என்க. **ஆல்**— மூன்றனுருபு; காரணப் பொருளது. **அவர்க்கு**—அந்த எதிராசருக்கு. **நந்தாத**—கெடாத, மறையாத, அவியாத. நந்தாத குற்றம் உண்டாகாது, எனவே குற்றமே இல்லை என்றபடி. எப்படி எனில்—**ஒரு நாய் தாழ்வில்லையே**—அதுபோல, இந்த உவமையால், ஒரு நாய்வாய் வைத்துக் குடித்ததாலே கங்கை நீர்ப்பெருக்குக்கு யாதொரு குறைவும் [தோஷம்] ஏற்படாது அதன் புனிதத் தன்மை ஒரே சீராய் இருப்பது போலே, தாம் எதிராசரின் சகல கல்யாண குணப்பெருக்கிலே தம் ஆதரம் தோற்ற இழிந்து வாயினுலே ஒரு பத்துப் பேசி அலற்றியதாலே, அவர் குணங்கட்கு யாதொரு குறையும் ஏற்படாது, முன்னர் இருந்தது போலவே ஒரே சீராய் ஒளிவிட்டு மிளிரும் என்ற கருத்தை வலியுறுத்துகிருர் கவி. "நச்வாவலீடமபி தீர்த்த மதீர்த்த மாஹ ?" என்று ஆழ்வான் இதே கருத்தைக் காட்டியுள்ளார் ஸ்ரீவைகுண்டஸ் தவத்தில்.

இச்செய்யுள், நூலாசிரியர் தாமே தம்மைப் பிறன் போலும் பதிகங் கூறியது: பிரயோக விவேக நூலார், "இதுதன்னைப் பிறன் போலும் நாந்தி கூறுகின்றது" என்றதும் காண்க. ஆக, இவ்வீற்றுச் செய்யுள், தன்னைப் பிறன் போலும் நாந்தி கூறுகின்ற பதிகச் செய்யுள். இது தற்சிறப்புப் பாயிரம் எனப்படும்.

அழகிய மணவாள தாசரென்கிற திவ்யகவி பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் அருளிச்செய்த எதிராசரந்தாதிக்கு உரையாசிரியச் சக்ரவர்த்தி **ஸ்ரீ. உ. வே. வை. மு. கோபால கிருஷ்ண மாச்சார்யா ஸ்வாமியின்** மாணுக்கராகிய ஜெகந்நாதாசார்யர் செய்த உரை முற்றும்.



# 13. பஜ யதிராஜம்

## பல்லவி

பஜ யதிராஜம், பஜ யதிராஜம்,
பஜயதிராஜம், பவ-பீரோ.

ஸ்ரீரங்கேச-ஜயாச்ரய-கேது :
ச்ரித-ஜந-ஸம்ரக்ஷண-ஜீவாது :
பவ-பய-ஜலதே : ஏஷஹி ஸேது :
பத்மா-நேது : ப்ரணதௌ ஹேது : (பஜ) 1

ஆதௌ ஜகதாதார : சேஷ :
ததநு ஸுமித்ராநந்தந-வேஷ :
ததுபரி த்ருத-ஹல-முஸல-விசேஷ :
ததநந்தரம் அபவத் குரு ரேஷ : (பஜ) 2

புங்க்தே வைஷயிகம்-ஸுகமந்ய :
ப்ரசகாஸ்த்யேவா நச்நந் நந்ய : ।
இதியஸ்தத்வம் ப்ராஹவதாந்ய :
தஸ்மா ததிக : கோநு வதாந்ய : (பஜ) 3

srivatsam

நஷ்டே நயநே கஸ்யா லோக :
சித்தே மத்தே கஸ்ய விவேக :
க்ஷீணே புண்யே கஸ் ஸுரலோக :
காமே தூதே கஸ் தவ சோக : (பஜ) 4

நிசி வநிதா-ஸுக-நித்ரா-லோல :
ப்ராத : பரதூஷண-படு-சீல :
அந்தர் யாதி நிஜாயு : கால :
கிம் ஜாநாதி நர : பசுலீல : (பஜ) 5

கேசில்லீலா-லாலஸ-கதய :
கேசித் பாலா-லாலித-ரதய :
கேசித் டோலாயித-ஹத-மதய :
கேபி ந ஸந்த்யர்ச்சித-யதிபதய : (பஜ) 6

யாவா நபலோ ஜரயா தேஹ :
தாவாந் ப்ரபலோ விஷயே மோஹ :
வசஸி விரக்தி ச்ருதி பரிவாஹோ
மநஸிஹிதஸ்த்வபரோபி விவாஹ : (பஜ) 7

கலுஷநி காயம் லலநாகாயம்
பச்யந் முஹ்யஸி ஸாயம் ஸாயம்
ஜஹி ஜஹி ஹேயம் தத்வ்யவஸாயம்
பஜ நிரபாயம் சரமோபாயம் (பஜ) 8

ராத்ரம் திவமபி பிக்ஷாசர்யா
கலஹாரயைவா கச்சதி பார்யா
மத்யே பாந்தவ—ஸேவா கார்யா
கதய கதா தவ தேவ—ஸபர்யா (பஜ) 9

அந்தம் நயநம் பூமௌ சயநம்
மந்தம் வசநம் மலிநம் வநநம்
தஸ்மிந் காலே கோப்தும் ஸதநம்
வாஞ்சஸி தத்த—தநூஜாநயநம் (பஜ) 10

தாளச்சதக்ருத—குப்ஜ குடீர:
ஸாயம் ஸந்த்யா கபளாஹார:
விவித—படச்சர—தார: க்ரூர:
ஸோபி விரிஞ்சி ஸாமாஹங்கார: (பஜ) 11

மந்த்ர—த்ரவ்ய—விசுத்தோ யாக:
ஸர்வாரம்ப—ஹ விராகஸ்த்யாக:
கர்த்தும் சக்யோ நகலௌ யோக:
கிம்து யதீச குணம்ருத—போக: (பஜ) 12

உபரி—மஹோ பல—வர்ஷா—ஸார:
மாரே கண்டக—கர்தமபூர:
கக்ஷே பாரச் சிரஸி கிசோர:
ஸுகயதி கோர: கஸ்ஸம்ஸார: (பஜ) 13

பஜஸி வ்ருதா விஷயேஷு துராசாம்
விவித—விசித்ர—மநோரத—கோசாம்
கியதபி லபஸே ந ஹி தத்ரைகம்
கிந்து வஜ்யரஸி மஹாந்தம் சோகம் (பஜ) 14

கச்சந லோகே கரபுட—பாத்ர:
பாதும் ஸுதமாச்ரிதமடஸத்ர:
தஸ்மிந் வருத்தே ஸதி ந களத்ர:
சபதிஹி ரண்டா ஸுத இதி புத்ர: (பஜ) 15

மநுஜபதிம்வா திகதிபதிம் வா
ஜலஜபவம் வா ஜகததிகம் வா
மமதாஹங் க்ருதி—மலிநோ லோகோ
நிந்ததி நிந்ததி நிந்தத்யேவ (பஜ) 16

பாபஹதோவா புண்யயுதோ வா
ஸுரநர—திர்யக்—ஜாதிகதோ வா
ராமாநுஜ—பத—தீர்த்தாந் முக்திம்
விந்ததி விந்ததி விந்தத் யேவ (பஜ) 17

குண—குணிநோர் பேத: கில நித்ய:
சிதசித்—த்வய—பரபேதஸ் ஸத்ய:
தத்த்வய—தேஹோ ஹரிரிதி—தத்வம்
பச்ய விசிஷ்டாத்வைதம் தத்வம் (பஜ) 18

யதி—பதி—பத—ஜல—கணிகாநேக:
சதுரக்ஷர—பத—யுக்ம—விவேக: ।
யஸ்யது பாலந கர்வ்யப லோக:
தஸ்ய பதேந ஹதோ யமலோக: (பஜ) 19

சிந்தய ஸர்வம் சிதசித்—ரூபம்
தநுரிதி தஸ்ய ஹரே ரநுரூபம்
தஸ்மாத் தஸ்மிந் ஸ்கலயஸி கோபம்
பச்சாத் பஜஸி துராபம் தாபம் (பஜ) 20

பச்சதுரக்ஷர—மந்த்ர—ரஹஸ்யம்
வேத தமேவ வ்ருணீஹி ஸதஸ்யம்
தச்சரண—த்வய— தாஸ்ய—முபாஸ்யம்
தத் விபரீதம் மதமபஹாஸ்யம் (பஜ) 21

வைஷ்ணவ—குல—குண— தூஷண—சிந்தாம்
மா குரு நிஜ—குல—சீலாஹந்தாம்
யதிபதிரேவ ஹி குருரேதேஷாம்
இதி ஜாநீஹி மஹத்வம் தேஷாம் (பஜ) 22

வித்யா—நிபுணா வய மித்யந்யே
ஹ்ருத்யா தநிநோ வய மித்யந்யே
ஸத்—குல—ஜாதா வய மித்யந்யே
தேஷு கலிம் பரிபூர்ணம் மந்யே (பஜ) 23

யம—கிங்கர—கர—சூலே:லோலே
பததபிகாத—விபாலே பாலே
தஹதி தநும் ப்ரதிகூலே காலே
கிம் ரமயஸி தத்காலே பாலே? (பஜ) 24

லலனா—குமாரம் சோபிதமாரம்
ரதி—ஸுக—ஸாரம் யுவதி—சரீரம்
கத—ஜீவித மதிகோர விகாரம்
த்ருஷ்ட்வா கச்சதி தூரம் தூரம் (பஜ) 25

நரவாஹந—கஜ—துரகா—ரூடா:
நாரீஸுத—போஷண—குண:கூடா:
நாநா ரஞ்ஜக—வித்யா ப்ரௌடா:
நாகரிகா: கிம் யதயோ மூடா: (பஜ) 26

யஸ்ய முகஸ்தா யதிபதி—ஸூக்தி:
தஸ்ய கரஸ்தா விலஸதி முக்தி:
நரகே பதிதம் நவநவ முக்தி:
நஹிரக்ஷதி ஸாமாந்ய நிருக்தி: (பஜ) 27

ச்ருதி—சிரஸாம் அத்யந்த— விதூஷ்யம்
ஸூத்ரா நபிமத—மதி—வைதூஷ்யம்
ப்ரதம—மமங்கள மந்ருத—விசேஷ்யம்
ப்ரலபஸி கிம் ப்ராக்ருத—க்ருத—பாஷ்யம் (பஜ) 28

தஸ்கர—ஜார—விதூஷக—தூர்த்தாம்
அஸ்கரமௌநி—திகம்பர வ்ருத்தா :
குப்த—ஸதீ—ஸுத—தந—மத—மத்தா :
குரவ : கிம் பரவஞ்சக—சித்தா : (பஜ) 29

காந்திமதி—ஸுகுமார—குமாரம்
கேசவ—ஸிம்ஹ—கிசோர முதாரம்
ராமாநுஜ மஹிராடவதாரம்
மூகாந்தாநபி மோக்ஷயிதாரம் (பஜ) 30

காஷாயம்பர—கவசித—காத்ரம்
கலித—கமண்டுலு— தண்ட— பவித்ரம்
வித்ருத—சிகா—ஹரிணஜிந—ஸூத்ரம்
வாக்யாதத்வைபாயந—ஸூத்ரம் (பஜ) 31

யாமுந—பூர்ண—க்ருபோஜ்வல—காத்ரம்
ராமாப்ஜாக்ஷமுநீக்ஷண—பாத்ரம்
கோமல—சடரிபு—பத—யுக—மாத்ரம்
ஸ்ரீ மாதவ—ஸேநாபதி—மித்ரம் (பஜ) 32

சாலக்ராமே—ஸர்வஹிதார்த்தம்
யேநாஸ்தாபி குரோ : பததீர்த்தம்
தத்குல—தைவதமிஹ புருஷார்த்தம்
ஸகலோபாயதிக—சரமார்த்தம் (பஜ) 33

ப்ரவசந—சக்த : ப்ரஜ்ஞா—யுக்த :
பரஹித—ஸக்த : பரமவிரக்த :
நாநா—தைவத—பக்தோப யுக்தோ
நபவதி முக்தோ நபவதி முக்த : (பஜ) 34

ஸந்த்யஜ—ஸகலமுபாயா சரணம்
வ்ரஜ ராமாநுஜ சரணௌ சரணம்
பச்யஸி தமஸ : பாரம் நித்யம்
ஸத்யம் ஸத்யம் புநரபி ஸத்யம் (பஜ) 35

பகவத்—ராமாநுஜ—ஷட்த்ரிம்சத்
ஸாலக்ராம—குருத்தம—வம்ச :
கௌண்டிந்ய : கவிராஹ பவித்ரம்
ரங்கார்யோ யதிராஜ ஸ்தோத்ரம் (பஜ) 36

ஸ்ரீமத்—ஸாலக்ராம—ஸ்தலாசார்ய—புருஷோத்தண்ட—
வேதாந்த—ரங்கநாதாசார்ய—விரசித—பஜ
யதிராஜ ஸ்தோத்ரம்.

---

# 4. ஸ்ரீ ராமாநுஜ அஷ்டபதீ

## முதல் அஷ்டபதீ

மஹதி பதே பரமே ச்ரிதவாநஸி தேவம்
பஜஸி நிஜாக்ருதிபிர் பஹுபாவம்
தேசிக! த்ருதசேஷ நிஜாங்க!
ஜய ஜய யோகிபதே! 1

சிரஸி–ஸஹஸ்ரமுகே த்ருதவாநஸி லோகம்
விதரஸி முநிநிவஹஸ்ய விவேகம்
தேசிக! த்ருத-போகிவராங்க!
ஜய ஜய யோகிபதே! 2

திநகர-வம்ச-வரே க்ருதவா நவதாரம்
நிஜ-க்ருதி-தர்சித-தர்சந-ஸாரம்
தேசிக! த்ருத-லக்ஷ்மணரூப!
ஜய ஜய யோகிபதே! 3

அத வஸுதேவக்ருஹே பஜதா ஹலிவேஷம்
மதுராபட-பாஷித-பூம-விசேஷம்
தேசிக! த்ருத-ஹலதர-ரூப!
ஜய ஜய யோகிபதே! 4

srivatsam

சடரிபு-வஸதி-தலே பஜஸே தருபாவம்
விரசித-ததுசித-பத-யுக-ஸேவம்
தேசிக! த்ருத-பூருஹ-ரூப!
ஜய ஜய யோகிபதே! 5

குருகுல-கர்ணபுடே-கதய: ஸ்வரஹஸ்யம்
கதிபய குரு-ஜநலோசந-ரஸ்யம்
தேசிக! த்ருத-பாவி-நராங்க!
ஜய ஜய யோகிபதே! 6

இஹ புவி பூதபுரே க்ருதவா நவதாரம்
நிகில-ஜந-நயந-ஹ்ாரி-விஹாரம்
தேசிக! த்ருத-யோகிவராங்க!
ஜய ஜய யோகிபதே! 7

அதகுருகாநகரே-பஜதா குருபாவம்
ரங்க-சயந-க்ருத-நிஜ-பத-ஸேவம்
தேசிக! த்ருத-வர-வர-ரூப!
ஜய ஜய யோகிபதே ‖ 8

ஜயது ஜயது தீரஸ் ஸர்வவித்யா-விஹார:
சமதம-குண-பூர: ஸத்ய-நித்யாதிகார: |
குமதி-வந-குடார: குண்டலீசாவதார:
கலி-கலுஷ-விதார: காந்திமாந் பாஷ்யகார: ‖ 9

59

## மூன்ருவது அஷ்டபதீ

அகில-சமல-சமநோத்பவ!
விஜிதோத்பவ-புவந-ஸதவந-விதாந!
ஜய ஜய யோகிபதே!—ராமாநுஜ!
ஜய ஜய யோகிபதே! 1

ஹரித-மஹித-குல-பூஷண!
விஹிதேஷண! புரவர-பூதபுரீஜ!
ஜய ஜய யோகிபதே! ராமாநுஜ!
ஜய ஜய யோகிபதே! 2

ஸதபிலஷித-ஹரிசந்தந!
க்ருதவந்தந குருவர கேசவ ஜாத!
ஜய ஜய யோகிபதே!—ராமாநுஜ!
ஜய ஜய யோகிபதே! 3

அஹ்ருத-ஸஹஜ-குண-பூஷித!
சுப பாஷித! வரகுல-காந்திமதீஜ!
ஜய ஜய யோகிபதே—ராமாநுஜ!
ஜய ஜய யோகிபதே! 4

விநத-விவித-ஜந-ரக்ஷண!
பவ-சிக்ஷண! ப்ரகடித-லக்ஷ்மண-பாவ!
ஜய ஜய யோகிபதே!-ராமாநுஜ!
ஜய ஜய யோகிபதே! 5

srivatsam

நிகில-நிகம-கண-தர்சந!
ஸஸுர்தர்சந! நிகில-கலாநிதி-பூத!
ஜய ஜய யோகிபதே! ராமாநுஜ!
ஜய ஜய யோகிபதே! 6

நிகம-ஸுகம-பத-தர்சந!
ரிபுகர்சந! விதவித-யாதவகர்வ!
ஜய ஜய யோகிபதே!—ராமாநுஜ!
ஜய ஜய யோகிபதே! 7

ஸுகுண-சரண-ஜித-யாமுந!
ஹத-காமந-குருகுல-பவுக-நிநாத!
ஜய ஜய யோகிபதே!-ராமாநுஜ!
ஜய ஜய யோகிபதே! 8

ராக்ஷஸ-பரிவ்ருட மோசந!
ச்ருதி-லோசந! த்ரிபுவந-ஜயதபதாந!
ஜய ஜய யோகிபதே! ராமாநுஜ!
ஜய ஜய யோகிபதே! 9

குமதி-குடிலமதி-லாலித!
ஹரிபாலித! நதநுத-ஹஸ்திகிரீச!
ஜய ஜய யோகிபதே! ராமாநுஜ!
ஜய ஜய யோகிபதே! 10

நம: ப்ரணவசோபிதம் நவகஷாய-கண்டாம்பரம்
த்ரிதண்ட-பரி-மண்டிதம் த்ரிவித-தத்வ-நிர்வாஹகம்!
தயாஞ்சித-த்ருகஞ்சலம் தஹித-வாதி-வாக்வைபவம்
சமாதி-குண-ஸாகரம் சரணமேமி ராமாநுஜம்



ஸ்ரீ ராமாநுஜர் ஏரி. (தொண்டனூர் இதன் கரையின் பெயர் மோதி தலாப் (முத்துக்குளம்)

srivatsam



கல்யாணி புஷ்கரிணி, கல்யாணி நாச்சியார் விக்கிரகத்தை ஸ்ரீ ராமாநுஜர் கண்டெடுத்த இடம்
Photos by the Courtecy of Bharanidaran.



ஸ்ரீ நம்மாழ்வார் மூலமாக நாலாயிரம் பெற்ற
ஸ்ரீ நாதமுனிகள். (அவதார ஸ்தலம்)
காட்டு மன்னார் கோவில்



அவர் தம் திருப்பேரனாகிய ஸ்ரீ ஆளவந்தார்

srivatsam



திருநாராயணன் (மூலவர்)
திருநாராயணபுரம்

srivatsam



ஸ்ரீ ராமாநுஜர் திருவடி சந்நிதி.
(வேத புஷ்கரிணிக்கு மேற்குபுரம் காணப்படும் ஸ்வரூபம்)



பரிதான சிலா : ஸ்ரீ உடையவர் திருவடிகள். ஸ்ரீ உடையவர் மீண்டும் காஷாயம் ஏற்றுக் கொண்ட இடம். திருநாராயணபுரம்



ஸ்ரீ உடையவர் சமணர்களை வென்ற இடத்தில் ஜயஸ்தம்பம்
ஸ்ரீ நம்பி நாராயணர் கோவில் (தொண்டனூர்)



திருநாராயணபுரம் : ஸ்ரீ உடையவர்

srivatsam



தொண்டனூர் : ஸ்ரீ உடையவர் (நிஜாகாரத்துடன்)
[சமணர்களோடு 1000 தலைகளுடன் திரைக்குப்பின்
வாது செய்த நிலை. ஸ்ரீ உடையவர் தம்முடைய இயல்பான
திருமேனியுடன் அமர்ந்து வாது செய்தல்





srivatsam

திருக்கோட்டியூர்,
ஸ்ரீ திருக்கோட்டியூர் நம்பி



திருக்கோட்டியூர் நம்பி திருமாளிகை



திருக்கோட்டியூர் நம்பியும், ஸ்ரீ உடையவரும்,
திருவாராதனத்தில் அருகில் பவிஷ்யதாசார்ய விக்ரஹம்



மதுரமங்கலம் எம்பார்



srivatsam



திருமாலிருஞ்சோலை கோபுரமும், மண்டபமும்

srivatsam



திருமாலிருஞ்சோலை ஸ்ரீ ஸோமஸ்கந்த விமானம்



திருக்கோட்டியூர் ஸ்ரீ ஸௌம்ய நாராயணப் பெருமாள் திருக்கோயில்
தாம் கற்ற மந்திரத்தை ஸ்ரீ உடையவர் உலகத்தாருக்கு உபதேசம் செய்த ஸ்தலம்

srivaishnavam



திருக்கோட்டியூர் ஸ்ரீ ஸௌம்ய நாராயணப் பெருமாள்



திருக்குடந்தை ஸ்ரீ கோமளவல்லித் தாயாரும், ஸ்ரீ ஆராவமுதனும்



திருக்கண்ணபுரம் ஸ்ரீ கண்ணபுரத் தாயாரும், ஸ்ரீ சௌரிப் பெருமாளும்



srivatsam

ஆழ்வார் திருநகரி விமானம்



ஆழ்வார் திருநகரி, ஸ்ரீ நம்மாழ்வாரும் ஸ்ரீ உடையவரும்
(பவிஷ்யதாசார்ய விக்ரஹம்)

பகவான் ஸ்ரீவைகுண்ட நாதன் ஆதிசேஷனாகிய ஆசனத்தின் மேலே, தனது இடது திருக்காலைப் பரப்பியும், ஆச்ரிதர்களுடைய துன்பங்களைப் போக்கும் வலது திருக்காலை முடக்கி அமர்த்தியும், வலது திருக்கையை முழங்காலில் பொருத்தியும், ஒரு திருக்கையை ஆதிசேஷனின் மேல் வைத்தும், விரோதிகளை அடக்க வல்லனவான சங்கு சக்கரங்களை மற்றை இரண்டு திருக்கைகளில் ஏந்தியும், ஸ்ரீபூமி நீளா தேவிகளுடன், திருவாபரணங்களின் சோதியுடன் விளங்குகிறான். அவன் நமக்குச் சந்தோஷத்தை அருளுவானாக.

srivatsam

இந்த ஆதிசேஷனே ஸ்ரீஉடையவராக அவதரித்துள்ளார் என்பது படத்திலிருந்து அறியலாகும். இந்த அவதாரப் பெருமைபற்றி மஹாமஹோபாத்யாய ஸ்ரீ. உ. வே. காஞ்சி ப்ர. ப. அண்ணங்கராசார்ஸ்வாமி அருளிய கட்டுரை இத்துடன் வைக்கப் பெற்றுள்ளது.

---

ஸ்ரீரஸ்து.

# எம்பெருமானார் ஆதிசேஷாவதாரர்

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் மஹாமஹிமோபாத்யாய
அண்ணங்கராசார்யர் ஸ்வாமி

ஸ்ரீ வைகுண்டநாத ஸ்தோத்ரபத்யமான * ஸவ்யம் பாதம் ப்ரஸார்ய * என்கிற ச்லோகத்தில் * நாகபோகே நிதாய * என்றவிடத்தில் எம்பெருமானாருடைய சேஷாவதாரத்வத்தை அந்தரங்கார்த்தமாகப் பெரியார் அநுஸந்திப்பதுண்டாதலால் அந்த அவதார ரஹஸ்யம சிறிது விவரிக்கப்படுகிறது.

இராமாநுச நூற்றந்தாதியில் (33) * அடையார்கமலத் தலர்மகள் கேள்வன் * என்னும் பாசுரம் எம்பெருமானாரைப் பஞ்சாயுதங்களின் திருவவதாரமாகச் சொல்லிற்றேயன்றி ஆதிசேஷாவதாரமாகச் சொல்லிற்றில்லை. அப்பாசுரத்தை யடியொற்றி ஸ்ரீமத் வேதாந்ததேசிகன் யதிராஜ ஸப்ததியில் * ப்ரதயந் விமதேஷு தீக்ஷ்ணபாவம் * என்கிற சலோகத்தில் * வவ்ருதே பஞ்சபிராயுதைர் முராரே: * என்று பஞ்சாயுதாவதார பூதரென்றார். அதிலேயே * விஷ்வக்ஸேநோ யதிபதிரபூத் வேத்ரஸாரஸ் த்ரிதண்ட: * என்று விஷ்வக்ஸேநாவதார பூதரென்றும் ஸாதித்துள்ளார். ஆதிசேஷாவதாரபூதரென்பதற்கு ப்ரமாண மென்னென்று பலர் உணரவிரும்புவர்கள். அன்னவர்கட்கு உணர்த்துகின்றோம்.

ஆசாரியர்களைப்பற்றி அவதரிக்கும் நூல்கள் ஸ்தோத்ர க்ரந்தங்களென்றும் சரித்திர க்ரந்தங்களென்றும் இருவகைப்படும். ஸ்தோத்ர க்ரந்தங்களில் பெரும்பாலும் உத்ப்ரேக்ஷைகள் மிக்கிருக்கும். சரித்திர நூல்களைக்கொண்டுதான் அவதாரதத்துவத்தை நிர்ணயிக்கலாகும்.

திருமலை அனந்தாழ்வானருளிச்செய்த ஸ்ரீ வேங்கடாசல இதிஹாஸமாலையில்—"ச்ரிய:பதி: நிஜாந்தரங்ககிங்கரம் தல்பபூதம் அநந்தம் தரணீதலே அவதீர்ய.........." இத்யாதி ஸ்ரீஸூக்திகள் சரித்திரங் கூறும்வகையில் மூதன் முதலாக அவதரித்தவை. இவற்றின் பொருளாவது—எம்பெருமான் தனது அத்தாணிச் சேவகனும் படுக்கையுமான திருவனந்தாழ்வானை நோக்கி, 'நீ நிலவுலகத்திற்குச் சென்று பிறந்து எவ்வுயிரையும் உய்விக்கக்கடவை' என்று நியமித்தருள அந்த நியமனத்தைச் சிரமேற்கொண்ட ஆதிசேஷன் அப்படியே பிங்கள வாண்டில் சித்திரைத் திருவாதிரையில் கேசவஸோமயாஜிகளுக்குப் புதல்வனாகப் பிறந்தருளினன் என்பதாம்.

ஸ்வாமியின் ஸமகாலத்தவரான வடுக நம்பியும் தாம் பணித்த ச்லோக ரூபமான யதிராஜவைபவத்தில்- "வேதாந்த ஸித்தாந்த்ஸமர்த்தநாய பாஹ்யாந்தர் ப்ராந்த மதாபநுத்த்யை, சேஷாம்சக: கேசவயஜ்வதேவ்யாம் தேஜோநிதி: கச்சிதிஹாவிராஸீத்."

என்றருளினர். [வேதாந்தஸித்தாந்த ஸ்தாபனார்த்தமாகவும், பரமதங்களைத் தொலை
க்கிற்காகவும் திருவனந்தாழ்வானுடைய அம்சபூதராய் தேஜோநிதியான ஒரு மஹான்
கேசவஸோமயாஜிகளின் தேவியாரிடத்தில் திருவவதரித்தார் என்றவாறு.]

எம்பெருமானாரையல்லது தேவு மற்றறியாதவரும் மஹாகவிச்ரேஷ்டருமான
கருடவாஹநபண்டிதர் தாமியற்றிய திவ்யஸூரி சரித மஹாகாவ்யத்தில்—

"பௌஜங்கம் வபுரபஹாய சேஷபோகீ
யத்ரூபம் த்ரிபுவந வந்திதம் ஜகாம"

[திருவனந்தாழ்வான் தனது உரகவுடலை விட்டொழித்து மூவுலகும் போற்றும்
இராமானுச முனியுருவத்தை யெய்தினன்] என்றுரைத்தனர்.

அக்காலத்தில் அரசனது புதல்வியை நலிந்த ப்ரஹ்மரக்ஷஸ்ஸை யோட்டுவதற்காக
யாதவப்ரகாசன் தனது வித்யார்த்தி மண்டலத்தோடுகூட ராஜக்ருஹம் சென்று ஏதோ
மந்திரிக்க, அப்போது அந்த ப்ரஹ்மரக்ஷஸ்ஸு சொன்ன வார்த்தையை இந்த திவ்யஸூரி
சரிதகாரர்,

"த்ரஸ்தோஹம் தவ ஸவிதோஷிதாதமுஷ்மாத்
சேஷாம்சாத் புவமவிதும் க்ருதாவதாராத்."

என்று ச்லோகமாக்கியுள்ளார். "ஓ யாதவரே! உமக்கு நான் அஞ்சமாட்டேன்; உமது
அருகே யிருப்பவரும் இம்மாநிலத்தைக் காத்தருள ஆதிசேஷாம்சமாக அவதரித்தவருமான
இந்த மஹானிடத்தில் நானஞ்சுகின்றேன்" என்றதாயிற்று.

srivatsam

இங்ஙனே அளவுகடந்த ப்ரமாணங்கள் உள்ளன.

"அநந்த: ப்ரதமம் ரூபம் லக்ஷ்மணஸ்து தத:பரம்,
பலபத்ரஸ் த்ருதீயஸ்து கலௌ ராமாநுஜஸ் ஸ்ம்ருத:."

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

# மூன்றாம் பிரிவு

## १. श्रीवादिभीकरगुरुभिरनुगृहीतं श्रीरामानुज - सुप्रभातम्

कौसल्यासुप्रजा राम! पूर्वा सन्ध्या प्रवर्तते।
उत्तिष्ठ नरशार्दूल! कर्तव्यं दैवमाह्निकम्॥

मातस्समस्तजगतां मधुकैटभारेः वक्षोविहारिणि मनोहर - दिव्यमूर्ते।
श्रीस्वामिनि श्रितजन - प्रियदान - शीले! श्रीलक्ष्मणेशदयिते! तव सुप्रभातम्॥ १॥

तव सुप्रभातमरविन्द - लोचने भवतु प्रसन्नमुखचन्द्रमण्डले।
विधि शङ्करेन्द्र - वनिताभिवन्दिते! यतिराजनाथ - दयिते! दयानिधे!॥ २॥

जय जय यतिसार्वभौमामलस्वान्त! तुभ्यं नमः
जय जय जनिसिन्धु - मग्नात्म - सन्तारक - ग्रामणीः।
जय जय भजनीय! कूरेशमुख्यैः प्रसीद प्रभो!
जय जय विदुषां निधे! जागृहि श्रीनिधे! जागृहि॥ ३॥

srivatsam

## 1. ஸ்ரீராமாநுஜ - ஸுப்ரபாதம்

கௌஸல்யா-ஸுப்ரஜா ராம! பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே।
உத்திஷ்ட நரசார்தூல! கர்தவ்யம் தைவமான்ஹிகம்॥

1.
மாதஸ் ஸமஸ்த ஜகதாம் மதுகைடபாரேஃ
வக்ஷோவிஹாரிணி மநோஹர திவ்ய மூர்த்தே!।
ஸ்ரீ ஸ்வாமிநி ச்ரிதஜந - ப்ரியதாந - சீலே!
ஸ்ரீ லக்ஷ்மணேசதயிதே! தவ ஸுப்ரபாதம்॥

2.
தவ ஸுப்ரபாத மரவிந்த லோசநே!
பவது ப்ரஸன்ன - முக - சந்த்ர மண்டலே!
விதி - சங்கரேந்த்ர - வனிதாபிவந்திதே!
யதிராஜநாத - தயிதே! தயாநிதே!॥

3.
ஜய ஜய யதிஸார்வபௌமாமல - ஸ்வாந்த! துப்யம் நமஃ
ஜய ஜய ஜநிஸிந்து - மக்நாத்ம - ஸந்தாரக - க்ராமணீஃ।
ஜய ஜய பஜநீய! கூரேசமுக்யைஃ ப்ரஸீத ப்ரபோ!
ஜய ஜய விதுஷாந் நிதே! ஜாக்ருஹி, ஸ்ரீநிதே! ஜாக்ருஹி॥

पूर्णार्य पूर्ण - करुणा - परिलब्ध - बोध ! वैराग्य - भक्ति - सुख - दिव्य - गुणामृताब्धे !
श्रीयामुनार्य - पदपङ्कज - राजहंस ! रामानुजार्य ! भगवन् ! तव सुप्रभातम् ॥ ४ ॥

आनेतुमद्य वरदस्य गजाद्रिभर्तुः पानीयमच्छमतिशीतमगाधकूपात् ।
ध्वान्तं निरस्तमरुणस्य करैस्समन्तात् रामानुजार्य ! भगवन् ! तव सुप्रभातम् ॥ ५ ॥

श्रीरङ्गराजपद - पङ्कजयोरशेषकैङ्कर्यमाकलयितुं सकुतूहलस्त्वम् ।
उत्तिष्ठ नित्यकृतिमप्यखिलां च कर्तुं रामानुजार्य ! भगवन् ! तव सुप्रभातम् ॥ ६ ॥

त्वां वीक्षितुं समुपयाति वृषाचलेन्द्रः त्वत्संप्रक्लृप्त - वरशङ्खरथाङ्गपाणिः ।
संयोजितामुरसि मां भवतैव बिभ्रत् रामानुजार्य ! भगवन् ! तव सुप्रभातम् ॥ ७ ॥

श्रीमत्कुरङ्ग - परिपूर्ण - विभुस्त्वदुक्तं श्रीभाष्यशास्त्रममलं त्वयि भक्तियुक्तः ।
श्रोतुं समिच्छति यतीन्द्र ! शिरोऽर्थपुण्ड्रः तं बोधयार्थमखिलं तव सुप्रभातम् ॥ ८ ॥

---

srivatsam

4. பூர்ணர்ய - பூர்ண - கருணை - பரிலப்த - போத !
வைராக்ய - பக்தி - ஸுக - திவ்ய - குணம்ருதாப்தே !
ஸ்ரீயாமுனர்ய - பதபங்கஜ - ராஜஹம்ஸ !
ராமானுஜார்ய ! பகவந் ! தவ ஸுப்ரபாதம் ! ॥

5. ஆநேது மத்ய வரதஸ்ய கஜாத்ரி - பர்த்து:
பாநீய மச்ச மதிசீத மகாத கூபாத்
த்வாந்தம் நிரஸ்தம் அருணஸ்ய கரைஸ் ஸமந்தாத்
ராமானுஜார்ய ! பகவந் ! தவ ஸுப்ரபாதம் ॥

6. ஸ்ரீரங்கராஜ-பதபங்கஜயோ ரசேஷ-
கைங்கர்யம் ஆகலயிதும் ஸகுதூஹலஸ் த்வம்
உத்திஷ்ட நித்ய க்ருதிமப்யகிலாஞ்ச கர்த்தும்
ராமாநுஜார்ய ! பகவந் ! தவ ஸுப்ரபாதம் ॥

7. த்வாம் வீக்ஷிதும் ஸமுபயாதி விருஷாசலேந்த்ர:
த்வத் ஸம்ப்ரக்லுப்த - வரசங்க ரதாங்கபாணி: ।
ஸம்யோஜிதா முரஸி மாம் பவதைவ பிப்ரத்
ராமாநுஜார்ய ! பகவந் ! தவ ஸுப்ரபாதம் ।

8. ஸ்ரீமத் குரங்க - பரிபூர்ண - விபுஸ்த்வ துக்தம்
ஸ்ரீபாஷ்ய சாஸ்த்ர மமலம் த்வயி பக்தியுக்த: !
ச்ரோதும் ஸமிச்சதி யதீந்த்ர ! ஸிதோர்த்வ புண்ட்ர:
தம் போதயார்த்தம் அகிலம் தவ ஸுப்ரபாதம் ॥

श्रीभाष्यमालिखितुमात्त - विशाल - लेख्यः श्रीवत्सचिह्न - गुरुरानत - दिव्य - गात्रः ।
वेदान्तसूत्रमपि वक्तुममुष्य सर्वं उत्तिष्ठ लक्ष्मणमुने! तव सुप्रभातम् ॥ ९ ॥

श्रीमान् स पूर्णवटुरादरतः प्रगृह्य श्रीपादुकां यतिपते! पदयोः प्रयोक्तुं ।
द्वारि स्थितिं वितनुते प्रणतार्तिहारिन्! रामानुजार्य! भगवन्! तव सुप्रभातम् ॥ १० ॥

काषायवस्त्र - कटिसूत्र - कमण्डलूंश्च श्रीदन्तकाष्ठमपि देशिकसार्वभौमाः ।
पाणौ निधाय निवसन्ति विशुद्ध - गात्राः रामानुजार्य! भगवन्! तव सुप्रभातम् ॥ ११ ॥

त्वां बोधयन्ति गुरवः प्रथिता महान्तः श्रीवैष्णवाश्च यमिनस्तव पादभक्ताः ।
एकान्तिनश्च विमलास्त्वदनन्यभावाः तान् पालयाद्य यतिशेखर! सुप्रभातम् ॥ १२ ॥

ब्राह्मे प्रबुध्य विबुधाः स्वगुरून् प्रणम्य रामानुजाय नम इत्यसकृद्ब्रुवाणाः ।
अष्टाक्षरं सचरमं द्वयमुच्चरन्ति रामानुजार्य! भगवन्! तव सुप्रभातम् ॥ १३ ॥

---

9. ஸ்ரீபாஷ்ய மாலிகிதும் ஆத்த விசாலலேக்ய:
srivatsam
ஸ்ரீவத்ஸசின்ஹ-குருரானத-திவ்யகாத்ர: ।
வேதாந்த ஸூத்ரமபி வக்தும் அமுஷ்ய ஸர்வம்
உத்திஷ்ட லக்ஷ்மணமுநே! தவ ஸுப்ரபாதம் ॥

10. ஸ்ரீமாந் ஸ பூர்ண வடுராத ரத: ப்ரக்ருஹ்ய
ஸ்ரீபாதுகாம் யதிபதே! பதயோ: ப்ரயோக்தும் ।
த்வாரி ஸ்திதிம் விதநுதே ப்ரணதார்த்திஹாரின்!
ராமாநுஜார்ய! பகவந்! தவ ஸுப்ரபாதம் ॥

11. காஷாய வஸ்த்ர-கடிஸூத்ர-கமண்டலூம்ச்ச
ஸ்ரீதந்த-காஷ்டமபி தேசிக-ஸார்வபௌமா: ।
பாணௌ நிதாய நிவஸந்தி விசுத்தகாத்ரா:
ராமானுஜார்ய! பகவந்! தவ ஸுப்ரபாதம் ।

12. த்வாம் போதயந்தி குரவ: ப்ரதிதா மஹாந்த:
ஸ்ரீவைஷ்ணவாச்ச யமினஸ் தவ பாதபக்தா: ।
ஏகாந்தினச்ச விமலா ஸ்த்வதனன்யபாவா:
தாந் பாலயாத்ய யதிசேகர! ஸுப்ரபாதம் ।

13. ப்ராஹ்மே ப்ரபுத்ய விபுதா: ஸ்வகுரூன் ப்ரணம்ய
ராமாநுஜாய நம இத் யஸக்ருத் ப்ருவாணா: ।
அஷ்டாக்ஷரம் ஸசரமம் த்வயமுச்சரந்தி
ராமாநுஜார்ய! பகவந்! தவ ஸுப்ரபாதம் ॥

प्रातः पठन्ति परम - द्रविड - प्रपन्नगायत्रिमन्त्र - शत - मष्टशिरस्कमच्छम् ।
श्रीवैष्णवास्तव पदाब्ज - निविष्ट - भावाः रामानुजार्य ! भगवन् ! तव सुप्रभातम् ॥ १४ ॥

आराधनं रचयितुं कमलासखस्य श्रीयादवाचलपते र्विविधोपचारैः ।
पातुं च दृष्टि - कमलेन नतानशेषान् रामानुजार्य ! भगवन् ! तव सुप्रभातम् ॥ १५ ॥

संसेव्य ! सप्तशत - संयमि - सार्वभौमैः सद्देशिकैस्सकल - शास्त्रविदां वरिष्ठैः ।
एकान्तिभिः परमभागवतै र्निषेव्य ! रामानुजार्य ! भगवन् ! तव सुप्रभातम् ॥ १६ ॥

गद्य - त्रयं निगम - शेखर - दीप - सारौ वेदार्थ - संग्रहमपि प्रथितं च नित्यम् ।
गीतार्थ - भाष्यमपि देशिक - पुङ्गवानां दातुं प्रसीद यतिशेखर ! सुप्रभातम् ॥ १७ ॥

पादाम्बुजं यतिपते ! शरणं विहर्तुं संगत्य संसरण - वारिधि - लङ्घनोत्काः ।
आयान्ति हस्त - कमलाभिधृतोपचाराः तान् पाहि ते करुणया तव सुप्रभातम् ॥ १८ ॥

---

14. ப்ராதః படந்தி பரமத்ரவிடப்ரபன்ன-
காயத்ரி-மந்த்ரசதமஷ்ட சிரஸ்க மச்சம் ।
ஸ்ரீவைஷ்ணவாஸ் தவ பதாப்ஜ-நிவிஷ்டபாவாஃ
ராமாநுஜார்ய! பகவன் ! தவ ஸுப்ரபாதம் ॥

srivatsam

15. ஆராதனம் ரசயிதும் கமலா-ஸகஸ்ய
ஸ்ரீயாதவாசலபதேః விவிதோபசாரைః ।
பாதும்ச த்ருஷ்டி கமலேந நதானசேஷாந்
ராமாநுஜார்ய! பகவன் ! தவ ஸுப்ரபாதம் ॥

16. ஸம்ஸேவ்ய - ஸப்தசத - ஸம்யமி - ஸார்வபௌமைః
ஸத்தேசிகைః ஸகல - சாஸ்த்ர - விதாம் வரிஷ்டைః ।
ஏகாந்திபிః பரமபாகவதைர் நிஷேவ்ய !
ராமாநுஜார்ய! பகவன்! தவ ஸுப்ரபாதம் ॥

17. கத்யத்ரயம் நிகமசேகர-தீபஸாரௌ
வேதார்த்த ஸங்க்ரஹமபி ப்ரதிதஞ்ச நித்யம் ।
கீதார்த்த - பாஷ்யமபி தேசிக - புங்கவானாம்
தாதும் ப்ரஸீத யதிசேகர ! ஸுப்ரபாதம் ॥

18. பாதாம்புஜம் யதிபதே! சரணம் விஹர்தும்
சங்கத்ய ஸம்ஸரண - வாரிதி - லங்கநோத்காః ।
ஆயாந்தி ஹஸ்த-கமலா-பித்ருதோபசாராః
தான் பாஹிதே கருணயா தவ ஸுப்ரபாதம் ॥

स्नातुं कवेरतनया - सलिलेषु शिष्यैः आचार्य - पूरुष - वरै र्यतिभि र्विशुद्धैः ।
श्रीवैष्णवैश्च सह सेव्य ! महानुभावैः रामानुजार्य ! भगवन् ! तव सुप्रभातम् ॥ १९ ॥

रामानुजार्य ! रमणीय - गुणाभिराम ! रागादि - दूरग ! गुरो ! गुरु - सार्वभौम ! ।
सत्त्व - प्रधान ! शरणागतवत्सल ! त्वत्पादाब्जयोरिह परत्र च किंकरः स्याम् ॥ २० ॥

---

## २. श्रीभाष्यकार - मङ्गलम्

श्रीपराङ्कुश - पादाब्ज - सुरभीकृतमौलये ।
श्रीवत्सचिह्न - नाथाय यतिराजाय मङ्गलम् ॥ १ ॥

नाथ - पद्माक्ष - रामार्य - पाद - पङ्कज - सेविने ।
सेव्याय सर्वयमिनां यतिराजाय मङ्गलम् ॥ २ ॥

पूर्णार्य - पूर्ण - करुणापात्रायामिततेजसे ।
मालाधरप्रियायास्तु यतिराजाय मङ्गलम् ॥ ३ ॥

srivatsam

---

19. ஸ்நாதும் கவேர தநயா ஸலிலேஷு சிஷ்யைః
ஆசார்ய பூருஷவரைர் யதிபிர் விசுத்தைః ।
ஸ்ரீவைஷ்ணவைச்ச ஸஹ ஸேவ்ய மஹாநுபாவை:
ராமாநுஜார்ய! பகவன்! தவ ஸுப்ரபாதம் ॥

20. ராமாநுஜார்ய! ரமணீய-குணாபிராம!
ராகாதி தூரக! குரோ! குருஸார்வ பௌம! ।
ஸத்வப்ரதாந! சரணாகத-வத்ஸல! த்வத்
பாதாப்ஜயோர்ః இஹபரத்ரச கிங்கரః ஸ்யாம் ॥

---

## 2. ஸ்ரீபாஷ்யகார - மங்களம்

ஸ்ரீ பாராங்குச-பாதாப்ஜ-ஸுரபீக்ருத-மௌலயே ।
ஸ்ரீவத்ஸசிந்ஹநாதாய யதிராஜாய மங்களம் । 1 ॥

நாத-பத்மாக்ஷ-ராமார்ய-பாத-பங்கஜ-ஸேவிநே ।
ஸேவ்யாய ஸர்வயமிநாம் யதிராஜாய மங்களம்॥ 2 ।

பூர்ணார்ய-பூர்ணகருணா-பாத்ராயாமித-தேஜஸே ।
மாலாதர-ப்ரியாயாஸ்து யதிராஜாய மங்களம் । 3 ।

संसेव्य यामुनाचार्यं एकलव्योऽस्म्यहं गुरोः ।
इत्येवं वदते नित्यं यतिराजाय मङ्गलम् ॥ ४ ॥

श्रीकाञ्चीपूर्णमिश्रोक्त रहस्यार्थविदे सदा ।
देवराजप्रियायास्तु यतिराजाय मङ्गलम् ॥ ५ ॥

श्रीमद्गोष्ठीपुरीपूर्णदिव्याज्ञां कुर्वते मुदा ।
श्लोकार्थं गृह्णते तस्मात् यतिराजाय मङ्गलम् ॥ ६ ॥

कूरेश - कुरुकानाथ - दाशरथ्यादि - देशिकाः ।
यच्छिष्या भान्ति ते तस्मै यतिराजाय मङ्गलम् ॥ ७ ॥

चरम - श्लोक - तत्त्वार्थं ज्ञात्वाऽऽर्याज्ञां विलङ्घ्य च ।
दिशते तं स्वकीयेभ्यः यतिराजाय मङ्गलम् ॥ ८ ॥

श्रीशैलपूर्णकृपया श्रीरामायणमर्थतः ।
भक्त्या येन श्रुतं तस्मै यतिराजाय मङ्गलम् ॥ ९ ॥

शङ्करादि - कुदृष्टीनां बाह्यानां निधनाय च ।
श्रीभाष्यं कुर्वते तस्मै यतिराजाय मङ्गलम् ॥ १० ॥

कुर्वन्नुपनिषद्भाष्यं जगद्रक्षां करोति यः ।
दयायाः परतन्त्राय भाष्यकाराय मङ्गलम् ॥ ११ ॥

---

ஸம்ஸேவ்ய யாமுநாசார்யம் ஏகலவ்யோஸ்ம்யஹம் குரோ: ।
இத்யேவம் வததே நித்யம் யதிராஜாய மங்களம் | 4 |

ஸ்ரீகாஞ்சீபூர்ணமிச்ரோக்த-ரஹஸ்யார்த்தவிதே ஸதா ।
தேவராஜப்ரியாயாஸ்து யதிராஜாய மங்களம் | 5 |

ஸ்ரீமத்-கோஷ்டீ புரீபூர்ண-திவ்யாஜ்ஞாம் குர்வதே முதா ।
ச்லோகார்த்தம் க்ருஹ்ணதே தஸ்மாத் யதிராஜாய மங்களம் | 6 |

கூரேச-குருகாநாத-தாசரத்யாதி-தேசிகா: ।
யச்சிஷ்யா பாந்தி தே தஸ்மை யதிராஜாய மங்களம் | 7 |

சரமச்லோக-தத்வார்த்தம் ஜ்ஞாத்வார்யாஜ்ஞாம் விலங்க்ய ச ।
திசதே தம் ஸ்வகீயேப்ய: யதிராஜாய மங்களம் | 8 |

ஸ்ரீசைலபூர்ண-க்ருபயா ஸ்ரீராமாயணமர்த்தத: ।
பக்த்யா யேந ச்ருதம் தஸ்மை யதிராஜாய மங்களம் ॥ 9 ॥

சங்கராதி-குத்ருஷ்டீநாம் பாஹ்யாநாம் நிதநாய ச ।
ஸ்ரீபாஷ்யம் குர்வதே தஸ்மை யதிராஜாய மங்களம் | 10 |

குர்வந்நுபநிஷத்பாஷ்யம் ஜகத்ரக்ஷாம் கரோதி ய: ।
தயாயா: பரதந்த்ராய பாஷ்யகாராய மங்களம் ॥ 11 |

ண்டேன்'' என்று பேயாழ்வார் பாடியது போல் அவனது திருமேனியின் அழகைப் பாடிய திருப்பாணாழ்வாரது திருவடிகளைச் சிரத்திலேற்கும் எம்பெருமானாரைச் சார்ந்த பெரியோர்களது அநுஷ்டான விசேஷம் விவரிக்க இயலாதது'' என்கிறார், ப்பாசுரத்தில்.

**பதவுரை :** சீரிய நான்மறை செம்பொருள்—இறைவனது ஸ்வரூபம், ரூபம், குணம், செல் ம் இவையனவற்றை உள்ளபடி வெளியிடுவதாலே சிறப்புற்ற நான்கு வேதங்களின் சாரமான பாருளை. செந்தமிழால் அளித்த—. பார் இயலும் புகழ் பாண் பெருமாள் - பூமியில் இயங்குகின்ற ழ் வாய்ந்த திருப்பாணாழ்வாரது. சரண் ஆம் பதும தார் இயல் சென்னி—திருவடிகளாகிற மரை மலர்களாலே சிறந்த சென்னியை உடைய. இராமாநுசன் தன்னைச் சார்ந்தவர்தம்—ம்பெருமானாரைப் பற்றுக்கோடாகப் பற்றியவர்களுடைய. காரிய வண்மை—செயலின் பருமை, அநுஷ்டானத்தின் சிறப்பு. இ கடல் இடத்து—கடலால் சூழப்பட்ட இந்த நிலத்தில். என்னால் சொல்லொணாது—என்னால் சொல்லித் தலைக்கட்டவொண்ணாது.

"இக்கடலிடத்தே இராமாநுசன்றன்னைச் சார்ந்தவர்'' என்றியைத்து, "இறைவனை டைய இசையாத இவ்வுலகில், இறைவனை அடைவதன் எல்லை நிலமாக எம்பெருமானாரைப் றுபவர்'' எனக் கொள்ளலாம்.

நான்காம் அடியில் "காரியல் வண்ணம்'' எனப் பாடமான போது, "மேகத்தின் இயல்பை ாத்த ஔதார்யம்'' என்று பொருள் கொள்ளலாம்.

தார்—பூ. "பார் இயல்'' என்ற இடத்தில் "இயல்''—நடக்கின்ற; "தார் இயல்'' என்ற டத்தில் "இயல்'' — அணிகின்ற. "பாலேய் தமிழர் இசைகாரர்'' என்ற பெருமை திருப் ணாழ் வாருக்குரித்து.

srivatsam

12. இடங்கொண்ட கீர்த்தி மழிசைக் கிறைவன், இணையடிப்போது
அடங்கு மிதயத் திராமா நுசன், அம்பொற் பாதமென்றும்
கடங்கொண் டிறைஞ்சுந் திருமுனிவர்க் கன்றிக் காதல்செய்யாத்
திடங்கொண்ட ஞானியர்க்கே, அடி யேனன்பு செய்வதுவே.

முன்னுரை : திருமழிசைப் பிரானுடைய திருவடிகளைத் திருவுள்ளத்தில் ாள்ளும் எம்பெருமானாரைப் பற்றுமவரையன்றி வேறொருவரையும் சிநேகிக்க ட்டேன்'' என்கிறார்.

**உரை :** இடம் கொண்ட கீர்த்தி—பூமியில் எங்கும் பரவிய புகழ் உடைய. மழிசைக்கு றைவன்—திருமழிசைப் பிரானுடைய. இணை அடி போது—திருவடிகளாகிய தாமரை மலர்கள் ங்கும் இதயத்து இராமாநுசன்—தன்னுள்ளே அடங்கும்படியான மனத்தை உடைய எம்பெரு ரது. அம் பொன் பாதம்—அழகியனவாய், யாவராலும் விரும்பப்படுவனவான திருவடி . என்றும்—எப்போதும். கடம் கொண்டு இறைஞ்சும்—அடையத் தகுந்தவை என்று ங்குகிற. திரு முனிவர்க்கு அன்றி—செல்வம் வாய்ந்த பெரியோர்க்கன்றி. காதல் செய்யா ம் கொண்ட ஞானியர்க்கே—அன்பு கொள்ளாத திண்ணிய ஞானத்தையுடையவர்க்கே. அடி ன் அன்பு செய்வது—.

கடன்—கடன், ப்ராப்தம். திடம்—திண்மை.

திருக்குடந்தைப் பெருமானாலே "திருமழிசைப் பிரான்'' என்று பாராட்டப் பட்டமை லும், திருவெஃகாவில் எம்பெருமான் இவ்வாழ்வார் சொன்னபடி செய்தமையாலும், யோகத் அமர்ந்து அரியன செய்தமையாலும் புகழ் வாய்ந்தவர், திருமழிசையாழ்வார்.

எம்பெருமானாரைத் தம் உள்ளத்துக் கொண்ட பெரியோர்களுக்கு நம் அன்பு உரியதாம் பது குறிப்பு.



65

13. செய்யும் பசுந்துள வத்தொழில் மாலையும், செந்தமிழில்
பெய்யும் மறைத்தமிழ் மாலையும், பேராத சீரரங்கத்
தையன் கழற்கணி யும்பரன் தாளன்றி யாதரியா
மெய்யன் இராமா நுசன்சர ணேகதி வேறெனக்கே.

முன்னுரை : "தொண்டரடிப்பொடி யாழ்வாரது திருவடிகளையல்லால் வேறொன்றில் ஆதரமற்றிருக்கும் எம்பெருமானார் திருவடிகளே எனக்குக் கதி" என்கிறார்.

உரை : செய்யும் – சிறந்த தொண்டரான தம்மால் செய்யப்பட்டதும். பசும் துளவ தொழில் மாலையும் – தம்முடைய கரங்கள் படுவதால் புதுக்கணிப்பெல்லாம் நிறத்தில் விளங்கும் தொடுக்கப்பெற்ற திருமாலையையும். செந்தமிழில் பெய்யும் மறைத்தமிழ் மாலையும்-யாவரும் எளிதில் அறியக்கூடியதான தமிழில் பாடப்பட்டதாய், மறைபோலே சிறப்புடையதான தமிழ்மாலைகளையும் (திருமாலை, திருப்பள்ளியெழுச்சி). பேராத சீர் அரங்கத்து ஐயன் கழற்கு – நித்திய கல்யாண குணங்களையுடைய திருவரங்கத்து இறைவனுடைய திருவடிகளில். அணி – அணிவிக்கும். பரன் தாளன்றி பெரியோனாகிய தொண்டரடிப் பொடியாழ்வாருடைய திருவடிகளையன்றி. ஆதரியா மெய்யன் – விரும்பாத ஸத்ய சீலரான எம்பெருமானாருடைய. சரணே – திருவடிகளே எனக்குப் புகல் எனக்கு வேறே? – வேறு எனக்கு உண்டோ? இல்லையென்றபடி.

பெய்யும் – இயற்றுகின்ற; இயற்றிய. பேராத-நீங்காத. தொழில் மாலை-கையால் புனைந்த சீர்மை விளங்குகிற மாலை; ஆர்வத்தால் புனைவதாகலின் சீர்மை மிக்கது.

பரன் – தொண்டரடிப்பொடி யாழ்வார்; "அடியார்க் காட்படுத்தாய்" என்று தமக்குப் பெருமானின் மெய்யடியாரிடமுள்ள பேரன்பைக் காட்டினார். இந்தப் பேரன்பை எம்பெருமானார் தமது உள்ளத்துக் கொண்டு, ஆழ்வாரையே நினைத்திருந்தார். இறைவனுக்குப் பூமாலையும் பாமாலையும் அளித்த பெருமை வாய்ந்தவர் தொண்டரடிப்பொடி யாழ்வார். இவரிடம் ஆதரம் கொள்ளும் எம்பெருமானாருடைய திருவடிகளே நமக்குக் கதி.

14. கதிக்குப் பதறி வெங்கானமுங் கல்லுங் கடலுமெல்லாங்
கொதிக்கத் தவஞ்செய்யுங் கொள்கையற் றேன், கொல்லி காவலன்சொல்
பதிக்குங் கலைக்கவி பாடும் பெரியவர் பாதங்களே,
துதிக்கும் பரமன், இராமா நுசனென்னைச் சோர்விலனே.

முன்னுரை: "குலசேகரப் பெருமாளது திவ்விய கவிகளைப் பாடும் பெரியவர்களை ஏத்தும் எம்பெருமானார் என்னைப் பிரியாதவர்; ஆதலால் புருஷார்த்த லாபத்திற்காகக் கொடிய தவங்களைச் செய்யும் விருப்பம் பெற்றிலேன்" என்கிறார்.

உரை : கொல்லி காவலன்-கொல்லிக்கு இறையவராகிய குலசேகரப் பெருமாளது. பதிக்கும் கலை கவி பாடும்-ரத்னங்கள் பதித்தாற்போல், கலைகள் இலங்குகின்ற சொற்களாலான கவிகளை உகந்து பாடும். பெரியவர் பாதங்களே துதிக்கும் பரமன் - பெரியோர்களது திருவடிகளை ஏத்தும் எம்பெருமானார். என்னை சோர்விலன்-என்னை விட்டு நீங்கமாட்டார். (ஆதலால்) கதிக்குப் பதறி–புருஷார்த்த லாபத்தைப் பற்றுவதற்காகப் பதைத்து (த்வரை கொண்டு). வெம் கானமும் கல்லும் கடலும் எல்லாம் கொதிக்க - மிகவும் வெப்பமுடைய காடோடு, மலையோடு, கடலோடு வாசியற எல்லா இடங்களிலும் அவயவங்கள் யாவும் ஒக்கநின்று. தவஞ் செய்யும் கொள்கை அற்றேன் - தவங்கள் செய்யும் இயல்பு (விருப்பம்) போகப் பெற்றேன்.

sivalsam

சொல் பதிக்கும் கலை கவி - (ஆழ்வாரது) அனுபவத்தால் வெள்ளமிடும் சொற்கள், ரத்னங்களைப் பதித்து வைத்தாற்போல் நிரைத்து வைத்தும், சாஸ்த்ர ரூபமாயும் உள்ள கவிகள். "வெங்கானமும் கல்லும் கடலும் எல்லாம் கொதிக்க" என்பதற்கு, "தவத்தின் கடுமையால் காடு, மலை, கடல் யாவும் கடுந்தாபம் கொள்ளுமாறு" என்றுங் கூறலாம்.

குலசேகரப் பெருமாளது பாடல்கள் சாஸ்த்ரார்த்தங்கள் பொலிந்தவை என்பது குறிப்பு. இவற்றைப் பாடும் பெரியவர்களது பாதங்களை வணங்கும் எம்பெருமானார் நம்மை விட்டு நீங்க மாட்டார். கொள்கை – ஸ்வபாவம், இயல்பு. சோர்வு – பிரிவு.

15. சோராத காதல் பெருஞ்சுழிப்பால், தொல்லை மாலையொன்றும்
பாரா தவனைப் பல்லாண்டென்று காப்பிடும், பான்மையன்தாள்
பேராத வுள்ளத் திராமாநு சன்றன் பிறங்கியசீர்
சாரா மனிசரைச் சேரேன், எனக்கென்ன தாழ்வினியே.

**முன்னுரை :** "பெரியாழ்வாரது திருவடிகளில் பிரேமம் வாய்ந்த எம்பெருமானரது குணங்களில் தாழாதவர்களோடு நான் சேரமாட்டேன்; எனக்கு என்ன தாழ்வு உண்டு?" என்கிறார்.

**உரை :** சோராத காதல் பெருஞ் சுழிப்பால் – குறையாத பக்தி வெள்ளத்தின் சுழியில் அகப்பட்டு. தொல்லை மாலை ஒன்றும் பாராது-நித்யனும், யாவருக்கும் ரக்ஷகனை பெருமையுடைய நாராயணனைச் சிறிதும் ஆராயாது (ஸர்வ சக்தன் என்று நினையாமல்) அவனை 'பல்லாண்டு" என்று காப்பு இடும் – "பல்லாண்டு, பல்லாண்டு" என்று காலத்தைப் பெருக்கி, "உன் சேவடி செவ்விதிருக்காப்பு" என்று மங்களாசாஸநம் செய்து கொண்டு. பானமையன் தாள் – இதுவே பல்பாகவுடைய பெரியாழ்வாரது திருவடிகளை. பேராத உள்ளத்து - சிந்திப்பதனின்றும் நீங்காத உள்ளத்தை உடையவரான. இராமாநுசன்தன் பிறங்கிய சீர் - எம்பெருமானருடைய சிறந்த குணங்களை. சாரா மனிசரை- தங்களுக்குப் பற்றுகப் பற்றியிராதவர்களை. சேரேன் (அவர்களோடு) சேர மாட்டேன். (இந்த நினைவு பிறந்த பின்பு) இனி எனக்கு என்ன தாழ்வு? –.

பெரியாழ்வாரது பெரும் பரிவைத் தம் மனத்திற் கொண்டவர், எம்பெருமானர்.

16. தாழ்வொன்றில் லாமறை தாழ்ந்து, தலமுழு துங்கலியே
ஆள்கின்ற நாள்வந் தளித்தவன் காண்மின், அரங்கர்மௌலி
சூழ்கின்ற மாலையைச் சூடிக் கொடுத்தவள் தொல்லருளால்
வாழ்கின்ற வள்ளல் இராமா நுசனென்னும் மாமுனியே.

**முன்னுரை :** அரங்கனுக்கு வல்லபையான ஆண்டாளின் அருளுக்குப் பாத்ரமான எம்பெருமானர் உலகத்திற்குச் செய்த உபகாரதலதை இப்பாட்டில அருளிச் செய்கிறார்.

**உரை :** அரங்கர் மௌலி சூழ்கின்ற மாலையை—திருவரங்கனது திருமுடியைச் சூழ்கின்ற திருமாலையை. சூடி கொடுத்தவள் தொல் அருளால்—தனது திருக்குழலிலே சூடி அதனால் பரிமளம் மிக்கதாகக் கொடுத்த வைபவத்தைபுடைய ஆண்டாளின் (இயல்பான) க்ருபையினலே. வாழ்கின்ற வள்ளல்—வாழ்பவராய், பரம உதாரரான இராமாநுசன் என்னும் மாமுனி . (நமக்கு) வந்து அளித்தவன், காண்மின்—பூமியில் அவதரித்து வேதத்தின் ஆபந்த கருத்தை வெளியிட்டவர்; இதனை அறிந்து கொள்வீர். (எப்போது அளித்தவர் என்னில்) : தாழ்வு ஒன்று இல்லா மறை தாழ்ந்து—நித்யமாய், அபௌருஷேயமாய், தானே ப்ராமணமாகவுள்ள வேதமானது, பிற

மதத்தினர் கூறும் அபார்த்தங்களால் இழிவு பட்டு. தலமுழுதும் கலியே ஆள்கின்ற நாள் - விளக்கு இல்லா இடத்தில் இருள் சூழ்வதுபோல, பூமியெங்கும் கலியுகம் தனிக்கோல் செலுத்தும் காலத்தில்.

காண்மின் : நீங்களும் என்னைப் போல் எம்பெருமானாரையல்லது அறியாதிருந்தாலன்றோ அடுப்பது என்பது கருத்து.

ஆண்டாளின் திருவருள் வாய்ந்தவர் எம்பெருமானார்.

17. முனியார் துயரங்கள் முந்திலும், இன்பங்கள் மொய்த்திடினும்
கனியார் மனம் கண்ண மங்கைநின் றானைக், கலைபரவும்
தனியானையைத் தண்ட மிழ்செய்த நீலன் றனக்குலகில்
இனியானை, எங்க ளிராமா நுசனைவந் தெய்தினரே.

முன்னுரை : "திருமங்கையாழ்வாருக்கு இனியராகிய எம்பெருமானாரைப் பற்றியவர்கள், சுகதுக்கங்களைச் சமமாகப் பார்க்கும் இயல்புடையவர்கள்" என்கிறார்.

உரை : கலை பரவும் தனி ஆனையை, கண்ணமங்கை நின்றானை – சாஸ்த்ரங்கள் போற்றும் பெருமையுடையவனாய், திருக்கண்ணமங்கையில் மத்தகஜம் போலே நின்றருளும் பத்தராவிப் பெருமானை. தண் தமிழ் செய்த - ஸம்ஸாரிகளின் தாபமெல்லாம் ஆறும்படியான இனிய தமிழால் வாழ்த்திய. நீலன் தனக்கு - திருமங்கை யாழ்வாருக்கு. உலகில் இனியானை எங்கள் இராமாநுசனை வந்து எய்தினர் - இனியவராகிய எம்பெருமானாரை அடைந்தவர்கள். துயரங்கள் முந்திலும் முனியார் - துக்கங்கள் "நான் முன்னே, நான் முன்னே" என்று வந்தாலும் வெறுப்புக் கொள்ள மாட்டார்கள். இன்பங்கள் மொய்த்திடினும் மனம் கனியார் – இன்பங்கள் ஒவ்வொன்றாக வந்து திரண்டாலும், மனம் இளக மாட்டார்கள். எம்பெருமானாரைப் பற்றுமவர்கள், சுகதுக்கங்களைப் பாராட்டமாட்டார்கள் என்பது குறிப்பு.

முனிதல் – வெறுத்தல். மொய்த்தல் – திரளுதல்.

18. எய்தற் கரிய மறைகளை, ஆயிர மின்தமிழால்,
செய்தற் குலகில் வருஞ்சட கோபனைச், சிந்தையுள்ளே
பெய்தற் கிசையும் பெரியவர் சீரை உயிர்களெல்லாம்
உய்தற் குதவும், இராமா நுசனெம் முறுதுணையே.

முன்னுரை : "யாவரும் உய்யுமாறு மதுரகவியாழ்வாரது குணங்களை அருளிச் செய்யும எம்பெருமானார், எனக்கு உற்ற துணை" என்கிறார்.

உரை : எய்தற்கு அரிய மறைகளை-பெறுவதற்கு அரியனவான வேதங்களை. ஆயிரம் இன் தமிழால் செய்தற்கு–இனிய தமிழில் ஆயிரம் பாக்களாலே, பாலரும் பெண்டிருங்கூட அனுபவிக்கு மாறு அருள. உலகில் வரும் சடகோபனை சிந்தையுள்ளே பெய்தற்கு இசையும்– சடகோபன் என்னும் திருநாமமுடைய ஆழ்வாரை மனத்திலே வைப்பதற்கு இசைவுடைய. பெரியவர் சீரை -(தகுதியுள்ள பெருமையுடைய) மதுரகவியாழ்வாரது ஞானாதி குணங்களை. உயிர்கள் எல்லாம் உய்தற்கு உதவும்–ஆத்மாக்கள் யாவரும் உய்யுமாறு அருளிச் செய்யுமவரான. இராமாநுசன் எம் உறு துணை—.

இங்கு "பெரியவர்" என்பது, ஆழ்வாரையல்லது அறியோம் என்றிருக்கும் பெரியோர் யாவரையும் குறிக்கும் என்பதுவுமாம்.

அரிய பொருள்கள் கொண்டுள்ள வேதத்தைச் செந்தமிழால் அளித்த பெருமையுடையவர் நம்மாழ்வார். இவரது பெருமையைப் பாராட்டும் பெரியோரது (மதுரகவிகளுடைய) பெருமையை உலகினருக்கு எடுத்தோதியவர் எம்பெருமானுர். இவர் நமக்கு உறுதுணையாவர்.

19. உறுபெருஞ் செல்வமுந் தந்தையுந் தாயு முயர்குருவும்,
வெறிதரு பூமகள் நாதனும், மாறன் விளங்கியசீர்
நெறிதருஞ் செந்தமி ழாரண மேயென்றிந் நீணிலத்தோர்,
அறிதர நின்ற, இராமா நுச னெனக் காரமுதே.

முன்னுரை : "செல்வம், தந்தை, தாய், குரு, ஸ்ரீமந்நாராயணன் எல்லாம் தமக்குத் திருவாய்மொழியே என்று உலகோர் அறியுமாறு நிற்கும் எம்பெருமானுர் எனக்குத் தெவிட்டாத அமுதம்" என்கிருர்.

உரை : உறு பெரும் செல்வமும்—(பெறுமவர்களுக்கு) மதிப்பைக் கொடுக்கும் செல்வமும். தந்தையும், தாயும், உயர் குருவும்—. வெறிதரு பூமகள் நாதனும்—பரிமளம் மிக்க தாமரை மலரைப் பிறப்பிடமாகவுடைய பெரிய பிராட்டியாருக்கு வல்லபனுன ஸர்வேச்வரனும். மாறன்—நம்மாழ்வார் அருளியதாய். விளங்கிய சீர் நெறிதரும்—இறைவனது அருளாலே தாம் உணர்ந்த பரபக்தி போன்றவை விளங்குகின்ற. செந்தமிழ் ஆரணமே என்று—த்ராவிட வேதமான திருவாய்மொழியே என்று. இ நீள் நிலத்தோர் அறிதர நின்ற இராமாநுசன்—பரந்த இவ்வுலகிலுள்ளவர்கள் அறியும்படி நின்ற எம்பெருமானுர். எனக்கு ஆர் அமுது—.

நெறிதரும்—விளங்குகிற.

srivatsam

திருவாய்மொழியே தமக்கு எல்லாமாகக் கொள்ளும் எம்பெருமானுர் நமக்கு அமுதம் போன்றவர் என்பது கருத்து.

20. ஆரப் பொழில்தென் குருகைப் பிரான், அமுதத்திருவாய்
ஈரத் தமிழி னிசையுணர்ந் தோர்கட்(கு), இனியவர்தம்
சீரைப் பயின்றுய்யுஞ் சீலங்கொள் நாதமுனியை நெஞ்சால்
வாரிப் பருகும், இராமா நுசனென்றன் மாநிதியே.

முன்னுரை : "நாதமுனியைத் தம் மனத்துள் வைத்து அனுபவிக்கும் எம்பெருமானுர் எனக்குப் பெருந்தனம்" என்கிருர்.

உரை : ஆர பொழில் தென்குருகை பிரான் – சந்தனப் பொழில்கள் மலிந்து அழகியதான திருநகரிக்கு நாதரான நம்மாழ்வாருடைய. அமுதத் திருவாய் ஈர தமிழின் – பரமபோக்யமாய்த் திருவதரத்தில் (வாயினின்றும்) பிறந்த ஈரப்பாட்டையுடைய திருவாய்மொழியின். இசை உணர்ந்தோர்கட்கு – இசையை நன்கறிந்தவர்களுக்கு. இனியவர் தம் சீரை பயின்று உய்யும் – இனியவர்களாகிய பெரியோர்களது குணநலன்களிலே படிந்திருப்பவரும். சீலம் கொள் – சீலகுணம் வாய்ந்தவருமான. நாதமுனியை—. நெஞ்சால் வாரி பருகும் – தமது திருவுள்ளத்தில் கொண்டு, பெருவிடாயர் மடுவிலே புக்கு வாரிப் பருகுவது போலே அனுபவிக்கும். இராமாநுசன் என்றன் மாநிதி—.

"பண்ணுர் பாடல்" எனப் பெறும் திருவாய்மொழியில் ஆழ்ந்தவர்களுடைய பெருமையை நினைக்கும் நாதமுனிகளைத் தமது உள்ளத்தில் கொண்டு போர உகந்து அனுபவிப்பவர் எம்பெருமானுர்; இவர் நமக்கு மாநிதி போன்றவர்.

ஆழ்வார்களது அருளிச் செயல்களையெல்லாம் பண்ணில் அமைத்துக் காட்டியவர் நாத முனிகள்.

21. நிதியைப் பொழியும் முகிலென்ன, நீசர்தம் வாசல்பற்றித்,
துதிகற் றுலகில் துவள்கின் றிலேன், இனித் தூய்நெறிசேர்
எதிகட் கிறைவன் யமுனைத் துறைவ னிணையடியாம்,
கதிபெற் றுடைய, இராமா நுசனென்னைக் காத்தனனே.

**முன்னுரை:** "ஆளவந்தாரது திருவடிகளைத் தமக்கு ப்ராப்யமாகப் பெற்ற எம்பெருமானார் என்னை ரக்ஷித்தருளினார்; இனி அல்பர்களது வாசலில் நின்று அவர்களைத் தோத்திரம் செய்யேன்" என்கிறார்.

**உரை:** தூய் நெறி சேர் யதிகட்கு இறைவன் – சுத்தமான அநுஷ்டானத்தினர்களான சந்யாஸிகளுக்குத் தலைவரான. யமுனைத் துறைவன் – ஆளவந்தாரது. இணை அடியாம் கதி பெற்று உடைய – இணைந்த திருவடிகளாகிற ப்ராப்யத்தைப் பெற்று, அஃது உடையவராயிருக்கும். இராமாநுசன் என்னை காத்தனன் –. (ஆதலால்). நிதியைப் பொழியும் முகில் என்ன – நிதியாகவே பெய்யும் மேகமென்று. நீசர்தம் வாசல் பற்றி–அஹங்காரதிகளாலே தண்ணியரானவர்களுடைய வாசலைப் பற்றி நின்று. துதி கற்று – அவர்களுடைய ஔதார்யம் பற்றிய துதிகளைச் சொல்லி. உலகில் துவள்கின்றிலேன் – அவர்களிடம் பொருள் கொள்வதற்காக அவர்களது உள்ளம் பார்த்திருந்து துவளமாட்டேன்.

எம்பெருமானாராகிய கார்மேகத்தை அடைந்தபின், வேறெவரையும் நாடிக் கார்முகிலே என்று துதித்து வயிறு பெருக்குவது இழிவுக்காம்.

srivaisham

நெறி – ஒழுக்கம். கதி – ப்ராப்யம்.

22. கார்த்திகை யானுங் கரிமுகத் தானும், கனலும்முக்கண்
மூர்த்தியும் மோடியும் வெப்பும் முதுகிட்டு, மூவுலகும்
பூத்தவ னேயென்று போற்றிட வாணன் பிழைபொறுத்த,
தீர்த்தனை யேத்தும், இராமா நுசனென்றன் சேமவைப்பே.

**முன்னுரை:** "வாணனுடைய பிழையைப் பொறுத்த ஸர்வேச்வரனை ஏத்தும் எம்பெருமானார் எனக்கு ஆபத்தனம்" என்கிறார்.

**உரை:** கார்த்திகையானும் – கார்த்திகை நக்ஷத்திர சம்பந்தத்தால் கார்த்திகேயன் என்னப்படும் சுப்ரமண்யனும். கரிமுகத்தானும் – யானை முகத்தானாகிய கணபதியும். கனலும் – (வாணன் செய்த போரில்) இவர்களுக்கு உதவ வந்த (அக்நியும். முக்கண மூர்த்தியும். மோடியும் – துர்கையும். வெப்பும் – ஜ்வரமும். முதுகிட்டு – போரில் தோற்று. "மூவுலகும் பூத்தவனே" என்று போற்றிட - மூன்று உலகங்களையும் உன் நாபிக் கமலத்தினின்றும் உண்டாக்கியவனே! என்று போற்ற; "க்ருஷ்ண! க்ருஷ்ண! மஹாபாஹோ! ஜாநே த்வாம் புருஷோத்தமம்" என்று ஏத்தி, தங்களை அண்டின வாணனைக் காத்தருளுமாறு இறைஞ்ச. வாணன் பிழை பொறுத்த (தனது பேரனான) அநிருத்தாழ்வானைச் சிறையில் வைத்த பிழையைப் பொறுத்த. தீர்த்தனை - புனிதனான ஸர்வேச்வரனை. ஏத்தும் இராமநுசன் என்றன் சேம வைப்பு –.

சேம வைப்பு – சேமத்திற்கான தனம். தீர்த்தன் – புனிதன். வாணனது பிழையைப் பொறுத்த இறைவனை மனத்துள் வைக்கும் எம்பெருமானார், நம் பிழையையும் பொறுப்பார். ஆகையால் இவர் நமக்குச் சேம வைப்பு.

23. வைப்பாய வான்பொரு ளென்று நல்லன்பர் மனத்தகத்தே
எப்போதும் வைக்கு மிராமா நுசனை, இருநிலத்தில்
ஒப்பா ரிலாத உறுவினையேன் வஞ்சநெஞ் சில்வைத்து,
முப்போதும் வாழ்த்துவன், என்னா மிதுவவன் மொய்புகழ்க்கே.

முன்னுரை : "பிரேமத்தாலே சிறந்தவர்கள் தம் மனத்தினுள்ளே தனத்தைப்போலே இருத்தும் எம்பெருமானாரை எளியேன் நெஞ்சில் வைத்து ஏத்துகின்றேன்; அவருடைய பெரும் புகழுக்கு இது இழுக்காமோ?" என்றஞ்சுகிறார், அமுதனார்.

உரை : நல் அன்பர் தம் மனத்தகத்தே—. "வைப்பு ஆய வான் பொருள்" என்று—ஆபத் ரக்ஷகமாக வைக்கப்படும் (குறையாத) தனம் என்று. எப்போதும் வைக்கும் இராமாநுசனை—இரு நிலத்தில் ஒப்பார் இலாத உறு வினையேன்—இப் பரந்த நிலத்தில் பாவஞ் செய்தோர் எனக்கு ஒப்பில்லாதவாறு பாவஞ் செய்த நான். வஞ்ச நெஞ்சில் வைத்து—. முப்போதும்—காலையிலும் நண்பகலிலும் மாலையிலும். வாழ்த்துவன்—வாழ்த்துவேன். இது அவன் மொய் புகழ்க்கு என் ஆம்?—அவருடைய பரந்த புகழுக்கு இது என்னை விளையுமோ?

வான்—பெருமை.

வஞ்ச நெஞ்சினனாகிய நான் இப்பெருமானை வாழ்த்துவது தகுமோ என்றஞ்சுகிறார், அமுதனார்.

24. மொய்த்தவெந் தீவினை யால்பல் லுடல்தொறும் மூத்து, அதனால்
எய்த்தொழிந் தேன்முன நாள்களெல்லாம், இன்று கண்டுயர்ந்தேன்
பொய்த்தவம் போற்றும் புலைச்சம யங்கள் நிலத்தவியக்,
கைத்தமெய்ஞ் ஞானத்(து) இராமா நுசனென்னுங் கார்தன்னையே.

முன்னுரை : "ஒப்பாரிலாத உறுவினையேன்" என்று தம்மை நொந்து கொள்ளும் இவர், எம்பெருமானாரை முப்போதும் வாழ்த்துவது கை கூடிய படியை விளக்கத், தமது முன்னை நிலையையும், இப்பெருமை வாய்ந்த வகையையும் ஓதுகிறார்.

உரை : முன நாள்கள் எல்லாம்—அநாதியான காலமெல்லாம். மொய்த்த வெம் தீ வினையால்—தேன் கூட்டை ஈக்கள் மொய்ப்பது போல் ஆத்மாவைச் சார்ந்து அடரும் கொடிய செயல்களால். பல் உடல் தோறும் மூத்து—பல சரீரங்களில் பிறந்து பின்பு இறந்து. எய்த்து ஒழிந்தேன்—வருந்தினேன். இன்று—இப்போது. இராமாநுசன் என்னும் கார் தன்னையே கண்டு கொண்டேன்—எம்பெருமானாராகிய கருமுகிலைக் கண்டு சிறந்தேன். (அவர் எப்படிப்பட்டவர் எனில்). பொய் தவம் போற்றும் புலை சமயங்கள்—அவைதிங்களாகையாலே, க்ரமம் பற்றாத தவங்களை நோக்கும் தண்ணிய சமயங்கள். நிலத்து அவிய—விளக்குப் பிணம் போலே (விளக்கில் விழுந்து நசிக்கும் பூச்சிகள் போலே) நசிக்கும்படியாக. கைத்த மெய் ஞானத்து—(அவற்றைத் தான்) ஒழித்துச் சிறந்த ஞானத்திற்கு உடையவர்.

கார் முற்றுவமை; கார் பொழிந்தது; மெய்ஞ்ஞானமாகிய பயிர் விளைந்தது; பொய்த் தவமாகிய கசடெல்லாம் அறவே நீங்கின.

25. காரேய் கருணை இராமா நுச, இக் கடலிடத்தில்
ஆரே அறிபவர் நின்னரு ளின்தன்மை, அல்லலுக்கு
நேரே உறைவிடம் நான்வந்து நீயென்னை உய்த்தபினுன்
சீரே யுயிர்க்குயி ராய், அடியேற்கின்று தித்திக்குமே.

**முன்னுரை** : எம்பெருமானாருடைய திருவருளை நினைந்து, அமுதனார் அவர திருமுகத்தைப் பார்த்து, "தேவரீருடைய க்ருபா ஸ்வபாவத்தை இவ்வுலகில் ஆர் தான் அறிவார்?" என்கிறார்.

**உரை** : **கார் ஏய் கருணை**—மேகம் போலே யாவருக்கும் உபகரிக்கும் கருணையை உடைய **இராமாநுச!**—**கடல் இடத்தில்**—கடல் சூழ்ந்த பூமியில். **நின் அருளின் தன்மை**—தேவரீருடைய க்ருபையின் ஸ்வபாவத்தை. **அறிபவர் ஆர்?**—. **நான் அல்லலுக்கு நேரே உறைவிடம்**—துக்கங்கள் யாவும் அடங்கும் இடமாவன் நான். **நீ வந்து என்னை உய்த்தபின்**—இவ்வாறிருக்க, தேவரீர் வந்து என்னைச் சேர்த்துக் கொண்ட பின்பு. **உன் சீரே**—தேவரீருடைய கல்யாண குணங்களே **உயிர்க்கு உயிராய்**—அடியேனுடைய ஆத்மாவுக்கு தாரகமாய். **அடியேற்கு இன்று தித்திக்கும்**—இன்று அடியேனுக்கு இனியனவாகின்றன.

கோடையின் தாபத்தைத் தீர்க்கும் மேகம்போல், எம்பெருமானார் ஸம்ஸார தாபங்களை தீர்த்தார் என்பது கருத்து.

கார் ஏய்—மேகத்திற்கு ஒப்பான.

**26.** திக்குற்ற கீர்த்தி இராமா நுசனை, என் செய்வினையாம்
மெய்க்குற்றம் நீக்கி விளங்கிய மேகத்தை, மேவும்நல்லோர்
எக்குற்ற வாள ரெதுபிறப் பேதியல் வாகநின்றோர்,
அக்குற்ற மப்பிறப்பு (அ) வ்வியல் வேநம்மை யாட்கொள்ளுமே.

srivatsam

**முன்னுரை** : முன் பாசுரத்தில் அமுதனார், எம்பெருமானாரது குணங்களே தமக்கு தாரக, போஷக, போக்யங்கள் என்றார். அவ்வளவன்றிக்கே அவரது திருவடிகளில் அன்புடையவர்களுடைய குற்றம், பிறப்பு, இயல்பு இவை ஒவ்வொன்றும் தம்மைக் கவர்ந்தது என்கிறார் இப்பாசுரத்தில்.

**உரை** : **என் செய்வினை ஆம் மெய் குற்றம் நீக்கி விளங்கிய மேகத்தை** - என்னாலே செய்யப்பட்ட கர்மமாகிற நிலைநின்ற தோஷத்தை நீக்கி, "இவனது விரோதியைப் போக்கப்பெற்றோம்" என்று களித்து, இதனால் புகரையுடையராய், மேகம்போல் உதாரரான. **திக்கு உற்ற கீர்த்தி இராமாநுசனை** - திசைகள் தோறும் பரவிய கீர்த்தியை உடைய எம்பெருமானாரை. **மேவும் நல்லோர்**—பாதச் சாயைப் போலே பிரியாது பொருந்தியிருப்பவர்கள் (சிறந்தவர்கள்). **எ குற்றவாளர் எது பிறப்பு, ஏது இயல்வாக நின்றோர்** - யாதொரு குற்றம் உடையவர்களாவும், யாதொரு ஒழுக்கம் உடையவர்களாகவும், யாதொரு பிறப்பை உடையவர்களாகவும் முன்பு நின்றார்கள். **அ குற்றம் அ பிறப்பு அ இயல்வு.** - அந்தக் குற்றம், அந்தப் பிறப்பு, அந்த இயல்பு இவையே **நம்மை ஆட்கொள்ளும்** - "சிறுமாமனிசர்" என்றவாறு பெருமை வாய்ந்த இவர்கள், தண்ணிய பிறப்பு முதலியவற்றை ஏற்றது, நம்போல்வார் இவ்விஷயம் உகக்கத்தக்கது என்று தேறுவதற்காக; இவ்வாறு தேறும்போது நாம் அவர்களுக்கே ஆவோம். இவ்வாறான அறிவே ஸ்ரீவைஷ்ணவனுக்கு அவசியமானது.

மெய்க்குற்றம்—நிலைநின்ற குற்றம்; அனுபவித்தாலன்றி நீங்காத குற்றம். பிறப்பு, ஒழுக்கம் இவற்றுடன் சேர்த்துக் குற்றம் என்று ஓதப்பெறுவதால், இது ஞானத்தில் குறைவைக் காட்டும். இயல்பு-ஒழுக்கம்.

"எக்குற்றவாளர்...ஏதியல்வாக நின்றோர்" என்பதற்கு அஹங்கார ஹேதுவான ஞானம், பிறப்பு, ஒழுக்கம் இவை இழியன என்ற ஞானம் பிறந்து, தம்முடைய இழிவை நினைந்து நிற்கும் நிலையே என்னை அவர்களுக்காக்கியது என்றும் கொள்ளலாம்.

ஸ்ரீவைஷ்ணவர் நம்மையொத்தவர் என்கிற அறிவு அழிந்து நம்மால் வணங்கப்படும் பெருமை வாய்ந்தவர் என்ற ஞானம் அவசியமாகும்.

27. கொள்ளக் குறைவற் றிலங்கிக், கொழுந்துவிட் டோங்கியவுன்
வள்ளல் தனத்தினால், வல்வினை யேன்மனம் நீ புகுந்தாய்,
வெள்ளைச் சுடர்விடு முன்பெரு மேன்மைக் கிழுக்கிதென்று,
தள்ளுற் றிரங்கும், இராமா நுச!என் தனிநெஞ்சமே.

**முன்னுரை :** ''பாவியான என் நெஞ்சிலே எம்பெருமானார் புகுந்து, நான் அனுபவிக்கும்படி பொருந்துகிறார். இது அவருடைய பெருமைக்கு இழுக்காமோ என்று அஞ்சுகின்றேன்'' என்கிறார்.

**உரை :** இராமாநுச! - . கொள்ள குறைவு அற்று இலங்கி—வேண்டுவார் வேண்டுவதெல்லாம் கொள்ளலாம்படி. ஒரு குறைவு இல்லாததாய் விளங்கி. கொழுந்து விட்டு ஓங்கிய உன் வள்ளல் தனத்தினால் மேன்மேலும் இளகிப் பதித்து வளர்ந்துள்ள தேவரீரது ஔதார்யத்தாலே. நீ வல்வினையேன் மனம் புகுந்தாய்— வெள்ளைச் சுடர்விடும் உன் பெரு மேன்மைக்கு—பரிசுத்தமாக விளங்குகின்ற தேவரீருடைய மேன்மைக்கு. இது இழுக்கு என்று—இது குறையாகும் என்று. என் தனி நெஞ்சம்—ஒரு துணையின்றிக்கே தனிப்பட்டிருக்கும் என்னுடைய நெஞ்சமானது. தள்ளுற்று—தளர்ந்து. இரங்கும்—தேவரீருடைய மேன்மையில் ஈடுபடும்.

"புகர்மிக்க மாணிக்கம் புழுதியில் படிவதுபோல் தூயவராகிய எம்பெருமானார் பாவியனாகிய எனது நெஞ்சுள்ளே படிவது, அவரது பெருமைக்கு இழுக்காகுமோ'' என்று அமுதனார் அஞ்சுகின்றார்.

28. நெஞ்சில் கறைகொண்ட கஞ்சனைக் காய்ந்த நிமலன், நங்கள்
பஞ்சித் திருவடிப் பின்னைதன் காதலன், பாதம்நண்ணா
வஞ்சர்க் கரிய இராமா நுசன்புக ழன்றியென்வாய்
கொஞ்சிப் பரவகில் லாது, என்ன வாழ்வின்று கூடியதே.

**முன்னுரை :** "மந: பூர்வோ வாகுத்தர:" என்றவாறு, மனத்துக்குப் பின் வாக்கு. இந்த வாக்குக்கு எம்பெருமானாரிடம் உண்டான பேரன்பை உணர்ந்து அமுதனார் மகிழ்கிறார்.

**உரை :** நெஞ்சில்...நிமலன்—''தீயபுந்திக் கஞ்சன்'' என்றவாறு, மனத்திலே சீற்றத்தை யுடைய கம்ஸனைச் சீறிய இறைவன், இழியனவற்றுக்கெல்லாம் எதிர்த்தட்டாய் அண்டினாரைக் காப்பவனும். நங்கள் —. பஞ்சி திருவடி பின்னை தன் காதலன்—பஞ்சுபோலே மெல்லிய திருவடிகளையுடைய நப்பின்னைப் பிராட்டிக்கு இனியவனும் (ஆகிய இறைவனது). பாதம் நண்ணா வஞ்சர்க்கு—திருவடிகளை நாடாத ஆத்மாபஹாரிகளுக்கு. அரிய—பெற முடியாதவரான. இராமாநுசன் புகழ் அன்றி, என்வாய் —. கொஞ்சி—பிரேமத்தாலே நிறைவுறு உக்திகளைச் சொல்லி. பரவ கில்லாது—அடைவுகெட ஏத்தாது. இன்று என்ன வாழ்வு கூடியது?—இன்று எனக்கு நேர்ந்த வாழ்வு இருக்கும்படி என்?

கறை—கறுப்பு; சீற்றத்தைச் சொல்லுகிறது. கறை—தோஷம்; மனத்தில் தோஷமுடையவன் என்பதும் பொருள். பஞ்சி—பஞ்சு. கொஞ்சுதல்—அபூர்ண உக்திகள் சொல்லுதல் நிமலன்: "தேவாநாம் தாநவாநாஞ் சஸாமாந்யம் அதிதைவதம்'' (தேவர், தானதர் யாவருக்கும்

பொதுவானவன் தேவன்) என்ற பொதுவான சம்பந்தம் இருக்கும்போது, அன்பர்க்கு விரோதி என்ற காரணத்தால் கம்ஸனைக் கொன்றது, தோஷமன்று; ஆதலால் "நிமலன்" என்கிறார். வஞ்சர்—இறைவனுக்கே உரிய ஆத்மாவைத் தமது என்பவர்; இவ்வாறு செய்வது ஆத்மாபஹாரம்.

29. கூட்டும் விதியின்று கூடுங் கொலோ, தென் குருகைப்பிரான்
பாட்டென்னும் வேதப் பசுந்தமிழ் தன்னைத், தன் பத்தியென்னும்
வீட்டின்கண் வைத்த இராமா நுசன் புகழ் மெய்யுணர்ந்தோர்
ஈட்டங்கள் தன்னை, என் நாட்டங்கள் கண்டின்ப மெய்திடவே.

**முன்னுரை :** "எம்பெருமானாரது திவ்ய குணங்களை உள்ளபடி அறிந்திருக்குமவர்களது கூட்டங்களை என் கண்கள் கண்டு களிக்கும்படி ஒரு நன்மை இன்று நேருமோ?" என்கிறார்.

**உரை :** தென் குருகை பிரான்—அழகிய திருக்குருகூருக்கு நாதரான ஆழ்வாருடைய பாட்டு என்னும் வேத பசும் தமிழ் தன்னை—பாடல் என்று புகழ்பெற்றதால், வேத ரூபமாய் செந்தமிழாயிருக்கும் திருவாய்மொழியை. தன்பத்தி என்னும் வீட்டின்கண் வைத்த—தமது பக்தியாகிய வீட்டிலே (வாஸஸ்தானத்திலே) வைத்த. இராமாநுசன் புகழ்—எம்பெருமானாருடைய கல்யாண குணங்களை. மெய் உணர்ந்தோர்—உள்ளவாறு அறிந்தவர்களுடைய ஈட்டங்கள் தன்னை—கூட்டங்களை. என் நாட்டங்கள்—எனது கண்கள். கண்டு இன்பம் எய்திட—கண்டு இன்பம் பெறுமாறு. கூட்டும் விதி—என்னிடம் சேர்க்கும் நலம். இன்று கூடுங்கொலோ—இன்று நேருமோ?

விதி – ஸுக்ருதம் (நலம்). ஈட்டம் – திரள். நாட்டம் – கண்கள்.

எம்பெருமானாரது அடியார்களின் கூட்டங்களைக் காண்பது கண்களுக்கு நிகரில்லாப் பேறு என்பது கருத்து.

30. இன்பந் தருபெரு வீடுவந் தெய்திலென், எண்ணிறந்த
துன்பந் தருநிர யம்பல சூழிலென், தொல்லுலகில்
மன்பல் லுயிர்கட் கிறையவன் மாய னெனமொழிந்த,
அன்ப னனகன், இராமா நுசனென்னை ஆண்டனனே.

**முன்னுரை :** "எம்பெருமானார் என்னை அடிமை கொண்டருளினர். இனி நான் இன்பத்திற்கான மோக்ஷம் பெற்றால் என்? துக்கங்களுக்கான நரகங்களில் தாழ்ந்தால்தான் என்?" என்கிறார்.

**உரை :** தொல் உலகில்—நெடுங்காலமாகத் தோன்றியும் அழிந்தும் வருகின்ற உலகிலே, மன் பல் உயிர்கட்கு இறைவன்—வாழ்கின்ற எண்ணற்ற ஆத்மாக்களுக்குத் தலைவன். மாயன் என மொழிந்த ஸ்வரூபரூப குணங்களால் ஆச்சர்யபூதனான ஸர்வேச்வரன் என்று ஸ்ரீபாஷ்யம் போன்ற கிரந்தகளால் அருளிச்செய்த. அன்பன்—உயிர்களிடத்து அன்புடையவரும். அநகன்—பாவமில்லாதவரும் (தம்முடைய லாபத்திற்கே உரைப்பதான பாவமில்லாமல், பிறர் வாழ்வதற்கே உரைக்கும் பெருமையுடையவர்). (ஆகிய) இராமாநுசன் என்னை ஆண்டனன்—. (ஆகவால்) இன்பம் தரு பெரு வீடு வந்து எய்தில் என்—(என்னை) பரமபுருஷார்த்த லக்ஷணமான மோக்ஷம் வந்து சேர்ந்தால் என்? எண் இறந்த துன்பம் தரு நிரயம் பல சூழில் என்?—கணக்கற்ற துயரங்களைத் தரும் நரகங்கள் பல என்னைத் தப்பவொண்ணாதபடி வளைத்துக் கொண்டால் என்?

எம்பெருமானாருக்கு அடிமைப்பட்டவர்கள், சுகதுக்கங்களை ஒன்றாக மதிக்கமாட்டார்கள், இந்த அடிமையொன்றையே நலமாகக் கொள்வர் என்பது கருத்து.

31. ஆண்டுகள் நாள்திங்களாய், நிகழ் காலமெல் லாம்மனமே
ஈண்டுபல் யோனிகள் தோறுழல் வோம், இன்றோ ரெண்ணின்றியே
காண்டகு தோளண்ணல் தென்னத்தி யூரர் கழலிணைக்கீழ்ப்,
பூண்ட வன்பாளன், இராமா நுசனைப் பொருந்தினமே.

**முன்னுரை :** அமுதனார் தமது நெஞ்சைக் குறித்து, "மனமே! நெடுங்காலமாகப் பல பிறவிகள் பிறந்து துன்பமுற்ற நாம், இன்று எம்பெருமானாரது க்ருபையினாலே அவரைச் சேரப்பெற்றோம்" என்கிறார்.

**உரை :** ஆண்டுகள், நாள், திங்களாய் நிகழ் காலம் எல்லாம் – நாள், மாதம், வருஷம் என்று நிகழ்கின்ற நெடுங்காலமாக. ஈண்டு பல் யோனிகள்தோறு உழல்வோம் – எண்ணமுடியாத திரண்டு பலவகைப் பட்ட சரீரங்களிலே, ஒருகால் நுழைந்த இடத்தே ஒன்பதின் கால் நுழைந்து தட்டித் திரிந்த நாம். இன்று –. ஓர் எண் இன்றி – ஒரு நினைவின்றிக்கே இருந்தும். காண் தகு தோள் அண்ணல் – கண்ணால் கண்டு அனுபவிக்கக் கூடிய அழகு வாய்ந்த திருத்தோள்கள் உடைய ஸ்வாமியான. தென் அத்தி ஊரர் – அழகிய ஹஸ்திகிரியில் நித்யவாஸம் செய்வதால், அவ்வூரைத் தமக்கு நிருபகமாகவுடைய பேரருளாளப் பெருமானது. கழல் இணைக்கீழ் பூண்ட அன்பாளன் இராமாநுசனை –. பொருந்தினம் – . சேர்ந்து நிற்கப் பெற்றோம்.

ஈண்டு – திரண்டு. பூண்ட அன்பு - சரீரத்திற்கு ஆபரணம் போலே ஆத்மாவிற்கு இறை பூண்டது அன்பு.

srivatsam

பேரருளாளனது திருவடியில் அன்பு வாய்ந்த எம்பெருமானாரது க்ருபை நிர்ஹேதுகம் (ஒரு காரணத்தையும் பற்றியதன்று) என்பது கருத்து.

32. பொருந்திய தேசும் பொறையும் திறலும், புகழும், நல்ல
திருந்திய ஞானமும் செல்வமும் சேரும், செறுகலியால்
வருந்திய ஞாலத்தை வண்மையி னால்வந் தெடுத்தளித்த
அருந்தவன், எங்க ளிராமா நுசனை அடைபவர்க்கே

**முன்னுரை :** "இராமா நுசனைப் பொருந்தினமே" என்று களித்த அமுதனார், எம்பெருமானாரைச் சேருமவர்களுக்கு ஆத்ம குணம் முதலானவை தாமே வந்து சேரும்" என்கிறார்.

**உரை :** செறு கலியால் வருந்திய ஞாலத்தை-வருத்துகின்ற கலியினால் வாடுகின்ற பூமியை. வண்மையினால் வந்து எடுத்து அளித்த அருந்தவன் – தம்முடைய ஔதார்யத்தால் அவதரித்து, தாழ்ந்தோரை உயர்த்திய, அரிய தவத்தை உடையவரான. எங்கள் இராமாநுசனை அடைபவர்க்கு-. பொருந்திய தேசும் – (தங்களுக்கு) ஏற்ற மதிப்பும். பொறையும் – சுகதுக்கங்களால் மாறுபாடடையாதவாறு பொறுமையும். திறலும் - இந்திரியங்களை ஜயிப்பதால் வரும் பலமும். புகழும் –. நல்ல திருந்திய ஞானமும் – தத்வ, ஹித, புருஷார்த்தங்களை நன்கு அறிவதால், சிறந்த கட்டளைப் பட்டுள்ள ஞானமும். செல்வமும் - பக்திருபமான செல்வமும், சேரும்–தாமே வந்து (நாம் விரும்பாதிருந்தும்) சேரும்.

தவம் - ஏற்றுக் கொள்ளும் விரதம் அல்லது செயல்: இங்கு தாழ்ந்தோரை உயர்த்துவது என்ற சங்கல்பம் என்பதாம்.

''தன்னையே தான் வேண்டி நீள்செல்வம் வேண்டாதான், தன்னையே தான் வேண்டும் செல்வம் போல்'' என்றவாறு எம்பெருமானார்க்கு ஆட்பட்டவர்களைத் தேசு, பொறை முதலியன தாமே சேரும் என்பது கருத்து.

33. அடையார் கமலத் தலர்மகள் கேள்வன், கையாழியென்னும்
படையோடு நாந்தகமும் படர் தண்டும், ஒண் சார்ங்கவில்லும்
புடையார் புரிசங்கமு மிந்தப் பூதலம் காப்பதற்கென்று,
இடையே இராமா நுசமுனி யாயின விந்நிலத்தே.

**முன்னுரை :** ''மனம், ஞானம், புத்தி, இந்திரிய காரணமான ஸாத்விக அஹங்காரம், பூதகாரணமான தாமஸ அஹங்காரம் ஆகிய இவற்றிற்கு அபிமானிகளாகிற சக்ரம், வாள், தண்டு, வில், சங்கு இவற்றின் அருளாலே இந்திரிய ஜயம் முதலானவை உண்டாக வேண்டியிருக்க, எம்பெருமானாரை நாம் அடையவே, இவை யாவும் எனக்கு உண்டாம்; எவ்வாறு எனில் அவை யாவும் லோக ரக்ஷணமாக எம்பெருமானார் பக்கலிலே ஆயின'' என்கிறார்.

அவை எல்லாம் லோக ரக்ஷணத்திற்காக எம்பெருமானாராக அவதரித்தன என்றும் கொள்ளலாம்.

**உரை : அடை ஆர் கமலத்து அலர்மகள் கேள்வன்** –இலைநெருக்கமுடைய தாமரை மலரை இருப்பிடமாகக் கொண்ட பிராட்டிக்கு நாயகனுடைய. **கை ஆழி என்னும் படையோடு** - கையில் பொருந்திய சக்கரம் என்ற ஆயுதத்தோடு. **நாந்தகமும்** - நாந்தகம் என்ற வாளும். **படர் தண்டும்** (இறைவனை ரக்ஷிப்பதிற்) பரந்திருக்கும் கதையும். **ஒண் சார்ங்க வில்லும்** – அழகியதாய் சார்ங்கம் என்ற பேரையுடைய வில்லும். **புடை ஆர் புரி சங்கம்** – புடைபெருத்துப் புரியை உடைய சங்கும் **இந்த பூதலம் காப்பதற்கு என்று**–. **இடையே** – இந்தப் பூமியில் (நடுவே). **இராமாநுச முனி ஆயின** – எம்பெருமானார் பக்கல் ஆயின.

இவர் பக்கல் ஆகை: இவரது நினைவை அறிந்து இவர் ஏற்றுக் கொள்ளும் காரியங்களில் உபகரித்தல்.

34. நிலத்தைச் செறுத்துண்ணும் நீசக் கலியை, நினைப்பரிய
பலத்தைச் செறுத்தும் பிறங்கிய தில்லையென் பெய்வினைதென்
புலத்தில் பொறித்தவப் புத்தகச் சும்மை பொறுக்கியபின்
நலத்தைப் பெறுத்தது, இராமா நுசன்றன் நயப்புகழே.

**முன்னுரை :** கீழ் இரண்டு பாட்டுகளில் அமுதனார் அருளிச் செய்தது: கலியின் தோஷங்களால் வருந்திய பூமியை எம்பெருமானார் ரக்ஷித்தார்; எம்பெருமானாரை அடைபவர்களுக்கு ஆத்ம குணங்கள் தாமே வந்து சேரும். இப் பாட்டில் ''எம்பெருமானார் கலி தோஷத்தைப் போக்கி லோகத்தை ரக்ஷித்தவளவிலும் அவரது குணங்கள் விளங்கவில்லை; என்னுடைய கர்மத்தைக் கழித்த பின்பு சிறப்புற்றது'' என்கிறார்.

**உரை : இராமாநுசன்றன் –. நயப் புகழ்** - சிறந்த குணங்களால் வந்த புகழானது. **நிலத்தை செறுத்து உண்ணும் நீச கலியை** – லோகத்தை வருத்தி வரும் இழியதான கலியை. **நினைப்பரிய பலத்தை செறுத்தும்** – இவ்வளவென்று அளவிடமுடியாத பலத்தை, ஒளியைக் கண்ட இருள் போல் மாய்த்த இடத்தும். **பிறங்கியதில்லை** – ஒளிபெறவில்லை. **என் பெய் வினை** – என்னுடைய

srivatsam

உண்டாக்கப்பட்ட பாவங்கள். தென் புலத்தில் பொறித்த – யமலோகத்தில் எழுதி வைக்கப்பட்ட புத்தக சும்மை பொறுக்கியபின் – அந்த புத்தக பாரத்தை எரித்த பின்பு. நலத்தை பெறுத்தது– எங்கும் விளங்குமாறு சிறப்புற்றது.

பிறங்கியது – பிரகாசித்தது. தென்புலம் – யமபுரம். சும்மை – சுமை. பொறுக்கிய – எரித்த. பெறுத்தது–பெற்றது. ஏற்றது.

எம்பெருமானாரைச் சரணமாகப் பற்றியவர்கள் யமபுரத்தில் நிகழும் தண்டனைகளைப் பற்றி அஞ்சவேண்டாம் என்பது கருத்து.

35. நயவேனொருதெய்வம் நானிலத்தே, சில மானிடத்தைப்
புயலே யெனக்கவி போற்றிசெய்யேன், பொன் னரங்கமென்னில்
மயலே பெருகு மிராமா நுசன்மன்னு மாமலர்த்தாள்
அயரேன், அருவினை என்னையெவ் வாறின் றடர்ப்பதுவே.

முன்னுரை : எம்பெருமானாரை அடைந்தபின் தமது கருமங்கள் எல்லாம் ஒழிந்தன என்றார் அமுதனார். தாம் பூமியிலே இருக்கையாலே அவை மீளுமோ என்னில், இனி அவை தம்மை நலிவதற்கு வழியில்லை என்கிறார்.

உரை : ஒரு தெய்வம் நயவேன்–புறம்பொரு தெய்வத்தை விரும்ப மாட்டேன். நானிலத்தே சில மானிடத்தை புயலே என கவி போற்றி செய்யேன் – இந்த லோகத்திலே சில தண்ணிய மனிதரை, "புயலே" என்று அவர்களது ஔதார்யம் மேகத்திற்கு ஒப்பு என்று கவி பாடித் தோத்திரம் செய்ய மாட்டேன். தென் அரங்கம் என்னில் மயலே பெருகும் இராமாநுசன் – அழகிய திருவரங்கம் என்ற சொல் கேட்டால், காதலால் மேன்மேலும் மயங்கும் எம்பெருமானாரது. மன்னு மா மலர் தாள் – ஒன்றுக் கொன்று ஒப்பாகப் பொருந்திய பரமபூஜ்யங்களாய் (வணங்கத் தகுந்தவாய்) அழகியவான திருவடிகளை. அயரேன் – மறக்க மாட்டேன். இன்று என்னை அருவினை எவ்வாறு அடர்ப்பது ? –

கர்மங்கள் நம்பால் குவிகைக்குக் காரணங்கள்: (1) புறம்பான தெய்வங்களை வணங்குதல், (2) அற்பரான மானிடர்களைப் போற்றுதல், (3) பொருளல்லாதவற்றை நினைத்திருத்தல். இவை நம்பால் இல்லாமையாலே கர்மங்களால் தமக்கு இன்னல் இல்லை என்கிறார் கவி.

"கவி செய்யேன், போற்றி செய்யேன்" எனப் பிரித்து, "அவர்களைக் கவிபாட மாட்டேன், புகழமாட்டேன்" எனவும் கொள்ளலாம். புயல் – மேகம். மயல் – மயக்கம். அயர்வு – மறத்தல்.

36. அடல்கொண்ட நேமிய னாருயிர் நாதன், அன் றாரணச்சொல்
கடல்கொண்ட வொண்பொருள் கண்டளிப்பப், பின்னும் காசினியோர்
இடரின்கண் வீழ்ந்திடத் தானுமவ் வொண்பொருள் கொண்டவர்பின்,
படரும் குணன், எம் மிராமாநு சன்றன் படியிதுவே.

முன்னுரை : எம்பெருமானாருடைய திருவடிகளை மறக்கமாட்டேன் என்றார் அமுதனார் முன் பாசுரத்தில். இப் பாசுரத்தில் அவரது ஸ்வபாவத்தைக் கூறுகிறார்.

உரை : அடல் கொண்ட நேமியன் – விரோதிகளை அழிக்கும் சக்தி வாய்ந்த சக்கரத்தை ஏந்தியவனும். ஆர் உயிர் நாதன் – அரியனவான ஆத்மாக்களுக்கு இறைவனும் (ஆகிய ஸர்வேச்வரன்),

அன்று-போர் முனையில் அர்ஜுனன் கலங்கியவன்று. ஆரண சொல்கடல் கொண்ட ஒண் பொருள் – பெருவிலையுடைய ரத்தினங்கள் போன்ற வேத சப்தங்களாகிய கடலிலே ஒருவருக்கும் தெரியாதபடி மறைந்து கிடக்கும் சிறந்த பொருள்களை (வேதார்த்தங்களை). கண்டு அளிப்ப – ஆய்ந்து யாவரும் உய்யுமாறு ஸ்ரீகீதையாக அளித்து உபகரிக்க பின்னும் – பின்னையும். காசினியோர் இடரின் கண் வீழ்ந்திட-பூமியிலுள்ளவர்கள் ஸம்ஸார. துக்கத்திலே அழுந்தி இடர்பட.. தானும் அ ஒண் பொருள் கொண்டு-தாமும், முன்பு ஸர்வேச்வரன் அருளிய சிறந்த அந்த அர்த்தங்களையே கொண்டு, இவற்றை அவர்கள் கைக்கொள்ளுமளவும். பின் படரும் குணன் – அவர்களைப் பின் தொடரும் பண்பையுடையவர் (எம்பெருமானுர்). எம் இராமாநுசன்றன் படி இதுவே – இது எம் பெருமானுரது ஸ்வபாவம்.

"ஆருயிர் நாதன் என்று ஆரணச் சொல் கடல் கொண்ட" என்று பாடமான போது "அடல்கொண்ட நேமியனே ஆருயிர்களுக்கு நாதன் என்பது வேதச் சொற்கடலில் மறைந்துள்ளது" என்பது பொருளாகும்.

அடல்—மிடுக்கு. காசினி—பூமி. படி—ஸ்வபாவம். இடரின்கண்—இடரில்.

உலகினரது இடரைக் கண்டிரங்கி, அவர்களுக்கு ஸ்ரீகீதையின் பொருளை உபகரித்தவர், எம்பெருமானுர் என்பது கருத்து.

37. படிகொண்ட கீர்த்தி இராமா யணமென்றும் பத்திவெள்ளம்
குடிகொண்ட கோயி லிராமா நுசன்குணம் கூறும், அன்பர்
கடிகொண்ட மாமலர்த்தாள் கலந்துள்ளம் கனியும் நல்லோர்
அடிகண்டு கொண்டுகந்(து), என்னையு மாளவர்க் காக்கினரே.

முன்னுரை: "இவ்வாறு பெருமை வாய்ந்த எம்பெருமானுரை நான் அறிந்து பற்றவில்லை; அவர் திருவடிகளிலே சம்பந்தமுடையவர்களை விரும்பப்படுமவர்கள் எனறிருக்கும் பெரியோர்கள் என்னை எம்பெருமானுர்க்குச் சேஷமாக்கினுர்கள்" என்கிறுர்.

பதவுரை: படிகொண்ட கீர்த்தி இராமாயணம் என்னும் பக்திவெள்ளம்—பூமியில் அடர்ந்து பரவும் கீர்த்தியையுடைய ஸ்ரீராமாயணம் என்கிற பக்திப் பெருங்கடல். குடிகொண்ட கோயில் இராமாநுசன் — என்றும் பொருந்தியிருக்கும் கோயிலாகிய எம்பெருமானுருடைய. குணம் கூறும் அன்பர் — குணங்களைப் பேசுகின்ற அன்புடையோர்களது. கடி கொண்ட மாமலர் தாள் – பரிமளம் வாய்ந்து, சிறப்புடைய மலர் போன்ற திருவடிகளில். கலந்து உள்ளம் கனியும் நல்லோர்— நெஞ்சு கலந்து அன்பு கொள்ளும் பெரியோர் (சிறந்தோர்). அடி கண்டு கொண்டு உகந்து—இவ்வஸ்து இறைவனுக்கே சேஷம் என்ற மூலப்பொருளை அறிந்து அந்த சம்பந்தமே ஹேதுவாக விரும்பி. என்னையும் அவர்க்கு ஆளாக்கினர் — தங்களைப் போலே என்னையும் அவருக்குச் சேஷமாக்கினர்.

நான் அறிந்து இவ்விஷயத்தைப் பற்றவில்லை; ஸ்ரீவைஷ்ணவர்கள் சேர்க்கச் சேர்ந்தேன் என்பது குறிப்பு.

38. ஆக்கி யடிமை நிலைப்பித்தனை, என்னை யின்றவமே
போக்கிப் புறத்திட்ட தென்பொரு ளாமுன்பு, புண்ணியர்தம்
வாக்கிற் பிரியா இராமா நுச, நின் னருளின் வண்ணம்
நோக்கில் தெரிவதால், உரையா யிந்த நுண்பொருளே.

**முன்னுரை :** இவ்வாறு ஸ்ரீவைஷ்ணவர்கள் தம்மைச் சேர்க்கும்போதும் அத்வேஷம், ஆபிமுக்யம் வேண்டுகையாலே, இவற்றை விளைவிப்பது ஈச்வரனே என்பது தேறி, எம்பெருமானாரை ஈச்வரனாகவே நினைந்து, அமுதனார், "எம்பெரு மானாரே! இத்தனை நாட்கள் நான் இவ்வூரிலேயே இருக்க. என்னை ஏற்றுக்கொள் ளாததற்கும், இப்போது ஏற்றுக் கொண்டதற்கும் ஹேது என்ன?'' என்று கேட் கிறார்.

அன்றி, தம்மை அங்கீகரித்தவர் எம்பெருமானாராகையாலே, அவரது திருமுகத்தைப் பார்த்து, "இத்தனை நாட்கள் ஏற்றுக் கொள்ளாததற்கும் இப்போது ஏற்றுக் கொண்டதற் கும் ஹேது என்ன?'' என்று கேட்கிறார். அத்வேஷம் — த்வேஷமின்மை. ஆபிமுக்யம் — (நம் மிடம் அணுகும்போது) இசைந்து எதிர்நோக்குதல்.

திருவாய்மொழியில் நம்மாழ்வார், "இன்றென்னை'' என்ற பாசுரத்தில் எம்பெருமானைக் கேட்பது போன்றது இதுவும்.

**உரை :** இன்று என்னை அடிமை ஆக்கி நிலைப்பித்தனை — அநாதி காலமாக "ஈச்வரோ ஹம்'' (நானே இறைவன்) என்ற அஹங்காரம் அவனுக்கு அடியான் என்று இசையச் செய்து கொண்ட என்னை, இன்று அவனுடைய அடியார்களுக்கும் அடியனாக்கி, இது தன்னிலே ஊன்றி நிற்கச் செய்தீர். முன்பு அவமே போக்கி புறத்து இட்டது என் பொருள் ஆம்? — முன்பெல்லாம் காலத்தைப் பாழே கழிக்க, என்னைப் புறம்பான விஷயங்களிலே தள்ளிவிட்டு வைத்தது என்ன நிமித்தமாக? புண்ணியர்தம் வாக்கில் பிரியா இராமாநுச — தேவரீரை உள்ளபடி அறிக்கைக்கு டான பாக்யத்தையுடையவர்களாலே இடையறாது போற்றப்படும் எம்பெருமானாரே! நின் அருளின் வண்ணம், நோக்கில் தெரிவரிது ஆல் — தேவரீரது கிருபையின் அளவு ஆராய்ந்தறிய அவதில்லை. இந்த நுண்பொருள் உரையாய் — மிகவும் நுண்ணியதான இந்த விஷயத்தை தேவரீரே அருளிச் செய்யவேணும்.

39. பொருளும் புதல்வரும் பூமியும், பூங்குழ லாருமென்றே
மருள்கொண் டிளைக்கும் நமக்குநெஞ்சே, மற்று ளார்தரமோ
இருள்கொண்ட வெந்துயர் மாற்றித் தன் னீறில் பெரும்புகழே,
தெருளுந் தெருள்தந்(து), இராமாநுசன் செய்யும் சேமங்களே.

**முன்னுரை :** இப்படிக் கேட்டதற்கு மாற்றம் ஒன்றும் அருளிச் செய்யக் காணாமையாலே, அமுதனார், எம்பெருமானார் தமக்குச் செய்த உபகாரங்களை அநுஸந்தித்துத் தமது நெஞ்சைப் பார்த்து, "நமக்கு எம்பெருமானார் செய்யும் ரக்ஷைகள் வேறு சிலர் செய்யுமளவோ ?'' என்கிறார்.

**உரை :** நெஞ்சே!—. பொருளும்......நமக்கு — பொருள், புதல்வர், நிலம், மனைவிமார் என்று இவற்றையே விரும்பி, அறிவுகெட்டு, துக்கப்படும் நமக்கு. இருள் கொண்ட வெம் துயர் மாற்றி — அறிவின்மையால் வரும் கொடிய துக்கங்களை மாற்றி. தன் ஈறு இல் பெரும்புகழே — தம்முடைய ஒப்பில்லாத மிகச்சிறந்த கல்யாண குணங்களையே. தெருளும் தெருள் தந்து — அறி யக் கூடிய அறிவைத் தந்து. இராமாநுசன் செய்யும் சேமங்கள் — எம்பெருமானார் செய்யும் ரக்ஷைகள். மற்றுளார் தரமோ? — மற்றவர்கள் செய்யுமளவோ?

பூங்குழலார் — பூவைக் கொண்ட குழலுடைய (பெண்டிர்) மனைவியர். மருள்—அறிவு கேடு. தெருளும் தெருள் — அறியக்கூடிய அறிவு. சேமம்—ரக்ஷை. தரம்—ஒப்பு. மற்றுளார் தரமோ —மற்றவர்களோடு ஒப்பாமோ?

40. சேமநல் வீடும் பொருளும் தருமமும், சீரியநற்
காமமு மென்றிவை நான்கென்பர், நான்கினும் கண்ணனுக்கே
ஆமது காமம் அறம்பொருள் வீடிதற் கென்றுரைத்தான்,
வாமனன் சீலன், இராமா நுசனிந்த மண்மிசையே.

**முன்னுரை :** முன் பாட்டில் எம்பெருமானார் தமக்குச் செய்த உபகாரங்களை அருளிச் செய்தார். இப்பாட்டில் அவர் உலகத்திற்குச் செய்த உபகாரத்தை அநுஸந்தித்துப் பாராட்டுகிறார்.

**உரை :** சேமம் நல் வீடு .....நான்கு என்பர்—க்ஷேம ரூபமாய்ச் சிறந்ததான மோக்ஷமும், பொருளும், தருமமும், தானே புருஷார்த்தமாகையாலே சிறந்ததாய் விலக்ஷணமான காமமும் ஆகிய நாலும் புருஷார்த்தங்களாக அறக்கற்ற பெரியோர் சொல்லுவர். வாமனன் சீலன்—தம்மைப் பிறர் இறைஞ்சாமல் தாமே வந்து உபகரிக்கைக்கு ஸ்ரீவாமனனை ஒத்த சீலரான இராமாநுசன் — எம்பெருமானார். நான்கினும் கண்ணனுக்கு அது காமம் ஆம் –இவை நாலிலும் காமம் என்பது ஸர்வேச்வரன் விஷயத்தில் உண்டாமது. அறம் - பொருள் வீடு, இதற்கு என்று அறம், பொருள், வீடு ஆகிய மூன்றும் காம சப்தத்தால் சொல்லக் கூடிய பகவத் ஸம்ச்லேஷத்திற்கு (இறைவனோடு கூடுவதற்கு) அங்கங்களாயிருப்பன என்று. இந்த மண்மிசை உரைத்தான்—

"வாமனன் சீரை" என்று பாடமானபோது, "கண்ணனுக்கே ஆம் அது காமம்" என்ற பின்பு, "தம்முடன் நாம் கோராமல் எளிதில் கலக்குமவன் காண்மின்" என்று ஸ்ரீவாமனனுடைய ஸ்பாவத்தை அருளிச்செய்தார் எனக் கொள்ளலாம்.

srivatsam

41. மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து, எங்கள் மாதவனே
கண்ணுற நிற்கிலும் காணகில்லா, உலகோர்களெல்லாம்
அண்ண லிராமா நுசன்வந்து தோன்றிய வப்பொழுதே,
நண்ணரு ஞானம் தலைக்கொண்டு, நாரணற் காயினரே.

**முன்னுரை :** "ஸர்வேச்வரன் பல அவதாரங்கள் பண்ணித் தன்னைக் கண்ணுக்கு இலக்காக்கிய வளவிலும் அவனைக் காணமாட்டாத உலகத்தினர் எல்லோரும் எம்பெருமானாராலே திருந்தி, நல்லறிவு வாய்ந்து இறைவனுக்கு ஆளாயினர்" என்கிறார்.

"நானும் சொன்னேன், நமரும் உரைமின், நாமோ நாராயணமே" என்றார் திருமங்கையாழ்வார். இதுபோலே எம்பெருமானார் தோன்றியபோதே நலம் பெற்றனர்.

**உரை :** மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து – பூமியில் மனுஷ்யர், திர்யக்கு என்றவாறு பலவகைப் பிறவிகள் பிறந்து. எங்கள் மாதவனே கண் உற நிற்கிலும் காணகில்லா – நமக்கு நாதனான ச்ரிய:பதியே தன்னை இந்த ஊனக் கண்களுக்கு விஷயமாக்கிக் கொண்டு நின்றாலும், "இவன் நமக்கு ஸ்வாமி" என்று அறியமாட்டாத. உலகோர்கள் எல்லாம்–. அண்ணல் இராமாநுசன் வந்து தோன்றிய அப்பொழுதே – உலகினர்களது இழவு பேறுகள் எல்லாம் தம்மதாம்படியான இறைமையுடையவரான எம்பெருமானார் வந்து, ஸ்ரீபாஷ்யம் முதலானவற்றால் யாவராலும் அந்தக் காலத்திலே அறியப்பட்ட. நண்ணரு ஞானம் தலைக்கொண்டு – தம் முயற்சியாலே பெற முடியாத ஞானமானது மிகவும் ஓங்க. நாரணற்கு ஆயினர்–நாராயணன் என்னும் திருநாமம் உடைய இறைவனுக்குச் சேஷமாயினர்.

• எம்பெருமானார் அவதரித்ததும் தாம் நாராயணனுக்குச் சேஷம் என்பதை மக்கள் உணர்ந்தனர்.

42. ஆயிழையார் கொங்கை தங்குமக் காத லளற்றழுந்தி
மாயுமென் னுவியை வந்தெடுத் தானின்று, மாமலராள்
நாயக னெல்லா வுயிர்கட்கும் நாத னரங்கனென்னும்
தூயவன், தீதி லிராமா நுசன்தொல் லருள்சுரந்தே.

**முன்னுரை :** இறைவனது அவதாரங்களால் திருந்தாதவர்கள் யாவரும் எம்பெருமானாரது அவதாரத்தால் திருந்தினார்கள் என்றார் கீழ்; "சிற்றின்பங்களை விரும்பி நசித்துப் போகிற என்னைத் தமது பரம கிருபையாலே உயர்த்தினார்" என்றார் இப்பாசுரத்தில்.

**உரை : மாமலராள் நாயகன், எல்லா உயிர்கட்கும் நாதன் அரங்கன் என்னும் தூயவன் –** ஸ்ரீபதியான திருவரங்கன் உயிர்களுக்கெல்லாம் சேஷி (இறைவன்) என்று உபதேசிக்கும் ஞான தூய்மையுடையவராய். **தீது இல் இராமாநுசன் -** பெருமை, லாபம் முதலானவற்றிற்காக உபதேசிக்காமல் தமது கடமை யென்றே உபதேசிக்கும் எம்பெருமானார். **தொல் அருள் சுரந்து –** தமது இயல்பான கிருபை கிளர்ந்து. **இன்று ஆயிழையார் கொங்கை தங்கும் அ காதல் அளற்று அழுந்தி–** கண்களை மயக்கத்தக்க ஆபரணங்களை அணிந்து, அதுவே நிரூபகமாக விளங்கும் பெண்டிரின் ஸ்தனங்களில் பொருந்தும் பெருங் காதலாகிய சேற்றில் ஆழ்ந்து. **மாயும் என் ஆவியை வந்து எடுத்தான் –** ஸ்வரூபம் குலையும் எனது ஆத்மாவை, சேற்றில் ஆழ்ந்தியவரை மேலெழுப்பும் ஆற்றல் வாய்ந்த தார்மிகர் வந்தெடுக்குமாபோலே, (தமது உபதேசத்தாலே) எடுத்தருளினார்.

ஆய்தல்-தெரிதல். இழை-ஆபரணம். 'அக்காதல்' என்று அதன் இழிவைச் சொல்லுகிறது.

srivatsam

ஜீவபர சம்பந்தத்தை விளக்கிக் காட்டி எம்பெருமானார் மக்களை ஸம்ஸாரத்தினின்றும் எடுத்தார் என்பது கருத்து.

43. சுரக்குந் திருவு முணர்வும், சொலப்புகில் வாயமுதம்
பரக்கு மிருவினை பற்றற வோடும், படியிலுள்ளீர்!
உரைக்கின் றனனுமக் கியானறஞ் சீறு முறுகலியைத்,
துரக்கும் பெருமை, இராமா நுசனென்று சொல்லுமினே.

**முன்னுரை :** இவ்வாறு தம்மை எம்பெருமானார் உயர்த்தியதால் வந்த மகிழ்ச்சியால், உலகினரைப் பார்த்து அமுதனார், "நீங்கள் எம்பெருமானாரது திருநாமத்தைச் சொல்லுங்கள்; நன்மை உண்டாகும்" என்கிறார்.

"நானும் சொன்னேன், நமரும் உரைமின் நமோ நாராயணமே" என்றார் திருமங்கையாழ்வார்.

**உரை :** படியில் உள்ளீர் - எம்பெருமானார் அவதரித்ததால், 'புண்யவதீ' யான **பூமியில்** வாழ்பவர்களே! உமக்கு யான்–அனுபவத்தாலே எம்பெருமானாருடைய பெருமையைக் கைகண்டவன், இஃதறியாத உங்களுக்கு. **உரைக்கின்றனன் –** சொல்லுகிறேன். (எது என்னில்). **அறம் சீறும் உறு கலியை துரக்கும் பெருமை –** தர்மம் என்பது நடையாடதவாறு வாட்டும் கொடுமை மிகுந்த கலியை ஓட்டிவிடும் பெருமையுடைய. **இராமாநுசன் என்று சொல்லுமின்–. திருவும் உணர்வும் சுரக்கும் –** பக்தியாகிற செல்வமும், ஞானமும் மேன்மேலும் வளரும். **சொலப்புகில் –** சொல்லும் போதே. **வாய் அமுதம் பரக்கும் –** வாக்கில் ரஸம் பிறக்கும், "அண்ணிக்கும் அமுதூறும்" என்றவாறு. **இருவினை பற்று அற ஓடும் -** அநுபவம், ப்ராயச்சித்தம் இவற்றாலல்லது நீங்காத கொடிய பாவங்கள், தாமே அஞ்சிப் பற்றில்லாமல் நம்மை விட்டு ஓடும்.

"நாராயண சப்தமாத்ரம் விமுக்தது:காஸ் ஸுகிநோ பவந்தி" என்றவாறு, எம்பெருமானார் என்று சொன்னால் துன்பங்கள் நீங்கி, இன்பம் பெறலாகும்.

44. சொல்லார் தமிழொரு மூன்றும், சுருதிகள் நான்குமெல்லை
யில்லா வறநெறி யாவும் தெரிந்தவன், எண்ணருஞ்சீர்
நல்லார் பரவு மிராமா நுசன்திரு நாமம்நம்பிக்
கல்லா ரகலிடத்தோர், எதுபேறென்று காமிப்பரே.

**முன்னுரை :** முன் பாசுரத்தில் சொல்லிய உபதேசத்தாலும் திருந்ாதவர்களது நிலையை இப்பாசுரத்தில் விளக்குகிறார், கவி.

**உரை :** அகலிடத்தோர் - பரந்த பூமியில் வாழுமவர்கள். எது பேறு என்று காமிப்பர் - புருஷார்த்தம் எது என்று இச்சை கொள்வர். சொல் ஆர் தமிழ் ஒரு மூன்றும் - சொல் நிரப்பம் உடையதாய், ஒப்பற்றதாய், இயல், இசை, நாடகம் என்று மூவகைப் பட்ட தமிழும். சுருதிகள் நான்கும் — நாலான வேதங்களும். எல்லை இல்லா அறநெறி—எண்ணற்ற தர்ம மார்கங்களும் யாவும் தெரிந்தவன்—அலகலகாக ஆராய்ந்திருக்குமவராய். எண்ணரும் சீர் நல்லார் பரவும் இராமாநுசன்—கணக்கற்ற கல்யாண குணங்கள் வாய்ந்த பெரியோர்கள் வாழ்த்தும் எம்பெருமானரது. திருநாமம் நம்பி கல்லார்—திருநாமத்தைக் கற்கமாட்டார்கள்; நான் சொல்லுவதில் இவர்களுக்கு ஊற்றமில்லை.

இராமாநுசன் என்று ஒருகால் சொல்லாமல் மக்கள் இழந்துபோவதே என்று வருந்துகிறார் கவி.

45. பேறொன்று மற்றில்லை நின்சரணன்றி, அப் பேரளித்தற்கு
ஆறொன்று மில்லைமற் றச்சர ணன்(றி), (எ)ன் றிப்பொருளைத்
தேறு மவர்க்கு மெனக்கு முனைத்தந்த செம்மைசொல்லாற்,
கூறும் பரமன்(று), இராமாநுச! மெய்ம்மை கூறிடிலே.

**முன்னுரை :** "இவ்வாறான சேதனர்களுள் ஒருவனான என்னிடம் அன்பு கொண்டு தேவரீரையே பற்றாகக் கொள்ளும்படி செய்தருளிய உபகாரத்தை வாசமிட்டுச் சொல்லவொண்ணாது" என்கிறார்.

**உரை :** இராமாநுச! மெய்ம்மை கூறிடில்-. நின் சரண் அன்றி பேறு மற்று இல்லை—தேவரீரது திருவடிகளையன்றி, ப்ராப்யம் வேறு இல்லை. அ பேறு அளித்தற்கு மற்று அ சரண் அன்றி ஆறு மற்று ஒன்றும் இல்லை — அந்த ப்ராப்யத்தைத் தருகைக்கு அத் திருவடிகளைத் தவிர வேறு உபாயம் ஒன்றுமில்லை. என்று இ பொருளை தேறுமவர்க்கும் எனக்கும்—என்ற இந்த அர்த்த தத்துவத்தை அறிந்து அதிலே விரும்பி ஊன்றியிருப்பவர்களுக்கும் எனக்கும். உனை தந்த செம்மை- (தேவரீர் தம்மை) எமக்கே ஆக்கிக் கொண்ட செம்மை. சொல்லால் கூறும் பரம் அன்று—வாசகமிட்டுச் சொல்லவொண்ணாது.

எம்பெருமானரையே பற்றுமவர்களுக்கு, அவர் தம்மையே தந்த கற்பகம் என்கிறார், கவி.

46. கூறும் சமயங்க ளாறுங் குலையக், குவலயத்தே
மாறன் பணித்த மறையுணர்ந் தோனை, மதியிலியேன்
தேறும் படியென் மனம்புகுந் தானைத், திசையனைத்தும்
ஏறும் குணனை, இராமா நுசனை இறைஞ்சினமே.

**முன்னுரை :** எம்பெருமானுர் செய்தருளின உபகாரத்தை நினைந்து, ...ற்குத் தோற்று அவரது திருவடிகளை வணங்குகிருர்.

**உரை :** **கூறும் சமயங்கள் ஆறும் குலைய**—ப்ரமாணத்திற்கு அனுகூலமல்லாத தர்க்கத் ...லே ஓதும் ஆறு சமயங்களும் குலையுமாறு. **குவலயத்தே மாறன் பணித்த மறை உணர்ந்** ...னை—அம்மதங்கள் பரவிய இந்நிலத்திலே, நம்மாழ்வார் அருளிய தமிழ் வேதமாகிய திருவாய் ...ாழியை ஆராய்ந்துணர்ந்தவராயும். **மதி இலியேன் தேறும்படி என் மனம் புகுந்தானை**— ...மாணங்களை உணர்ந்து தேர்ந்து உய்ய ஞானமில்லாத நானும் தேறும்படி என் மனத்துள் ...ந்தவராயும். **திசை அனைத்தும் ஏறும் குணனை**—திசைகள் அனைத்தும் பரவிய கல்யாண ...ணங்கள் உடையவராயும். (விளங்கும்). **இராமாநுசனை**—**இறைஞ்சினம்**—இவ்வுபகாரத்திற்குத் ...ாற்று வணங்கினேம்.

இறைஞ்சினம்—(பன்மை). பெரும் பயன் பெற்ற பெருமையால் வரும் மகிழ்ச்சி தோற்று ...ப்பது இப் பன்மை.

47. இறைஞ்சப் படும்பர னீச னரங்கனென்(று), இவ்வுலகத்து
அறஞ்செப்பு மண்ண லிராமா நுசன்,என் னருவினையின்
திறஞ்செற் றிரவும் பகலும் விடாதென்றன் சிந்தையுள்ளே,
நிறைந்தொப் பறவிருந்தான்,எனக் காரும் நிகரில்லையே.

srivatsam

**முன்னுரை :** முன் பாசுரத்தில் அமுதனர், "மதியிலிலேன் தேறும்படி என் ...ம் புகுந்தான்" என்ருர். உலகிலுள்ளவர்களுக்கு இறைவனிடம் ருசியை விளை ...த்த எம்பெருமானுர், தம்மளவில் காட்டிய பரிவை நினைந்து, இவ்வாறு அருள் ...பற்ற தமக்கு நிகர் ஒருவரும் இல்லை என்கிருர்.

**உரை :** **இறைஞ்சப்படும் பரன் ஈசன் அரங்கன் என்று**—யாவராலும் விரும்பி அடையப் ...டுமவன் என்று வேதாந்த ப்ரஸித்தனான பரன் ஸ்ரீரங்கத்திலே உறைபவன் என்று. **இவ்வுலகத்து** ...றம் செப்பும் அண்ணல் இராமாநுசன்—தர்மம் அறியாதார் உள்ள இந்த லோகத்திலே ஸாக்ஷாத் ...ர்மத்தை அருளிச் செய்யுமவராய், தம்மை யண்டினவர்களது இழவு பேறுகள் தம்முடையன ...குமாறு தொடர்புடையவராய் விளங்கும் எம்பெருமானுர். **என் அருவினையின் திறம் செற்று**— ...நுபவத்தாலும் பிராயச்சித்தத்தாலும் போக்க அரிதான என்னுடைய கர்ம சமூகத்தைப் ...ாக்கி. **இரவும் பகலும் விடாது என் சிந்தையுள்ளே நிறைந்து**—. **ஒப்பு அற இருந்தான்**—இவ்விருப் ...கு ஒப்பில்லை என்னும்படி, எழுந்தருளியிருந்தார். **எனக்கு ஆரும் நிகர் இல்லை**—இவ்வாருன ...ருளைப் பெற்ற எனக்கு ஒருவரும் ஒப்பில்லை.

திறம்—சமூகம்.

எம்பெருமானுரை எப்போதும் நினைந்திருப்பது, ஒப்பற்றதொரு பெருமை என்பது ...க்து.

48. நிகரின்றி நின்றவென் நீசதைக்கு, நின்னரு ளின்கணன்றிப்
புகலொன்று மில்லை யருட்கு மஃதேபுகல், புன்மையிலோர்
பகரும் பெருமை இராமா நுச!இனி நாம்பழுதே
அகலும் பொருளென், பயனிரு வோமுக்கு மானபின்னே.

**முன்னுரை :** "எனக்காரும் நிகரில்லை" என்ற அமுதனாரைப் பார்த்து எம்பெருமானார், "நீர் நம்மை விட்டு வேறொரு விஷயத்தில் ஊன்றினீர் எனில், நாம் உம்மை விட்டு வேறொரு விஷயத்தை விரும்பினால், இந்தக் களிப்பு உமக்கு நிற்கமாட்டாதே" என்ன, அமுதனார், "என்னுடைய நைச்சியத்திற்கு தேவரீருடைய கிருபையே புகல்; அந்தக் கிருபைக்கு என்னுடைய நைச்சியத்தைத் தவிரப் புகல் இல்லை; ஆதலின் யாதொரு பயனுமின்றி நாம் இனி அகலுகைக்குக் காரணம் என்?" என்கிறார்.

**உரை :** நிகர் இன்றி நின்ற என் நீசதைக்கு – ஆத்ம குணங்கள் இல்லாமையாலும், இழிவான குணங்கள் மலிந்திருப்பனவாலும் வரும் தண்மையில் ஒப்பு ஒருவரும் இல்லாமல் நிற்கும் என்னுடைய இழிவிற்கு. நின் அருளின்கண் அன்றி புகல் ஒன்றும் இல்லை – தேவரீருடைய இருபையிலேயன்றி ஒதுங்க நிழல் ஒன்றும் இல்லை. அருட்கும் அஃதே புகல் – அந்த (தேவரீருடைய) கிருபைக்கும் என்னுடைய இழிவு தவிரப் புகல் இல்லை. புன்மை இலோர் பகரும் பெருமை இராமாநுச – ஸம்ஸார வெக்கை அறியாத நித்யஸூரிகள் புகழும் பெருமையுடைய எம்பெருமானாரே! பயன் இருவோமுக்கு ஆனபின் – எனக்கு ஸ்வரூப லாபமாய், தேவரீருக்குக் குணலாபமாய் நம் இருவருக்கும் பயன் ஆனதால். நாம் பழுதே அகலும் பொருள் என்? – இது அறிந்துள்ள நாம் மேலுள்ள காலம் பயன் ஒன்றுமின்றிக்கே அகல்வதற்குக் காரணம் என்ன? அகல ஹேது இல்லை என்றவாறு.

"ததஹம் த்வத்ருதே ந நாதவாந், மத்ருதே த்வம் தயநீயவாந் நச" (உன்னைத் தவிர நான் நாதனற்றவன், நீயும் என்னைத் தவிர வேறொருவனை அருளுக்கு விஷயமாக உடையையல்லை) (ஆளவந்தார் ஸ்தோத்ரம் 51) இங்கு ஒப்புநோக்கு.

49. ஆனது செம்மை யறநெறி, பொய்ம்மை அறுசமயம்
போனது பொன்றி யிறந்தது வெங்கலி, பூங்கமலத்
தேனதி பாய்வயல் தென்னரங் கன்கழல் சென்னிவைத்துத்
தானதில் மன்னும், இராமா நுசனித் தலத்துதித்தே.

**முன்னுரை :** தம் உள்ளத்தில் எம்பெருமானார் எப்போதும் பொருந்தியுள்ளார் என்று தமது களிப்பையும், இந்தக் களிப்பு எப்போதும் இலங்கும் என்பதையும் கீழ் இரண்டு பாசுரங்களில் அருளிச்செய்தார் அமுதனார். இந்தப் பாசுரத்தில் எம்பெருமானார் அவதரித்த பின்பு உலகத்தில் உண்டான நிறைவை நினைந்து இனியராகிறார்.

**உரை :** பூம் கமலத்தேன் நதி பாய் வயல் தென் அரங்கன் கழல் – அழகிய தாமரைகளினின்றும் பெருகும் தேனாகிற ஆறானது விளைநீராகப் பாயும் வயல்கள் உடையதாய், சோலைகள், மதிள்கள், கோபுரங்கள், மாளிகைகள் இவற்றின் சமுதாய சோபையாலே அழகிய திருவரங்கத்திற் கண் வளரும் இறைவனுடைய திருவடிகளை. சென்னி வைத்து, தான் அதில் மன்னும் இராமாநுசன் – தமது தலையில் தரித்து, அவற்றிலேயே என்றும் அன்புடன் பொருந்தும் எம்பெருமானார். இ தலத்து உதித்து–இந்தப் பூமியிலே அவதரித்து. செம்மை அறநெறி ஆனது – செம்மையான தர்ம மார்க்கம் முன்பு அழிந்து கிடந்தது மீண்டும் உண்டாயது. பொய்ம்மை அறுசமயம் பொன்றி போனது – வேதத்திற்குப் புறம்பான ஆறு சமயங்களும் முடிந்து போயின. வெம் கலி இறந்தது – புறச் சமயங்கள் தலை எடுக்கக் காரணமான கொடிய கலியும் நசித்தது.

எம்பெருமானார் அவதரித்துக் கலியும் கெட்டது என்பது கருத்து. "கலியுங்கெடும் கண்டுகொண்மின்" என்ற நம்மாழ்வாரது வாக்கின் பலன் இது.

50. உதிப்பன வுத்தமர் சிந்தையுள், ஒன்றலர் நெஞ்சமஞ்சிக்
கொதித்திட மாறி நடப்பன, கொள்ளைவன் குற்றமெல்லாம்
பதித்தவென் புன்கவிப் பாவினம் பூண்டன, பாவுதொல்சீர்,
எதித்தலை நாதன், இராமா நுசன்றன் னிணையடியே.

**முன்னுரை :** எம்பெருமானாருக்குத் திருவரங்கனுடைய திருவடிகளின் பால் உள்ள பேரன்பைக் கூறினார் அமுதனார், முன்பாசுரத்தில். இதனை வெளியிடும்போது தமக்கு எம்பெருமானாரது திருவடிகள் பேருகப்பு என்று கூறி மகிழ்கிறார் இப்பாசுரத்தில்.

**உரை :** **பாவு தொல் சீர் எதித்தலை நாதன்** – திசைகள் எங்கும் பரவும் கல்யாண குணங்களை உடையவராய், எதிகளுக்குத் தலைவராய். (விளங்கும்). **இராமாநுசன்றன் இணை அடி** – எம்பெருமானாருடைய இணைந்த திருவடிகள். **உத்தமர் சிந்தையுள் உதிப்பன** – (எம்பெருமானாரையே பற்றியிருக்கும்) மேலோரது உள்ளத்திலே சூரியன் உதித்தாப்போலே பிரகாசிக்கும் தன்மையன. **ஒன்றலர் நெஞ்சம் அஞ்சி கொதித்திட மாறி நடப்பன** – வேத நெறிக்கும் புறம்பானவர்களது உள்ளம் அஞ்சி வாடும்படி மாறி மாறி நடையிடுவன. **கொள்ளை வன் குற்றம் எல்லாம் பதித்த என் புன் கவி பா இனம் பூண்டன** – பிரபலமான தோஷங்கள் மலிந்த என்னுடைய புல்லிய கவிகளின் திரளைப்பை அணிந்து கொண்டன.

ஒன்றலர்—சத்துருக்கள். பாவு—பரவுகிற.

எம்பெருமானாரது திருவடிகள் உத்தமர்களது நெஞ்சில் இருப்பனவாயினும், என்னுடைய புன்கவிகளையும் தமக்கு அணியாகக் கொள்வன.

srivatsam

51. அடியைத் தொடர்ந்தெழு மைவர்கட்காய், அன்று பாரதப்போர்
முடியப் பரிநெடுந் தேர்விடுங் கோனை, முழுதுணர்ந்த
அடியர்க் கமுத மிராமா நுசனென்னை யாளவந்திப்
படியிற் பிறந்தது, மற்றில்லை காரணம் பார்த்திடிலே.

**முன்னுரை :** "எம்பெருமானார் இங்கு அவதரித்தது, என்னை அடிமை கொள்ளுகைக்காகவே, வேறொரு ஹேதுவும் இல்லை" என்கிறார்.

**உரை :** **அடியை தொடர்ந்து எழும் ஐவர்கட்காய் அன்று** – தன்னுடைய திருவடிகளையே சரணாகப் பற்றி, அதனால் கர்வம் கிளர்ந்த பாண்டவர்களுக்காக, விரோதிகள் எங்குந் திரண்டு இவர்கள் தனிமைப் பட்டுத் தன்னையொழிய வேறு துணையற்றிருந்த அன்று. **பாரதப் போர் முடிய** – பாரதப் போரில் விரோதிகள் அனைவரும் குலையும்படி. **பரி நெடும் தேர் விடும் கோனை** – குதிரைகள் பூண்ட, சிறந்த தேரை நடத்திய ஸர்வேச்வரனை. **முழுது உணர்ந்த அடியர்க்கு அமுதம் இராமாநுசன்** – (தம்மை அண்டினவர்களிடம்) பக்ஷபாதம், அவர்களுக்காகத் தாம் இருப்பது, அவர்களது விரோதிகளை முடிப்பது முதலான இயல்புகளை நன்கு உணர்ந்து, அவற்றில் ஈடுபடும் அன்பர்களுக்கு இனியரான எம்பெருமானார். **இ படியில் வந்து பிறந்தது** – இந்தப் பூமியில் அவதரித்தது. **என்னை ஆள** – என்னை அடிமை கொள்ளுகைக்காக. **பார்த்திடில் காரணம் மாற்று இல்லை**—ஆராயில் வேறொரு காரணமும் இல்லை.

எழுச்சி—கிளப்பம். "நாம் கண்ணனை அண்டினோம்" என்பதால்.

எம்பெருமானாரது அவதாரம் க்ருபையினாலேயே என்பது கருத்து.

52. பார்த்தா னறுசம யங்கள் பதைப்ப,இப் பார்முழுதும்
போர்த்தான் புகழ்கொண்டு புன்மையி னேனிடைத் தான்புகுந்து,
தீர்த்தா னிருவினை தீர்த்தரங்கன் செய்ய,தாளிணையோடு
ஆர்த்தான், இவையெம் மிராமா நுசன்செய்யு மற்புதமே.

**முன்னுரை :** முன் பாசுரத்தில் எம்பெருமானார் அவதரித்தது, தம்மை அடிமை கொள்ளுவதற்காக என்றார் அமுதனார். இவ்வாறு எம்பெருமானார் அவதரித்துச் செய்த அற்புதச் செயல்களை இப்பாசுரத்தில் வரைகிறார்.

உரை : **அறு சமயங்கள் பதைப்ப பார்த்தான்** – (எம்பெருமானார்) சமயங்கள் ஆறும் நடுங்கும்படியாக நோக்கினார். **இ பார் முழுதும் புகழ்கொண்டு போர்த்தான்** – இந்தப் பூமி முழுதும் தம்முடைய புகழைக் கொண்டு பரப்பிவிட்டார். **புன்மையினேன் இடை தான் புகுந்து என் இரு வினைகள் தீர்த்தான்** – இழிய குணங்களுக்கு இருப்பிடமான என்னிடம், நான் கோராமல், தாமே வந்து புகுந்து, எவ்வளவு அனுபவித்தாலும் தொலையாத (என்னுடைய) பெரும் பாவங்களைப் போக்கினார். **தீர்த்து அரங்கன் செய்ய தாளிணையோடு ஆர்த்தான்** - இவ்வாறு பாவங்களைப் போக்கி, என்னைத் திருவரங்கனது திருவடிகளில் பிணைத்தார். **இவை எம் இராமாநுசன் செய்யும் அற்புதம்**—.

அற்புதம் – ஒருவராலும் செய்யப் பெறுதததொரு செயலால் தரும் ஆச்சர்யம். பதைப்ப – துடிப்ப. போர்த்தான் – மூடினான். இருவினை – பெரிய பாவங்கள். ஆர்த்தான் – பிணைத்தான்.

எம்பெருமானார் பெற்ற புகழுக்குக் காரணம், நம் மனத்துள் புகுந்து நம்மை இறைவனது திருவடிகளில் ப்ரேமம் கொள்ளச் செய்தது.

srivatsam

53. அற்புதன் செம்மை இராமா நுசன்,என்னை ஆளவந்த
கற்பகம் கற்றவர் காமுறு சீலன், கருதரிய
பற்பல் லுயிர்களும் பல்லுலகி யாவும் பரனதென்னும்
நற்பொருள் தன்னை,இந் நானிலத்தே வந்து நாட்டினனே.

**முன்னுரை :** "பிற மதங்களைக் குலைத்து இவர் நிலைநிறுத்தியது, சேதனாசேதனங்கள் யாவும் ஸர்வேச்வரனுக்கே சேஷம் என்பதாகிய சிறந்த பொருளை" என்கிறார்.

உரை : **என்னை ஆளவந்த கற்பகம்** – என்னை அடிமை கொள்ளுவதற்காக, நான் கிடந்த இடம் தேடி வந்த ஒப்பில்லா உதாரரராயும். **கற்றவர் காமுறு சீலன்** – அறிவுடையார் ஆசைப்படுமாறு சீலகுணம் உடையவராயும். **அற்புதன்** – மனிதர்களது செயலை விஞ்சிச் செய்யும் செயலாலே வியக்கத் தக்கவராயும். **செம்மை** - நம்மைக் கைவிடாதே. நீர் ஏறா மேடுகளில் விரகாலே நீர் ஏற்றுவாரைப் போலே தம்மை நம்முடன் அமைத்துப் பரிமாறும் செம்மை உடையவராயும். (விளங்கும்). **இராமாநுசன்** – எம்பெருமானார். **கருதரிய பல்பல் உயிர்களும் பல் உலகு யாவும்** – நினைத்துத் தலைக்கட்ட அரிதான எண்ணிறந்த லோகங்களும், **பரனது** – யாவரினும் பரனான இறைவனுக்கே சேஷம். **என்னும் நல்பொருள் தன்னை** — என்ற சீரிய அர்த்தத்தை. **இ நானிலத்தே வந்து நாட்டினான்** – இந்தப் பூமியில் ஒருவர் கோராதிருப்பினும், தாமே வந்து நிலைநிறுத்தினார்.

கற்பகத்தைக் காட்டிலும் இவரது ஏற்றம் : அடிமை கொள்ளுகையும், இருந்த இடம் தேடி வருகையும்.

உலகம் உய்வதற்காக நிலைநிறுத்திய பொருள், உயிர்கள் யாவும் உலகங்கள் யாவும் இறைவனுக்கே உரியன(சேஷம்) என்பது.

54\. நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன, நாரணனைக்
காட்டிய வேதம் களிப்புற்றது, தென்குருகை வள்ளல்
வாட்ட மிலாவண் டமிழ்மறை வாழ்ந்தது, மண்ணுலகில்
ஈட்டிய சீலத்(து), இராமா நுசன்றன் னியல்வுகண்டே.

**முன்னுரை :** எம்பெருமானார் நாட்டிய நற்பொருளாலே புறச் சமயங்கள் குலைந்தன, தொல்மறையும் தமிழ்மறையும் நிலைநின்றன என்கிறார்.

**உரை :** மண்ணுலகில் ஈட்டிய சீலத்து இராமாநுசன்றன் இயல்வு கண்டு – தண்ணியரோடு இயல்பிற் கலந்து பரிமாறி, இவ்வுலகில் மேன்மேலும் திரட்டிக்கொண்ட சீலகுணத்தை உடைய வரான எம்பெருமானாருடைய ஸ்வபாவத்தைக் கண்டு. நாட்டிய நீச சமயங்கள் மாண்டன — குயுக்திகளாலே நாட்டப் பெற்ற புறச்சமயங்கள் நசித்தன. நாரணனை காட்டிய வேதம் களிப் புற்றது – சேதனாசேதனங்களுக்கெல்லாம் நாதனை இறைவனைப்பற்றி அறிவிக்கும் வேதமானது, இனி ஒரு குறை இல்லை என்று களித்து விளங்கியது. தென் குருகை வள்ளல் வாட்டம் இலா மறை வாழ்ந்தது – அழகிய திருக்குருகூரில் அவதரித்த பரம உதாரரான நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழி பரவிப் பெருமையுற்றது.

**களிப்புற்றது – கர்வம் கொண்டது. வாட்டம் இலா மறை - இதரர்களால் குலைக்க இயலாதவாறு விளங்கும் தமிழ் மறையான திருவாய்மொழி.**

55\. கண்டவர் சிந்தை கவரும், கடிபொழில் தென்னரங்கன்
தொண்டர் குலாவு மிராமா நுசனைத், தொகையிறந்த
பண்டரு வேதங்கள் பார்மேல் நிலவிடப் பார்த்தருளும்,
கொண்டலை மேவித் தொழும், குடி யாமெங்கள் கோக்குடியே.

**முன்னுரை :** எம்பெருமானாரது ஸ்வபாவத்தைக் கண்டு வேதமே தற்பெருமை கொண்டது என்றார் முன்பாசுரத்தில். "இவ்வாறு ஓர் இடம் இல்லாமல் வேதங்கள் பூமியிலே பரவுமாறு செய்த ஔதார்யத்தில் ஈடுபட்டு அவரை அண்டி வாழும் குடி (மக்களின் இனம்) என்னை ஆள உரிய குடி" என்கிறார், இப்பாசுரத்தில்.

**உரை :** தொகை இறந்த பண் தரு வேதங்கள் – எண்ணிறந்தவையாய் உதாத்தம் முதலான ஸ்வரங்கள் வாய்ந்த வேதங்களானவை. பார்மேல் நிலவிட பார்த்தருளும் கொண்டலை — பூமியில் பரவுமாறு பண்ணிய பரம உதாரராயும். கண்டவர் சிந்தை கவரும் கடிபொழில் தென்னரங்கன் தொண்டர் – கண்டவர்களது நெஞ்சைக் கவருமாறு, பரிமளம் நிரம்பிய சோலைகளால் சூழப்பட்ட திருவரங்கத்துறையும் பெருமானது அடியார்கள். குலாவும் இராமாநுசனை - அந்த உதார ஸ்வபாவத்திற்குத் தோற்றுக் கொண்டாடும்படியும் இருக்கும் எம்பெருமானாரை. மேவி தொழும் குடி – அந்த ஸ்வபாவத்தில் ஈடுபட்டு வேறொன்றிலும் மனம் செல்லாது தொழுகின்ற குடியானது. எங்கள் கோ குடி – இந்த அதிகாரிகளையே விரும்பியிருக்கும் எங்களை ஆள உரிய குலமாகும்.

**"கண்டவர் சிந்தைகவரும்" என்பதை "தென்னரங்கன்" என்ற பதத்தோடும் இயைக்கலாம்.**

**இறைவனைப் பணியுமவர் "எம்மை ஆளுடை நாதரே" என்று நம்மாழ்வார் அருளிச்செய்தது இங்கு ஒப்பு நோக்கு.**

56. கோக்குல மன்னரை மூவெழுகால், ஒருகூர் மழுவால்
போக்கிய தேவனைப் போற்றும் புனிதன், புவனமெங்கும்
ஆக்கிய கீர்த்தி யிராமா நுசனை யடைந்தபின்என்
வாக்குரை யா(து), என் மனம்நினை யாதினி மற்றொன்றையே.

**முன்னுரை:** எம்பெருமானாரது ஔதார்யத்தில் ஈடுபட்டுக் "கொண்டல்" என்றார் அதனுர் முன் பாசுரத்தில். இவ்வாறே நாம் ஊன்றியிருக்கும் ஒவ்வொன்றிலும் புகழ் நிகழ்வது இயல்பு. எனினும், "எம்பெருமானாரை அடைந்தபின் என் வாக்கும் மனமும் வேறொரு விஷயமும் அறியமாட்டா" என்கிறார் இப்பாசுரத்தில்.

**உரை:** கோ குல மன்னரை ஒரு மூவெழு கால், ஒரு கூர் மழுவால் போக்கிய தேவனை—க்ஷத்ரிய குலத்து மன்னர்களை இருபத்தொரு கால் ஒப்பற்ற கூரிய மழுவாலே கொன்று அதனால்வந்த புகழை உடைய ஸர்வேச்வரனை. போற்றும் புனிதன் புவனம் எங்கும் ஆக்கிய கீர்த்தி இராமாநுசனை அடைந்தபின், என் வாக்கு உரையாது மற்று ஒன்றை—. என் மனம் இனி நினையாது மற்று ஒன்றை.

புனிதன்—சுத்தன். பரசுராமாவதாரம், அஹங்காரத்தோடு கூடின ஜீவனைப் பற்றி நிற்கையால், முமுக்ஷுக்கள் உபாஸிக்கக் கூடுமோ என்னில், விரோதி நிரஸனம் செய்தது ஒன்றே நோக்காக ஈடுபடுவது; உபாஸனமன்று. "மன்னடங்க மழுவலங்கைக் கொண்ட இராம நம்பி," "வென்றி மாமழுவேந்தி முன் மண்மிசை மன்னரை மூவெழுகால் கொன்ற தேவா" என்று ஆழ்வார்கள் அருளிச் செய்ததும் விரோதி நிரஸனத்திற்குத் தோற்றேயாம்.

நம் வாக்குக்கும் மனத்திற்கும் எம்பெருமானாரைத் தவிர வேறொன்றும் பற்றில்லை என்பது கருத்து.

57. மற்றொரு பேறு மதியா(து), அரங்கன் மலரடிக்காள்
உற்றவரே தனக் குற்றவராய்க் கொள்ளு முத்தமனை,
நற்றவர் போற்று மிராமா நுசனையிந் நானிலத்தே
பெற்றனன், பெற்றபின் மற்றறி யேனொரு பேதைமையே.

**முன்னுரை:** எம்பெருமானாரையன்றித் தம் வாக்கும் மனமும் மற்றறியா என்றார் முன் பாசுரத்தில். மண்ணில் வாழ்க்கை ஆதலால் அஜ்ஞானம் மேலிட வாய்ப்பு உண்டே என்னில், எம்பெருமானாரைப் பெற்ற பின்னர் புறம்பொன்றை விரும்பும் பேதைத் தனம் அறியமாட்டேன் என்கிறார் இதில்.

**உரை:** மற்று ஒரு பேறு மதியாது—வேறொரு பிரயோஜனத்தை ஒன்றாக நினையாமல். அரங்கன் மலர் அடிக்கு ஆள் உற்றவரே தனக்கு உற்றவராய் கொள்ளும் உத்தமனை—திருவரங்கனது திருவடிகளுக்கு அடிமையாகையே பரம புருஷார்த்தம் என்று, அதிலே ஊன்றியிருப்பவர்களையே பந்துக்களாக விரும்பும் உத்தமராய். நல்தவர் போற்றும் இராமாநுசனை—சரணாகதி தர்மத்திலேயே தோய்ந்தவர்கள் தம்மைப் புகழும்படியான எம்பெருமானாரை. இ நானிலத்தே பெற்றனன்—இந்த லோகத்திலேயே பெற்றேன். பெற்றபின் மற்று ஒரு பேதைமை அறியேன்—.

எம்பெருமானாரைப் பெற்றபின் நமக்குப் பேதைமை இல்லை என்பது கருத்து.

58. பேதையர் வேதப் பொருளிதென் றுன்னிப் பிரமனன்றென்று
ஓதிமற் றெல்லா வுயிருமஃ தென்று, உயிர்கள் மெய்விட்டு
ஆதிப் பரனொடொன்றாமென்று சொல்லுமவ் வல்லலெல்லாம்
வாதில்வென்றான் எம் மிராமா நுசன் மெய்ம் மதிக்கடலே.

முன்னுரை : கீழே பல பாசுரங்களிலே, எம்பெருமானார் பிற மதங்களை அழிந்த செயலில் ஈடுபட்டார் அமுதனார். அவற்றை அழித்த வகையை விவரித்து அச்செயலில் ஈடுபடுகிறார் இப் பாசுரத்தில்.

உரை : பேதையர்—வேதத்தைப் பிரமாணமாகக் கொண்டு, வேதப்பொருளை உள்ளவாறு அறியாதவர்கள். வேத பொருள் இது என்று உன்னி—வேதத்தின் அர்த்தம் இதென்று நிரூபித்து. பிரமன் நன்று என்று ஓதி—ப்ரப்ஹமே விலக்ஷணமென்று வேத வாக்கியங்களால் சொல்லி. மற்று எல்லா உயிரும் அஃது என்று—ப்ரம்ஹம் நீங்கலாக மற்றை ஜீவன்கள் யாவரும் அந்த ப்ரப்ஹம் தானே என்றும். உயிர்கள் மெய் விட்டு ஆதி பரனோடு ஒன்றும்—சரீரத்தை விட்டு ஜீவன்கள் காரண பூதனான பரனோடே ஒன்றுவன. என்று சொல்லும் அல்லல் எல்லாம்—இவ்வாறு சொல்லும் கோஷங்களை எல்லாம். மெய் மதி கடல் எம் இராமாநுசன்—தத்வஞானக் கடலாய் நமக்கு நாதராகிய எம்பெருமானார். வாதில் வென்றான்—.

"ஆதிப்பரன்" என்றது தம்முடைய அபிப்பிராயத்தாலே. அவர்கள் சொல்லுவது: ப்ரஹ்மம்சமான ஜீவ வர்க்கம், சரீரத்தை விட்டபின் ப்ரஹமத்தோடு ஐக்கியமாகும் என்பது.

59. கடலளவாய திசையெட்டி னுள்ளும், கலியிருளே
மிடைதரு காலத் திராமாநுசன், மிக்க நான்மறையின்
சுடரொளி யாலவ் விருளைத் துரந்தில னேலுயிரை
உடையவன், நாரண னென்றறி வாரில்லை யுற்றுணர்ந்தே.

முன்னுரை : ப்ரமாணங்களைக் கொண்டு ஈச்வரன் சேஷி என்று அறிய முடியாதோ எனில், கலியால் வந்த அஜ்ஞானத்தை எம்பெருமானார் போக்கவில்லை எனில் ஆத்மாவுக்குச் சேஷி ஈச்வரனே என்று நிரூபித்து ஒருவரும் அறிவாரில்லை என்கிறார்.

srivatsam

உரை : கடல் அளவாய திசை எட்டினுள்ளும் - கடல் வரையில் பரந்துள்ள எல்லாத் திசையிலும் கலி இருளே மிடைதரு காலத்து - கலியால் வந்த அஜ்ஞான இருளே நெருங்கியிருக்கும் காலத்தில். இராமாநுசன் - எம்பெருமானார். மிக்க நான் மறையின் சுடர் ஒளியால் அ இருளை துரந்திலனேல் - பிரமாணங்களால் விளங்கும் நான்கு வேதங்களின் எல்லையில்லாத ஒளியால் அந்த இருட்டை ஓட்டவில்லை எனில். உயிரை உடையவன் நாரணன் என்று - ஆத்மாவுக்குச் சேஷியானவன், நாராயண சப்தத்தால் சொல்லக்கூடிய பெருமான் என்று. உற்று உணர்ந்து அறிவார் இல்லை—.

மிடைதல்—நெருங்குதல். சுடர் + ஒளி – மீமிசைச்சொல்; மிக்க வொளி. துரத்தல்—ஓட்டுதல்.

எம்பெருமானார் அவதரித்து, நாம் உணர்ந்தது, ஆத்மாக்களுக்குச் சேஷி நாராயணன் என்பது.

60. உணர்ந்தமெய்ஞ் ஞானியர் யோகந்தொறும், திருவாய்மொழியின்
மணந்தரு மின்னிசை மன்னு மிடந்தொறும், மாமலராள்
புணர்ந்தபொன் மார்பன் பொருந்தும் பதிதொறும் புக்குநிற்கும்
குணந்திகழ் கொண்டல், இராமா நுசனெங் குலக்கொழுந்தே.

முன்னுரை : எம்பெருமானாருடைய ஞான வைபவத்தை அருளிச் செய்த பின்பு, அவருடைய பக்தியைப் பற்றி இசைக்கும் அமுதனார், அவருக்கு பகவானிடத்தும், பாகவதர்களிடத்தும், இவ்விரு விஷயங்களையும் விளம்பும் திருவாய்மொழியிலும் பிரேமம் இருக்கும்படியை அருளுகிறார்.

உரை : குணம் திகழ் கொண்டல் - ஆத்ம குணத்தால் புகர் கொண்டு கிளையே விஷயமாக உபகரிக்கும் உதாரரான. எம் குலக் கொழுந்து இராமாநுசன் - எங்கள் குலத்துக்குத் தலைவரான எம்பெருமானார். உணர்ந்த மெய்ஞ்ஞானியர் யோகந்தோறும் - அறிய வேண்டிய அர்த்தங்களை அடங்க அறிந்துள்ள ஞானியர்களது கூட்டங்களிலும். திருவாய்மொழியின் மணம் தரும் இன்இசை மன்னும் இடந்தோறும் - திருவாய்மொழியின் இனிய இசையில் ஈடுபட்டு, இந்த இசை நுகரப்படும் இடங்களிலும். மா மலராள் புணர்ந்த பொன் மார்பன் பொருந்தும் பதிதொறும் - பெரிய பிராட்டியார் அமரும் அழகிய திருமார்பை உடைய இறைவன் உகந்தருளி உறையும் திருப்பதிகளிலும். (ஒன்றையும் விடாது). புக்கு நிற்கும் - பெருகும் ஆசையால் புகுந்து அவற்றிலே பிரேமத்துடன் பொருந்துவர்.

61. கொழுந்துவிட் டோடிப் படரும் வெங் கோள்வினையால் நிரயத்(து)
அழுந்தியிட் டேனைவந் தாட்கொண்ட பின்னும் அருமுனிவர்
தொழுந்தவத் தோனெம் மிராமாநு சன்றன் புகழ்சுடர்மிக்(கு)
எழுந்தது அத்தால் நல்லதிசயங் கண்ட திருநிலமே

முன்னுரை : முன் பாசுரத்தில் எம்பெருமானாரைக் "குணந்திகழ் கொண்டல்" என்று பாராட்டினர் அமுதனர். அந்தக் குண வைபவம் இருக்கும்படியை இதில் அருளிச் செய்கிறார்.

உரை : அருமுனிவர் தொழும் தவத்தோன் எம் இராமாநுசன்றன் புகழ் சுடர்மிக்கு எழுந்தது - ஸர்வேச்வரனே நமக்கு எல்லாம் என்று மனனம் செய்யும் பெரியோர்கள் தமது திருவடிகளிலே வணங்கும்படி இருப்பவராய், ப்ரபத்தியாகிய மஹாதபஸ்ஸை உடையவராய் எனக்கு ஸ்வாமியான எம்பெருமானாரது கல்யாண குணங்கள் மேன்மேலும் புகர் விஞ்சினவாய் நிற்பன (இவை). கொழுந்து விட்டு ஓடி படரும் வெம் கோள் வினையால்—மேன்மேலும் கிளைத்து விரைவில் படரும் கொடிய கர்மங்களாலே. நிரயத்து அழுந்தியிட்டேனை-மிகக்கொடிய, நரகம்போன்ற பிறவியிலே ஆழ்ந்து வருந்துகின்ற என்னை. வந்து ஆட்கொண்ட பின்னும் -- நான் கிடக்கிற இடத்திலே வந்து என்னை அடிமையாக்கிக் கொண்ட பின்னும் புகழ்-- சுடர் மிக்கு எழுந்தது - என்னை ஏற்றுக் கொண்ட தால், மேலும் ஒளி கொண்டு கிளர்ந்தது; இன்னும் இவ்வாறு ஏற்றுக்கொள்ள யார் உளர் என்று தேடுவது போல. அத்தால் இந் நிலம் நல்ல அதிசயம் கண்டது -.

எம்பெருமானரது குணவைபவம் இருக்கும்படி இது என்று கருத்து.

எம்பெருமானாது புகர், என்னை அடிமை கொண்ட பின்பு குறையாதிருப்பதன்றிக்கே மேலும் ஓங்கியது என்று பொருளாகவுமாம்.

62. இருந்தே னிருவினைப் பாசங் கழற்றி இன்றியானிறையும்
வருந்தே னினியெம் மிராமாநுசன் மன்னு மாமலர்த்தாள்
பொருந்தா நிலையுடைப் புன்மையி னோர்க்கொன்றும் நன்மை செய்யாப்
பெருந்தேவரைப் பரவும், பெரியோர்தங் கழல்பிடித்தே;

முன்னுரை : தம்முடைய கர்மஸம்பந்தம் தீரப் பெற்றமையால் வந்த நன்மையை இப்பாசுரத்தில் கூறுகிறார், அமுதனர்.

உரை : எம் இராமநுசன் மன்னு மா மலர் தாள் - எம்பெருமானாருடைய, பாவனங்களாய் போக்யங்களாய் உள்ள திருவடிகளில். பொருந்தா நிலை உடை புன்மையினோர்க்கு - சேராத இயல்

டைய துர்மானிகளுக்கு ஒன்றும் நன்மை செய்யா, பெரும் தேவரை பரவும் – சிறிதேனும் (அவர்களை) பரவாமல், நித்யஸூரிகள் போல் விளங்கும் பெரியோர்களை வணங்குகின்ற. பெரி யோர்தம் கழல்பிடித்து – உத்தமர்களது திருவடிகளைப் பற்றி (நான்). இரு வினை பாசம் கழற்றி ருந்தேன்–இருவகையான கர்மபாசத்தினின்றும் நீங்கியவனுனேன். இன்று இனி யான் இறையும் ருந்தேன் – இப்படி இருக்கும் நான் சிறிதும் துக்கப்படமாட்டேன். கர்மம் கிடக்கிலன்றோ க்கம் வருவது?

"பொருந்தாநிலையுடைய...பெரியோர்தம் கழல்பிடித்து" என்பதன் பொருள்: "எம்பெரு மானுர் திருவடிகளில் சேரமாட்டோம் என்ற துர்மானிகளுக்கு ஒரு நன்மையும் செய்ய மாட் டோம் என்றிருக்கும் பரதேவதையான திருவரங்கனை, அந்த ஸ்வபாவத்திலே தோற்று ஸ்தோத் ரங்கள் செய்த கூரத்தாழ்வானது திருவடிகளைப் பற்றி, இன்று இருவினைப் பாசம் கழற்றி... ருந்தேன்" என்பதுமாம்.

63. பிடியைத் தொடருங் களிறென்ன, யானுன் பிறங்கியசீர்
அடியைத் தொடரும்படி நல்க வேண்டும், அறுசமயச்
செடியைத் தொடரும் மருள்செறிந் தோர்சிதைந் தோடவந்திப்
படியைத் தொடரும், இராமாநுசா மிக்க பண்டிதனே.

முன்னுரை: முன் பாட்டில், தமக்கு விருப்பமில்லாத கர்ம ஸம்பந்தம் கழிந்த படி சொன்னார் அமுதனார். இப்பாட்டில், "நான் விரும்பும் கைங்கர்யத்திற்கான வாய்ப்பைத் தேவரீர தந்தருளவேணும்" என்கிறார்.

srivatsam

உரை: அறுசமய செடியை தொடரும் மருள் செறிந்தோர் சிதைந்து ஓட—தூறு மண்டிக் கிடக்கும் புறச்சமயங்களைப் பற்றும் அறிவுகேடு குடி கொண்டவர்கள் தோற்று அஞ்சி ஓடும் படியாக. வந்து இ படியை தொடரும்—அவதாரம் செய்து, இந்த பூமியிலுள்ளாரைத் தமக் காக்கிக் கொள்ள வாய்ப்பு நோக்கித் தொடர்ந்து திரியுமவரான. மிக்க பண்டிதனே! இராமா நுசா!—வஸ்துவின் இயல்பறிந்து கார்யம் செய்கைக்கு உறுப்பான எல்லையில்லா அறிவையுடைய எம்பெருமானுரே! பிடியைத் தொடரும் களிறு என்ன—பெண்யானையிடத்துப் பேரன்பு கொண்டு பிரிவுணருலும் இந்த அன்பு தீராதபடி அதனையே பின்பற்றித் திரியும் ஆண் யானை போல. யான் உன பிறங்கிய சீர் அடியை தொடரும்படி நல்க வேண்டும்–தேவரீருடைய திருவடிகளை— பேரெழில், பரிமளம் முதலியன வாய்ந்த திருவடிகளைப் பின்தொடரும் படியை அருள் செய்ய வேண்டும்.

பிறங்கிய – மிகுந்து விளங்குகின்ற. சீர் – அழகு. செடி – தூறு. செறிந்து – திரண்டு. படி – ஸ்வபாவம்.

எம்பெருமானரது திருவடிகளில் தமக்குப் பேரன்பு என்றும் வேண்டும் என விரும்புகிறார், அமுதனார்.

64. பண்டரு மாறன் பசுந்தமிழ், ஆனந்தம் பாய்மதமாய்
விண்டிட எங்க ளிராமா நுசமுனி வேழம், மெய்ம்மை
கொண்டநல் வேழக் கொழுந்தண்ட மேந்திக் குவலயத்தே
மண்டிவந் தேன்றது, வாதியர் காளுங்கள் வாழ்வற்றதே.

முன்னுரை: முன் பாட்டில் புற மதங்கள் சிதறுமாறு எம்பெருமானுர் எழுந் தருளிய வகையை அமுதனார் அருளிச் செய்தார். இதனுல் களிப்பு மிக்க இவர் புற

மதங்களின் வாதிகளைப் பார்த்து, "எம்பெருமானாராகிய யானை உங்களை நாடிப் பூமியிலே வந்தெதிர்ந்தது. இனி உங்களுக்கு வாழ்வு இல்லை" என்கிறார்.

உரை : எங்கள் இராமாநுச முனி வேழம்—எங்களுக்கேயான எம்பெருமானாராகிய யானை, பண்தரு மாறன் பசும் தமிழ் ஆனந்தம் பாய் மதமாய் விண்டிட—பண் மலிந்ததாய் இனியதான திருவாய்மொழியால் விளைந்த ஆனந்தமானது ஒழுகுகின்ற மதமாகப் பெருக. மெய்ம்மை கொண்ட நல் வேதக் கொழும் தண்டம் ஏந்தி—மெய்ப்பாடுடைய சிறந்த வேதமாகிய அழகிய தண்டையும் ஏந்திக்கொண்டு. குவலயத்தே மண்டி வந்து ஏன்றது—நீங்கள் தன்னரசு நடத்தும் பூமியிலே ஒருவரும் நேர் நிற்கவொண்ணாதபடி தள்ளிக் கொண்டு வந்து உங்களை எதிர்த்தது. வாதியர்காள்! உங்கள் வாழ்வு அற்றது—சிஷ்யர்களும் அவர்கள் சிஷ்யருமாய்க் கிளரும் உங்கள் சம்பத்து முடிந்தது. உலகம் பிழைத்தது என்பது கருத்து.

எம்பெருமானாருக்குத் திருவாய்மொழியில் ஈடுபாடும், இது பிறமத வாதியர்களை வெல்லப் பயன்பட்டமையும் குறிப்பு.

65. வாழ்வற்றது தொல்லை வாதியர்க்கு, என்றும் மறையவர்தம்
தாழ்வற்றது, தவம் தாரணி பெற்றது, தத்துவநூல்
கூழற்றது குற்றமெல்லாம் பதித்த குணத்தினர்க்கந்
நாழற்றது, நம்மி ராமாநுசன் தந்த ஞானத்திலே.

முன்னுரை : புறமதத்தினர் குலைவதற்காக எம்பெருமானார் உபகரித்தருளின ஞானத்தால பலித்தவை யாவை என்று கூறி மகிழ்கிறார், இப்பாட்டில்.

உரை : நம் இராமாநுசன் தந்த ஞானத்திலே—எம்பெருமானார் அருளிய ஞானத்தாலே தொல்லை வாதியர்க்கு வாழ்வு அற்றது—பயிர் எழும்போதே களையும் எழுவது போலே, பழையவான வாதங்களையுடைய வாதியர்களுடைய வாழ்வு போயிற்று. என்றும் மறையவர்தம் தாழ்வு அற்றது—களை களைந்தவாறே பயிர்கள் தலை பெறுமாபோலே, எல்லாக் காலத்திலும் வைதிகர்களுடைய குறைவு போயிற்று. தாரணி தவம் பெற்றது—பிறமதத்தினர் குலைந்து பாகவத சஞ்சாரம் மிகப் பூமி பாக்கியம் பெற்றது "ஏத்தவல்லார் திரிதலால் தவமுடைத்து இத்தரணிதானே" என்பது போல. தத்துவ நூல் கூழ் அற்றது—தத்வபரமான சாஸ்திரங்களில் ஐயங்கள் யாவும் தீர்ந்தன. குற்றம் எல்லாம் பதித்த குணத்தினர்க்கு அந்நாழ் அற்றது—தோஷமே கலந்த இயல்வுடையவர்களுக்கு அக்குற்றம் தீர்ந்தது.

இஃதொரு ஞான வைபவம் இருக்கும்படியே! என்பது கருத்து.

தாழ்வு -குறைவு. தவம் – பாக்யம், பேறு. நாழ் – குற்றம். கூழ்ப்பு – சம்சயம், ஐயம்.

66. ஞானங் கனிந்த நலங்கொண்டு, நாடொறும் நைபவர்க்கு
வானங் கொடுப்பது மாதவன், வல்வினை யேன்மனத்தில்
ஈனங் கடிந்த விராமாநுசன் றன்னை யெய்தினர்க்கத்
தானங் கொடுப்பது, தன் தகவென்னும் சரண் கொடுத்தே.

முன்னுரை : முன்பாட்டில் எம்பெருமானார் உபகரித்தருளிய ஞானவைபவத்தை அருளிச் செய்தார்; இதில் அவர் மோக்ஷம் அளிக்கும் வைபவத்தை அருளிச் செய்கிறார்.

உரை : மாதவன் வானம் கொடுப்பது—ச்ரிய: பதியான ஸர்வேச்வரன் மோக்ஷம் கொடுப் து. ஞானம் கனிந்த நலம் கொண்டு நாள்தோறும் நைபவர்க்கு - ஞானத்தால் வந்த ப்ரேமத்தை டையராய், அந்த ப்ரேமத்தால் தன்னை அடைந்து அனுபவித்து, இந்த அனுபவத்தால் கைங் ர்யம் செய்வது எப்போதோ என்று ப்ராப்ய த்வரையாலே நாள்தோறும் நையும் மனம் வாய்ந் வர்களுக்கு. வல் வினையேன் மனத்தில் ஈனம் கடிந்த இராமாநுசன் — கொடிய வினைகள் செய்த ன்னுடைய மனத்தில் பலியும் தோஷத்தைப் போக்கியருளிய எம்பெருமானார். தன்னை எய் னார்க்கு அத்தானம் கொடுப்பது—தம்மை அடைந்தவர்களுக்கு "வானம்" என்ற அந்த ஸ்தா த்தைக் கொடுப்பது, தன் தகவு என்னும் சரண் கொடுத்தே—தம்முடைய க்ருபை என்பதை வர்களுக்குக் கைம்முதலாகக் கொடுத்து.

எம்பெருமானார் மோக்ஷம் அருளும் வகை என்னே! என்பது கருத்து.

ஞானம் கனிந்த நலம்—ஞானத்தின் பக்குவ தசையான ப்ரேமம்.

67. சரண மடைந்த தருமனுக்காப், பண்டு நூற்றுவரை
மரண மடைவித்த மாயவன் தன்னை, வணங்கவைத்த
கரண மிவையுமக் கன்றென் றிராமா நுசனுயிர்கட்கு
அரணங் கமைத்திலனேல், அரணார் மற்றிவ் வாருயிர்க்கே.

முன்னுரை : எம்பெருமானார் ஞானத்தையும் மோக்ஷத்தையும் அருளிய கையை இசைத்தார் கவி. இறைவனை அடைந்து கைங்கர்யங்கள் செய்ய உறுப் ன கரணங்களை நாம் புறம்பே போக்காதவாறு, எம்பெருமானார் தம்முடைய பதேசத்தாலே நியமித்துக் காக்கவில்லையெனில், இவ்வாத்மாவுக்கு ரக்ஷகர் யார்? ன்று தம்மைக் கொண்டு அநுஸந்தித்து அச்செயலில் ஈடுபடுகிறார் இப்பாசுரத்தில்.

உரை : சரணம் அடைந்த தருமனுக்கா—தன்னைச் சரணமாகப் பற்றிய தர்மபுத்ரனுக்காக. ண்டு நூற்றுவரை மரணம் அடைவித்த மாயவன் — முன்பு "இவனை வணங்கோம்" என்று துர் னிகளாய்ப் பாண்டவர்களை நலிந்த துர்யோதனாதிகள் நூறு பேரையும் மாள்வித்த, வியக்கத் க சக்தி உடையவனான ஸர்வேச்வரனானவன். தன்னை வணங்க வைத்த கரணம் இவை உமக்கு ன்று — தன்னை அடைந்து கைங்கர்யங்கள் செய்வதற்கெனவே உபகரணங்களாக வைத்த ணங்கள் இவை, உங்களுக்குச் சேஷமாயுள்ளவையல்ல. என்று இராமாநுசன் உயிர்கட்கு கரண் ங்கு அமைத்திலனேல்—இவ்வாறு அந்வயம் வ்யதிரேகம் இரண்டாலும் கரணங்கள் பகவானுக்கே வை என்பதை வெளிப்படுத்தி கரணங்கள் புறம்பே செல்லாதவாறு நம்மைக் காப்பாற்றி னாவிட்டால். இ ஆருயிர்க்கு அரண் ஆர்? — அரிய இந்த ஆத்மாவுக்கு ரக்ஷகர் வேறு யார்? வருமில்லை என்பது கருத்து.

நமது கரணங்கள் இறைவனுக்குத் தொண்டு செய்வதற்கே என்று எம்பெருமானார் அறிவித்தமை கருத்து.

மாயவன் றன்னை—மாயவனை எனவுமாம்.

68. ஆரெனக் கின்று நிகர்சொல்லில், மாயனன் றைவர்தெய்வத்
தேரினில் செப்பிய கீதையின் செம்மைப், பொருள்தெரியப்
பாரினில் சொன்ன இராமா நுசனைப் பணியும் நல்லோர்,
சீரினிற் சென்று பணிந்தது, என்னாவியும் சிந்தையுமே.

முன்னுரை : "எம்பெருமானாரைப் பற்றியிருப்பவர்களது குணங்களிலே என் னுடைய ஆத்மாவும் மனமும் படிந்தன; ஆனபின்பு எனக்கு ஒப்பார் இல்லை" கிறார்.

srivatsam

உரை : மாயன் – பார்த்தனுக்குச் சாரதியாகையாலே உலகில் பெரும்புகழ் கொண்ட இறைவன். அன்று ஐவர் தெய்வ தேரினில் செப்பிய கீதையின் செம்மை பொருள் – கையில்லையும் போகட்டுச் சோகத்தால் அர்ஜுனன் கலங்கிய போது, பாண்டவர்களுடையதாய், தன் திருவடிகள் தோய்ந்ததால் சிறந்ததான திருத்தேர்த் தட்டில் நின்று அருளிச் செய்த ஸ்ரீகீதையினுடைய சிறந்த அர்த்தத்தை நன்கு விளங்குமாறு, தேரிலே அர்ஜுனன் விஷயமாக, அவன் அருளிச் செய்தது போலன்றி. தெரிய பாரினில் சொன்ன – இந்தப் பூமியில் யாவரும் அறிந்து கொள்ளுமாறு அருளிச் செய்த. இராமாநுசனை பணியும் நல்லோர் சீரினில் – எம்பெருமானாரை அடைந்துய்யும் பெரியோர்களது கல்யாண குணங்களிலே. என் ஆவியும் சிந்தையும் சென்று பணிந்தது –. சொல்லில் எனக்கு நிகர் ஆர்?—

செம்மை—செவ்வை. சிந்தை—மனம். பணிதல்—தாழ்தல்.

ஸ்ரீகீதையின் செம்மைப் பொருளை யாவரும் நன்குணருமாறு எம்பெருமானார் அருளினார் என்பது குறிப்பு.

69. சிந்தையி னோடு கரணங்கள், யாவும் சிதைந்துமுன்னாள்
அந்தமுற் றாழ்ந்தது கண்டு, அவையென்றனக் கன்றருளால்
தந்த வரங்களும் தன்சரண் தந்திலன், தானதுதந்(து),
எந்தை இராமாநு சன்வந் தெடுத்தனன் இன்றென்னையே.

**முன்னுரை :** ஈச்வரனைக் காட்டிலும் எம்பெருமானார் தமக்கு அருளிய உபகாரத்தை நினைந்து, அதில் ஈடுபடுகிறார் இப்பாட்டில்.

srivatsam

உரை : முன் நாள் – சிருஷ்டிக்கு முந்திய காலத்திலே. சிந்தையினோடு கரணங்கள் யாவும் சிதைந்து அந்தம் உற்று ஆழ்ந்தது கண்டு – மனம், கரணங்கள் யாவும் நாசமுற்று அசித்தோடொக்கக் கிடக்கும்போது அது கண்டு. அன்று அருளால் அவை என்றனக்கு தந்த வரங்களும் – என்னிடம் க்ருபையொன்றாலேயே கரணங்களை எனக்குத் தந்த திருவரங்கனும். தன் சரண் தந்திலன் – கரணங்கள் தந்தது போலத் தனது சரணங்களை (திருவடிகளை)த் தரவில்லை. எந்தை இராமாநுசன் வந்து, தான் அது தந்து, இன்று என்னை எடுத்தனன் – எனக்குத் தந்தையான எம்பெருமானார் வந்து, "அரங்கன் செய்ய தாளிணையோடு ஆர்த்தான்" என்றவாறு அந்தத் திருவடிகளைத் தந்தருளி, பிறவிக் கடலில் ஆழ்ந்த என்னை இன்று எடுத்தருளினார். இஃதோர் உபகாரமே!

காருணிகனான எம்பெருமான் செய்யாததொன்றைப் பரமகாருணிகரான எம்பெருமானார் செய்தார் என்பது கருத்து.

70. என்னையும் பார்த்தென் னியல்வையும் பார்த்து, (எ)ண்ணில்
உன்னையும் பார்க்கி லருள்செய்வதே நலம், அன்றியென்பால்
பின்னையும் பார்க்கில் நலமுள தேயுன் பெருங்கருணை
தன்னையென் பார்ப்பர், இராமாநுசா வுன்னைச் சார்ந்தவரே.

**முன்னுரை :** எம்பெருமானார் செய்த அம்சத்தைக் காட்டிலும் செய்ய வேண்டிய அமசம் அதிகம் இருப்பதால், தம்முடைய விருப்பத்தை விண்ணப்பம் செய்கிறார், இதில் அமுதனார்.

உரை : என்னையும் பார்த்து, என் இயல்வையும் பார்த்து — தேவரீர் என்னை ஏற்றுக்கொண்ட பின்பும் முன்னை வினையின் வாசனையால் விபரீதமான ருசி மண்டியுள்ள என்னையும் பார்த்து, அந்த ருசியின் விளைவாகப் புறம்புண்டான பற்றுக்களில் படியும் எனது இயல்பையும் பார்த்து, என் இயல்பல் குணத்த உன்னையும் பார்க்கில் — தோஷமே ஹேதுவாகக் கொண்டு என்னை ஏற்றுக் கொள்ளும், அளவில்லாத கல்யாண குணங்கள் கொண்ட தேவரீரையும் பார்த்தால். அருள் செய்வதே நலம் — இதற்குமுன் அருள் செய்தது போல மேலும் செய்வதே நல்லது. அன்றி என் பால் பின்னையும் பார்க்கில் நலம் உளதே — இஃதொழிய மீளவும் ஆராய்ந்தால் என்னிடம் ஒரு நன்மை உண்டோ? (நன்மை கொண்டே தேவரீர் கார்யம் செய்ய விரும்பினால்). இராமாநுசா! உன்னை சார்ந்தவர் —. உன் பெரும் கருணை தன்னை என் பார்ப்பர்? — தேவரீருடைய எல்லையற்ற கருணையை என்னாகக் காண்பர்? குறையக் காணார்களோ என்று கருத்து.

இவ்வாறு பெருங்கருணை வாய்ந்த எம்பெருமானார் மேன்மேலும் கருணை கொண்டு நம்மை ரக்ஷிக்க வேண்டும் என்று அமுதனார் விரும்புகிறார்.

71. சார்ந்ததென் சிந்தையுன் தாளிணைக் கீழ், அன்புதான் மிகவும்
கூர்ந்தது அத் தாமரைத் தாள்களுக்(கு), உன்றன் குணங்களுக்கே
தீர்ந்ததென் செய்கைமுன் செய்வினை நீசெய் வினையதனால்
பேர்ந்தது, வண்மை இராமாநுசா எம் பெருந்தகையே.

முன்னுரை : இப்படி அமுதனார் செய்த விண்ணப்பத்திற்கு இசைந்து எம்பெருமானார் இவரை விசேஷமாகக் கடாக்ஷிக்க, இவர் தாம் பெற்ற அம்சங்களைப் பெருமையுடன் விவரிக்கிறார்.

srivatsam

உரை : வண்மை இராமாநுசா! எம் பெருந்தகையே! — கொள்ளுமவன் சிறுமையும் கொடுக்குமவன் சீர்மையும் பாராதே கொடுக்கும் ஔதார்யமுடைய எம்பெருமானாரே! இந்த ஔதார்யத்தால் என்னை தேவரீருக்கு ஆக்கிக்கொண்ட பெருமை வாய்ந்தவரே! என் சிந்தை உன் தாளிணைக்கீழ் தாழ்ந்தது — நின்றவா நில்லாத என் நெஞ்சு தேவரீருடைய இணைந்த திருவடிகளில் பொருந்திவிட்டது. அந்த தாமரை தாள்களுக்கு அன்புதான் மிகவும் கூர்ந்தது — தாமரைபோல் சிறந்த அந்தத் திருவடிகளுக்கு அன்புதான் எல்லையற்று மிக்கது. என் செய்கை உன்றன் குணங்களுக்கே தீர்ந்தது — என்னுடைய வ்ருத்தி தேவரீருடைய குணங்களை அனுபவித்தால் வரும் மகிழ்ச்சியை விளைவிப்பதாலே தேவரீருடைய குணங்களுக்கே அற்றுத் தீர்ந்தது. முன் செய்வினை அதனால் பேர்ந்தது — முன்னே செய்த கருமம், அதைப் போக்கக்கூடிய தேவரீர் செய்த செயலாலே, மலை பேர்ந்தாற்போல் விட்டு நீங்கிற்று. ஆனபின்பு எனக்கு ஒரு குறையும் இல்லை என்பது கருத்து.

"நீசெய்வனவதனால்'' என்று பாடமாகில், "என் கர்மத்தை நிவர்த்தி செய்வதற்காக தேவரீர் செய்த க்ருஷியால்'' எனக் கொள்ளலாகும்.

எம்பெருமானாருடைய வண்மை வரையில்லாதது என்பது கருத்து.

72. கைத்தனன் தீய சமயக் கலகரைக், காசினிக்கே
உய்த்தனன் தூய மறைநெறி தன்னை, என்றுன்னியுள்ளம்
நெய்த்தவன் போடிருந் தேத்தும் நிறைபுக ழோருடனே,
வைத்தன னென்னை, இராமாநுசன் மிக்க வண்மைசெய்தே.

**முன்னுரை :** எம்பெருமானார் தமது ஔதார்யத்தாலே பின்னும் செய்த தோர் உபகாரத்தை அமுதனார் இப்பாசுரத்தில் கூறுகிறார்.

**உரை :** இராமாநுசன் மிக்க வண்மை செய்து—எம்பெருமானார் எல்லையில்லாத ஔதார்யத்தைப் பண்ணி, தீய சமய கலகரை கைத்தனன்—வேதங்களுக்குப் புறம்பான இழிய சமயங்களைப் பற்றி நின்று கலகம் செய்பவர்களை அடக்கினார். காசினிக்கே தூய மறை தனை உய்த்தனன்—பரிசுத்தமான வேத நெறியைப் பூமியிலே நடத்தியருளினார். என்று உள்ளி உள்ளம் நெருங்கிய அன்போடு இருந்து ஏத்தும்—என்று நினைந்து, உள்ளம் நெருங்கிய அன்போடு ஸ்தோத்ரம் செய்கின்ற, நிறை புகழோருடனே என்னை வைத்தனன்—நிறைந்த குணத்தையுடையவர்களோடு என்னை—அவர்களோடு எண்ணத்தகுந்த ஒருவனும்படி, வைத்தருளினார்.

"நிறைபுகழோருடனே வைத்தனன்" — அஸத்துக்களின் நடுவே இருந்த என்னை ஸ்ரீவைஷ்ணவர்களது நடுவே வாழும்படி செய்தான் எனவுமாம்.

73. வண்மையி னாலுந் தன் மாதக வாலும், மதிபுரையும்
தண்மையி னாலுமித் தாரணி யோர்கட்குத், தான்சரணாய்
வண்மைநன் ஞான முரைத்த இராமாநு சனையுன்னும்
திண்மையல் லாலெனக் கில்லை, மற்றோர் நிலை தேர்ந்திடிலே.

**முன்னுரை :** எம்பெருமானாருடைய க்ருபையினாலே தமக்கு ஞானமும் ப்ரேமமும் உண்டாகையாலே தரித்திருக்கலாமே என்னில், இந்த உலகிலுள்ளவர்களுக்குத் தாமே ரக்ஷகராய் ஞான உபதேசம் பண்ணின எம்பெருமானாரை நினைந்திருக்கும் பலமொழியத் தமக்கு வேறு தரிப்பில்லை என்கிறார்.

srivatsam

**உரை :** வண்மையினாலும்—உபதேசிக்கும் பொருளின் பெருமை கருதாது உபகரிக்கைக்கு உறுப்பான ஔதார்யத்தாலும். தன் மா தகவாலும்—அவல நிலை கண்டு பொறுக்க மாட்டாத பரம க்ருபையாலும். மதி புரையும் தண்மையினாலும்—தாபத்தைப் போக்குமவனும், மகிழ்ச்சியை விளைவிப்பவனுமான சந்திரன் போலே இருக்கிற தண்ணளியாலும். இ தாரணியோர்கட்கு தான் சரணாய்– உண்மை நன் ஞானம் உரைத்த–தாமே ரக்ஷகராய்க் கொண்டு மிகச் சிறந்த மெய் ஞானத்தை உபதேசித்த. இராமாநுசனை—. மற்றோர் நிலை தேர்ந்திடில் உன்னும் திண்மை அல்லால் இல்லை—நினைக்கும் பலமின்றி, ஆராய்ந்து பார்த்தால் எனக்கு வேறு தரிப்பில்லை.

தண்மை – தட்பம், அதாவது குளிர்த்தி. திண்மை – மிடுக்கு.

எம்பெருமானார் செய்த பேருபகாரத்தை நினைந்தால், அவரை எப்போதும் நினைந்திருப்பதைத் தவிர வேறு நமக்குத் தரிப்பில்லை என்பது கருத்து.

74. தேரார் மறையின் திறமென்று, மாயவன் தீயவரைக்
கூராழி கொண்டு குறைப்பது, கொண்டலனையவண்மை
ஏரார் குணத்தெம் மிராமா நுசனவ் வெழில்மறையில்
சேரா தவரைச் சிதைப்ப(து), அப்போதொரு சிந்தை செய்தே.

**முன்னுரை :** "உண்மை நன் ஞானம்" என்று முன்பாட்டில் சொன்ன விலக்ஷணமான ஞானத்திற்கு விரோதிகளான பிற மதத்தினரைக் குலைப்பதில் எம்பெருமானார் ஸர்வேச்வரனைக் காட்டிலும் ஆயாசமில்லாமல் எளிதில் செய்ததைப் பாராட்டுகிறார் அமுதனார்.

உரை : மறையின் திறம் தேரார் என்று—நித்தியமாய், அபௌருஷேயமாய், யாவருக்கும் ஹிதத்தை அருளுவதாய், ஆஜ்ஞாரூபமான வேதத்தின் நிலையை அறியவில்லை என்று. மாயவன்—ஆச்சர்யமான ஞான சக்திகள் உடைய ஸர்வேச்வரன். தீயவரை குறைப்பது கூர் ஆழி கொண்டு—தன் ஆஜ்ஞையை மீறியவர்களைக் குலைப்பது, தன்னுடைய கூரிய சக்கரத்தாலே. கொண்டல் அனைய வண்மை—யாவருக்கும் உபகரிக்கையாலே மேகத்தோடொத்த ஔதார்யம் உடையவராயும். ஏர் ஆர் குணத்து எம் இராமாநுசன்—ஒப்பில்லாத கல்யாண குணங்களை உடையவராயும், நமக்குச் சேஷியாயும் இருக்கிற எம்பெருமானார். அ எழில மறையில் சேராதவரை சிதைப்பது - அந்த விலக்ஷணமான வேதத்தில் பொருந்தாதவர்களை அழிப்பது. அப்போது ஒரு சிந்தை செய்தே—அப்போது ஒரு வகையை ஆராய்ந்தே.

ஈதொரு வீர்யம் இருக்கும்படியே! என்பது கருத்து.

75. செய்த்தலைச் சங்கம் செழுமுத்த மீனும், திருவரங்கர்
கைத்தலத் தாழியும் சங்கமு மேந்தி, நங்கண்முகப்பே
மொய்த்தலைத் துன்னை விடேனென் றிருக்கிலும் நின்புகழே
மொய்த்தலைக்கும் வந்(து), இராமாநுசா வென்னை முற்றுநின்றே.

முன்னுரை : "திருவரங்கன் தனது அழகைக் காட்டி உன்னை விடமாட்டேன் என்று என் முன்னே நின்றாலும், எம்பெருமானாருடைய குணங்களே என் நெஞ்சில் படிந்து ஈடுபடச் செய்யும்" என்கிறார்.

உரை : செய்த்தலை சங்கம் செழு முத்தம் ஈனும் திருவரங்கர்—வயல் தலைகளிலே சங்குகள் அழகிய முத்துக்களைக் குவிக்கும் திருவரங்கத்திலே உறையும் ஸர்வேச்வரன். கைத்தலத்து ஆழியும் சங்கமும் ஏந்தி-இயல்பிலே பேரழகு வாய்ந்த தன் கைகளிலே அழகிய சக்கரமும் சங்கமும் ஏந்திக் கொண்டு. நம் கண் முகப்பே மொய்த்து அலைத்து, "உன்னை விடேன்" என்று இருக்கிலும்—தன்னுடைய பேரெழில், கல்யாண குணங்கள் முதலியனவற்றைக் காட்டி, என்னைக் குலைக்கத் திருவுள்ளம் கொண்டு, "நாம் உன்னை விடமாட்டோம்" என்று சபதம் செய்து, நிலைபேராது இருந்தாலும். இராமாநுசா! —. நின் புகழே, வந்து முற்றும் நின்று என்னை மொய்த்து அலைக்கும்—தேவரீருடைய கல்யாண குணங்களே என் நெஞ்சில் பரவி, ஒவ்வொன்றும், "நான் முன்னே, நான் முன்னே" என்று என்னிடம் மொய்த்து என்னைத் தனக்கே ஆக்கிக்கொள்ளும்.

திருவரங்கனுடைய செவ்வியைக் கண்டாலும், மனம் அதில் சேராமல் எம்பெருமானாருடைய குணங்களையே விரும்பும் என்பது கருத்து.

"மெய்த்தலத்து" என்று பாடமானபோது "மெய்யான நிலத்தில்" என்று பொருள்; அதாவது மெய்யாகவே உன்னை விடேன் என்று கண்முகப்பே இருக்கும்படி.

76. நின்றவண் கீர்த்தியும் நீள்புனலும், நிறை வேங்கடப்பொற்
குன்றமும் வைகுந்த நாடும் குலவிய பாற்கடலும்,
உன்றனக் கெத்தனை யின்பந் தருமுன் னிணையலர்த்தாள்,
என்றனக் கும்மது, (இ) ராமாநுச யிவை யீந்தருளே.

முன்னுரை : அமுதனார் விண்ணப்பம் செய்ததைக் கேட்டுகந்த எம்பெருமானார் போர உகந்து, "இவருக்கு என்ன செய்வோம்?" என்பது தோற்ற எழுந்தருளியிருக்கிற வகையைக் கண்டு, அமுதனார் தமக்கு எம்பெருமானார் திருவடிகள் ப்ராப்யம் என்று விரும்புகிறார்.

உரை : நின்ற வண் கீர்த்தியும்—எப்போதும் யாவராலும் பாராட்டப்பெறும் சிறப்புடையதும். நீள் புனலும் நிறை—அருவிகள் நிறைந்துள்ளதுமான. வேங்கட பொன் குன்றமும்—திருவேங்கடம் என்ற திருநாமத்தை உடையதாய் அழகியதான திருமலையும். வைகுந்த நாடும்—ஸ்ரீவைகுண்டமாகிய திருநாடும். குலவிய பாற்கடலும் —அண்டினவர்களது குறையைத் தீர்க்கக் கண்துயிலும் இடம் என்று யாவரும் கொண்டாடும் திருப்பாற்கடலும். உன்தனக்கு எத்தனை இன்பம் தரும் —தேவரீருக்கு யாதொரு ஆனந்தத்தை விளைக்குமோ. எனக்கு உன் இணை மலர்த்தாள் அது—தேவரீருடைய இணைந்த மலர்போன்ற திருவடிகள் எனக்கும் அவ்வளவான ஆனந்தத்தைத் தருவன. (ஆனபின்பு), இராமாநுசா! இவை ஈந்தருள்—.

குலவுதல்—கொண்டாடுதல். ஈந்தருள்— தந்தருள்.

எம்பெருமானுடைய நிலைகள் தமக்கு ப்ராப்யம் என விரும்பும் எம்பெருமானுடைய திருவடிகள் நமக்கு ப்ராப்யம் என்பது கருத்து.

77. ஈந்தன னீயாத வின்னருள், எண்ணில் மறைக்குறும்பைப்
பாய்ந்தன னம்மறைப் பல்பொரு ளால், இப் படியனைத்தும்
ஏய்ந்தனன் கீர்த்தி யினாலென் வினைகளை வேர்பறியக்
காய்ந்தனன், வண்மை இராமாநு சற்கென் கருத்தினியே.

முன்னுரை : அமுதனாரது விருப்பப்படியே எம்பெருமானார் தம் திருவடிகளைக் கொடுக்க, அமுதனார் அவர் செய்த உபகாரங்களை நினைந்து, "இவையெல்லாம் செய்தபின்பு இவர் இன்னும் என்ன செய்வதாக நினைத்திருக்கிறாரோ?" என்கிறார்.

srivatsam

உரை : ஈயாத இன் அருள் ஈந்தனன்—ஒருவருக்கும் உபகரியாத அருளை எனக்கு உபகரித்தார். எண் இல் மறை குறும்பை, அ மறை பல் பொருளால் பாய்ந்தனன்— வேதத்தைக் குலைக்கும் மதங்களை, அந்த வேதத்தில் உள்ள பல அர்த்தங்களைக் கொண்டே தள்ளிவிட்டார். இ படி அனைத்தும் கீர்த்தியினால் ஏய்ந்தனன்—இந்தப் பூமி முழுதும் தமது கீர்த்தி பரவுமாறு விளங்கினார். என் வினைகளை வேர் பறிய காய்ந்தனன்—என்னுடைய கர்மங்களை வேர்ப்பற்றில்லாமல் அகற்றினார். வண்மை இராமாநுசர்க்கு இனி கருத்து என்?—பரம உதாரரான எம்பெருமானாருக்கு இனித் தம் திருவுள்ளத்தில் ஓடுகிறது எது?

இன்னும் செய்யத்தக்கது உண்டோ என்று கருத்து.

பாய்தல்—உதைத்தல். காய்தல்—கடிதல். ஏய்தல்—பொருந்துதல்.

"உன்னடியார்க்கு என் செய்வன் என்றே இருத்தி நீ" என்று நம்மாழ்வார் ஸர்வேச்வரனைக் குறித்து அருளியதை அமுதனார் எம்பெருமானார் விஷயமாக உரைக்கிறார்.

78. கருத்தில் புகுந்துள்ளில் கள்ளம் கழற்றிக், கருதரிய
வருத்தத்தி னல்மிக வஞ்சித்து, நீயிந்த மண்ணகத்தே
திருத்தித் திருமகள் கேள்வனுக் காக்கியபின் னென்னெஞ்சில்
பொருத்தப் படாது, எம் மிராமாநுச மற்றோர் பொய்ப்பொருளே.

முன்னுரை : இவ்வாறு எம்பெருமானார் செய்த உபகாரங்களை நினைந்து, பின்னும் தம்மைத் திருத்துவதற்காக அவர் பட்ட வருத்தங்களைச் சொல்லி, அமுதனார், "என்னை இவ்வாறு திருத்தித் தேவரீரது உகப்பிற்கு விஷயமாக்கிய பின்பு வேறொரு பொய்ப்பொருள் என் நெஞ்சில் சாராது" என்கிறார்.

உரை: கருத்தில் புகுந்து – நெடுங்கை நீட்டாக இருக்கில் இவனது நெஞ்சைத் திருத்த முடியாது என்று, அதிலே வந்து புகுந்து. உள்ளில் கள்ளம் கழற்றி – குடியிருக்குமவர்கள் செடி அறுக்குமாபோலே, உள்ளே குடிகொண்டிருந்த ஆத்மாபஹாரத்தைப் போக்கி. கருதரிய வருத்தத்தினுல் மிக வஞ்சித்து – நான் அறிந்தால தேவரீர் செய்த முயற்சியை அழித்துக் கொள்வேனே என்று, எனக்கும் ஒன்றும் தெரியாதபடி சிரமப்பட்டு இதனை மறைத்து. நீ இந்த மண்ணகத்தே திருத்தி திருமகள் கேள்வனுக்கு ஆக்கியபின் – தரிசு கிடந்த நிலத்தைச் செய்காலாம்படி திருத்துவாரைப் போலே என்னைத் திருத்தி, இந்த லோகத்திலே ச்ரிய:பதிக்கு ஆளாகும்படி பண்ணிய பின்பு. எம் இராமாநுச!–. மற்று ஓர் பொய்ப்பொருள் என் நெஞ்சில் பொருந்தப்படாது – தேவரீர் திருத்தத் திருந்திய என் மனத்தில் தேவரீர் அறிவித்த மெய்ப் பொருளைத் தவிர, அதுக்கு எதிரான பொய்ப்பொருள், வலியப் பொருத்திலும் பொருந்தாது.

வருத்தம்—ஆயாஸம். பொருத்துதல்—இசைத்தல்.

நம்மைத் திருமகள் கேள்வனுக்கு ஆளாகுமாறு எம்பெருமானர் செய்யும் முயற்சிகள் பல என்பது குறிப்பு.

79. பொய்யைச் சுரக்கும் பொருளைத் துறந்(து), இந்தப் பூதலத்தே
மெய்யைப் புரக்கு மிராமாநுசன் நிற்க, வேறுநம்மை
உய்யக் கொள்ளவல்ல தெய்வமிங்கியா தென் றுலர்ந்தவமே,
ஐயப் படாநிற்பர், வையத்துள்ளோர் நல்லறிவிழந்தே.

முன்னுரை: எம்பெருமானர் தமக்கு மெய்யறிவைக் கொடுக்கையாலே பொய்ப்பொருள் தமது நெஞ்சில் பொருந்தாமையைச் சொன்னர், அமுதனர் முன் பாசுரத்தில். அருமருந்தன்ன இந்த மெய்யறிவை இழந்து இவவிஷயத்திற்கு அசப்ப போருகிற உலகினரது படியை நினைந்து வருந்துகிருர், இந்தப் பாசுரத்தில்.

உரை: பொய்யைச் சுரக்கும் பொருளை துறந்து – ஆத்மா, ப்ரஹ்மம் இவற்றைப் பற்றிய பொய்யறிவை மேன்மேலும் கூறும் புறமதத்தினர்களது கொள்கைகளை ஒட்டி. இந்த பூதலத்தே– மெய்யை புரக்கும் – மெய்ப் பொருளைப பர்பாலித்தருளும். இராமாநுசன் நிற்க – எம்பெருமானர் உபதேசம் பெறுவார் யார் என்று எதிர்பார்த்திருக்க. நம்மை உய்யக் கொள்ள வல்ல தெய்வம் இங்கு வேறு யாது என்று- ஸஜாதீய (இவரும் மனிதப் பிறவி என்ற) புத்தியாலே இவரைப் புறக்கணித்து, நம்மை உய்யச் செய்யும் தேவதை இங்கு வேறு ஏதென்று தேடி. வையத்துள்ளோர் நல்லறிவு இழந்தே அவமே ஐயப் படா நிற்பர் – இப்பூமியிலுள்ளார்கள், ஒரு பலனுமின்றி, ஐயப்படுவர், உய்வதற்கு உறுப்பான மெய்ஞ்ஞானம் பெருமல்.

அந்தோ! இவர்களது நிலை இருந்தபடி என்! என்பது கருத்து.

பொய்யைச் சுரக்கும் பொருள்: பிறப்பு, இறப்பு முதலானவற்றாலே அஸத்யம் எனப்படும் சரீரத்தை மேன்மேலும் உண்டாக்கும் தேஹாத்மாபிமானம், ஸ்வாதந்த்ர்யம் முதலானவை. இதுவும் கருத்தாகும்.

80. நல்லார் பரவு மிராமாநுசன் திருநாமம் நம்ப
வல்லார் திறத்தை மறவாதவர்கள் யவர், அவர்க்கே
எல்லா விடத்திலு மென்றுமெப் போதிலு மெத்தொழும்பும்,
சொல்லால் மனத்தால், கருமத்தினுல் செய்வன் சோர்வின்றியே.

**முன்னுரை :** முன் பாசுரத்தில் அமுதனார் உலகினரது நிலையைக் கண்டு இழவு பட்டார். இப்பாசுரத்தில் தமது நிஷ்டையை (நிலையை), "எம்பெருமானாரையே தமக்குப் பற்று என்றிருக்குமவர்களுக்கு நான் முக்கரணங்களாலும் அடிமை செய்வேன்" என்கிறார்.

உரை : நல்லார் பரவும் இராமாநுசன் திருநாமம் நம்ப வல்லார் திறத்தை – ஸத்துக்கள் யாவரும் பிரேம பரவசராய் ஏத்தும்படியான எம்பெருமானாருடைய திருநாமத்தைத் தங்களுக்குத் தஞ்சமாகக் கருதுமவரது படியை. மறவாதவர் யவர், அவர்க்கே – எப்போதும் நினைத்திருப்பவர்கள் யாவர் சிலர், அவர்களுக்கே. எல்லா இடத்திலும், என்றும், எப்போதிலும், எத்தொழும்பும் – எல்லா இடங்களிலும், எல்லாக் காலத்திலும், எல்லா நிலைகளிலும், எல்லாவகை அடிமையும். சோர்வு இன்றி – பிரிவு இல்லாமல். சொல்லால், மனத்தால், கருமத்தால் செய்வன்–.

"வல்லார் திறத்தை மதியாதவர்கள்" என்று பாடமானபோது, "அவர்களது படியை இவ்வளவு என்று அளவிட முடியாதவர்கள்" என்பது பொருள்.

திறம் – படி, வகை. தொழும்பு – அடிமை. சோர்வு – பிரிவு.

எம்பெருமானாருடைய திருவடிகளைப் பற்றியவர்களுக்கு நாம் முக்கரணங்களாலும் அடிமை செய்யவேண்டும் என்பது கருத்து.

81. சோர்வின்றி யுன்றன் துணையடிக் கீழ்த் தொண்டு பட்டவர்பால்,
சார்வின்றி நின்ற வெனக்(கு) அரங்கன் செய்ய தாளிணைகள்
பேர்வின்றி யின்று பெறுத்து மிராமாநுச! இனியுன்
சீரொன்றிய கருணைக்(கு) இல்லை மாறு தெரிவுறிலே.

**முன்னுரை :** எம்பெருமானுடைய சம்பந்தம் பெற்றவர்களிடம் தமக்குச் சேஷவ்ருத்தி (அடிமை) செய்ய விருப்பம், அந்த எம்பெருமானாருடைய அருளாலேயாதலின், அவர் செய்த உபகாரத்தை அவரைக் குறித்து விண்ணப்பம் செய்து, "தேவரீருடைய கிருபைக்கு ஒப்பில்லை" என்கிறார்.

உரை : சோர்வு இன்றி உன்றன் துணை அடிக்கீழ் – வேறொரு விஷயத்திலும் மனம் செல்லாமல். சேர்த்தி அழகையுடைய, தேவரீருடைய திருவடிகளின் கீழே. தொண்டுபட்டவர்பால் சார்வு இன்றி நின்ற எனக்கு அடிமைப்பட்டவர்களிடம் பற்றில்லாமல் இருந்த எனக்கு. அரங்கன் செய்ய தாளிணைகள் – தன்னடியார்க்கு அடிமைப் பட்டவர்களுக்கன்றிப் பெற முடியாத திருவரங்கனது சிவந்த திருவடிகளை. இன்று பேர்வு இன்றி பெறுத்தும் – இன்று, ஒரு காலமும் விட்டு நீங்காத படியாகப் பெறுவித்த. இராமாநுச! இனி உன் சீர் ஒன்றிய கருணைக்கு, தெரிவுறில், மாறு இல்லை – (இப்படிச் செய்தபின்பு) தேவரீரது பெருமை வாய்ந்த கருணைக்கு, ஆராய்ந்தால், ஓர் ஒப்பு இல்லை.

"அரங்கன் செய்ய தாளிணைகள் (தாளிணைகளை) பேர்வின்றி (விட்டு நீங்காமல்), உன்றன் துணையடிக்கீழ் தொண்டு பட்டவர்பால் சார்வு இன்றி நின்ற எனக்கு (உன்னடியார்கள் பக்கல் அடிமைக்கு இசையாமல் நின்ற எனக்கு), இன்று பெறுத்தும் (அந்த அடிமையை நான் பெறும்படி செய்த" என்று இயைத்தும் பொருள் கொள்ளலாம். பேர்தல் – நீங்குதல். சீர் – கனம், அழகு. ஒன்றுதல் – கூடுதல். மாறு – ஒப்பு. தெரிவுறுதல் – ஆராய்தல்.

எம்பெருமானார் காட்டும் கருணை ஒப்புயர்வற்றது என்பது கருத்து.

82. தெரிவுற்ற ஞானம் செறியப் பெறாது, வெந் தீவினையால்
உருவற்ற ஞானத் துழல்கின்ற என்னை, ஒருபொழுதில்
பொருவற்ற கேள்விய னாக்கிநின்றான் என்ன புண்ணியனோ,
தெரிவுற்ற கீர்த்தி, இராமாநுச னென்னும் சீர்முகிலே.

**முன்னுரை :** முன் பாசுரத்தில் "அரங்கன் செய்ய தாளிணைகள் பேர்வின்றி இன்று பெறுத்தும்" என்று சொல்லிய பேற்றுக்கு உடலாக, எம்பெருமானார் தமக்குப் பண்ணிய உபதேசத்தை எடுத்தோதி, "எம்பெருமானார் என்ன தார்மிகரோ?" என்கிறார்.

**உரை :** தெரிவுற்ற ஞானம் செறியப் பெறாது—நல்லன, தீயன என்று ஆராய்வதில் ஊற்றமுடைய ஞானம் சேரப் பெறாமையாலே. வெம் தீ வினையால் உருவு அற்ற ஞானத்து உழல்கின்ற என்னை--மிகக் கொடிய கர்மத்தாலே, ஒரு வடிவு பட்டிராத ஞானத்தைப் பற்றி, ஒன்றிலும் நிலையற்றுத் தட்டித் திரிகிற என்னை. ஒரு பொழுதில்—ஒரு க்ஷண காலத்தில். பொரு அற்ற கேள்வியன் ஆக்கி நின்றான்-ஒப்பில்லாத கேள்வியுடையனாம்படி பண்ணித் திருவடிகள் பூமியிலே ஊன்றித் நின்றார். (யார் எனில்). தெரிவுற்ற கீர்த்தி இராமாநுசன் என்னும் சீர் முகில்—எங்கும் பரந்துள்ள கீர்த்தியை உடைய எம்பெருமானாராகிய சிறந்த மேகம். (இவர்) என்ன புண்ணியனோ—என்ன தார்மிகரோ?

"உருவற்ற ஞாலத்து" என்ற பாடத்து, உரு என்பது அழகு, அதாவது நன்மை எனக் கொண்டு. "நன்மை என்பது இல்லாத பூமியில்" என்பது பொருள். அப்போது "தெரிவுற்ற ஞானம் தெரியப்பெறாது" என்பது "நல்லன, தீயன என்று ஆராய்வதில் ஊற்றமுடைய ஞானம் பெறாமல் பிரபலமான கர்மத்தாலே ஒரு நன்மையும் இல்லாமல் இழிவான பூமியிலே" எனக் கொள்ளவேண்டும்.

மிகச் சிறந்த ஞானத்தை உலகில் வழங்கியதாலே எம்பெருமானார் மேகத்திலும் சிறந்த வண்மையுடையவர் என்பது கருத்து.

83. சீர்கொண்டு பேரறம் செய்து, நல்வீடு செறிதுமென்னும்
பார்கொண்ட மேன்மையர் கூட்டனல்லேன், உன் பதயுகமாம்
ஏர்கொண்ட வீட்டை எளிதினி லெய்துவன் உன்னுடைய
கார்கொண்ட வண்மை, இராமாநுசா இது கண்டுகொள்ளே.

**முன்னுரை :** முன் பாசுரத்தில் அமுதனார் தம்மை எம்பெருமானார் "பொருவற்ற கேள்வியன்" ஆக்கினார் என்றார். இந்தக் கேள்விக்குச் சிறப்பு யாதெனில், "மற்றவர்கள் சரணாகதி செய்து பரமபதம் பெறுவர்; நான் எம்பெருமானாருடைய திருவடிகளாகிற மோக்ஷத்தை அவரது ஔதார்யத்தாலேயே பெறுவேன்" என்கிறார்.

**உரை :** சீர் கொண்டு—சமம், தமம் முதலியன, ஆகிஞ்சன்யம் (உபாயமின்மை), அநந்யகதித்வம் (புகலின்மை), ருசி, விச்வாஸம் என்கிறவை உடையவர்களாய். பேர் அறம் செய்து—மிகச் சிறந்த தர்மமாகிய ப்ரபத்தியைப் பண்ணி. நல் வீடு செறிதும் என்னும்—பரம புருஷார்த்த லக்ஷணமான மோக்ஷத்தைப் பெறுவோம் என்னும். பார் கொண்ட மேன்மையர் கூட்டன் அல்லேன்—பூமியெங்கும் நிறைந்த பெருமையுடைய பகவத் ப்ரபந்நருடைய கூட்டத்தில் ஒருவன் அல்லேன் நான். உன் பதயுகமாம் ஏர் கொண்ட வீட்டை எளிதினில் எய்துவன்—தேவரீரது திருவடிகள் இரண்டுமாகிய ஸர்வ விலக்ஷணமான மோக்ஷத்தை, ஒரு முயற்சியுமின்றி அடைவேன். இராமா

நுசா!—. இது உன்னுடைய கார் கொண்ட வண்மை, கண்டுகொள் —'(இவ்வாறு நான் பெறுவதற்கு ஹேது', யாவருக்கும் எல்லாக் காலத்திலும் தேவரீர் உபகரிக்கையாலே, இது மேகத்தையும் வெல்லும் தேவரீருடைய ஔதார்யம். இது நான் சொல்லவேண்டுமா? எளிதில் கண்டு கொள்ளக் கூடியதன்றோ?

"நல்வீடு பெறுதும், ஏர்கொண்ட வீட்டில்" என்றும் பாடம்.

திருவடிகளை மோக்ஷமாகச் சொல்லுவது, ஆனந்தத்தைத் தருவதாலே, "முக்திர் மோக்ஷோ மஹாநந்த:" என்றார்கள்.

84. கண்டுகொண்டே னெம்மிராமாநுசன்றன்னைக் காண்டலுமே
தொண்டுகொண் டேனவன் தொண்டர்பொற் றாளில், என் தொல்லை வெந்நோய்
விண்டுகொண் டேனவன் சீர்வெள்ள வாரியை வாய்மடுத்தின்(று)
உண்டுகொண்டேன், இன்ன முற்றன ஓதி லுலப்பில்லையே.

முன்னுரை : "இனி நான் பெறுவது கிடக்க, இதற்கு முன்பு நான் பெற்ற நலன்களுக்கு ஓர் எல்லை உண்டோ?" என்கிறார்.

உரை : எம் இராமாநுசன்றன்னை கண்டு கொண்டேன்—இவர் நம் இனத்தினர் அல்லர், நம்மை உய்விப்பதற்காக அவதாரம் செய்தவர் என்று எம்பெருமானாரை உள்ளபடி கண்டு கொண்டேன். காண்டலும், அவன் தொண்டர் பொன்தாளில் தொண்டு கொண்டேன் - இவ்வாறு கண்டபின்பு, அவர்தம் அளவிலே நில்லாது, அவருக்கு அடியார்களுடைய அழகிய திருவடிகளிலே அடிமைப்பட்டேன். என் தொல்லை வெம் நோய் விண்டு கொண்டேன்—என்னுடைய, அநாதியாய்ப் போரும் கொடிய கர்மங்களை நீக்கிக் கொண்டேன். அவன் சீர் வெள்ள வாரியை வாய் மடுத்து இன்று உண்டு கொண்டேன்—அவருடைய குணங்களாகிற ஸமுத்ரத்தை, பெரு விடாயர் மடுவிலே வாய்மடுத்துப் பருகுவதுபோலே, பேரவாவிலே பருகிக்கொண்டேன். இன்னம் உற்றன ஓதில், உலப்பு இல்லையே—மேலும் நான் பெற்றன சொல்லில், அதற்கு ஒரு முடிவு இல்லை.

விள்ளுதல்—நீங்குதல். வாரி—ஸமுத்ரம். உலப்பு—முடிவு.

நாம் எம்பெருமானாரைப் பற்றிப் பெறும் நலன்கள் பலபல என்பது கருத்து.

85. ஓதிய வேதத்தி னுட்பொருளாய், அதன் உச்சிமிக்க
சோதியை நாத னென வறியா துழல்கின்ற தொண்டர்,
பேதைமை தீர்த்த விராமாநுசனைத் தொழும்பெரியோர்
பாதமல்லா லென்றன் னாருயிர்க் கியாதொன்றும் பற்றில்லையே.

முன்னுரை : எம்பெருமானாரைக் கண்டு கொள்வது, அவரது அடியார்களது திருவடிகளில் தொண்டு செய்வது இவை இரண்டிலும் எதில் ஊற்றம் என்ன, "எம்பெருமானுக்கே உரியராயிருப்பவர்களது திருவடிகளன்றி, என் ஆத்மாவுக்கு வேறொன்றும் பற்றில்லை" என்கிறார்.

உரை : ஓதிய வேதத்தின் உட் பொருளாய்— தாங்கள் பயிலும் வேதத்தில் ஆழ்ந்த பொருளாய். அதன் உச்சி மிக்க சோதியை—அந்த வேதத்தின் சிரஸ்ஸிலே அளவு கடந்த சோதியாய் விளங்கும் ஸர்வேச்வரனை. நாதன் என அறியாது உழல்கின்ற தொண்டர்—நமக்கு நாதன் என்று தெரிந்துகொள்ளாமல் புறம்பான விஷயங்களிலே படிந்து திரிகிறவர்களுடை. பேதைமை தீர்த்த

ராமாநுசனை — அஜ்ஞானத்தைப் போக்கியருளிய எம்பெருமானாரை. தொழும் பெரியோர் பாதம் அல்லால் — தொழுவதே தமக்காம்படியான பெருமையுடையவர்களது திருவடிகளையொழிய. என் ஆருயிர்க்கு யாது ஒன்றும் பற்று இல்லை—என்னுடைய அரிய ஆத்மாவுக்கு வேறொரு பற்றும் இல்லை.

எம்பெருமானாரது அடியார்களது திருவடிகளே நமக்குப் பற்றும் என்பது கருத்து.

86. பற்று மனிசரைப் பற்றி, அப்பற்று விடாதவரே
உற்றா ரெனவுழன் றோடி நையேனினி, ஒள்ளியநூல்
கற்றார் பரவு மிராமா நுசனைக், கருதுமுள்ளம்
பெற்றார் யவர், அவரெம்மைநின் றாளும் பெரியவரே.

**முன்னுரை :** முன் பாட்டில் எம்பெருமானாரைத் தொழும் பெரியோர்களது திருவடிகளே தமக்குப் பற்று என்றார். முன்பு தாம் அப்ராப்த விஷயங்களைப் பற்றிய வர்களைப் பந்துக்களாக நினைத்து அவர்களிடம் அன்பு கொண்டமையை நினைந்து, இனி அது செய்யேன். எம்பெருமானாரைச் சிந்திக்கும் மனமுடையார் யாரேனு மாகிலும் அவர் என்னை ஆள உரியவர்'' என்கிறார்.

உரை : பற்று மனிசரை பற்றி – ஒன்றுக்கும் பற்றாத அல்பர்களைப் பற்றி. அ பற்று விடாதவரே உற்றார் என – அந்தப் பற்றை விடாமல் நிற்கிறவர்களையே பந்துக்கள் என்று. உழன்று, ஓடி, நையேன் இனி – அவர் பின்னே திரிந்து, வருந்தி-அதாவது அவர்கள் விஷயத்திலுள்ள அன்பாலே அவர்களது முகத்திலே விழிப்பது எப்போது என்று ஓடி, அவர்களோடு சேர்வதாலும், அவர்களைப் பிரிவதாலும் விளையும் இன்பதுன்பங்களால் இனி நைவதில்லை. ஒள்ளிய நூல் கற்றார் பரவும் இராமாநுசனை – தத்வ, ஹித, புருஷார்த்தங்கள் விளங்குகின்ற சாஸ்த்ரங்களை அறிந்தவர்கள் துதிக்கின்ற எம்பெருமானாரை. கருதும் உள்ளம் பெற்றார் யவர் – நினைப்பதே தொழிலாகக் கொள்ளும் மனத்தை நிதி பெற்றாற் போலே பெற்றிருப்பவர்கள் யாவர் சிலர். அவர் எம்மை நின்று ஆளும் பெரியவர் – அவர் குலம், கோத்ரம், ஒழுக்கம் இவற்றால் எப்படிப்பட்டவராயினும் எம்மை இவ்வாத்மா உள்ளவளவும் ஒருபடிப்பட அடிமை கொள்ளும் மஹாநுபாவர்.

"அ பற்று விடாது, அவரே உற்றார்'' என்று பிரித்தும் பொருள் கொள்ளலாம்.

எம்பெருமானாரை நினைந்திருப்பவர்களே நமக்குத் தலைவர்கள் என்பது கருத்து.

87. பெரியவர் பேசிலும் பேதையர் பேசிலும், தன்குணங்கட்(கு)
உரியசொல் லென்று முடையவ னென்றென்(று), உணர்வில் மிக்கோர்
தெரியும்வண் கீர்த்தி யிராமாநுசன் மறைதேர்ந்துலகில்
புரியுநன் ஞானம், பொருந்தா தவரைப் பொருங்கலியே.

**முன்னுரை :** நம்முடைய ஞானமும் செயலும் கலங்கும்படி மண்டுகின்ற கலி காலத்திலே நாம் செய்வன ஒருபடிப்பட்டு நில்லாவே என்ன, கலி கெடுப்பது எவரை எனில், எம்பெருமானாராலே அளிக்கப் பெற்ற ஞானம் இல்லாதவர்களையே என்கிறார்.

உரை : பெரியவர் பேசிலும் – பேசுகைக்கு ஈடான ஞானசக்திகள் வாய்ந்த பேரளவுடையவர் சொல்லிலும், பேதையர் பேசிலும்–அஜ்ஞான அசக்திகளுக்கு எல்லையாயிருக்கும் அறிவிலிகள் சொல்லிலும். தன் குணங்கட்கு உரிய சொல் என்றும் உடையவன் என்று – (பெரியவர்களுடைய)

ஞான சக்திகளால் எல்லை காணவொண்ணுதபடியாய், (பேணுதயர்) "நம்முடைய அறிவு அசக்திகளால் நாம் பேசுவதற்று நிலமன்று'' என்று மீளவேண்டாதபடியாய், தங்கள் தங்கள் உணங்களுக்கு ஈடாகப் பேசலாம்படியிருக்கிற, தம்முடைய ஸ்வரூபம் முதலியவற்றுக்கு வாசகமான சொற்களை எப்போதும் உடையராயிருப்பர் என்று. உணர்வில் மிக்கோர் தெரியும் வண் கீர்த்தி – ஞானத்தால் சிறந்தவர்கள் உணர்ந்து போற்றும் கீர்த்தியை உடைய. இராமாநுசன் – எம்பெருமானர் மறை தேர்ந்து உலகில் புரியும் நல் ஞானம் – வேதத்தை ஆராய்ந்து உலகத்தில் உபகரித்தருளின சிறந்த ஞானமானது. பொருந்தாதவரை–தன்னில் சேராதவர்களை. கலி பொரும் – கலி வந்து மேலிட்டு நலியும். அந்த ஞானத்தால் பொருந்தியவர்களை நலியமாட்டாது என்று கருத்து.

உரிய — தக்க. தெரிதல் — விவேகித்தல். வண்மை — அழகு. தேர்தல் — ஆராய்தல். புரிதல் — கொடுத்தல். பொருந்துதல் — சேர்தல்.

எம்பெருமானரது கடாக்ஷத்தால் நல்ஞானம் பெருதவர்கள் கலியின் கொடுமைக்கு இலக்காவர்கள் என்பது கருத்து.

88, கலிமிக்க செந்நெல் கழனிக் குறையல், கலைப்பெருமான்
ஒலிமிக்க பாடலை யுண்டுதன் னுள்ளம் தடித்(து), அதனுல்
வலிமிக்க சீய மிராமாநுசன் மறை வாதியராம்
புலிமிக்க தென்(று), இப் புவனத்தில் வந்தமை போற்றுவனே.

sriyatsam

முன்னுரை : எம்பெருமானர் உபகரித்த ஞானம் பெருதவர்களைக் கலி தோஷம் நலியும் என்ருர், முன் பாசுரத்தில். அந்த ஞானத்தை உபகரிக்கைக்காக அவர் வந்து உபகரித்த படியை நினைத்து, "எம்பெருமானராகிய சிங்கம் புற மதத்தினராகிய புலிகளை அடக்குவதற்காக உலகத்தில் வந்த வகையைச் சொல்லித் துதிக்கக் கடவேன்'' என்கிருர், இதில்.

உரை : கலி மிக்க செந்நெல் கழனி குறையல் - உழுவது, நடுவது, அறுப்பது இவற்ருலான ஆரவாரம் பெற்றனவாய், செந்நெல் மிகுந்து விளைகின்ற வயல்களையுடைய திருக்குறையலூருக்குத் தலைவரான. கலைப்பெருமான் ஒலிமிக்க பாடலை உண்டு தன் உள்ளம் தடித்து-திருமங்கையாழ்வார், இருந்தமிழ் நூற் புலவராகையாலே சாஸ்த்ர ரூபமாக அமைத்தருளிய, ஒலியால் மிக்க பாக்களை தாரகமாகவும் போக்யமாகவும் அனுபவித்து, தமது திருவுள்ளம் பூரித்து. அதனுல் வலி மிக்க சீயம் இராமாநுசன் – தமது ஆற்றலாலே புறம்பான மதத்தினர்க்குச் சிங்கம் போலே உள்ள எம்பெருமானர். மறைவாதியராய புலி மிக்கது என்று – வேதங்களை ஏற்றுக் கொண்டு மாருக வாது செய்யுமவர்களான புலிகள் மலிந்துள்ளன என்று. இ புவனத்தில் வந்தமை போற்றுவனே – இவர்களை அடக்குவதற்குப் பூமியில் அவதரித்ததைப் புகழக் கடவேன்.

கலி – ஆரவாரம்; மிடுக்கு (பூசாரம் கருத்து). சீயம் – சிங்கம்.

எம்பெருமானர் அவதரித்துச் செய்த அருஞ்செயல்கள் எப்போதும் பாராட்டத்தக்கவை என்பது கருத்து.

89. போற்றரும் சீலத் திராமாநுச, நின் புகழ்தெரிந்து
சாற்றுவ னேலது தாழ்வது தீரில், உன் சீர்தனக்கோர்
ஏற்றமென் றேகொண் டிருக்கிலு மென்மன மேத்தியன்றி
ஆற்றகில்லா(து), இதற் கென்னினைவா யென்றிட் டஞ்சுவனே.

**முன்னுரை :** முன் பாசுரத்தில் ''போற்றுவன்'' என்று புகழ ஒருப்பட்ட அமுதனார், அது நிமித்தமாகத் தமக்கு உண்டான பலத்தை எம்பெருமானாருக்கு விண்ணப்பம் செய்கிறார்.

உரை : போற்ற அரும் சீலத்து இராமாநுச—புகழ்ந்து தலைக்கட்ட அரிதான சீல குணம் வாய்ந்த எம்பெருமானாரே! நின் புகழ் தெரிந்து சாற்றுவனேல் அது தாழ்வு—தேவரீருடைய கல்யாண குணங்களை நன்குணர்ந்து, உலகில் பரவுமாறு பேசுவேனாகில், அவற்றிற்குக் குறை உண்டாக்கத் தலைக்கட்டும். அது தீரில் அப்படிப் பேசுவது தவறினால், உன் சீர் தனக்கு ஓர் ஏற்றம் என்றே கொண்டிருக்கிலும்—தேவரீருடைய குணங்களுக்கு ஒரு சிறப்பாகும் என்றே கொண்டிருந்தாலும். என் மனம் ஏற்றி அன்றி ஆற்றகில்லாது —என் மனமானது தேவரீரது குணங்களைப் புகழ்ந்து பேசாமல் தரிக்கமாட்டாது. ''வாக்குத் தூய்மையிலாமையாலே மாதவா! உன்னை வாய்க் கொள்ளமாட்டேன், நாக்கு நின்னையல்லால் அறியாது, நானது அஞ்சுவன்; ..மூர்க்குப் பேசுகின்றான் இவன் என்று முனிவாயேலும் என் நாவினுக்கு ஆற்றேன்'' என்பது போலே இருப்பது. இதற்கு என் நினைவாய் என்றிட்டு அஞ்சுவன்—இதுபற்றித் தேவரீர் நினைப்பது என் என்று பயப்படுகிறேன்.

எம்பெருமானாரது புகழைப் பாடுவதே, நாப்படைத்த பயனாகும் என்பது கருத்து.

சாற்றுதல் — பரவும்படி சொல்லுதல்.

90. நினையார் பிறவியை நீக்கும் பிரானை, இந் நீணிலத்தே
எனையாள வந்த இராமாநுசனை, இருங்கவிகள்
புனையார் புனையும் பெரியவர் தாள்களில் பூந்தொடையல்
வனையார், பிறப்பில் வருந்துவர் மாந்தர் மருள்சுரந்தே.

srivatsam

**முன்னுரை :** அமுதனார், ''அஞ்சுவன்'' என்றவாறே எம்பெருமானாருடைய குளிர்ந்த கடாக்ஷம் பெற்று, அதனால் அச்சமொழிந்து, ''இவ் விஷயத்தில் முக்கரணங்களிலும் ஏதேனுமொன்றால நலனைச் செய்து பிழைததுப் போகலாயிருகக, மக்கள் பிறவியால் வரும் துக்கததை அநுபவிப்பதே!'' என்று வருந்துகிறார்.

உரை : (மக்கள், தம்) பிறவியை நீக்கும் பிரானை நினையார்—தம்மை நினைந்தவர்களுடைய ஜன்மத்தைப் போக்கும் உபகாரகரான எம்பெருமானாரை நினைக்கமாட்டார்கள். இ நீள் நிலத்தே எனை ஆள வந்த இராமாநுசனை, இருங்கவிகள் புனையார்—இப் பூமி பரப்பெல்லாம் கிடக்க, நான் இருந்த இடம் தேடி வந்த எம்பெருமானாரை, அவரது குணங்களுக்கு ஈடான பெரிய கவிகளைத் தொடுக்கமாட்டார்கள். (கவிகள்) புனையும் பெரியவர் தாள்களில் பூம் தொடையல் வனையார்—தங்கள் கவி புனையாவிடிலும், அவர் விஷயமாகக் கவிகளைத் தொடுக்கும் மஹாநுபாவருடைய திருவடிகளிலே பூமாலையை வேயமாட்டார்கள். மாந்தர் மருள் சுரந்து பிறப்பில் வருந்துவர்—(மக்கள்) இத்தனைக்கு ஏற்றதொரு ஜன்மம் பெற்றிருந்தாலும், அறிவு கேடராய்த் துக்கப்படுகிறார்கள்.

ஐயோ! இவர்களது பாக்கியமின்மை என்பது கருத்து.

''நினைவார் பிறவியை நீக்கும் பிரானை'' என்றும் பாடம். வனைதல் — செய்தல் அதாவது சேர்த்தல்.

91. மருள்சுரந் தாகம வாதியர் கூறும், அவப்பொருளாம்
இருள்சுரந் தெய்த்த வுலகிருள் நீங்கத், தன் னீண்டியசீர்
அருள்சுரந் தெல்லா வுயிர்கட்கும் நாத னரங்கனென்னும்
பொருள்சுரந்தான், எம்மிரா மாநுசன் மிக்க புண்ணியனே.

முன்னுரை : இவர்கள் இப்படி யிருந்தும், இவர்கள் உய்வதற்காக எம்பெருமானார் செய்தருளிய க்ருஷியைச் சொல்லி அவரைப் பாராட்டுகிறார்.

உரை : மருள் சுரந்து ஆகம வாதியர் கூறும்—அஜ்ஞானமெல்லாம் ஒருமுகமாகத் திரண்டு ஆகமத்தை ப்ராணமாகக் கொண்டு பாசுபதர் கூறுவனவான. அவம் பொருள் ஆம் இருள் சுரந்து எய்த்த உலகிருள் நீங்க—இழிவான கருத்துக்களாகிற இருள் மிகுந்து, அதிலே ஆழ்ந்த உலகத்தின் இருளானது நீங்குமாறு. தன் ஈண்டிய சீர் அருள் சுரந்து—மக்களைக் காப்பதற்காகத் திரண்ட தமது க்ருபை ஒருமடை கொண்டு. எல்லா உயிர்கட்கும் நாதன் அரங்கன் என்னும் பொருள் சுரந்தான்—(இவ்வர்த்தத்தை நமக்கு வெளியிட்ட) இராமாநுசன் மிக்க புண்ணியன்—.

அவப் பொருள் — பொருளல்லாத பொருள். "ஆகமவாதியர் கூறும் மறப் பொருள்" என்றும் பாடம். "இருள் சுமந்தெய்த்த" என்பதும் பாடம். ஈற்றடியில் "இராமாநுசன் என்னும் புண்ணியனே" என்பது பாடபேதம்.

92\. புண்ணிய நோன்பு புரிந்து மிலேன், அடி போற்றிசெய்யும்
நுண்ணருங் கேள்வி நுவன்று மிலேன், செம்மை நூற்புலவர்க்கு
எண்ணருங் கீர்த்தி இராமாநுச, இன்று நீ புகுந்தென்
கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் நின்றவிக் காரணம் கட்டுரையே.

முன்னுரை : முன் இரண்டு பாட்டுக்களிலே, மக்கள் எம்பெருமானாரை அண்டி உய்யவேண்டியிருக்கப் பிறப்பு, இறப்பு முதலியவற்றால் வருந்துவதையும், இவர்கள் உய்வதற்கான க்ருஷியை எம்பெருமானார் செய்த வகையையும் அருளிச் செய்தார். இப்பாட்டில், "தேவரீர் என்னை ஏற்றுக்கொண்டதற்கு நான் அறிய ஹேது ஒன்றுமில்லை. இவ்வாறு தேவரீருக்கு ஆக்கிக் கொண்டு, என்னுடைய நெஞ்சிலும் கண்ணிலும் நிறைந்திருப்பதற்குக் காரணம் இன்னதென்று அருளிச் செய்ய வேணும்" என்கிறார்.

உரை : புண்ணிய நோன்பு புரிந்துமிலேன்—இப்பேற்றுக்கு உறுப்பாக, நான் புண்ணியமான ஒரு விரதத்தைச் செய்யவில்லை. அடி போற்றி செய்யும் நுண்ணருங் கேள்வி நுவன்றுமிலேன்—(தேவரீரது) திருவடிகளை வணங்குவதற்கு உறுப்பான, நுண்ணியதாய் அரியதான கேள்வி விஷயத்தைக் கேளாதவன்றிக்கே கேட்கவேண்டும் என்னும் விருப்பத்தைச் சொல்லவுமில்லை. செம்மை நூல் புலவர்க்கு எண்ணரும் கீர்த்தி இராமாநுச!—சாஸ்த்ரரூபமான கவிகளைச் சொல்லவல்ல புலவர்களாலே அளவிட்டுப் பாட முடியாததான புகழையுடைய எம்பெருமானாரே! இன்று நீ புகுந்து, என் கண்ணுள்ளும், நெஞ்சுள்ளும் நின்ற இ காரணம்—. கட்டுரை-அருளிச் செய்யவேண்டும்.

புரிதல் - செய்தல், நுவல்தல் - சொல்லுதல்.

இத்தால், தமக்கொரு பயனும் கருதாது எம்பெருமானார் அருள் செய்வார் என்பது தேறுகிறது.

93\. கட்டப் பொருளை மறைப்பொருளென்று கயவர்சொல்லும்
பெட்டைக் கெடுக்கும் பிரானல்லனே என் பெருவினையைக்
கிட்டிக் கிழங்கொடு தன்னருளென்னுமொள் வாளுருவி
வெட்டிக் களைந்த இராமாநுசனென்றும் மெய்த்தவனே.

**முன்னுரை :** எம்பெருமானுர் தமக்காகச் செய்தது யாதொரு ஹேதுவு மின்றி என்பது தெளிந்து, அமுதனர், "என்னுடைய கர்மங்களையெல்லாம் களைந்த எம்பெருமானுர், தாமே அவதரித்துப் புறமதங்களைக் களைந்து மக்களுக்கு நன்மை செய்தவரன்ருே! அவர் செய்வன வெல்லாம் யாதொரு ஹேதுவுமின்றி ஆவன" என்கிருர்.

**உரை :** கிட்டி தன் அருள் என்னும் ஒள் வாள் உருவி என் பெரு வினையை கிழங்கொடு வெட்டி களைந்த – அண்டவொண்ணுதவாறு பாவங்களைச் செய்த என்னை, தாமே வந்து கிட்டி, தம்முடைய க்ருபையாகிற தெளியக் கடைந்த வாளை உருவி, என்னுடைய பெரும் பாவங்களை, வேரூன்றிய வேரோடு (கிழங்கோடு) அரிந்து நீக்கி விட்டார். இராமாநுசன் என்னும் மெய்த் தவன் – ப்ரபந்நஜன கூடஸ்தரான் எம்பெருமானுர், கட்ட பொருளை மறை பொருள் என்று கயவர் சொல்லும் பெட்டை கெடுக்கும் பிரான் அல்லனே – ஏற்றதல்லனவான அர்த்தங்களை வேதார்த் தங்கள் என்று, அறிவிலிகள் சொல்லுகிற ப்ராமக (கலக்கத்தால் வரும்) வாக்கியங்களைப் போக் கி, அதாவது அதற்கு ஏற்றதான அர்த்தத்தை உபகரித்த, உபகாரகரன்ருே அவர?

எம்பெருமானுர் செய்வனவெல்லாம், யாதொரு ஹேதுவுமின்றி உலக நலனுக்கே என்பது கருத்து.

கட்டம் — கஷ்டம். பெட்டு — அறிவின் கலக்கம். மெய்த்தவன் — சரணுகதிருபமான தத்தை உடையவன்.

srivatsam

94. தவந்தரும் செல்வம் தகவும் தரும், சரியாப்பிறவிப்
பவந்தரும் தீவினை பாற்றித் தரும், பரந் தாமமென்னும்
திவந்தரும் தீதி லிராமா நுசன்றன்னைச் சார்ந்தவர்கட்(கு)
உவந்தருந்தேன், அவன் சீரன்றி யானென்று முண்மகிழ்ந்தே.

**முன்னுரை :** தம்மை அடைபவர்களுக்கு எம்பெருமானுர் ப்ரபத்தி நிஷ்டை முதல் பரமபதம் வரையில் கொடுக்க வல்லரே யாயினும், "அவருடைய குணங் களைத் தவிர வேருென்றையும் நான் அனுபவிக்க மாட்டேன்" என்கிருர், அமுதனர்.

**உரை :** தீது இல் இராமாநுசன்.. தன்னை சார்ந்தவர்கட்கு – தம்மை அடைந்தவர்களுக்கு – தம்மை அடைந்தவர்களுக்கு. தவம் அல்லது செய்யாததான குற்றம் இல்லாத எம்பெருமானுர், தம்மை அடைந்தவர்களுக்கு. தவம் தரும் – த்வயத்தில் முதல் வாக்கியத்தில் சொல்லும் சரணுகதி நிஷ்டையை அருளுவர். செல்வம் தகவும் தரும் – பின் வாக்கியத்தில் சொல்லும் கைங்கர்யத்திற்கு ருசி வேண்டுகையாலே, பக்தி யாகிற செல்வமும் தகவும் கொடுத்தருளுவர். சரியா பிறவி பவம் தரும் தீவினை பாற்றி தரும் – ஸர்வசக்தி ஒருவன் போக்கினுலன்றி நீங்காத பிறவியைத் தரும் தீவினையை பொடியாக்கி அருளுவர். பரந்தாமம் என்னும் திவம் தரும் – பரந்தாமம் என்று பெருமை வாய்ந்த ஸ்ரீவைகுண் டத்தைக் கொடுப்பார். (இப்படி எல்லாவற்றையும் தந்தாலும்). யான், அவன் சீர் அன்றி உள் மகிழ்ந்து உவந்து அருந்தேன் – அவருடைய குணங்களுக்குத் தோற்ற நான், அவருடைய குணங் களையொழிய வேருென்றையும் உள்ளங் களித்து விரும்பி, விடாய் தீருமாறு பருகமாட்டேன்.

"சவியாப் பிறவி" என்று பாடபேதம்; சவியா–நிலைபேராத, நீக்கஅரிதான. பாறு–பொடி.

"மகிழ்ந்து" என்ற சொல் முன் வந்திருப்பதால், "உவந்து" என்பது விருப்பமாய் இருக்கும் ஆகாரத்தைச் சொல்லுகிறது.

56

95. உண்ணின் றுயிர்களுக் குற்றன வேசெய்(து) அவர்க்குயவே
பண்ணும் பரனும் பரிவில னாம்படி, பல்லுயிர்க்கும்
விண்ணின் தலைநின்று வீடளிப் பானெம் மிராமா நுசன்,
மண்ணின் தலத்து தித்து, மறை நாலும் வளர்த்தனனே.

**முன்னுரை :** தம்மை அண்டினாரை உய்விக்க எம்பெருமானார் செய்வன முன்பு அருளிச் செய்தார், அமுதனார். இவ்வாறு பெருமை வாய்ந்தவரின் ஞானம், சக்தி முதலியவற்றை நினைந்தால், இவர் இவ்வுலகத்தினரைக் காட்டிலும் வேறுபட்டிருப்பதாலே, இவர் பரமபதத்தில் உள்ள நித்யர்களுள் ஒருவராகி இங்கு அவதரித்திருக்க வேண்டும் என்று தேறுகிறார்.

**உரை :** உள் நின்று உயிர்களுக்கு உற்றனவே செய்து – ஆத்மாக்களுக்குள்ளே அமர்ந்து, ஆத்மாக்கள் உய்யும் வகைக்கு ஈடான க்ருஷிகளையே செய்து. அவர்க்கு உயவே பண்ணும் பரனும் பரிவிலன் ஆம்படி – அவர்களுக்கு உஜ்ஜீவனத்தையே பண்ணும் ஸர்வேச்வரனும் "எம்பெருமானார் போலே இவன் பரிவுடையவனல்லன்'' என்னும் படியாக. விண்ணின் தலை நின்று மண்ணின் தலத்து உதித்து – ஸ்ரீ வைகுண்டத்திலிருந்து பூமியில் அவதரித்தது எம் இராமாநுசன் – பல் உயிர்க்கும் வீடு அளிப்பான் – ஸகல ஆத்மாக்களுக்கும் பரம புருஷார்த்த லக்ஷணமான மோக்ஷத்தைக் கொடுத்தருள்வதாக. மறை நாலும் வளர்த்தனன் – நான்கு வேதங்களையும், யாவரும் பொருள் தேறுமாறு பரப்பினார்.

உயிர்களிடத்து எம்பெருமானார் காட்டும் பரிவு, எம்பெருமான் காட்டுவதையும் விஞ்சியது என்பது கருத்து.

srivatsam

96. வளரும் பிணிகொண்ட வல்வினையால் மிக்க நல்வினையில்
கிளரும் துணிவு கிடைத்தறியாது, முடைத்தலையூன்
தளரு மளவும் தரித்தும் விழுந்தும் தனிதிரிவேர்க்(கு)
உளரெம் மிறையவர், இராமா நுசன்றன்னை யுற்றவரே.

**முன்னுரை :** முன் பாசுரத்தில் "மறை நாலும் வளர்த்தனனே'' என்பதால் தேறுவது : சேதனர் உய்வதற்காக அருளிச் செய்தன பக்தி, ப்ரபத்தி என்பன. இவை இரண்டிலும் எளியதான ப்ரபத்தி தமக்கு உபாயமாமோ என்ன, அமுதனார், "அதுவுமன்று ; நான் எம்பெருமானாரின் அபிமானத்திலேயே ஊன்றியவன்'' என்கிறார்.

**உரை :** வளரும் பிணி கொண்ட வல்வினையால்—எல்லையில்லாத துக்கத்தைத் தருவதாய், அநுபவத்தாலும் ப்ராயச்சித்தத்தாலும் நாசமாகாத ப்ரபல கர்மத்தாலே. மிக்க நல்வினையில் கிளரும் துணிவு கிடைத்தறியாது—சிறந்த தர்மமான சரணாகதியில் நம்பிக்கை என்பது நேராகக் கிடையாததாய். முடைத்தலை ஊன் தளருமளவும்—புலால் நாற்றம் கொண்ட சரீரம் உயிர் நீங்கும்போது கட்டுக் குலையுமளவும். தரித்தும் விழுந்தும் தனிதிரிவேற்கு—இந்த ஸம்ஸாரத்தில் பெரியோர் உபதேசித்த அறநெறியை அறிந்து தரித்தும், பழைய வினையாலே சப்தாதி விஷயங்களிலே விழுந்தும் ஒரு துணையின்றி இருக்கும் எனக்கு. எம் இறைவர் இராமாநுசன்றன்னை உற்றவர் உளர்—என் தனிமை தீர எனக்குத் துணையாய் ஒரு குழியிலே விழாதபடி தாங்களே பிடித்து நடத்தி உஜ்ஜீவிப்பதற்கு, நமக்குத் தலைவரான எம்பெருமானாரைப் பற்றி இருப்பவர்கள் உள்ளனர்.

எம்பெருமானாரைப் பற்றியிருப்பவர்களது அபிமானமே எனக்கு நலனைப் பயக்கும் என்பது கருத்து.

97. தன்னையுற் றாட்செய்யும் தன்மையினோர், மன்னு தாமரைத்தாள்
தன்னையுற் றாட்செய்ய, வென்னையுற் றானின்று, தன் தகவால்
தன்னையுற் றாரன்றித் தன்மையுற் றாரில்லை யென்றறிந்து,
தன்னையுற் றாரை, இராமாநுசன் குணம் சாற்றிடுமே.

**முன்னுரை :** இப்படி எம்பெருமானாரிடத்து மாத்திரமன்றி, அவருக்கு அன்புடையவர்களிடத்தும் விருப்பம் வந்த வழிதான் என் என்னில், அதுவும் அவனுடைய பரம க்ருபையாலே என்கிறார், அமுதனார்.

**உரை :** தன்னை உற்றார் அன்றி—தம்மிடம் பற்றுடையவர்கள் மாத்திரமின்றி, தன்னை உற்றாரை குணம் சாற்றிடும்—தம்மைப் பற்றியிருப்பவர்களைக் குணகீர்த்தனம் பண்ணுகிறதான, தன்மை உற்றார் இல்லை என்று அறிந்து—ஸ்வபாவம் வாய்ந்தவர் ஒருவரும் இல்லை என்று (எம்பெருமானார் செய்ததாவது). தன்னை உற்று ஆட்செய்யும் தன்மையினோர்—தம்மை (எம்பெருமானாரை) அடைந்து வேறு விஷயமொன்றையும் அறியாதபடி, தமக்கு (எம்பெருமானாருக்கு) அடிமை செய்வதே ஸ்வபாவமாக உடையவர்களுடைய. மன்னு தாமரைத் தாள் தன்னை உற்று—ஒன்றோடொன்று இணைந்து தாமரைபோல் பரம போக்யமாயிருக்கிற திருவடிகளைப் பற்றி, ஆட்செய்ய--இவர்களுக்கு அடிமை செய்ய. இராமாநுசன் தன் தகவால் இன்று என்னை உற்றான்-எம்பெருமானார் இன்று தமது பரம க்ருபையாலே என்னை அங்கிகரித்தருளினார்.

**அந்வயம்:** தன்னை உற்றாரன்றி, தன்னை உற்றாரை குணம் சாற்றிடும் தன்மை உற்றார் இல்லை என்று அறிந்து, தன்னை உற்று ஆட்செய்யும் தன்மையினோர் மன்னு தாமரைத்தான் தன்னை—உற்று ஆட்செய்ய, இராமாநுசன் தன் தகவால் இன்று என்னை உற்றான்.

srivatsam

98. இடுமே இனிய சுவர்க்கத்தில், இன்னம் நரகிலிட்டுச்
சுடுமே, யவற்றைத் தொடர்தரு தொல்லைச் சுழல் பிறப்பில்
நடுமே யினிநம் மிராமாநுசன், நம்மை நம்வசத்தே
விடுமே சரணமென்றால், மனமே நையல் மேவுதற்கே.

**முன்னுரை :** நமக்கு நிலைநின்ற பந்துவான ஸர்வேச்வரன் நெடுங்காலமாக நம்மை ஸ்வர்க்க, நரக, கர்ப்பங்களிலே தட்டித் திரியவிட்டிருந்தது நம்முடைய கர்மத்தைப் பற்றியன்றோ? நாம் பூமியில் வாழ்வதாலே பூர்வ வாஸனையாலே விபரீதங்களிலே இழிய வாய்ப்பிருந்தால் செய்வது என் என்று அமுதனார் தளர்ந்து, எம்பெருமானாரது இயல்பால் தேறி, "எம்பெருமானாரைச் சரணம் என்று அடைந்தால், அவர் அப்படி ஒன்றிலும் விட்டுக் கொடுக்க மாட்டார்; ப்ராப்தி நிமித்தமாகச் சோகிக்க வேண்டியதில்லை" என்கிறார்.

**உரை :** நம் இராமாநுசன்—நம்மை உய்விப்பதற்காக வந்து அவதரித்த எம்பெருமானார். சரணம் என்றால்— "தேவரீரே சரணம்" என்று மாத்திரம் சொல்லுவோமானால். இனிய சுவர்க்கத்தில் இடுமே—சப்தாதி விஷயங்களில் வசப்பட்டுப் போகங்களை விரும்புமவர்க்கு இனிதாகத் தோற்றும் சுவர்க்கத்தில் இட்டு வைப்பரோ? இன்னம் நரகில் இட்டுச் சுடுமே—தம்முடைய திருவடிகளைப் பற்றிய பின்பும் நகரத்தில் இட்டு வைத்து நாம் தவிக்கும்படி செய்வரோ? அவற்றை தொடர்தரு தொல்லை சுழல் பிறப்பில் நடுமே—இந்தச் சுவர்க்க வாசம், நரக அனுபவம் இவற்றுக்கு இடான கர்மம் ஜன்மத்திற்கு உறுப்பாகையாலே, அநாதியாய் மேன்மேலும் வளர்ந்து கொண்டிருக்கிற பிறப்பிலே நம்மை நிறுத்துவாரோ? இனி நம்மை நம் வசத்தே விடுமே—மேலுள்ள காலமெல்லாம் நம்மை நமது ருசிக்கு ஏற்றவாறு விட்டுவிடுவாரோ? மனமே! மேவுதற்கு நையல்—நெஞ்சே! ப்ராப்தி நிமித்தமாக சிதிலமாகாதே.

எம்பெருமானுரைப் பற்றியபின் நமக்கு யாதொரு துன்பமும் இல்லை என்பது கருத்து.

மேவுதற்கு நையல்—மேவும் விஷயமாக, சிதிலமாக வேண்டா. நடுதல்—நிலைநிறுத்துதல், நாட்டுதல்.

**99.** தற்கச் சமணரும் சாக்கியப் பேய்களும், தாழ்சடையோன்
சொற்கற்ற சோம்பரும் சூனிய வாதரும், நான்மறையும்
நிற்கக் குறும்புசெய் நீசரும் மாண்டனர் நீணிலத்தே,
பொற்கற்பகம், எம்மிராமா நுசமுனி போந்தபின்னே,

**முன்னுரை :** முன் பாசுரத்தில், "மனமே, நையல்" என்றார். எனினும் பூமியில் ஞான அநுஷ்டானங்கள் குலையுமாறு வாதம் செய்யும் பிறமதத்தினர் மலிந்துள்ளனரே என்னில், அவர்களும் அடங்குமாறு எம்பெருமானார் அவதரித்தார் என்கிறார் இப்பாசுரத்தில்.

**உரை :** தர்க்கச் சமணரும்—தர்க்கம் ஒன்றாலேயே தமது மதத்தை நடத்திவரும் ஆர்ஹதரும். சாக்கிய பேய்களும்—அவர்களோடு ஒத்தவரும், பேய்போலே பிடித்ததைப் பிடித்துக் கொண்டு நிற்கிற பௌத்தரும். தாழ்சடையோன் சொல் கற்ற சோம்பரும்—நீண்ட சடையை உடையவனாய், சாதனங்களை அநுஷ்டித்து, ஸர்வேச்வரனுடைய அனுமதியாலே மோஹ சாஸ்த்ரங்களை வெளியிட்ட ருத்ரனுடைய வசனமாகிற ஆகமத்தை ஆதாரமாகக் கொண்ட தாமஸ குணம் வாய்ந்த சைவரும். சூனிய வாதரும்—ப்ரமாணம், ப்ரமாணத்தாலே அறியப்படுமவன், ப்ரமாணத்தால் அறிபவன் இவை இல்லை என்று வாதம் செய்யும் மாத்யமிகரும். நான் மறையும் நிற்க, குறும்பு செய் நீசரும்—இவர்களைப் போலன்றிக்கே, நான்கு வேதங்களும் ப்ரமாணமாக ஏற்றுக் கொண்டு அவற்றோடு பொருந்தாத அபார்த்தங்களைச் சொல்லிக் குறும்பு செய்யும் நீசரும். பொன் கற்பகம் எம் இராமாநுசமுனி நீள் நிலத்தே போந்தபின் மாண்டனர்—விரும்பத் தகுந்த கல்பகம் போலே பரம உதாரரான எம்பெருமானார் பூமியில் அவதரித்தருளிய பின்பு முடிந்து போனார்கள்.

srivaishnavam

எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யத்தாலே இம்மதங்களை யெல்லாம் கண்டித்து நிலையில்லாமல் செய்ததால் அவர்கள் முடிந்து போனார்கள் என்பது கருத்து. நமக்கான ' நலனைத் தானே அளித்த கற்பகம் இருக்கும்படி.

**100.** போந்ததென் னெஞ்சென்னும் பொன்வண்டு, உனதடிப்
போதிலொண்சீர்
ஆந்தெளிதேனுண் டமர்ந்திட வேண்டி, நின் பாலதுவே
ஈந்திட வேண்டு மிராமாநுச ஷிது வன்றியொன்றும்
மாந்தகில்லா(து), இனி மற்றொன் று காட்டி மயக்கிடலே.

**முன்னுரை :** தம்முடைய உள்ளம் எம்பெருமானரது திருவடிகளை விரும்பி மேல் விழுவதை விண்ணப்பம் செய்து, அமுதனார், "இனி வேறொன்றைக் காட்டி என்னை மயக்காதிருக்கவேணும்" என்கிறார்.

**உரை :** இராமாநுசா!—. என் நெஞ்சு என்னும் பொன் வண்டு—என்னுடைய மனமாகிற அழகிய வண்டு. உனது அடி போதில்—தேவரீருடைய திருவடிகளாகிற பூவிலே. தெளி தேன் உண்டு அமர்ந்திட வேண்டி, நின்பால் போந்தது—குளிர்த்தி, மென்மை, பரிமளம் இவை வாய்ந்துள்ள. கல்யாண குணங்களாகிய தேனைப் பருகி அங்கேயே நித்ய வாஸம் செய்யவேண்டும் என்று தேவரீரிடம் வந்தது. அதுவே ஈந்திடவேண்டும்—அது விரும்புவதைத் தவிர வேறொன்று கொடாமல் அதனையே தேவரீர் தந்தருளவேணும். இதுவன்றி ஒன்றும் மாந்தகில்லாது—தேவரீர்

...ரென்றைக் கொடுத்தாலும் அம்ருதபானம் செய்பவனுக்குப் புல்லையிட்டால் மிடற்றின்றும் ...போதாப்போலே, வேறொன்றையும் நான் புஜிக்கமாட்டேன். இனி மற்றொன்று காட்டி மயக் ...-இனி வேறொன்றைக் காட்டி என்னை மயங்கப்பண்ணுதொழிய வேணும்.

போது—புஷ்பம். மாந்தல்—உண்டல். மயக்கம்—மோஹம்.

101. மயக்கு மிருவினை வல்லியிற் பூண்டு, மதிமயங்கித்
துயக்கும் பிறவியில் தோன்றிய வென்னைத், துயரகற்றி
உயக்கொண்டு நல்கு மிராமாநுச வென்ற துன்னையுன்னி
நயக்கு மவர்க்கி திழுக்கென்பர், நல்லவ ரென்று நைந்தே.

முன்னுரை : எம்பெருமானாரைப் பற்றி அறிவன இரண்டு : நமது கர்ம பல ...ன துக்கங்களைப் போக்கி, நம்மை உய்வித்த பாவனத்வம், அவருடைய குணங் ...ளையே நினைத்திருந்து மனங்களிப்பது, அதாவது போக்யத்வம். அமுதனார் தாம் ...ரது பாவனத்வத்தைப் பேசுவதாவது, போக்யதையே நினைக்குமவர்களுக்குத் ...ன்மை என்று ஸத்துருக்கள் கருதுவார்கள் என்கிறார்.

உரை : மயக்கும் இரு வினை வல்லியில் பூண்டு-அறிவு கேட்டை விளைக்குமதாய், புண்யம், ...ம் என்று இருவகைப்பட்ட கர்மமாகிற பாசத்தில் கட்டப்பட்டு. மதி மயங்கி துயக்கும் ...வியில் தோன்றிய என்னை – அறிவு கலங்கி மனத்தில் திரிவை விளைப்பதான ஜன்மத்தில் வந்த ...ந்த என்னை. "துயர் அகற்றி, உயக்கொண்டு நல்கும் இராமாநுச" என்றது – "என்னுடைய ...பலமான துக்கங்களைப் போக்கி. உய்யும்படி என்னைக் கைக்கொண்டு, என்னளவில் ...பைச் செய்தருளிய எம்பெருமானாரே" என்பது. உன்னை உன்னி நைந்து நயக்குமவர்க்கு ...க்கு என்பர் நல்லவர் – தேவரீருடைய போக்யதையை நினைந்து, அதனால் மனம் நைந்து, ...போதும் விருப்பம் செய்யுமவர்களுக்குத் தண்மை என்று சொல்லுவார்கள், ஸத்துக்கள்.

எம்பெருமானாரது கல்யாண குணங்களையே நினைந்திருந்து உய்வதே நாம் செய்வதாம் ...பது கருத்து.

"இருவினை வல்லியைப் பூண்டு" என்றும் பாடம்; இதன் பொருள்: இருவகைப் பட்ட ...மமாகிற பாசத்தைக் கழற்றவொண்ணாதபடி நான் ஏறிட்டுக் கொண்டேன். நயக்கும்— ...ரும்பும்.

102. நையும் மனமுன் குணங்களை யுன்னி, என் நாவிருந்தெம்
ஐய னிராமா நுசனென் றழைக்கும், அருவினையேன்
கையுந் தொழும், கண் கருதிடும் காணக் கடல்புடைசூழ்
வைய மிதனில், உன் வண்மையென் பாலென் வளர்ந்ததுவே.

முன்னுரை : இவ்வாறு பரம போக்யபூதரான எம்பெருமானார் விஷயத்தில் ... மனமும் மற்றைக் கரணங்களும் விருப்பம் கொள்ளும்படியைச் சொல்லி, ...இந்தப் பூமிப்பரப்பெல்லாம் கிடக்க, தேவரீருடைய ஔதார்யம் என்பால் வளரக் ...ரணம் என்ன?" என்று கேட்கிறார் அமுதனார் இப்பாசுரத்தில்.

உரை : என் மனம் உன் குணங்களை உன்னி நையும் – என்னுடைய மனம், தேவரீருடைய ...ங்களை நினைந்து நைகின்றது. என் நா இருந்து, "என் ஐயன்!" "இராமாநுசன்!" என்று ...ழைக்கும்–என்னுடைய நா ஒருபடிப்பட இருந்து, "என்னுடைய பந்துவே! எம்பெருமானாரே!" ...ல கூப்பிடும். அருவினையேன் கையும் தொழும் – அநாதி காலமாகப் புறம்பான விஷயங்

களிலே மண்டிக் கிடந்த என்னுடைய கைகள் தேவரீர் விஷயமாக அஞ்சலிபந்தம் செய்யும். கண் காண கருதிடும் – கண்கள் தேவரீரைக் காண விரும்பும். கடல் புடை சூழ் வையம் இதனில் உன் வண்மை என்பால் வளர்ந்தது என்?–கடலாலே சுற்றும் சூழப்பட்ட இந்தப் பூமியில், இப்பரப்பிலுள்ளவர்கள் எல்லாரும் கிடக்க, தேவரீருடைய ஔதார்யம் என்னிடம் வளர்ந்தது என் கொண்டு?

யாவரிடத்தும் ஔதார்யம் காட்டவல்லவர் எம்பெருமானுர் என்பது கருத்து.

103. வளர்ந்தவெங் கோப மடங்க லொன்ருய், அன்று வாளவுணன்
கிளர்ந்தபொன் ஞகம் கிழித்தவன், கீர்த்திப் பயிரெழுந்து
விளைந்திடும் சிந்தை இராமாநுச னென்றன் மெய்வினைநோய்
களைந்துநன் ஞான மளித்தனன், கையிற் கனியென்னவே.

**முன்னுரை :** தம்முடைய கரணங்கள் யாவும் எம்பெருமானுரிடத்து மண்டுமாறு ஔதார்யத்தாலே அவர் உபகரித்த அம்சமாவது யாது என்னில், தம்முடைய கர்மத்தைக் கழித்துச் சிறந்த ஞானத்தைத் தெளிவாக அருளியதாகும் என்கிருர்.

**உரை :** வளர்ந்த வெம் கோப மடங்கல் ஒன்ருய்—அநுகூலரான தேவர்களும் அஞ்சுமாறு மேன்மேலும் ஓங்கும் கொடிய சீற்றத்தையுடைய, ஒப்பற்ற நரஸிம்ஹமாய். அன்று—சிறுபிள்ளையான ப்ரஹ்லாதன்மேல் கோபித்து வந்தபோது. வாள் அவுணன் கிளர்ந்த பொன் ஆகம் கிழித்தவன்—வாள் ஏந்திக் கொண்டு எதிர்ந்த இரணியனுடைய, திண்ணியதான பொன் வர்ணமான சரீரத்தை, (நரஸிம்ஹத்தின்) மொருந்த முகமும், நாமடிக்கொண்ட உதடும், குத்த முறுக்கிய கையையுங் கண்டு விளைந்த பயமாகிய நெருப்பினலே வாடிப் பதமான கோரையைக் கிழிப்பது போலே, எளிதில் கிழித்துப் பொகட்டவனுடைய. கீர்த்தி: பயிர் எழுந்து விளைந்திடும் சிந்தை இராமாநுசன்—உயர் நிலத்தில் பயிர்போலே கீர்த்தியான பயிர் விளையும் சிந்தையையுடைய எம்பெருமானுர். என் மெய் வினை நோய் களைந்து—என் சரீர சம்பந்தமான துக்கங்களை அறப் போக்கி. கையில் கனி என்ன, நல் ஞானம் அளித்தனன்—கையில் நெல்லிக் கனி போலே எளிதாகவும் நன்ருகவும் தெரிந்து கொள்ளக்கூடிய சிறந்த ஞானத்தை அளித்தருளினுர்.

கீழ்ச் சொன்ன என்னுடைய அன்புக்கு அடியாக எம்பெருமானுர் எனக்குப் பண்ணின உபகாரம் சிறந்த ஞானத்தை அருளியது என்று கருத்து.

104. கையிற் கனியென்ன கண்ணனைக் காட்டித் தரிலும், உன்றன்
மெய்யிற் பிறங்கிய சீரன்றி வேண்டிலன் யான், நிரயத்
தொய்யிற் கிடக்கிலும் சோதிவிண் சேரிலு மிவ்வருள்நீ,
செய்யில் தரிப்பன், இராமாநுச வென் செழுங்கொண்டலே!

**முன்னுரை :** எம்பெருமானுர் உபகரித்த ஞானத்தின் ருசி அறிந்த அமுதனுர், பகவத் விஷயத்தைக் கண்டால் அதனை மிக விரும்புவரோ என்னில், எம்பெருமானுருடைய திருமேனியில் விளங்கும் குணங்கள் நீங்கலாக வேறு விருப்பம் இல்லை என்றும், அதற்கேற்ற அருளைச் செய்தருளினல் பூமியிலும் ஸ்ரீவைகுண்டத்திலும் கால் தரிக்கும். இல்லாவிடில் தம்மால் தரிக்க இயலாது என்றும் சொல்லுகிருர்.

**உரை :** இராமாநுச! என் செழுங் கொண்டலே!— அடர்ந்த மேகம்போலே பரம உதாரரான எம்பெருமானுரே! கையில் கனி என்ன கண்ணனை காட்டி தரினும்—உள்ளங்கை நெல்லிக் கனிபோல ஸர்வேச்வரனை நான் நன்கு காணும்படி செய்தாலும். யான், உன்றன் மெய்யில் பிறங்

...சீர் அன்றி வேண்டிலன் — தேவரீரது திருமேனியில் விளங்கும் சௌந்தரியம் முதலான குணங்களையன்றி வேண்டேன். நிரயத் தொய்யில் கிடக்கினும் — நான் உலக வாழ்க்கையாகிற சேற்றில் அழுந்திக் கிடக்கவுமாம். சோதி விண் சேரினும் — ஒளிமயமான பரமபதத்தை அடையவுமாம்; ...அருள் நீ செய்யில் தரிப்பன் — தேவரீருடைய திருமேனி குணத்தை அனுபவித்தற்கு உறுப்பான இந்த அருளைச் செய்தால், ஏதேனுமோர் இடத்தில் கால் பாவி நிற்பேன்; அல்லாத போது தரிக்கமாட்டேன் என்பது கருத்து.

பிறங்குதல் — விளங்குதல். நிரயம் — நரகத்திற்கொப்பான ஸம்ஸார வாழ்க்கை. தொய்யில் — சேறு.

"நிரயத் தொய்யில் கிடக்கிலென்? சோதி விண்சேரிலென்?" என்பதுவும் பாடம்.

எம்பெருமானாருடைய கல்யாண குணங்களை அனுபவிப்பதே நமக்கு தரிப்பாகும் என்பது கருத்து.

105. செழுந்திரைப் பாற்கடல் கண்டுயில் மாயன், திருவடிக்கீழ்
விழுந்திருப் பார்நெஞ்சில் மேவுநன்ஞானி, நல்வேதியர்கள்
தொழுந்திருப் பாத னிராமா நுசனைத் தொழும்பெரியோர்,
எழுந்திரைத் தாடு மிடம், அடியேனுக் கிருப்பிடமே.

**முன்னுரை:** ஞானிகள் ஸம்ஸார வாழ்க்கையை வெறுத்துப் பரமபதத்தை அடைய விரும்ப, அமுதனார் பரமபத வாழ்க்கையை ஸம்ஸார வாழ்க்கையோடு ஒப்ப நினைப்பதால், அவர் வாழ விரும்பும் இடம் யாதென்று, இப்பாசுரத்தில் அருளிச் செய்கிறார்.

srivatsam

உரை: செழுந் திரை பாற்கடல் கண் துயில் மாயன் — அழகிய அலைகளையுடைய திருப்பாற்கடலிலே, அந்த அலைகள் திருவடிகளை வருட, தொடை குத்த உறங்குவாரைப் போலே பள்ளி கொள்ளும் ஆச்சர்ய பூதனை ஸர்வேச்வரனுடைய. திருவடிக் கீழ் விழுந்திருப்பார் நெஞ்சில் மேவு நன் ஞானி — திருவடிகளில் படிந்திருப்பவர்களாய், நெஞ்சிலே பதிந்த சிறந்த ஞானத்தையுடையவராயும். நல் வேதியர்கள் தொழும் திருப்பாதன் இராமாநுசனை — சிறந்த வைதிகர்கள் வணங்கும் திருவடிகளை உடையவருமான எம்பெருமானாரை. தொழும் பெரியோர் எழுந்து, இரைத்து, ஆடும் இடம் — எம்பெருமானாரைத் தொழுவதாலே மகிழ்ச்சி பொங்க, உடம்பு இருந்த இடத்தில் இராதே, கிளர்ந்து, கடல் இரைத்தாப்போல் இரைத்துக் கொண்டு, (களிப்பால்) ஆடுகின்ற இடம். அடியேனுக்கு இருப்பிடம் — அவர்களுக்கு அடியேனாகிய நான் வஸிக்க விரும்புமிடமாகும்.

எம்பெருமானாரது அடியார்கள் வாழுமிடம் நமக்கு வாழிடமாவதாம் என்பது கருத்து.

"பாற்கடல் பள்ளிகொள் மாயன்" — பாடாந்தரம்.

106. இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம், மாலிருஞ் சோலையென்னும்
பொருப்பிடம், மாயனுக் கென்பர் நல்லோர், அவை தன்னொடும்வந்(து)
இருப்பிடம் மாய னிராமாநுசன் மனத் தின்னவன்வந்(து)
இருப்பிடம், என்ற னிதயத்துள்ளே தனக் கின்புறவே.

**முன்னுரை:** அமுதனாருக்குத் தம்மிடமுள்ள பேரன்பைக் கண்டு எம்பெருமானார் போர உகந்தருள, அத்தைக் கண்டு உகந்து அமுதனார் அருளிச் செய்கிறார்.

**உரை :** நல்லோர்—பகவத் தத்வம் கைபுகுந்த பெரியோர். மாயனுக்கு இருப்பிடம்—ஸ்வரூபம், ரூபம், குணம், செல்வம் இவற்ருல் வியக்கத்தக்க மேன்மையுடைய ஸர்வேச்வரனுக்கு உறைவிடம். வைகுந்தம், வேங்கடம், மாலிருஞ்சோலை என்னும் பொருப்பிடம் - ஸ்ரீவைகுண்டம், திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை என்னும் திருமலை. என்பர்—. அவைதன்னெடும் (அவன்) வந்திருப்பிடம் மாயன் இராமாநுசன் மனத்து—இந்த ஸ்தலங்களோடு அவன் எழுந்தருளியிருக்கும் ஸ்தலம் எம்பெருமானருடைய திருவுள்ளத்திலே. இன்று அவன், தனக்கு இன்புற வந்திருப்பிடம் என்றன் இதயத்துள்ளே—இப்போது அந்த எம்பெருமானர் தமக்கு எல்லையில்லாத களிப்போடு எழுந்தருளியிருக்கும் இடம், என்னுடைய நெஞ்சுக்குள்ளே.

எம்பெருமானர் நமது மனத்துள் உறைவதாலே, நாம் திவ்ய தேசத்து எம்பெருமான்கள் யாவரையும் மனத்துக் கொள்பவராகிறேம் என்பது கருத்து.

107. இன்புற்ற சீலத் திராமா நுச, என்று மெவ்விடத்தும்
என்புற்ற நோயுடல் தோறும் பிறந்திறந்(து), எண்ணரிய
துன்புற்று வீயினும் சொல்லுவ தொன்றுண்டு உன்தொண்டர்கட்கே
அன்புற் றிருக்கும்படி, என்னை யாக்கியங் காட்படுத்தே.

**முன்னுரை :** இவ்வாறு தம்மிடம் பேரன்பு கொண்டுள்ள எம்பெருமானரிடம் அமுதனர் தம்முடைய விருப்பத்தை விண்ணப்பம் செய்கிறர்.

**உரை :** இன்புற்ற சீலத்து—தன்னியனை என்னுடைய நெஞ்சிலே வந்து புகுந்த, அதை பெறுப் பேருக ஆனந்தத்துடன் எழுந்தருளியிருக்கும் சீல குணம் கொண்ட. இராமாநுச—. (தேவரீரிடம்—நான்) சொல்லுவது ஒன்று உண்டு—. (அதாவது). என்பு உற்ற நோய் உடல் தோறும் பிறந்து இறந்து—என்பு மயமாய், நோய்களுக்கு இடமான சரீரங்கள் தோறும் பிறந்தும், இறந்தும், எண்ணரிய துன்புற்று வீயினும்—எண்ணமுடியாத துக்கங்களால் முடிந்தாலும். என்றும் எவ்விடத்தும் உன்தொண்டர்கட்கே அன்புற்று இருக்கும்படி, என்னை ஆக்கி அங்கு ஆட்படுத்து—எவ்வெப்போதும், எல்லா இடங்களிலும் தேவரீரிடம் அன்புடைய தொண்டர்களிடத்து அன்புடையேனகும்படி செய்து, என்னை அவர்களது திருவடிகளிலே அடிமையாம்படி செய்தருள வேணும்.

எம்பெருமானரிடம் அன்புடையார்களிடத்து அன்பு கொண்டு அவர்களுக்கு ஆட்படுவது சிறந்தது என்பது கருத்து.

108. அங்கயல் பாய்வயல் தென்னரங்கன், அணி யாகமன்னும்
பங்கய மாமலர்ப் பாவையைப் போற்றுதும், பத்தியெல்லாம்
தங்கிய தென்னத் தழைத்து நெஞ்சே நம் தலைமிசையே,
பொங்கிய கீர்த்தி, இராமா நுசனடிப் பூமன்னவே.

**முன்னுரை :** "இராமாநுசன் சரணரவிந்தம் நாம் மன்னி வாழ" என்றவாறு அமுதனர் தமக்கு ப்ராப்யமானது எப்போதும் நிலைநிற்குமாறு கைபுகுகையும், அந்த ப்ராப்ய ருசி மிகுவதுவும் விருப்பமாகையால், இவ்விருப்பத்தை அளிப்பது பிராட்டியாகையாலே, யாவருக்கும் சார்பான பிராட்டியைப் பற்றுவோமாக என்கிறர்.

உரை : நெஞ்சே! —. பொங்கிய கீர்த்தி இராமாநுசன் அடி பூ, பக்தி எல்லாம் தங்கியது
ன்ன தழைத்து நம் தலைமிசையே மன்ன—எங்கும் பரந்த புகழ்வாய்ந்த எம்பெருமானாரது திருவடி
ளாகிய செவ்விப் பூ, மயிர்கழுவிப் பூச்சூட இருப்பாரைப் போல எப்போதோ என்று ஆசைப்
ட்டிருக்கும் நம் தலை மேலே எப்போதும் பொருந்துமாறு. அம் கயல் பாய் வயல் தென் அரங்கன்
ணி ஆகம் மன்னும் பங்கய மா மலர் பாவையை போற்றுதும்—நீர்ச் செறிவாலே அழகிய கயல்கள்
ரும் திருவரங்கத்திற்கு இறைவனான ஸர்வேச்வரனுடைய அழகிய திருமார்பில் பொருந்து
வளாய், அழகிய தாமரைப் பூவைப் பிறப்பிடமாகவுடையவளாய், பேரழகும் வாய்ந்தவளாக
ளங்கும் ஸ்ரீ ரங்க நாய்ச்சியாரை அடைவோம்.

முதற் பாசுரத்தில் "பூமன்னு மாது பொருந்திய," "இராமாநுசன் சரணாரவிந்தம் நாம்
னி வாழ" என்றார், அமுதனார். இந்தப் பாசுரத்திலும் "பங்கயமாமலர் பாவை," "அணியாக
ன்னும்," "தலைமிசையே இராமாநுச னடிப்பூ மன்ன" என்கிறார். அதிலும் இதிலும் அமுதனார்
து திருவுள்ளத்தோடே கூட அநுபவிக்க விரும்புகிறார். "நெஞ்சே! சொல்லுவோம் அவன்
மங்களே" என்றார் முதற் பாட்டில்; "நெஞ்சே! போற்றுதும்" என்கிறார் இதில்.

# 2. ஸ்ரீ உடையவரின் அவயவ ப்ரபாவ அஷ்டகம்

srivatsam

ஸ்ரீவானமாமலை ஸ்வாமி (முதல் பட்டம்) அருளியது.

மஸ்தகம் ஸ்ரீசடாராதிம் நாதாக்யம் முகமண்டலம் |
நேத்ரயுக்மம் ஸரோஜாக்ஷம் கபோலம் ராகவம் ததா ||

[ஸ்ரீ உடையவருக்கு நம்மாழ்வார் சிரஸ், நாதமுனிகள் முகம், உய்யக்கொண்டார் நேத்ரங்கள், மணக்கால் நம்பி கன்னங்கள்]. (1)

வக்ஷஸ்தலம் யாமுநாக்யம் கண்டம் ஸ்ரீபூர்ணதேசிகம் |
பாஹூத்வயம் கோஷ்டிபூர்ணம் சைலபூர்ணஸ் ஸ்தநத்வயம் ||

[ஸ்ரீ ஆளவந்தார் மார்பு, பெரிய நம்பி கழுத்து, திருக்கோட்டியூர் நம்பி தோள்கள், திருமலை நம்பி ஸ்தனங்கள்]. (2)

குக்ஷிம்து வரரங்கார்யம் ப்ருஷ்டம் மாலாதரம் ததா |
கடிம் காஞ்சிமுநிம் ஜ்ஞேயம் கோவிந்தார்யம் நிதம்பகம் ||

[திருவரங்கப்பெருமாள் அரையர் உதரம், திருமாலையாண்டான் முதுகு, திருக்கச்சி நம்பி இடுப்பு, எம்பார் கடிதடம்]. (3)

பட்டவேதாந்திநௌ ஜங்கே ஊருயுக்மம் து நம்புலம் |
க்ருஷ்ணம் ஜாநுயுகம் சைவ லோகம் ஸ்ரீ பாதபங்கஜம் ॥

[பட்டர் நஞ்சீயர் கணுக்கால்கள், நம்பிள்ளை துடைகள், வடக்குத் திருவீதிப் பிள்ளை முழங்கால்கள், பிள்ளைலோகாசார்யர் பாதங்கள்]. (4)

ரேகாம் ஸ்ரீசைலநாதாக்யாம் பாதுகாம் வரயோகிநம் |
புண்ட்ரம் ஸேநாபதிம் ப்ரோக்தம் ஸூத்ரம் கூரபதிம் ததா ॥

[திருவாய்மொழிப் பிள்ளை பாத ரேகை, வரவர முனி பாதுகை, சேனை முதலியார் ஊர்த்வ புண்டரம், கூரத்தாழ்வான் யஞ்ஞோப வீதம்] (5)

[குறிப்பு : குருபரம்பரையில் காண்பது : ஆழ்வான், பவித்ரம்]

பாகிநேயம் த்ரிதண்டஞ்ச காஷாயம்ச ஆந்த்ரபூர்ணகம் |
மாலாம்ச குருகேசார்யம் சாயாம் ஸ்ரீ சாபகிங்கரம் ॥

[முதலியாண்டான் திரிதண்டம், வடுக நம்பி காஷாயம், திருமாலை திருக்குருகைப் பிரான் பிள்ளான், பிள்ளையுறங்கா வில்லி தாஸர் நிழல்]. (6)

ஏவம் ராமாநுஜார்யஸ்ய அவயவாந் அகிலாந் குரூந் |
மஹாந்தஞ் சாவயவிநம் ராமாநுஜ முநிம் பஜே ॥

[இவ்வாறு, உடையவருக்கு அவய பூதர்களான ஆசார்யர்கள் யாவரையும் அவயவியான மஹாத்மாவான எம்பெருமானாரையும் வணங்குகிறேன்]. (7)

குருமூர்த்யாத்ம – யோகீந்த்ரம் யோத்யாயேத் ப்ரத்யஹம் நர: |
ஸர்வாந் காமாந் அவாப்நோதி லபேச் சாந்தே பரமம் பதம் ॥

[இவ்வாறு எல்லா ஆசாரியர்களும் திருமேனியாக விளங்கும் எம்பெருமானாரை, நாள்தோறும் யார் த்யாநஞ் செய்கிறாரோ, அவர், கைங்கர்ய ரூபமாகத் தமது கோரிக்கைகளை இவ்வுலகில் அநுபவித்து, அந்த்ய காலத்தில் பரமபதத்தை அடைவர்]. (8)

# 3. பாசுரங்கள் சில : ஸ்வரத்துடன்

இன்றுலகீர் சித்திரையில் ஏய்ந்ததிரு வாதிரைநாள்
என்றையிலும் இன்றிதனுக் கேற்றமென்றுன்—என்றவர்க்குச்
சாற்றுகின்றேன் கேண்மின் எதிராசர் தம்பிறப்பால்
நாற்றிசையுங் கொண்டாடும் நாள்.

ராகம் : ஹம்ஸத்வனி | | தாளம் : ஆதி

| | | |
|---|---|---|
| ;, காபநீஸா ஸாஸ்ஸா<br>இன்றுலகீர் சித்திரை | பா, ஸ்நிபா - க<br>யில் ஏய்ந்த - தி | ரீ கரிஸா ஸரீ<br>ரு வா திரை |
| பகா* காபநீஸா ஸாஸா<br>நாள் என்றையிலும் இன்று | ;, ஸ்ரிக்ாரீ<br>இதனுக்கு | ஸா , ஸ்பநி நிரீ<br>ஏற் ற மென் தான் |
| ;, ஸாபநீஸா ; ; ;<br>என்றவர்க்கு | ;, காபநீ<br>என்றையி | ஸா, ஸா, ஸா<br>லும் இன்றி |
| ;, ஸ்ரிக்ாரீ ஸா, ஸ் பநிநிரி<br>இதனுக்கு ஏற்ற மென்தான் | ;, ஸாபநீ<br>என்றவர்க் | ஸாரிஸ் ஸாரிஸ் ஸாரிஸ் ஸாரிஸ்<br>கு ... ... ... ... ... ... |
| ஸா, ரீரிரீ ரிரிஸ்நிபா<br>... சாற்றுகின்றே...ன் | ;, நீரி நிரீ<br>கேண்மின் | ; ; ; ; |
| ஸ்ரி க்க்ரிரிஸா நிபா நிரீக்<br>எதிரா ... சர் தம் ... பிறப்ப | க்ா ; ; ;<br>ால் . . . . | ரீக்ப்பா க்ரீஸா<br>நா ... ற் றிசையும் |
| நிபாக்ாரி ஸா ; ; ;<br>கொண்டாடும் நாள் | ; ரீ ரீ ரீ<br>சாற்றுகின் | நீரிரிரீ நீரிஸ்நிபா<br>றே ... ... ன் |

;, நீ ரி நி ரீ ; ; ; | ஸ்ரிக்க்ரிரிஸா | நிபா நிரீக்கா
கேண் மின் | எதிரா ... சர் | தம் பிறப்ப

;;;; ரீ க ப்ா க்ரீ ஸ்ா | நிபா க்காரி | ஸ்ா ; ;;
ால் ... நாற் ... றிசையும் | கொண் டாடும் | நாள்

ஆழ்வார்கள் தாங்கள் அவதரித்த நாள்களிலும்
வாழ்வான நாள்நமக்கு மண்ணுலகீர்—ஏழ்பாரும்
உய்ய எதிராசர் உதித்தருளும் சித்திரையில்
செய்ய திருவா திரை.

ராகம்: கேதாரம் தாளம்: ஆதி

ஸ்ாரி ஸ்நிபாபா காரி ஸரீஸஸா | ஸஸா மகாமா | பஸ்ா ஸ் ஸ்ாஸ்ா
ஆழ் வா - ர்கள் தா - ங்கள் | அவ தரித்த | நாள் க ளிலும்

ரீப்ம்க்ா க்ாரீ ஸ்ரீ ஸ் ஸ்ாஸ்ா | ;, ஸ்ாஸ் ஸ்ரி | ஸ்நிபம கமபநி
வா - ழ் வான நாள் ந மக்கு | மண்ணுல ... | கீர் ...

கமா பஸ்ாஸ்ா ; ; ஸ்ாஸ்ா | ஸ்ரீ கா க்ரீ | ஸ்ரீஸ் ஸ்ாஸ்ா
ஏழ் பா ... ரும் ... உய்ய | எதி ரா ...சர் | உதித்த ருளும்

;, ஸ்ாஸ்ஸ்ரி நிஸ்நி பா, மா | கமாப ஸ்ாஸ்ா | ஸ்ா ; ; ;
சித்திரை யில் ... செய்ய | திருவா தி | ரை

வந்துதித்த நாளென்னும் வாசியினால்—இந்தத்
திருவா திரைதன்னின் சீர்மைதனை நெஞ்சே
ஒருவாமல் எப்பொழுதும் ஓர்.

ராகம்: அடாணா                                                    தாளம்: ஆதி

;, பா மகமபா தநீ ; பபா | ; பபா ரிஸ்ா | ஸ்நிரிஸ் நிஸ்தா ||
எந் தைஎதி ரா ... சர் | இவ்வுலகில் | எந்த ... மக்கா

; மபநிப மகமபா தநீ; பபா | ; பரீரிஸ்ா | ஸ்நிரிஸ் நிஸ்தா
எந் ... தை எதி ரா ... சர் | இவ்வுலகில் | எந்த... மக்கா

1. ; பபாரிஸ்ா ஸ்நிரிஸ் தாதா | பதநித தநிஸ்ா | நிஸ்தா ஸ்நிபா
வந்துதித்த நா ... ளென்னும் | வா... சி...யி | ஞ ... ... ... ல்

2. ; பபாரிஸ்ா ஸ்நிரிஸ் தாதா | மாதநீ தநிஸ்ா | நிஸ் ரீக்ரி ஸ்நிபா
வந்துதித்த நா ... ளென்னும் | வா... சி...யி | ஞ ... ... ... ல்

; மபாநிஸ்ா க்கா்ம் ரீஸ்ா | ; ஸ்ாஸ்ா ஸ்நி | ரிஸ் நீ நீ நீ
இந்த திருவா ... திரை | தன்னின் சீ... | ...ர் மை தன்னை

பதநீ தநிஸ்ா நிஸ்ரீகரி ஸ்நிபா | ; மாப மரிமா | பாதநீ பபா
நெ...ஞ் சே ... ஒருவா ... மல் | எப்பொழு . தும் | ஓ ... ... ... ர்

,, | ,, | பநிஸ்ாரிஸ் நிஸ்தா
ஓ ... ... ... ர்

,, | ,, | பாதநீபபா
ஓ ... ... ... ர்

பற்பமென—எம்பார் அருளிச் செய்தது

ராகம் ஹம்ஸானந்தி

தாளம் ஆதி

ஸாஸரி காரிக மாகம தாமத | ஸ்ாஸ்ஸ் ஸ்ா; | ஸ்ரி ஸ்நிதா
பற்பமெ னத்திகழ் பைங்கழ லுந்தன் | பல்லவ மே | விர...லும்...

ஸ்ாரிஸ் நீஸ்நி தாநித மகமா-ஸ் | நீ தமகரி கரி | ஸா ; ; ;
பாவன மாகிய பைங்துவ ராடை ப | திந்தமருங் கழ | கும் ... ... ...

ஸாஸரி காரிக மாகம தாமத | ஸ்ாஸ்ா ஸ்ாஸ்ஸ் | ஸா ஸ்ரிஸ்நிதா
முப்புரி நூலொடு முன்கையி லேந்திய | முக்கோல் தன்னழ | கும் ... ... ...

ஸ்கரிஸ் நீஸ்நி தத நித மகமத | ஸ்நிதம கரி கரி | ஸா ; ; ;
முன்னவர் தந்திடு மொழிகள்நி றைந்திடு | முறுவல்நி லாவழ | கும் ... ... ...

ஸாஸரி காரிக மமகம தாமத | ஸ்ஸ்ஸ்ா ஸ்ாஸ்ஸ் | ஸ்ாஸ்ரிஸ்நிதா
கற்பக மேவிழி கருணைபொ ழிந்திடு | கமலக் கண்ணழ | கும் ... ... ...

ஸ்ாரிஸ் நீஸ்நி தநிநித மகமா | ஸ்நிதம கரிகரி | ஸா ; ; ;
காரிசு தன்கழல் சூ. டிய முடியும் | கனநற்சிகைமுடி | யும் ... ... ...

ஸாஸரிகா ரிகமகமா கமதம | தா ஸ்ஸ்ஸ்ா ஸ்ஸ் | ஸ்ா ஸ்ரிஸ்நிதா
எப் பொழுதும் எதிரா சன் வடிவழ | கென் இதயத் துள | தா ... ... ... ல்

ஸ்ாரிஸ் நீஸ்நி தாநித மகமத | ஸ்ாநித மகரீ கரி | ஸா ; ; ;
இல்லையெ னக்கெதிர் இல்லையெ னக்கெதிர் | இல்லையெனக் கெதி | ரே . ...

ஸஸரிஸ நிநிஸநி ததநித மகமத | ஸ்நிதமதா க்ரி | ஸா ; ; ;
இல்லையெ னக்கெதிர் இல்லையெ னக்கெதிர் | இல்லை எனக் கெதி | ரே . ...

வர்ணமெட்டு அமைத்தவர் : காஞ்சி-சங்கீத வித்வான் அருளிச்செயல் திலகம் ஸ்ரீமான் M. N. வேங்கடவரதன்.

ஸ்வரப்படுத்தியவர் : தென்னிசைமணி செல்வம் ரமணி



திருக்குறுங்குடி, ஸ்ரீ உடையவரது அனுஷ்டானப் பாறையும்,
உடையவர் ஸந்நிதியும்



திருக்குறுங்குடி அநுஷ்டானப் பாறை,
ஸ்ரீ உடையவரும், வடுக நம்பியும்

srivatsa



திருக்குறுங்குடி ஸ்ரீ உடையவர், (மூலவர்)

srivatsam



ஸ்ரீ வானமாமலை, ஸ்ரீ உடையவர் (மூலவரும் உத்ஸவரும்)



ஸ்ரீகூர்மம், விமானமும் த்வஜஸ்தம்பமும்

srivatsam



ஸ்ரீகூர்மம், உத்ஸவமூர்த்தி, திருமங்கையாழ்வார், உடையவர்

srivatsam

ஸ்ரீ புருஷோத்தமபுரி, (பூரி ஜகந்நாத்) திருக்கோயில்



கோமதி த்வாரகையில் கண்ணன்



பேட் த்வாரகையில் கண்ணன்

# 4. IRAMANUCA NURRANTHATHI

ENGLISH (VERSE) RENDERING BY

**Sri S. Satyamurthi Iyengar, Gwalior**

**Stanzas 1, 2, 106, 107 and 108.**

Chant we shall exclusively, my Mind! the many names
Of Iramanucan who unto this abode came
And made many a scholar flourish well,
Himself flourishing at the feet of Maran, who did reveal
In singing the glory of the Lord on whose chest does dwell,
With love great, the Dame, who did from lotus emerge. (1)

Emerges in my Heart great unto Iramanucan,
I know not the reason why my mind dwells not
On any but the loving condescension of that savant
Of steadfast devotion at the feet of Kuraiyal piran,
Keeping aloft of the men whose minds do stray,
Away from the lotus feet of Thennarangan who stay
Amid orchards cool and shedding honey in plenty. (2)

The Holy Heaven, Venkatam, Maliruncolai are among
the well-known abodes
Of the Lord Supreme, declare the good men of the world,
But then, along with these abodes, repaired He into the heart
Of Iramanucan, who has, however, moved now into my heart
And made it his choice habitat, the abode of joy. (106)

srivatsam

Full of joy and loving condescension you are, oh Iramanuca!
Here's a submission I have to make unto you,
The terrific cycle of birth and death I might go thus!
Torn down by miseries innumerable and the fell melodies,
Flesh is heir to, and yet, bless me that I do solely serve
Your devotees, at all times and at all places and from love
Unto them shall not swerve my mind. (107)

My mind! in order that we do our heads decorate all the time,
With the floral feet of Iramanucan, of far-reaching fame,
And bear love immense unto them, a monopoly as such,
The glory of the youthful Lakshmi, lotus-born,
Who does the winsome chest adorn,
Of the Lord residing in Tennarangam amid fields rich,
Where do gambol fishes gay, we shall fervently Chant. (108)

# 5. SRI RAMANUJA AND LORD VARADARAJA OF KANCHI

By Dr. K. V. RAMAN
Professor of Archaeology, University of Madras

Tondaimandalam or Tondai-Nadu has a pride of place in Tamilnadu as the land of elite and a land of Savants true to the Tamil saying TONDAINADU SANDRORU-DATHU. The great Tamil poet Tiruvalluvar was a native of Mylapore. The first four great Alvars Poigai, Pey, Bhutam and Tirumalisai Alvars—were from Tondainadu. The Saivite Nayanmar Appar as well as Sekkilar were natives of Tondainadu. There is nothing surprising that in such a land of wisdom was born Bhagawan Ramanuja in the village Sriperumbudur, not far from the capital city of Kanchi. Kanchi was not only the political but also the intellectual capital of Tondainadu from very early times. A galaxy of scholar kings of the Pallava dynasty had ruled over the city for nearly 400 years and not only beautified the city with exquisite temples but also extended patronage to the poets and scholars in Sanskrit and Tamil languages. King Mahendravarman was himself a great Sanskrit scholar and wrote a drama called "Mattavilasa prahasana" The great Sanskrit poet Bharavi was in the Pallava court. In the 4th centuiy A. D. there was a Ghatika or college in Kanchi for the dissemination of Vedic and Sanskrit studies. A king of Kadamba dynasty named Mayurasarman came to study in that college. This would show the far flung fame of Kanchi as an intellectual centre in ancient times. Buddhist and Jain scholars also flocked to Kanchi to propagate the greatness of their respective religions. The Chinese traveller Huen Tsang who visited Kanchi has described the wide streets of Kanchi city and the numerous Buddhist establishments there. Manimekhalai the Tamil epic describes Kanchi as a centre of many faiths. The Sangam work Sirupanatrupadai mentions the ancient temple of Tiruvekka (yadokthakari) at Kanchi. From all these one can understand how Kanchi had been the intellectual nerve centre of Tamilnadu. It is nothing suprising that the two great acharyas Sankara and Ramanuja should have also visited Kanchi during their religious activities. Sankara's association with Kanchi has been immortalised by the presence of his pita, Kanchi Kamakoti Pita, in the city.

For Ramanuja, Kanchi was almost his native place. It is but natural in those days for anyone with intellectual aspirations to move to Kanchi even as people go to Madras city today to get opportunities for higher studies. It is in this way that young Ramanuja, though he had his early education at Sriperumbudur, went to Kanchi for higher education in the religious lore. He came into contact with the renowned Advaitic scholar Yadavaprakasa. He had profound regard for his guru to whom he became a favourite student. Only certain explanations of the vedic or vedantic statements given by Yadavaprakasa did not satisfy him and this led him to seek enlightenment elsewhere. The biography of Ramanuja as given in the Guruparamparai gives a good picture of the intellectual life at Kanchi at that time. Later on Ramanuja came into contact with a pious and venerable saint Tirukkachinambi of Kanchipuram, who was doing fanning service to Lord Varadaraja at Kanchi. He sought discipleship under Tirukkachinambi who confessed that he was not well versed in Sastras and had no formal education. But Ramanuja was immensely moved by the humility and devotion and began to assist him. As great stress was laid on bodily

service (Kainkarya) Ramanuja is said to have brought water from a "Salaiwell" for daily service in the temple. Even today this practice of bringing water daily from that well is continued in this temple showing the unbroken tradition followed in the temple since Ramanuja's days. Vedanta Desika, the great Vaishnava luminary of later times, makes pointed reference to this service rendered by Ramanuja in his famous Sanskrit work (Yatir ja-Saptati). Therefore Ramanuja's intimate service in the Kanchi temple is not only mentioned in the Guruparamparai of Pinbaligia Perumal Jeeyar and other biographers but also clearly attested to by Vedanta Desika's work.

Another important incident in Ramanuja's life was his historic meeting with Alavandar or Yamunacharya in the precincts of Varadaraja Temple which later on led to Alavandar's special choice of Ramanuja. On account of this historic meeting the prakara is called "Yamunai Turaivar-prakara" in the Guruparamparai and Yamunaituraivar tirumutram in the temple inscriptions.

Ramanuja stayed at Vishnu Kanchi for quite sometime before he took initiation from Perianambi and went to Srirangam. According to the Guruparamparai, Ramanuja was so greatly attached to Varadaraja that Tiruvaranga Perumal Araiyar had to be specially sent to Kanchi to persuade Lord Varadaraja to relieve Ramanuja from Kanchi! This is a figuritive way of telling that he had to persuade Ramanuja to go to Srirangam and take up the headship.

Even after he settled down at Srirangam, during his trips to Tirupati and other parts of India, he often visited Kanchi and received the blessings of Lord Perarulala. His daily tiruvaradanam in his house was done to Lord Perarulala. When he converted the Saivite scholar Yajnamurthi to the Vaishnava fold he christened him as "Arulalapperumal Emberumanar" or Devarajamuni, after the name of his favourite deity of Kanchi. When his bosom friend and intellectual associate Kurattalvan lost his eye-sight, Ramanuja asked him to do prapatti to Lord Varadaraja to regain his eyesight. Kurattalvan composed his famous "Varadaraja stavam." So Ramanuja's great devotion to temple at Kanchi stands undisputed by many facts. This receives remarkable confirmation from Ramanuja's contemporary disciple Tiruvarangattuamudhnar who makes a pointed reference to Ramanuja's devotion to Lord of Attiyur (Hastigiri of Kanchi) in his famous Ramanuja Noorttrandadi, a string of 108 beautiful Tamil verses. He says:

shrivatsam

ஆண்டுகள் நாள் திங்களாய் நிகழ்கால
மெல்லாம் மனமே
ஈண்டுபல்யோனிகள் தோறுழல்வோம்
இன்றோ ரெண்ணின்றியே
காண்டகுதோளண்ணல் தென்னத்தியூரர்
கழலிணைக் கீழ்ப்
பூண்டவன்பாளன் இராமாநுசனைப்
பொருந்தினமே

(Verse 31)

In memory of his great services to the cause of Sri Vaishnavism and particularly of this association with the temple of Lord Varadaraja, the great acharya was deified in a separate shrine in the temple as early as A.D. 1191 by a Chola chieftain by name Ilaiyalvan who made special provisions for the Bashya-Vritti or exposition of Ramanuja-Bhashya. Ilaiyalvan was another name of Ramanuja and the donor adopted the name evidently because he was a great devotee of the acharya.



94

# 6. A NOTE ON THE PAINTINGS OF RAMANUJA AND ALWARS AT THE RAMANUJA SANNIDHI AT SRIRANGAM

DR. R. NAGASWAMY

Sri Ramanuja attained the lotus feet of Lord Vishnu at Srirangam and his mortal remains were interred in a corner of the temple. Koilozhugu mentions it is at the command of Lord Ranganatha. Over this remains an inspiring place of pilgrimage to the lovers of Ramanuja. One feels the very presence of the noble saint in this Samadhi. The people of ancient period have also felt the same inspiration in this Samadhi, for they have embellished the ceiling of the front mandapa with exquisite paintings. They have depicted the lives of Alwars and the Acaryas in these panels.

Immediately in front of the entrance, the acharya parampara is portrayed. First we have the figure of Nammalvar seated flanked by Madhurakavi and Thirumangai Alvars. By the side of Nammalvar is shown the puli alvar (the sacred Tamarind tree at Alvar Thirunagari) which is embellished with Thiruman. It is interesting to note that the image of Nammalvar at Alvar Thirunagari is decorated even today in the same way as found in this painting.

In the second panel Ramanuja is portrayed as Yatiraja. He is shown in a princely attire, wearing a jewelled crown, ornaments and also his characteristic Tridanda. The message of compassion and devotion which Ramanuja practised and preached is visible in the portrait. It is the finest painting of Ramanuja that I have seen so far. It is ancient too. Flanking the saint are his two devotees, Kurattalvan shown with beard and Mudali Andan.

The third panel portrays Manavalamamuni accompained by his disciples. The portrayal of these three acharyas in order show the importance given to the Acharya parampara at the time of painting these panels.

Besides these panels of the acharyas, the lives of the Alvars are also found painted on the ceiling. The lives of Thirumangai, Kulasekhara, Thiruppana alvars, and Periyalvar and Cudikodutta Nachiyar are painted in tastetul colours. Below each panel, labels in Telugu characters of Nayak period are written. The dress, ornaments and physical features of the figures represented are truly reflective of the Nayak period. Unfortunately a part of the painting has disappeared due to neglect and thoughtless whitewash. I am sure that among the panels now lost, the life sketch of Ramanuja and probably the other acharayas also would have disappeared.

Regarding the date of the paintings, more research is needed. [Mrs. Chitra Vijai is now doing] An intensive research on these panels has been taken up and when the research is complete, more valuable light will be thrown on these paintings executed around 1720 A.D., during the reign of Madurai Nayak Vijayaranga Chokkanata. The prakara around the Tayar shrine in the same temple, carries extensive paintings of Bhagavata scenes. They also carry labels in Telugu. At the end is seen the portrait of Muthuvijaya--ranga Chokkanatha Nayak of Madurai with labels. He was a great devotee of Lord Ranganatha. Obviously during his reign extensive painting works were launched in the temple. The paintings in the Ramanuja Sannidhi bear close resemblance in form, colour scheme and also the Telugu characters, to the paintings around the Tayar shrine. In all probablity both the paintings were painted by the same hand about 1720 A.D.

It may be mentioned that there are many stone sculptures and bronzes representing Ramanuja. The bronze at Sriperumpudur is particularly a very good representation. But very few painted portraits of Ramanuja have survived. This portrait over 250 years old, is certainly one of the ancient and at the same time most beautiful panels of the saint. That it is found in the very Samadhi of the saint makes it more sacred.



ஸ்ரீ உடையவர் நியமனப்படி திருமலை திருப்பதி ஸந்நிதிகளின் நிர்வாகம் பெரிய ஜீயரைச் சேர்ந்தது.
ஸ்ரீ அனந்தாழ்வான் அருளிய வேங்கடாசல இதிஹாஸ மாலா என்ற க்ரந்தத்தின்படி
முதல் ஜீயர் ஸ்ரீ வேங்கடநாத சடகோப யதீந்த்ரர் ஸ்ரீ உடையவரால் நியமிக்கப்பெற்றவர்.
இந்தப் பரம்பரையில் முன்னாள் பெரிய ஜீயர் சின்ன ஜீயர் இவர்கள், முன்னாள் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா
காந்தியை ஸந்நிதிக்குள் வரவேற்று அழைத்துச் செல்லும் காட்சி

Photo By Courtecy of The Hindu, Madras.


srivatsam

இப்போதுள்ள பெரிய ஜீயர் ஸ்வாமி பிரதமர் ஸ்ரீ மொரரார்ஜி
தேசாயியையும், தமிழ் நாடு கவர்னர் ஸ்ரீ பிரபுதாஸ்
பட்வாரியையும் ஸந்நிதியில் வரவேற்று அழைத்துச் செல்லும்
காட்சி

Photo By Courtecy of The Hindu, Madras.

# 7. ஸ்ரீ எம்பெருமானுர்

### (1) திவ்ய ஜாதகம் — ஸ்ரீ உ. வே கல்யாணராம ஐயங்கார், ஜோஸ்யர் — நங்கநல்லூர்

கலியுகம் 4119 சாலிவாகன (சக 939 Epigraphica Karnataka) பிங்கள நாம ஸம்வத்ஸரம், சைத்ர சுக்ல பஞ்சமி, திருவாதிரை நக்ஷத்திரம் மத்யானம் கடக லக்கினத்தில் ஸ்ரீ பெரும்பூதூரில் சுப ஜனனம்.

| கே<br>கு<br>பு | ரவி<br>செவ் | சுக் | சந் |
|---|---|---|---|
| | திருவாதிரை<br>முதற்<br>பாதம் | | ல |
| சனி | | | |
| | | | ராகு |

ஸ்ரீ இராமாநுசரது சரித்திரம், பலம் பொருந்திய ராஜயோகம், தெய்வ பலம், மிதமிஞ்சி, அதிக பக்ஷமுடையதாக அமைந்திருக்கிறது. விஷ்ணுவர்த்தனன், சோழ ராஜன், டில்லி சுல்தான் முன் நின்ற பராக்ரமம் — எல்லாவற்றிற்தும் மேலாக ஸ்ரீரங்கநாத ஸாம்ராஜ்ய நிர்வாக (executive), பரிபாலனை, சுதந்திர, ஏகபோக அதிகார உரிமை, யோசிக்குமிடத்து, ராஜ்ய ஸ்தானமாகிய 10 ஆம் இடத்தில் சூரியன் உச்சம், செவ்வாய் சுக்ஷேத்திரத்திற்கு அதிக உன்னத பலம் உரித்தானது, தகுமானது என்பது உணர்தல் தகும்.

பிரஹஸ்பதியான குருவானவர் 9 இல் இருப்பதும், கூட புதன் நீச பங்க ராஜயோகமும், சாஸ்திராநுசார விதிக்கு ஆதார முடையதாக அமைந்துள்ளது. 9 ஆம் இடம் தேவதாஉபாஸன ஸ்தானம். குருவுக்கு அதி தேவதை. நவக்ரஹ ஸ்தோத்ரம் குரு அஷ்டோத்தரத்தில் விஷ்ணு: க்ருஷ்ணஸ் ததா ஸூக்ஷ்ம: ப்ரதி தேவோ ஜ்வாலாக்ரஹ: என்னும் பதங்கள் ஆராய்ச்சி, ஆலோசனைக் குரியன.

srivelcom

# 8. எம்பெருமானுரும் திருவரங்கமும்

### (T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

ஸ்ரீ ராமாநுஜர் திருவரங்கப் பெருமாள் அரையருடன் ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளித் தர்சனத் தலைவராகத் தமது கைங்கரியங்களைச் செய்யலானார். திருவரங்கன் உபய விபூதி ஐச்வர்யத்தையும் அவருக்கு அளித்து, அவரை உடையவர் என்றழைத்தான். உடையவர் ஸந்நிதி பரிகரங்களைப் பத்துக் கொத்தாகப் பெருக்கி அவர்கள் செய்யவேண்டிய கைங்கர்யங்களை வகுத்தருளினார். நித்ய நைமித்திக கைங்கர்யங்கள் நடத்தும் வகையையும், ஸந்நிதிகளில் செய்யவேண்டுவனவற்றையும், நிலம், தோப்பு, காணிக்கை முதலியனவற்றைப் பரிபாலித்துப் பயன்படுத்திக் கொள்ளும் விதத்தையும் நியமித்தார்.

ஒரு வருஷம் திருவத்யயந உத்ஸவத்திற்குத் திருநகரியிலிருந்து நம்மாழ்வாரை எழுந்தருளப் பண்ண முடியாததால், எம்பெருமானார் தாமே ஆழ்வாரைப் பிரதிஷ்டை செய்வித்து மற்றை ஆழ்வார்களையும் பிரதிஷ்டை செய்தருளினார். பெருமாளுடைய திருமுளைத் திருநாளிலே ஸ்ரீ வைஷ்ணவர்கள் திருக்கோவை கோத்து இயற்பாவை நித்யம் ஒரு திருவந்தாதியாக ஓதும்படி பணித்தார். இந்தக் கோவை

ஆழ்வார் கோஷ்டி எனவும் எம்பெருமானார் கோஷ்டி எனவும் புகழ்பெறுகின்றது. தம்முடைய தர்சனத்தின் வெற்றி தோன்ற இரண்டு குடைகளை இந்தக் கோவைக்கு முன் ஏந்திவருமாறும் ஆணையிட்டார். பெருமாள் ஸந்நிதியிலே ஆழ்வார்களுக்குக் கரணபூதர் அரையர்; உள்ளே ஸந்நிதிகளிலே அருளிச்செயல்கள் ஓதப்படும் வகையையும் வகுத்தார் உடையவர்.

திருவரங்கத்தமுதனார் உடையவர் விஷயமாக நூற்றந்தாதி விண்ணப்பஞ் செய்தபின், ஒரு ஸப்தாவரணத் திருநாளிலே பெருமாள், உடையவரை உடன் வரவேண்டாம் என்று நியமித்தருளி, திருவீதியிலே ஸகலவாத்யங்களையும் நிறுத்தி, ஸ்ரீவைஷ்ணவர்கள் நூற்றந்தாதியை அநுஸந்திக்குமாறு ஆணையிட, அது கேட்டுப் போர உகந்தார். அதுமுதல் பெரிய ஸந்நிதியில் இயற்பா அநுஸந்தித்ததும் பெருமாள் நூற்றந்தாதியை வரிசையுடன் சொல்லக் கேட்டருளுகிறார். இவ்வாறு ஸ்ரீரங்கத்தில் எம்பெருமானாரது தொண்டும் அவரது புகழும் பன்னியுரைக்குங்கால் பாரதமாம்.

# 9. எம்பெருமானாரும் ஸ்ரீகூர்மமும்

[ஸ்ரீ உ. வே. கல்யாணராம ஐயங்கார் — ஜோஸ்யம் —
அவர்களது கட்டுரையின் சுருக்கம்]

வட நாட்டில் திக்விஜயமாக எழுந்தருளிய எம்பெருமானார், காஷ்மீரத்தில் ஸரஸ்வதி தேவியிடமிருந்து "ஸ்ரீபாஷ்யகாரர்" என்ற விருது பெற்றுப் புருஷோத்தமபுரி என்ற பூரி ஜகந்நாதப்பெருமாள் கோயிலுக்கு எழுந்தருளினார். அந்த ஸந்நிதி பண்டாக்களின் ஆராதனையில் வருவது. அங்கு ஸ்ரீபாஞ்சராத்ர ஆகமப்படி திருவாராதனங்களை நடத்த வேண்டும் என்று எம்பெருமானார் எடுத்துக் கூறலானார். அங்குள்ளோர் சம்மதிக்கவில்லை; எம்பெருமானாரிடம் பகைமை உணர்ச்சியுடன் எதிர்ப்பை அவர்கள் தெரிவித்தனர்: அவரது உயிருக்கே ஆபத்து நேரும் நிலை உருவாகியது.

ஜகந்நாதப் பெருமானது திருவுள்ளத்தை எதிர்நோக்கி, எம்பெருமானார் ஓரிரவு ஏகாக்ர சித்தராய்த் த்யானத்தில் இழிந்து, தம்மை முற்றும் மறந்து விட்டார். ஜகந்நாதப் பெருமான் ஸ்ரீபக்ஷிராஜன் மூலம் அவரை ஸ்ரீகூர்ம க்ஷேத்ரம் கூர்மகுண்டப் புஷ்கரிணிக் கரையில் திருக்கோயிலின் அருகில் சேர்த்து விட்டான். அவர் த்யானம் கலைந்து, தாம் வேறிடத்தில் இருப்பதை உணர்ந்தார். ஸ்ரீகூர்மநாதப் பெருமான் சாலிக்ராம மூர்த்தியாய் கல்தொட்டியில் அமர்ந்திருந்த திருக்கோலம் அவரது திருக்கண்களில் தோன்றியது.

எக்காரணத்தாலேயோ அந்த திவ்யதேசம் கூர்மலிங்கேச்வரம் என்ற நாமத்துடன் சைவாகமப்படி வழிபாடு பெற்று வந்தது. தாம் கண்டதை எம்பெருமானார் அந்த க்ஷேத்ரத்தைப் பரிபாலித்து வரும் கலிங்கப்பட்டண அரசனிடம் எடுத்துக்கூறி, ஸ்ரீகூர்ம மூர்த்தியைப் ப்ரதிஷ்டை செய்து ஸ்ரீ பாஞ்சராத்ராகமப்படி திருவாராதனம் நடத்த வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். ஸ்ரீவைஷ்ணவர்களையும், சிவாசாரியர்களையும் அரசன் அழைத்து அவர்களது வாதங்களைக் கேட்டான். இவர்கள் யாவரும் ஒப்புக்கொண்ட முடிவின்படி விஷ்ணுவிற்குரியனவான சங்கு, சக்கரம், துளஸிமாலை, சாளக்கிராம மாலை, சந்தனம் இவற்றை ஒரு தட்டிலும், சிவனுக்குரியவானவற்றை ஒரு தட்டிலும் வைத்து இவை இரண்டையும் பெருமாள் முன்வைத்து, இறைவன் தனது திருவுருபத்தைக் காட்டியருள வேண்டுமென்று ப்ரார்த்தித்துக் கதவைத் தாளிட்டு முத்திரையிட்டு, காவல் வைத்து வெளிவந்தான் அரசன்.

மறுநாட் காலையில் யாவரும் அரசனுடன் ஸந்நிதியின் வாசலில் நின்றனர். கதவு திறந்ததும் ஸ்ரீவிஷ்ணு, தட்டில் வைத்திருந்த சங்கு சக்கரங்கள், துளஸிமாலை, சாளக்ராம மாலை இவைகளை அணிந்து சேவையருளியதையும், மற்றைத் தட்டு வைத்தபடியே இருந்ததையும் கண்டு அந்த ஸ்தலத்து எம்பெருமான் கூர்மரூபியாகிய விஷ்ணுவே என்று தெளிந்தனர். அந்தக் கோயிலின் மேற்கு வாசலின் எதிரில்

srivatsam

த்வஜஸ்தம்பம் அமைந்திருந்தது. ஸ்ரீ எம்பெரு
மானார் த்வஜஸ்தம்பத்தருகில் தண்டம் ஸமர்ப்
பித்து, ப்ரதக்ஷிணம் செய்யலானார். அவர்
மேற்கில் திரும்பும்போது, ஸந்நிதியில் கல்
தொட்டியில் ஸ்ரீ கூர்மமூர்த்தி எழுந்தருளி
யிருந்ததால், இந்தப் பாகம் எம்பெருமானாரை
நோக்கியே திரும்பி வருவதைக் கண்டு வியந்
தனர் மக்கள். எம்பெருமானார் மேற்குப் பக்கம்
திரும்பும் வரையில் ஸ்ரீ கூர்மமூர்த்தி திரும்பி,
அங்கேயே நிலையாக அமர்ந்தார். த்வஜஸ்தம்
பமும் மேற்கில் திரும்பிவிட்டது. கல்தொட்டி
யில் எழுந்தருளியிருந்த கூர்மமூர்த்திக்கு எம்
பெருமானார் மூன்று நாட்கள் தாமே திருவா
ராதனம் ஸமர்ப்பித்து, கோவில் திருப்பணி
யாளர்களை ஸ்ரீ வைஷ்ணவர்களாக்கி ஸ்ரீ பாஞ்
சராத்ர ஆகமப்படி திருவாராதனமும்
ஏற்பாடு செய்தார். திருக்கோயிலில் புநருத்
தாரணங்கள் சில செய்வித்து, கைங்கர்யங்களை
யும் அவ்வரசனைக் கொண்டு செய்வித்தார்.
இவரால் மாற்றியமைந்த த்வஜஸ்தம்பம் பெரு
மாள் ஸந்நிதியில் மேற்குப் பக்கத்தில் அமைந்
திருப்பது இவ்வரலாற்றை நன்கு விளக்கும்.

ஸ்ரீ பாஷ்யகார-ப்ரஸந்நாய பரமாநந்த ரூபிணே |
ச்வேதாசல-நிவாஸாய கூர்மநாதாய மங்களம் ||

## 10. எம்பெருமானாரும் திருவேங்கடப் பொற்குன்றமும்

(T. S. ராஜகோபாலன், B.A., L.T.)

ஸ்ரீரங்கத்திலே திருவாய்மொழி அருளிச்
செய்து வரும்போது ஸ்ரீ எம்பெருமானார் புஷ்ப
மண்டபம் எனப் பெயர் வாய்ந்த திருவேங்க
டத்தைப் பற்றி வரும் பாசுரங்களில், "சமந்து
கொண்மலர்" என்ற பாசுரத்தை விவரிக்கும்
போது திருமலையில் புஷ்ப கைங்கர்யம் மிகச்
சிறந்தது, அதனை ஏற்க விரும்புமவர் அப்
போதே புறப்படவேண்டும் என்று திருவுள்
ளத்தை வெளியிட அனந்தாழ்வான் அவரிடம்
விடைகொண்டு புறப்பட்டார் திருமலையில்
ஸ்ரீராமாநுஜன் என்ற திருநாமத்தில் நந்த
வனம் நிருமித்துப் புஷ்பகைங்கர்யம் செய்து
வந்தார். திருமாலை தொடுத்த இடம் யமுனைத்
துறை எனப்பெறுவது. இவற்றைக் கடாக்ஷிப்
பதற்காக எம்பெருமானார் திருமலைக்கு எழுந்
தருளினார்.

ஸ்ரீஎம்பெருமானார் திருவேங்கட மலையிலே
செய்த அருட்டண்கள், அவரது சிஷ்யரான
அனந்தாழ்வானுல் வசன நடையில்
அமைந்த வடமொழி நூல் ஸ்ரீ வேங்கடாசல-
இதிஹாஸ-மாலா என்பதில் ஏழு அத்யாயங்
களில் விவரிக்கப்பெற்றுள்ளன.

அவர் இரண்டாவது யாத்ரையாக எழுந்
தருளும்போது சைவ மதத்தினர் திருவேங்கட
முடையான் ஸந்நிதியில் கோயில் கொண்டி
ருக்கும் மூர்த்தி விஷ்ணுவன்று, சிவனோ, சுப்ர
மணியனோ என்று விவாதம் செய்தனர். அந்
நாட்டு அரசன் யாதவராஜன் எம்பெரு
மானாரை அங்கு வரவழைத்திருந்தான், அவர்
மூலமாகத் தெளிவு பெறுவதற்காக.

சைவர்களுடைய ஆக்ஷேபங்களுள் முக்கிய
மானவை:

(1) கோனேரிப் புஷ்கரிணிக்கு ஸ்வாமி புஷ்
கரிணி எனப் பெயர். ஸ்வாமி என்பது குமார
ஸ்வாமி. சுப்ரமணியன் அங்குத் தவஞ்செய்து,
அங்கேயே அமர்ந்ததால், உள்ளே இருக்கும்
மூர்த்தி சுப்ரமணியன் என்பது பொருந்தும்.

(2) விஷ்ணு ஆலயத்திற்கான அடையா
ளங்கள் கோயிலில் காணப்பெறவில்லை.

(3) அர்ச்சனைக்கு வில்வதளம் பயன்படு
கின்றது.

(4) மூர்த்திக்குத் திருக்கைகளில் சங்கு
சக்கரங்களாகிய திவ்யாயுதங்கள் இல்லை

(5) மூர்த்தி நாகாபரணம் அணிந்திருக்
கிறார்.

(6) மூர்த்தியின் திருமேனியில் சடை
காணப் பெறுகின்றது.

ஸ்ரீ எம்பெருமானார் புராணங்கள், வேங்க
டாத்ரி மாஹாத்ம்யம் முதலான பண்டை

நூல்களில் ச்லோகங்களை எடுத்தோதி இந்த ஆக்ஷேபங்களுக்குச் சமாதானம் அருளினார்

(1) புராணங்களிலே இந்த க்ஷேத்ரத்தில் தவம் செய்யப் பிரமன், சிவன், சுப்ரமணியன் இவர்கள் வந்ததாகக் கூறப்பெறுவதால், தவத்தின் பலனைத் தருமவன் இவர்களைவிடப் பெரியவனாயிருத்தல் வேண்டும்; இத்தகைய பெரியவன் ஸ்ரீமந்நாராயணனே.

(2) ஸ்வாமி எனப்பெறும் சுப்ரமணியன் தவம் செய்த இடத்தைக் குறிப்பதால், அப்பெயரே புஷ்கரிணிக்கு ஏற்றது என்பது தவறு. ஸ்வாமி எனப் பெறுவது யாவருக்கும் இறைவனாய், படைப்பு, காப்பு, அழிப்பு இவை மூன்றுக்கும் கடவனான நாராயணனே. ஆத்மாக்கள் யாவும் அவனுக்கு ஸ்வம், அவன் ஸ்வாமி, வேங்கடக் கோன், ஆதலால் அருகே அமையும் புஷ்கரிணி, கோனேரி: ஸ்வாமி புஷ்கரிணி.

(3) மூர்த்தியின் திருமேனியிலே விஷ்ணுவுக்கேயான ஸ்ரீ கௌஸ்துபம், லக்ஷ்மி இவற்றைக் காணலாகும்.

(4) வில்வ தளம் லக்ஷ்மியின் அர்ச்சனைக்கு உரியது என்பது ஹாரீதஸ்ம்ருதியில் காண்பது.

(5) தொண்டைமான் சக்ரவர்த்திக்கு உதவிசெய்யப் பெருமான் சங்குசக்கரங்களை அளித்தான் என்பதால் இத்திவ்யாயுதங்கள் திருக்கரங்களில் இல்லை.

(6) நாகபூஷணத்தைப் பற்றி :

(i) பாத்மபுராணம் அத்யாயம் 26 இல் காண்பது: விஷ்ணு தரித்துள்ள பீதாரம்பரத்தில் நாக உருவில வேலைப்பாடுள்ளது.

(ii) பவிஷ்யோத்தர புராணம் கூறுவது: ஆகாசராஜா ஸ்ரீநிவாஸப் பெருமானுக்கு நாகாபரணம் ஒன்று ஸமர்ப்பித்தான்.

(iii) ப்ரஹ்மாண்ட புராணத்திலிருந்து தேறுவது : அத்யாயம் 2 இல் நாகராஜனை ஆதிசேஷன் விஷ்ணுவுக்கு எல்லாவகையிலும் அமைந்து கைங்கர்யம் செய்கிறான்; பீதாம்பரமாகவும் பூணாகவும் ஆகிறான் :

"பூம்பட்டாம் புல்கும் அணையாம் திருமாற்கு அரவு."

(iv) திருமலையிலே விஷ்ணு, லக்ஷ்மியுடனும் ஆதிசேஷனும் இருப்பதாகப் புராணங்கள் ஓதுகின்றன.

(7) தாழ்சடையைப் பற்றி: (i) சில அவதாரங்களிலே விஷ்ணு சடையோடு ஸேவை அளித்தான். (ii) ஸ்ரீபாஞ்சராத்ரம் ஸாத்வத ஸம்ஹிதையிலே சில சந்தர்ப்பங்களிலே விஷ்ணுவை ஜடை தரித்தவனாகவும், கையில் பலாச தண்டம் ஏந்தியவனாகவும் வணங்கச் சொல்லுகிறது (iii) ஸ்காந்த புராணம்-முதற்பாகம்-அத்தியாயம் 10: திருவேங்கடத்தில் ஸ்ரீநிவாஸன் சடையுடன் தோன்றினான்; வாமநபுராணம் அத்யாயம் 34இல் இதுவே கூறப்படுகிறது.

(8) வராஹ புராணத்தில் ஸ்ரீ ஆதிவராஹப் பெருமாள் மொழிவதாக வருவது: ஸ்ரீநிவாஸன் புஷ்கரிணியின் தென்புறமாக ஆவிர்பவித்தான்.

எம்பெருமானார் அருளிய சமாதானங்களைக் கேட்டபின் அரசன், அவரது திருவுள்ளப்படி ஸந்நிதியில் பெருமான் முன்னர் சங்கு சக்கரங்களையும், சிவனுக்குரிய மான் முதலியவற்றையும் வைக்கப் பெருமான் சங்கு சக்கரங்களைத் திருக்கரங்களிலே ஏந்தி சேவையருளினான் என்பது ப்ரஸித்தம். ஸ்ரீ எம்பெருமானார் இங்ஙனம் படாதன பட்ட வகையை நினைந்து "அப்பனுக்குச் சங்காழி அளித்த பிரான்" என்று வாழ்த்துகிறோம்.

srivatsam

மறுபடியும் எம்பெருமானார் யாத்திரையாக எழுந்தருளியபோது, முன்பு கூறிய வாதம் மறுபடியும் தலையெடுக்கவே, எம்பெருமானார் முன்புபோல் விளக்கம் அளித்தார். ஸ்ரீநரஸிம்மனின் ஸந்நிதியும் சிவனுடைய ஸந்நிதியும் புஷ்கரிணிக் கரையில் நிறுவ முயற்சிகள் நிகழ்ந்ததால் எம்பெருமானார் ஸ்ரீ நரஸிம்மனைத் திருவேங்கடத்தான் ஸந்நிதியிலே ப்ரதிஷ்டை செய்தார்.

தில்லைச் சித்திரகூடத்தினின்றும் எழுந்தருளிய கோவிந்தராஜப் பெருமானுக்குத் திருமலையின் அடிவாரத்தில் திருக்கோயிலையும் நகரத்தையும் நிருமித்தார் எம்பெருமானார் என்பதும் யாவரும் அறிவதே.

திருமலையிலே ஸ்ரீ ராமாநுஜருடைய திவ்யாஜ்ஞைகளும் கைங்கர்யங்களும் ஏழாவது அத்யாயத்தில் விவரம் பெற்றுள்ளன. முதலில் திருமலை நம்பியிடம் ஸ்ரீ ராமாயணார்த்தம் அதிகரிக்கும் போது, நம்பியையும் அனந்தாழ்வானையும் கலந்து கொண்டு அவர் விடுத்த ஆணைகள்:

(1) வராஹ புராணத்தில் குறிப்பிடப் பெறுவதற்கேற்ப, கைங்கர்யபரர்கள் மா

ரும் திருமலைமேல் வசிக்கலாம்; மற்றவர்கள் மலையடிவாரத்தில் வசித்து அவ்வப்போது திருமலைக்கு ஏறிவர வேண்டும்.

(2) ஸேவார்த்திகள ஸந்நிதியிலே ஆகாரங்களை, ஸந்நிதியில் பெறும் அமுதுபடி முதலியவற்றைக்கொண்டு பாகஞ்செய்து கொள்ளவேண்டும்

(3) திருமலையில் வசிப்பவர்கள் தங்களுடைய குடும்பத்திற்காகப் பூந்தோட்டம் திருமித்துக் கொள்ளல் கூடாது; ஸ்ரீநிவாஸனுடைய கைங்கர்யத்திற்கே தோட்டம் பயன்பட வேண்டும்.

(4) மரணதசையில் மலைமேலிருப்பது கூடாது.

(5) மலையிலுள்ள விலங்குகள், பக்ஷிகள் முதலியவற்றை வேட்டையாடுவது கூடாது.

(6) யாத்ரிகர்கள் பாதரக்ஷையணிந்து மலைமேல் ஏறக்கூடாது (வராஹபுராணம், முதற்பாகம், அத்யாயம் 44)

ஸ்ரீ ராமாநுஜர் நியமித்தவை:

(1) பெருமாளுக்கு வெள்ளிக்கிழமை திருமஞ்சனம். பச்சைக் கர்ப்பூரத்தால் திருமண் காப்பு, நாச்சியார் திருமொழி ஸேவை.

(2) வியாழக்கிழமை திருவாபரணங்களைக் களைந்து புஷ்ப அங்கி பெருமாளுக்கு ஸமர்ப்பிப்பது.

திருவேங்கடமுடையானது கைங்கர்யத்திற்கான ஏற்பாடுகள்:

(1) ஸந்நிதிக் கைங்கர்யங்களை அறிந்து ஓத்தோதுமாறு கலைகள் அறக் கற்ற ப்ரஹ்மசாரி ஏகாங்கி ஒருவர் கைங்கர்யத்திற்காக நியமிக்கப்பட்டார். அவருக்குச் சக்ரவர்த்தித் திருமகனது திவ்யமங்கள விக்ரஹம் ஒன்றை அளித்து, தனத்தைப் பரிபாலிக்க ஹநுமான் பொறித்த முத்திரை ஒன்றும் வழங்கினார்கள்.

(2) பின்பு வேங்கடநாத சடகோப யதி என்ற ஸந்யாஸி ஒருவர் இந்த ஸ்தானத்திற்கு நியமிக்கப் பெற்றார். பின்னர் நான்கு ப்ரஹ்மசாரிகள் இவருக்கு உதவிக்காக நியமிக்கப்பட்டார்கள்.

இவ்வாறே திவ்யதேசங்களிலே தமது ஸிம்ஹாஸநாதிபதிகளைக் கைங்கர்யத்திற்கு நியமிப்பது தமது ஏற்பாடாகவும் வெளியிட்டார், எம்பெருமானார்.

ஸந்நிதியில் கைங்கர்யங்கள் எவ்வாறு நடக்கவேண்டும் என்று யாதவராஜனுக்கு எடுத்துச் சொல்லி அவனைக் கைங்கர்யங்களை மேற்பார்வையிடும்படி நியமித்தார், எம்பெருமானார்.

முதல் யாத்திரையின்போது எம்பெருமானார் ஸ்ரீராமாயண காலக்ஷேபம் முடிந்தபின் ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருள விரும்பினார். அனந்தாழ்வான் அவரைப் பிரிய மனமில்லாமல் வருந்தியதால், எம்பெருமானார் தம்மைப் போல் ஒரு விக்ரஹம் அவதரிப்பித்து அதனை அவருக்கு அளித்தார். எம்பெருமானார் திருநாட்டிற்கு எழுந்தருளியபின்பு அவருடைய விக்ரஹம் ஒன்று திருவேங்கடமுடையானது அநுமதியின் பேரில் ஸந்நிதியில் பிரதிஷ்டை செய்யப் பெற்றது.



# 11. பெரும்பூதூர் மாமுனிக்குப் பின் ஆனுள் - ஓவியம்

(பேராசிரியர் நாகசாமி, சிற்ப நுட்ப ஆராய்வு)

ஸ்ரீ வைஷ்ணவ மரபில் கோயில் என்றுலே திருஅரங்கத்தைத்தான் குறிக்கும் திருஅரங்கத்தப்மான் மீது பாடாத ஆழ்வார்களே இல்லை. விசிஷ்டாத்வைத மரபை நிலைநிறுத்தி உலகை உய்ய வைக்க வந்த உடையவர், எம்பெருமானுர் அரங்கத்துக் கோயிலில் வசித்து, வாழ்ந்து அவ்வம்மானின் திருவடி நிழலில் என்றென்றும் வாழ்வாராகத் திருவடிசில் சமாதியிற் புகுந்த இடம் இன்றும் இககோயிலில் உயிர் நாடியாக உள்ளது ஆழ்வார்கள் பரம்பரையையும் ஆசாரியர் பரம்பரையையும் விரித்துரைக்க வந்த எம்பெருமானுரின் வரலாறு 'குருபரம்பராபிரா பவம்,' 'கோயிலொழுகு' முதலிய நூல்களில் குறிக்கப்பட்டுள்ளது. இவற்றில் ஆழ்வார்களுடைய வைபவங்கள் சுருக்கமாகவும் ஆச்சார்ய பரம்பரை, குறிப்பாக இராமானுஜரின் வைபவம் விரிவாகவும், கொடுக்கப்பட்டுள்ளன இராமானுஜரின் சமாதிக்கு எதிரில் உள்ள முன் மண்டபத்தில் மேல்விதானத்தில் பண்டைய கால ஓவியங்கள் இருக்கின்றன அவற்றில் இராமானுஜர் கோயில் நுழைவாயிலின் மேலே நம்மாழ்வார், அவரையடுத்து இராமானுஜர், மணவாள மாமுனி ஆகியோரின் ஓவியங்கள் அழகாகத் தீட்டப்பட்டுள்ளன. ஆழ்வார்களுடைய வரலாறுகளும் இங்கு ஓவியங்களில் காணப்படுகின்றன இவற்றில் பெரும்பாலானவை காலத்தாலும், கருத்தற்ற திருப்பணிகளாலும் அழிந்து போயின. எஞ்சியுள்ளவை வரலாற்றுக்கு இன்றியமையாதவை. இந்த ஓவியங்கள் முத்துவிஜயரங்க சொக்கநாத நாயக்கரின் காலத்தில் தீட்டியிருத்தல் வேண்டும்

எஞ்சியுள்ள ஆழ்வார்களின் வரலாற்றில் பெரியாழ்வார், கோதை, திருப்பாண் ஆழ்வார், கலியன், குலசேகர ஆழ்வார் ஆகிய ஆழ்வார்களின் வரலாறுகள் நல்ல நிலையில் உள்ளன இந்த ஓவியங்களைக் கூர்ந்து நோக்கும் பொழுது ஆழ்வார்களின் வரலாறு, குருபரம்பரையில் எவ்வாறு குறிக்கப்பட்டிருக்கிறதோ அதே முறைப்படி ஓவியங்களிலும் வரிசைப் படுத்தி காண்பிக்கப்பட்டுள்ளன. இந்த ஆண்டாளின் வரலாறு இருபடங்களில் காண்பிக்கப் பட்டுள்ளது.

(1) முதலில் ஆண்டாள் ஸ்ரீ வில்லிபுத்தூரில் நந்தவனத்தில் குழந்தையாகக் கிடைக்க அதைப் பெரியாழ்வார் தம்தேவியிடம் கொடுப்பது இடம் பெறுகிறது. குழந்தையின் காலின் கீழ் "திருநக்ஷத்திரம் ஆடிப்பூரம்" என்று தெலுங்கில் எழுதப்பட்டுள்ளது. அதன்கீழ் இவ்வரலாறு தெலுங்கு எழுத்துக்களில் குறிக்கப்பட்டுள்ளது.

(2) கோதை தன்னை மலர்மாலைகளைச் சூடிக்கொண்டு கண்ணாடியில் பார்க்கிறுள். அவளுக்கு எதிரில் பெரியாழ்வார் பூக்குடலையுடன் அமர்ந்திருக்கிறுர் அதன்கீழ் 'அம்மவாரு பூலு சூல்லுக அத்தம் சூசனதி' என்று தெலுங்கில் எழுதப்பட்டுள்ளது.

(3) & (4) பெரியாழ்வார் படுத்து உறங்குவது போலும் அவருக்கு மேலே சுவாமி கனவில் தோன்றி கோதை சூடிக்கொடுத்ததே தனக்கு உகந்தது எனக் கூறுவதும் காட்டப்பட்டுள்ளன படத்தில் பெரியாழ்வாரு சுவாமி சுவப்ன லப்தம்' என்று எழுதப்பட்டுள்ளது.

(5) கோதை படுத்துறங்கும் பெண்களை எழுப்புவதும் குளத்தில் மூழ்கி நீராடுவதும் காட்டப்பட்டுள்ளது.

(6) அதற்க்கடுத்து கீழ்ப்பகுதியில் கோதை படுத்து உறங்குவது போலவும், ரங்கநாதர் கனவில் அவளை மணந்துகொள்வது போலவும் காண்பிக்கப்பட்டுள்ளது. அதன்கீழ் தெலுங்கில் 'சூடிக்கொடுத்த நாச்சாரு வாரணமாயிரம் பாடியது' என்று எழுதப்பட்டுள்ளது.

(7) அடுத்து ஆண்டாளும், பெரியாழ்வாரும் எதிர் எதிரே அமர்ந்து காணப்படுகின்றனர். இருவருக்குமிடையில் தெலுங்கில் 'நாச்சாரு ஆனதிப்ப ட்ரபந்தமு நாச்சாரு திருமொழி திருப்பாவ' என்று நாச்சியார் திருப்பாவையும் பாடியது எழுதப்பட்டுள்ளது அதன் கீழ் தெலுங்கில் 'நாச்சாருந பெரியாழ்வாரு புத்திஞ்செரு' என்று எழுதப்பட்டுள்ளது

(8) இதற்கடுத்து பெரியாழ்வார் மீண்டும் படுத்து உறங்குவது போலவும், சொப்பனத்தில் ரங்கநாதர் நாச்சியாரை மணந்து கொள்வதற்கு பரிகலன்கள் அனுப்புவதாகக் கூறுவதும் காண்பிக்கப்பட்டுள்ளது.

(9) அதற்கடுத்து ரத்ன பல்லக்கில் நாச்சியாரை வைத்து சத்ரம், சாமரம் தாள ப்ருந்தாதிகளுடனே நாச்சியாரை ஸ்ரீரங்கத்திற்கு அழைத்துச் சென்று அழகிய மணவாளனிடத்தே பெரியாழ்வார் சேர்ப்பிக்கும் காட்சி சித்தரிக்கப்பட்டுள்ளது.

கோதையின் வைபவம் முழுவதும் இவ்வளவு அழகாக 250 ஆண்டுகளுக்கு முன்னரே ஓவியமாக தீட்டப்பட்டு அழகுடன் பொலிவது நாம் செய்த பெரும்பேறு!

# 12. அருளாளப்பெருமாள் எம்பெருமானுர்

[ஸ்ரீ உ. வே. K. V. கிருஷ்ண ஸ்வாமி ஐயங்கார், திருவல்லிக்கேணி]

புண்ணியம் செய்பவர், பாபம் செய்பவர் இவ்விருசாராரும் ஆசாரியனை அடைந்தே உய்ய வேண்டும் என்பது நாடறிந்த மரபு. "பாபிஷ்ட: க்ஷத்ர பந்துச்ச புண்டரீகச்ச புண்யக்ருத் | ஆசார்யவத்தயா முக்தௌ தஸ்மாத் ஆசார்யவான் பவேத் || ஆசார்யவான் புருஷோ வேத". ஆசார்யன் தன் இரண்டு கண்களால் சிஷ்யனுக்கு செய்யும் உபகாரம் முக்கண்ணனுன பரம சிவனென்ன, எட்டுக்கண்களையுடைய நான்முகனென்ன, ஆயிரம் கண்களையுடைய இந்திரனென்ன, "ஸஹஸ்ராக்ஷ:" என்னும் ஸ்ரீமந் நாராயணன் என்ன இவர்களாலும் செய்யமுடியாது என்று ஒரு நீதி நூல் கூறுகிறது.

ராமாநுஜர் காலத்தில் வாழ்ந்து, அவருடைய நான்கு முக்கிய சிஷ்யர்களில் ஒருவராகத் திகழ்ந்தவர் யக்ஞமூர்த்தி. அவர் ஓர் அத்வைத சந்யாசி. வட நாடும் தென்னுடும் சென்று அத்வைத ப்ரசாரம் செய்து ஜெயக்கொடி நாட்டிக்கொண்டிருந்த அளவிலே ராமாநுஜருடைய கீர்த்தியைச் செவியுற்று, அவரை வாதத்தில் வென்றிடத் திருவரங்கம் வந்து சேர்ந்தார். இருவரும் மதக்களிறு போன்றனர். மதமுற மருட்பொடு மருப்புற முத்தினம் சிதறப் பொருது இனம் பதமறக் கிளர்தரப் பாய்தரு பகடெனப் படிந்தனர் வாதில் இவர்கள். இவர்கள் வாதத்தில் சில அரிய பெரிய கருத்துக்கள் வெளிவந்தன. இந்த வாதப்போர் பதினெட்டு நாட்கள் நடந்தது. பிரதிவாதி பயங்கரம் அண்ணன் ஸ்ரீ வரவரமுனி சதகத்திலே

srivatsam

க்ருத்வா அநேகாந்யஹாந்யப்ரதிம நய மஹாசாஸ்த்ர ஸம்பாத கோரம்
தத்தாத்ருக் — வாத — யுத்தம் யதிபதி ரநயத் யம் விஜித்ய ஸ்வபக்ஷம் |
தத்ப்ரோக்தம் ஞாநஸாரம் வ்யவ்ருணுத கில யோ மேயஸாரம்ச ஸம்யக்
தஸ்மை நித்யம் நமஸ்யாத் வரவரமுநயே நிஸ்துலோதாரபூம்நே ||

என்று அருளிச்செய்கிருர். பதினேழாவது நாள் யக்ஞமூர்த்தியின் யுக்தி வாதம் ப்ரபலமாக, உடையவர் (ராமாநுஜர்), "நாளை ஆகட்டும்" என்று திருமடத்திற்கு எழுந்தருளி அன்றிரவு தமது திருவாராதனப் பெருமான் பேரருளாளனுக்கு திருவடி விளக்கி அமுது செய்வித்து, "நீங்காத அருளையுடைய நம்மாழ்வார், நாதமுனி, ஆளவந்தார் முதலிய முதலிகள் வளர்த்த தரிசனம் மயங்கும் நாள் வந்ததோ! மாற்றுன் வெம்பிடும் வகை அறியேன். என்னுடைய காலத்திலே இந்த தர்சனத்தை அழிக்க விலை கொண்டாடத் திருவுள்ளமாகில் செய்தருள்க," என்று விண்ணப்பம் செய்து அமுது செய்யாமல் கண் வளர்ந்தருளினுர். பேரருளாளனும் அன்று இரவு இவர் ஸ்வப்னத்தில், "இளையாழ்வீர்!" நீர் முசிப்பானேன்? உமக்குச் சமமான ஒரு சிஷ்யனை உண்டாக்கித் தந்தோம். உம்முடைய பரமாசார்யரான ஆளவந்தார் அருளிய மாயாவாத கண்டனம் மூலம் ஜயிக்கவும்," என்று அருளினுர். மறுநாள் காலை ராமாநுஜர் நித்ய கர்மாநுஷ்டங்களை முடித்துக் கொண்டு வாதப் போருக்குக் கிளம்பி சென்றுர். வாத சபையில் நுழையும் போதே ராமாநுஜருடைய தேஜஸ், காம்பீர்யம் முதலியவைகளைக் கண்டு யக்ஞமூர்த்தி, "தேவரீர் பேரருளாளன் கடாக்ஷம் பெற்றுத் தேகம் பொலிவும் சேர விளங்குகிறீர். நும் பெருமை அறிந்தேன்" என சடக்கென்று ராமாநுஜர் திருவடிகளைப் பற்றிக் கொண்டு தம்மைச் சிஷ்யனுக அங்கீகரிக்குமாறு வேண்டினுர். ராமாநுஜரும் சாஸ்திரப்படி

98

இவருக்கு கொ யஞோபவீதங்களை அணிவித்து, முக்கோல் முனியாக்கினர். பேரருளாளன் அருளாலே பெற்ற சிஷ்யனாதலால் இவர் அருளாளப் பெருமான் எம்பெருமானார் என்ற திருநாமம் நிலைக்கப் பெற்றார்.

கூரத்தாழ்வான், எம்பார், முதலியாண்டான் போன்ற முக்கிய சிஷ்யர்களுடன் இவரையும் ஸ்வீகரித்து சமமான அந்தஸ்து பெறச் செய்தார். நாளடைவிலே திருவரங்கம் பெரிய கோயிலில் சகல மரியாதைகளுடன் திவ்யப்ரபந்தங்களை இவருக்கு ஓதுவித்தார் ராமாநுஜர். குறுகிய காலத்திலேயே இம்மஹான் விசிஷ்டாத்வைத சம்பிரதாயத்திலே கலையிலங்கு மொழியாளராகத் திகழ்ந்தார்.

கூரத்தாழ்வான் திருவாய்மொழி மிகச் சிறுபிள்ளையான பட்டருக்கு ஓதுவித்தபொழுது பட்டர், "சிறுமாமனிசர் என்ற இடத்தில், சிறுமையும் பெருமையும் ஒரே வ்யக்தியில் ஒரே காலத்தில் எவ்வாறு பொருந்தும்? ஒன்று சிறுமனிசராய் இருக்கவேண்டும் அல்லது மாமனிசராய் இருக்கவேண்டும் – சிறுமாமனிசர் உண்டோ?" என்று வினவ - ஆழ்வானும், "சரீரத்தில் சிறுத்தும் ஞானத்தில் பெருத்தும் இருக்கிற அருளாளப்பெருமான் எம்பெருமானாரைப்போல" என்று சாதித்தபடி ஈடு வியாக்யானம் பகரும்.

அருளாளப்பெருமான் எம்பெருமானார் ஞான ஸாரம், ப்ரமேய ஸாரம் என்னும் இரண்டு (வெண்பாக்களான) நூல்களை இயற்றினர். மணவாள மாமுனிகள் இந்த ப்ரபந்தங்களின் மேன்மை அறிந்து நித்ய திருவாராதன க்ரமத்திலே சேர்த்தருளினர். இம்மஹானுக்குண்டான ஆசார்ய பக்தி சாலச்சிறந்தது. திருவரங்கத்திலே ஒரு வழிப்போக்கன் எம்பெருமானார் மடம் எங்கே என்று வினவ மற்றவன், "இரண்டு எம்பெருமானார் மடங்கள் உள்ளன. உனக்கு எது வேண்டும்?" என்ன, இதைப் பொறுக்காத அருளாளப்பெருமான் எம்பெருமானார் தம்முடைய மடத்தை இடித்து விட்டார்.

srivatsam

ஒரு சமயம் அநந்தாழ்வான், எச்சான், தொண்டனூர் நம்பி, மருதூர் நம்பி இவர்கள் உடையவர் திருவடிகளிலே ஆச்ரயிக்க வேணும் என்று எழுந்தருள, அவர்களை அருளாளப் பெருமான் எம்பெருமானார் ஸ்ரீ பாதத்திலே உடையவர் (ராமாநுஜர்) ஆச்ரயிப்பித்தருளினர். அருளாளப் பெருமானும், "குருவி கழுத்திலே பனங்காய் கட்டலாமோ?" என்று தயங்கிப் பின்னர் ஆசாரியர் நியமித்ததை சிரஸா ஏற்றுக்கொண்டு அவ்விதமே இவர்களை ஏற்றுக் கொண்டார். இவருடைய உபதேசம் ஸ்ரீமதே ராமாநுஜாய நம! என்றே ஸ்மரிப்பது என்பதாம்.

கிஞ்சிமூர் திருவம்சத்தை சார்ந்தவர்கள் இம்மஹானுடைய சிஷ்யர்கள். காஞ்சீபுரம் ஸ்ரீபாண்டவதூதர் (பாடகம்) ஸந்நிதியில் இவர் விக்ரஹம் எழுந்தருளப் பண்ணப்பட்டிருக்கிறது. இவர் விக்ரஹம் ஸ்ரீ வில்லிபுத்தூரிலும் உண்டு. கார்த்திகை மாதம் பரணி நக்ஷத்திரத்தில் இவர் அவதரித்தார். இவருக்குக் காஞ்சியில் உத்ஸவாதிகள் அதி விமரிசையாக நடந்து வருகின்றன. இம்மஹானின் பொன்னடியைத் தொழுது எம்பெருமான், எம்பெருமானார் இவர்களது திருவருளுக்குப் பாத்திரமாவோமாக.



ஸ்ரீரங்கம் ஸ்ரீ உடையவர் ஸந்நிதியில் சித்திரங்கள்



ஸ்ரீ உடையவர் ,சிஷ்யர்களுடன் (ஸ்ரீ உடையவர் ப்ரபந்நபாகையுடன்)



ஸ்ரீ உடையவர், ஸ்ரீ கூரத்தாழ்வானுடன் ஸ்ரீ யதிராஜர், கிரீடத்துடன்
Photo By Courtecy of Sri Nagasamy, Director of Archaeology, Madras.

# 13. ஸ்ரீ உடையவர் -- மஹாயோகீச்வரர்

## Transcendental Yogi

ஜோஸ்யர் S. கல்யாண ராமன், நங்கநல்லூர்

ஸ்ரீ பகவத் ராமாநுஜர் மஹாயோக விஜ்ஞான வித்பன்னர். அவரது வாழ்க்கைச் செயல்கள் பெரும்பாலும் வேத மறை விஜ்ஞானம் ஆதாரமாக விளங்குவன.

அநந்யசேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச: |
தஸ்யாஹம் ஸுலப: பார்த்த! நித்யயுக்தஸ்ய யோகிந: || [கீதா 8 — 14]

யோக தந்த்ர க்ரியாஸூத்ரம் என்பது ஆராய்ந்தால் புலப்படும். யோக விஜ்ஞான க்ரியையும், அடையும் ப்ரத்யக்ஷ பலனும் மறக்கமுடியாத அளவிற்கு நிலைநாட்டி, அனுபவித்துக் காட்டி யருளிய மாபெரும் யோகீச்வரர், ராமாநுஜர்.

நித்யாலங்கார பூஜை சின்னமயமான திருமண் காப்பு கைவசமில்லாத குறை வந்த இடமோ புதியதான நாடு; "பகவானே கதி" என்று பகவத் ஸ்மரணை அதி தீவ்ரமாகி ஸ்ரீ பகவத் ராமாநுஜர் பக்தி யோகத்தில் ஆழ்ந்துள்ளார். இரவு நேரம் யோக நித்ரையும், பகவத் நியம அருள் நோக்கும் கலந்து விட்டன. "ஸுலப: பார்த்த!" என்பதற்கிணங்க ஸ்ரீமந்நாராயணப் பெருமாள் ஸ்வப்னத்தில் தோன்றினார். தாம் யாதவ கிரியில் துளசிவனத்தில் அர்ச்சைச் சிலா விக்ரஹமாக, ஸ்ரீ கருடாழ்வாரால் கொண்டுவரப்பட்ட திருமண் குவியலின் மத்தியில் புதைந்து கிடப்பதைத் தெரிவித்து விட்டார். ராமாநுஜர் தாம் ஸ்மரித்தபடி திருமண், ஸ்ரீமந்நாராயணப் பெருமானின் சிலா விக்ரஹம் இரண்டையும் யோகவிஜ்ஞானத்தால் கைக்கனிபோல் அறிய லானார்.

மறுநாள் விடியற்காலை தொண்டனூரைத் தலைநகராகக் கொண்டு அரசாண்ட ஹொய்சால மன்னன் பிட்டிதேவ விஷ்ணுவர்த்தனிடம் இந்தக் கனவை வெளியிட்டார் ராமாநுஜர். மன்னனும் பணியாளருடன் ராமநுஜரைப் பின்தொடர்ந்தான் காடு, மலை, முதலியவற்றைக் கடந்து அங்கு மிங்கும் தேடி ஒரிடத்திற்கு வந்தான். அங்கு பசு ஒன்று ஒரு புற்றில் பால் சுரந்துக் கொண்டிருந்ததைக் கண்ட ராமாநுஜர், அங்கே ஸ்ரீ நாராயணன் இருக்கக் கூடுமென்றார். பணியாளர் அந்த இடத்தைச் சோதித்தனர். முதலில் திருமண் குவியல் கண்டனர்; பின்னும் சோதிக்க, ஸ்ரீ நாராயணனுடைய திருமேனியைக் கண்டனர். ராமாநுஜர் பக்தி பரவசராய் அந்தத் திருமேனியைக் கீற்றுக் கொட்டகையில் எழுந்தருளிவித்துத் தமது திருக்கரங்களாலே மூன்று நாட்கள் திருவாராதனம் செய்தார். இந்தத் திருமேனி இப்போது திருநாராயண புரத்தில் யாவராலும் வணங்கப்படுவதாகும்.

திருக்கோயில் கட்டி அதில் ஸ்ரீ நாராயணனைப் பிரதிஷ்டை பண்ணினபின்னர், உத்ஸவ மூர்த்தி இல்லையே என்ற சிந்தனை கொண்டார் ராமாநுஜர். "ஸ்மரதி நித்யச:"— அதி தீவ்ர பக்தியோக ஏகாக்ர ஸாதனை அளவு கடந்து விட்டது. எவ்வளவு தூரத்தில் இருந்தால் என்ன? எங்கிருந்தால் என்ன? உத்ஸவ மூர்த்தி ஸ்ரீராமப்ரியர் அலங்கார போக வைபவங்களுடன் டில்லி சுல்தான் அரண்மனையில் அவனது திருமகளது சிருங்காரப் பஞ்சணையில் சயனத்திருக்கோலத்தில் அமர்ந்திருக்கும் வைபவம் யோகத்தால் தெளிந்தது ராமாநுஜருக்கு. அவர் பரிவாரங்களுடன் அங்குச் சென்றார்.

சுல்தான், மிருகபல நாட்டுக்கு ராஜா. இவர் பகவத் பக்தியோக எதிராஜர்; ராஜவித்தையாகிய யோகவித்தை பிறவியிலே பற்றிநிற்கும் பெருமை உடையவர். சுல்தானிடம், மண்டிய ராஜதந்திரம்; இவரிடம் மலிந்தது யோக தந்திரம். ராஜ தந்திரத்தால் ஏமாற்றமடையும் சூழ்நிலை ஏற்பட்டது. யோக விஜ்ஞானதந்த்ரம், அதி தீவிர யோகத்தால் ஸ்ரீபகவத் ராமாநுஜர் சித்த லயயோக மகிமையினால் ஸ்ரீ ஸம்பத் குமாரர் இருக்குமிடம், எங்கிருந்து அவரைக் கூப்பிட்டு அழைக்க வேண்டும், என்ன பேர் சொல்லி அழைக்கவேண்டும் முதலியவற்றை விவரங்களுடன் அறிந்துகொண்டார். சுல்தானைக் கண்டார். தம்முடைய காரியத்தைத் தெரிவித்துக் கொண்டார். செல்வப் பிள்ளையைப் பெற்றுக் கொண்டு திருநாராயணபுரத்தில் பிரதிஷ்டை செய்து நித்திய நைமித்திக உத்ஸவங்கள் சிறப்பாகச் செய்வித்துக் களித்தார்.

யோகவிஜ்ஞானக் கலை, சட்டதிட்ட விதிகளை உணர்ந்தால் ஸ்ரீராமாநுஜர் பிறவியிலிருந்தே மஹாயோக புருஷர் என்பது புலப்படும். இவர் க்ரமாப்யாஸிகள் வர்க்கத்தைச் சேர்ந்தவரல்லர். பூர்வாப்யாஸி விட்டகுறை இயற்கையாகவே ஸந்தர்ப்பம் வரும்போது ஒட்டிக்கொண்டு வெளிக்கிளம்பியது. ஆதி வகுளாபரண சடகோபர், திருமழிசையாழ்வார் இவர்களைப்போல ராமாநுஜரும் பிறவியிலிருந்தே யோக விஜ்ஞானச் செல்வமுடையவர். இவர் அருளிய ஸ்ரீபாஷ்யத்தாலும் ஸ்ரீ கீதாபாஷ்யத்தாலும் இவர் மஹாயோகீச்வர் என்பது எளிதில் உணரலாகும்.

இவர் திருநாராயணபுரத்திலே பன்னிரண்டு ஸம்வத்ஸரங்கள் வாழ்ந்து, ஸ்ரீரங்கத்திற்குத் திரும்ப நினைத்தபோது, ஸந்நிதியில் பரிவாரங்கள், ஸ்ரீவைஷ்ணவர் யாவரும் இவரது திருவடிகளில் படிந்து, "தேவரீரது திருவடிகளைப் பிரிந்தால் நாங்கள் வாழமாட்டோம்" என்றனர். உடையவர் மனமிரங்கித் தகுந்த உபாயத்தை ஆய்ந்தார். தம்மைப்போல் அர்ச்சாமூர்த்தி ஒன்றைப் பஞ்சலோகங்களில் நிருமித்து பிரதிஷ்டை செய்து அவர்களுக்கு அளித்தார். அவர்களிடம், "நாம் உங்களுக்காக இங்கேயே உகந்திருப்போம்" என்று சொல்லித் தமது திவ்யசக்தி பரிபூர்ணமான விக்ரஹத்தின் முன் விரும்புவனவற்றைக் கேட்டால் விடை பெறலாகும் என்றார். அவ்வாறே அன்பர் அர்ச்சா விக்ரஹத்தை அநுபவித்தனர். இது உடையவரது மீச்சிறந்த யோகபலத்தாலே என்பது துணியலாகும்.



srivatsam

# 14. வடுக நம்பி (ஆந்த்ர பூர்ணர்)

எம்பார். S. விஜயராகவாச்சாரியார்

எம்பெருமானார் திருவடியை ஆச்ரயித்த பெரியோர்களில், வடுக நம்பி என்பவர், அவருடைய திருவடிகளே, இம்மை மறுமைப் பயன்களை அளிக்க வல்லது என்ற திடமான ம்பிக்கையுடனும், விச்வாஸத்துடனும், அந்தத் திருவடிகளுக்கே ஆராதனம் பண்ணிக் கொண்டி ருந்தார். ஒரு சமயம் உடையவரோடு பயணம் செய்கையில், வடுக நம்பி அவருடைய ருவாராதனமான பெருமாளையும், தம்முடைய திருவாராதனமான உடையவரையும் ன்றாக எழுந்தருளப் பண்ணி வந்ததைக் கண்ட உடையவர், வடுகநம்பியைக் கோபிக்க, வரும், "தங்கள் பெருமாளைவிட, என் பெருமானுக்கு என்ன குறை?" என்று கேட்டார்.

உடையவருடன் பெருமாளை ஸேவிக்கப் போனாலும், வடுகநம்பி உடையவர் விக்ர கத்தையே ஸேவித்துக் கொண்டிருந்தார். இதைக் கண்ணுற்ற எம்பெருமானார், "பெரிய பெருமாளுடைய திருக்கண்ணழகைப் பார்" என்று விளிக்க வடுகநம்பி, "என்னுடைய பெருமாள் பாஷ்யகாரர்) திருக்கண்ணழகைப் பார்க்க வேண்டுமே, அதில்தான் அடியேனுக்கு திருப்தி" ன்று சொன்னார். இவருடைய ஆசார்ய பக்தியின் ஆழத்தைக் கண்ட உடையவர் இவரைப் பூர்ண கடாக்ஷம் செய்தருளினார்.

எம்பொருமானார் பிரஸாதம் வழங்கினால், அதை இரண்டு கைகளாலும் ஏற்று உண்ட ன் தலையிலே கைகளைத் தேய்த்துக் கொண்டுவிடுவார் வடுகநம்பி. ஒரு நாள் உடையவர் வரைக் கோபித்துக் கொண்டு கைகளைக் கழுவிக் கொண்டு வரச் சொன்னார், மறுநாள் டையவருடன் கோயிலுக்குச் சென்ற பொழுது, அங்கு கிடைத்த அழகியமணவாளன் முதுண்ட பிராஸதத்தை, உடையவர் தாமும் ஏற்று, வடுகநம்பிக்கும் கொடுத்தார். அதை ண்டபின் உடனே வடுகநம்பி கைகளைக் கழுவிக் கொண்டார். "இது என்ன காரியம்?" என்று டையவர் வினவ, "தேவரீர் நேற்று இட்ட கட்டளையின் படிதானே செய்தேன்" என்று தலளித்தார் வடுகநம்பி.

ஒரு நாள் வடுகநம்பி, உடையவருக்குப் பால் காய்ச்சிக் கொண்டிருந்தார். அதுசமயம் பருமாள் புறப்பாடு ஸேவிக்க வடுக நம்பியைக் கூப்பிட்டார் உடையவர். அதற்கு வடுகநம்பி, தேவரீருடைய பெருமாளை ஸேவிக்க வந்தால் அடியேனுடைய பெருமாளுக்குக் காய்ச்சுகின்ற ால் பொங்கிப் போகும் ; ஆதலால் வர இயலாது " என்று சொன்னார்.

ஒரு சமயம் வடுகநம்பியின் இல்லத்திற்கு அவருடைய பூர்வாச்ரம பந்துக்கள் வந்து ங்கிப் போயினர். அவர்கள் சென்றவுடன், அவர்கள் தொட்டு உபயோகித்த பாண்டங்களை லாம் உடைத்து விட்டு, உடையவருடைய சீடர்களில் ஒருவரான முதலியாண்டான் பயோகித்துப் புழக்கடையில் எறிந்திருந்த பாண்டங்களை எடுத்து உபயோகித்தார் வடுகநம்பி. ம்முடைய ஆசார்யனிடத்தில் ஸம்பந்தம் உடையவரிடத்தில் அவருக்கு அவ்வளவு விசுவாஸம். வர் உடையவருடைய ஸ்ரீ பாத தீர்த்தம் தவிர வேறு எதையும் கொள்ளமாட்டார்.

உடையவருடைய ஸ்ரீ பாத தீர்த்தத்தையே உட்கொண்டு, அவருடைய திருவடி கைளையே பிரதிஷ்டை செய்து, ஆராதனம் செய்து வந்தார். தம்முடைய அந்திமகாலத்திலும், ம்முடன் நெருங்கினவர்க் கெல்லாம், கடைத்தேற வழி அந்த உடையவருடைய திருவடி களே என்று அடைக்கலம் காட்டியருளினார் வடுகநம்பி.

இவர் அருளிச் செய்ததுதான், 114 சுலோகங்கள் கொண்டதாக இருக்கிற "யதிராஜ பவம்" என்ற பாஷ்யகாரருடைய சரித்திரம் முழுவதும்.

---

# 15. சித்திரையில் செய்ய திருவாதிரை

பேராசிரியர் K. A. மணவாள ஐயங்கார், M.A , B O.L.

ஆழ்வார்கள் தாங்கள் அவதரித்த நாள்களிலும்
வாழ்வான நாள் நமக்கு மண்ணுலகீர் — ஏழ்பாரு
முய்ய வெதிராச ருதித்தருளும் சித்திரையில்
செய்ய திருவாதிரை.

செங்கயல் வாவிகளும் வயல்களும் சூழ்ந்த ஸ்ரீ பெரும்பூதூரில் இன்றைக்கு 961 ஆண்டுகளுக்கு முன்னே இளையாழ்வார் என்றும் இராமாநுஜர் சித்திரைத் திங்கள் திருவாதிரை நன்னாளில் திருவவதாரம் செய்தருளினார். அவருடைய அவதாரத்துக்கு முன்னே பற்பல மாயமதத்தவர்கள் வேதங்களுக்குப் பொருந்தாப் பொருள்களைக் கூறி மக்களை மயங்க வைத்திருந்தனர். இதனால் வேதங்களும் வருந்தின. நீசச் சமயங்களும் தலையெடுத்திருந்தன. இதுபோலவே இந்நிலவுலகில் மயர்வற மதிநலருளப்பெற்ற ஆழ்வார்களும், ஆசாரியர்களும் அவதரித்து அருமருந்தன்ன ஸ்ரீ ஸூக்திகளை உதவியிருந்தாலும் அவைகளுக்கு மக்களிடத்தில் அதிகமாகப் பிரசாரமில்லாமல் அந்நூல்களும் மங்கிக் கிடந்தன. மேலும் பரவாசுதேவனான எம்பெருமான் பரமபதத்தில் தனிக்கோல் செலுத்தும் தனிப்பெரு மூர்த்தியாய் எழுந்தருளியிருந்தும் அதில் திருப்தி அடையாமல் அடியார்களின் கூக்குரல் கேட்குமாறு திருப்பாற்கடலில் வெள்ளை வெள்ளத்தின் மேல் ஒரு பாம்பை விரித்துக் கண்வளர்ந்தருளக் கொண்டான். அங்கும் திருப்தியடையாமல் இராவண கம்ஸாதிகளை அழிப்பதற்காக இப்புவியில் இராமகிருஷ்ணாதி அவதாரங்களைச் செய்தான். அப்படிப்பட்ட விபவாவதாரங்களிலும் திருப்தி பெறாமல் கோயில் திருமலை பெருமாள் கோவில் திருநாராயணபுரம் போன்ற பலதிவ்யதேசங்களிலே அர்ச்சாவதாரமாக ஸேவை ஸாதித்து ஆச்ரிதர்களை ரக்ஷிக்கத் தலைப்பட்டான். இப்படிப் பல நிலைகளைக் கடந்து எம்பெருமான் வந்து கோயில்கொண்ட திவ்ய தேசங்களெல்லாம் காலக்ரமத்தில் நல்ல பரிபாலனமில்லாமையாலே வைதிக ஆகம முறையில் பூஜைகள் குறைந்தும் உத்ஸவாதிகள் நலிந்தும் க்ஷீணதசையை அடைந்திருந்தன.

Srivatsam

இப்படிப்பட்ட துர்தசையான காலத்திலேதான் "புண்யாம்போஜ விகாஸாய பாபத்வாந்தக்ஷயாயச | ஸ்ரீமான் ஆவிரபூத் பூமௌ ராமாநுஜ திவாகர:" என்று எம்பெருமானாரிற இராமாநுஜர் பிங்கள-சித்திரை-திருவாதிரையிலே ஸ்ரீ பெரும்பூதூரில் அவதாரம் செய்தருளினார். இராமாநுஜர் அவதரித்துக் கல்வி கேள்விகளிற் சிறந்து ப்ரம்மஸூத்ர பாஷ்யமியற்றிப் பிரசாரம்செய்தும், அருளிச் செயல்களுக்கு ஏற்றம் அளித்து பகவத் விஷய காலக்ஷேப கோஷ்டிகளை ஏற்படுத்தியும் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை நிர்தாரணம் செய்தும் ஸ்ரீ வைஷ்ணவத்துக்குப் பெருந்தொண்டாற்றினார். ஸகல திவ்ய தேசங்களிலும் ஆகம முறைப்படி பூஜையும், உத்ஸவாதிகளும் நடத்திக் கோயில் நிர்வாகச் சீர்திருத்தங்களையும் செய்து அனைத்து ஜீவராசிகளும் உய்யும் வண்ணம் உபதேசம் செய்தருளினார்.

இராமாநுஜருடைய அவதாரத்தால் விளைந்த இந்நன்மைகளையெல்லாம் திருவரங்கத்தமுனார் ாமியற்றிய நூற்றந்தாதியில்

> நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன நாரணனைக்
> காட்டிய வேதங் களிப்புற்றது தென்குருகை வள்ளல்
> வாட்டமிலா வண்தமிழ் மறை வாழ்ந்தது மண்ணுலகில்
> ஈட்டியசீலத் திராமாநுசன் தன்னியல்வு கண்டே

ன்று போற்றியுள்ளார். மேலும் "ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்தாமபிவர்த்தாம்" என்று டுழியூழி நாடெங்கும் கொண்டாடும்படியாக ஸகலவிதமான நன்மைகளும் உண்டாயின. இந்ந ம் வேதவேதாந்தங்கள் களிப்புறவும், பூர்வசாரியர்கள் பொலிவுறவும் எம்பெருமான் தானும் ன்புற்று மகிழவும் இரமாநுசருடைய திருவவதாரம் சித்திரையில் செய்ய திருவாதிரையில் மைந்தது.

ழிக்கமுடியாத உறவு — ஸம்பந்தஞானம்

எம்பெருமான் சேதனர்களையும் அசேதனங்களையும் சரீரமாகக் கொண்டவன். அவன் பருமையில் தலைநின்றவன். நாம் சிறுமையில் தலை நிற்பவர்கள். நமக்கும் எம்பெருமானுக்கும் ள்ள உறவு ஒழிக்க ஒழியாத உறவு. அந்த உறவை நமக்கு உணர்த்துபவனே ஆசாரியன். வாத்மாவுக்குப் பரமாத்மாவோடே நவவிதஸம்பந்தங்கள் உள்ளன. 1) பிதாபுத்ர பாவம், 2) ஷ் பரக்ஷக பாவம், 3) சேஷ சேஷி பாவம், 4) பர்த்ரு பார்யா பாவம், 5) ஜ்ஞாத்ரு ஜ்ஞேய ாவம், 6) ஸ்வஸ்வாமி பாவம், 7) ஆதார ஆதேய பாவம், 8) சரீராத்ம பாவம், 9) போக்த்ரு பாக்ய பாவம். இந்த ஒன்பது வகை ஸம்பந்தங்கள் நமக்குத் திருமந்திரத்தால் தேறுகின்றன. ந்த ஸம்பந்தத்தை உணர்த்துபவன் ஆசாரியன். நம 1 பதத்தாலே காட்டப்படுகின்ற ஸ்வரூப ரோதி, உபாய விரோதி, ப்ராப்ய விரோதி என்ற மூவகை விரோதிகளையும் உணர்த்துபவனும் சாரியனே. இவ்வளவோடு நில்லாமல் ப்ராப்யமான புருஷார்த்தத்தையும் ஆசாரியனுலே ாட்டிக் கொடுக்கப்படும் ஞானசம்பந்தமே நமக்கு மேலான நன்மைகளுக்கு எல்லை. இந்த ானத்தால் நமக்கும் எம்பெருமானுக்கும் உள்ள உறவு தெரிந்து விட்டால் நாம் வாழ்ச்சி பெற வாம். இக்கருத்தைத்தான் பிள்ளை லோகாசாரியருடைய திருவடிகளில் ஆச்ரயித்து ஸகலரஹஸ் ார்த்தங்களையும் கேட்டு உஜ்ஜீவிக்கப் பெற்ற விளாஞ் சோலைப் பிள்ளை என்பவர் தாமியற்றிய ப்தகாதையில் மிக அழகாகவும் தெளிவாகவும் விளக்கியுள்ளார்.

> அம்பொன் னரங்கர்க்கு மாவிக்கு மந்தரங்க
> சம்பந்தங் காட்டித் தடைகாட்டி — உம்பர்
> திவமென்னும் வாழ்விற்குச் சேர்ந்தநெறி காட்டு
> மவனன்றோ ஆசா ரியன்.

த்தகைய உறவை நமக்கு எடுத்துக் காட்டி நம்மை நல் வழிப்படுத்திபவர் இராமநுஜர்.

சாரிய பக்தி

ஆசாரிய பக்திக்கு எடுத்துக்காட்டாகச் சொல்ல வேண்டுமானல் மதுரகவிகளையும், வடுக ம்பியையும், பின்பழகராம் பெருமாள் ஜீயரையும் முக்கியமாகச் சொல்லலாம். இவர்களெல் ரும் ஆசாரியனையே எல்லாமாகப் பற்றி நின்றவர்கள். இவர்களுள்ளும் பின்பழகராம்

பெருமாள் ஜீயர் பரமபதத்திலும் நசையில்லாமல் தம் ஆசாரியராகிய நம்பிள்ளைக்குத் திருவால வட்ட கைங்கர்யம் செய்வதை உகந்து, அடிமை செய்து தொண்டாற்றினர். அந்நிலையை எல்லோரும் மனத்தாலே நினைந்து ஆசார்ய கைங்கர்யத்தில் ஈடுபட வேண்டுமென்று விசதவாக் சிகாமணிகளான நம் மணவாளமா முனிகள் உபதேசரத்தின மாலையில்

> பின்பழகாரம் பெருமாள் சீயர் பெருந்திவத்தில்
>
> அன்பதுவுமற்று மிக்க வாசையினால்—நம்பிள்ளைக்
>
> கானவடிமைகள் செய்பந் நிலையை நன்னெஞ்சே
>
> ஊனமற வெப்பொழுது மோர்

என்று கொண்டாடியுள்ளார்.

## கருணைக்கடல்-இராமாநுஜர்

எம்பெருமானாராகிற ராமாநுஜருக்கு முன்னேயும் பின்னேயும் பல ஆசாரியர்கள் தோன்றிப் பெரிய உபகாரங்களைச் செய்திருந்தாலும் இராமாநுஜரைப் போல் கருணைக்கடலாய் க்ருபாமாத்ரப்ரஸன்ன தேசிகராய் அவர்கள் விளங்கினர்கள் என்று விசேஷித்துச் சொல்ல முடியவில்லை. இராமாநுஜர் ஒருவரே "தயைகஸிந்து" என்றும், "தயாம்புராசி" என்றும், "காரேய் கருணை இராமாநுஜர்" என்றும் பலபடியாகப் போற்றப்பட்டுள்ளார்.

srivatsam

ஆசாரியனுடை நியமனத்தை மீறினல் நரகம் ஸித்திக்கும் என்று தெரிந்திருந்தும் தாம் ஒருவர் நரகம் போனாலும் ஜனைத்துலகமும் இம்மந்திரத்தால் உய்ந்து போகும் என்றால் அதுவே தாம் செய்யத்தக்கது என்று பெருங்கருணையினாலன்றோ அன்று திருக்கோட்டியூரில் வரம் பறத்து ஆசையுடைய அனைவருக்கும் மந்திரத்தை உபதேசித்தார். வாரி வழங்கிய அவருடைய வள்ளன்மைக்கு—கருணைக்கு இவ்வுலகில் ஈடு இணை ஏது? "ஏரார் எதிராசர் இன்னருள்" என்று நம் மணவாள மாமுனிகளும் இதனை ஏற்றிப் போற்றியுள்ளாரன்றோ!

## நடு நாயகக் கல்

ஆசாரியர்களாகிற பொன்னலங்காரம் பெரிய மாலையில் நடுநாயகமணியாய்த் திகழ்பவர் இராமாநுஜர் என்று தூப்புல் பிள்ளையாகிய வேதாந்ததேசிகரும் "அமுநா தபநாதி சாயிபூம்னா யதிராஜேன நிபத்த நாயகச்ரீ: | மகதீ குருபங்க்தி ஹாரயஷ்டி: விபுதானாம் ஹ்ருதயங்கமா விபாதி" என்று யதிராஜ ஸப்ததியில் கொண்டாடியுள்ளார். இப்படிப் பல்லாற்றானும் புகழ்வாய்ந்த எம்பெருமானாருடைய பரமவிலக்ஷணமான திவ்ய மங்கள விக்ரஹ ஸேவையை "காஷாய சோபிகமநீய சிகாநிவேசம், தண்டத்ரயோஜ்வல கரம் விமலோபவீதம், உத்யத் திநேச நிப முல்லஸ தூர்த்வ புண்ட்ரம் ரூபம் தவாஸ்து யதிராஜ த்ருசோர் மமாக்ரே" என்றும், "உபவீதிந மூர்த்வபுண்ட்ரவந்தம், த்ரிஜகத் புண்யபலம் த்ரிதண்ட ஹஸ்தம், சரணாகதஸார்த்த வாஹமீடே சிகயா சேகரிணம் பதிம் யதீனாம்" என்றும் நம் பூருவர்கள் பரமபோக்யமாகப் பேசி அனுபவித்துப் போந்தார்கள். இன்றும் ஸ்ரீபெரும்பூதூரில் அப்படியே ஸேவித்தும் கைங்கர்யங்களைச் செய்யும் நாம் வாழ்ச்சி பெறலாம்.



## 16. Address by Sri. T. S. RAJAN, Chairman, T. V. S. & Sons Ltd., at the Ubhaya Vedantha Pravarthana Sabha, Malleswaram, Bangalore, on the occasion of the 961st Birthday celebraction of Sri Ramanuja

Respected Elders, Ladies and Friends !

I am extremely happy to inaugurate this function organised by all the Sri Vaishnava Sabhas in Bangalore City, to celebrate the 961 st Birthday of Sri Bhagavad Ramanuja. Scholars in our country and abroad consider Sri Ramanuja as a genius, endowed with a keen intellect, as a teacher of Vedanta, well versed in the intricacies of the scriptures and a sage whose heart overflowed with love for his fellowmen. His contribution to the interpretation of the Vedic Religion, according to the ancient philosophy of Visishtadwaita, earned for this School of Vedanta the name of "Sri Ramanuja Darsana" after his time. This function commemorating the completion of sixteen sixty year cycles after the birth of this great philosopher-saint is bound to give to all the members of the Sri Vaishnava community and all Hindus in general, happiness, fulfillment and a sense of achievement in the growth of the Visishtadwaita philosophy and the way of life propounded by the great Acharya.

Our land has the distinction of giving birth to a number of Rishis, Yogis and Bhaktas during the past thousands of years. But, such great men have not left for posterity any information about their own lives. The divine utterances of many such sages are, however, available to us today. Many of our people follow the paths shown by such sages in their effort to transform a life of sorrow to one of lasting happiness. The grand objective of these sages was only the attainment of the greatest by the realisation of God and they spread amongst our people their mesage of God-love and disciplined life, without the least trace of ego. Any information we have on the lives of such sages has been solely obtained through the writings of some of their disciples and admirers. But, the real commentaries on their life and mind are contained in the magnificent works which they have left to posterity. Sri Ramanuja has written nine works including commentaries on Brahmasutra and Bhagavad Gita. The only way in which we can repay for his services to our Society is to learn his works and follow the path laid out by him for leading a good life and realise God. I am happy to know that discourses on the different works composed by Sri Ramanuja and the Sri Vaishnava philosophy and way of life will be held during this series of functions.

The period Ramanuja lived was an important one in the religious history of our Society. A large section of our people were confused by the propaganda of non-Vedic religions. Sri Bhagavad Ramanuja arrested the atheistic and non-Vedic faiths and spread the

Gospel of God-love and Vedic Dharma. After his time, a number of missionaries like Sri Ramananda, spread the Gospel of Bhakti in North India following his foot-steps. In the South, the Sri Vaishnava faith and Vedic Dharma gained strength due to the missionary efforts of Sri Ramanuja. In an atmosphere of dry book-lore and sectarian fights, he taught the true doctrine based on the Vedas, spread the love of God and transformed the lives of large sections of our people. The many Sanyasis and Teachers who followed his foot-steps have established his philosophy and the way of life in our country and led millions of people in the path of Supreme Good. The guiding force for all these activities was the tremendous organisational effort put in by Sri Bhagavad Ramanuja during his life-time for the spread of Sri Vaishnava faith and the protection of the Sampradhaya. In the history of Hindu Religion, we find very few preceptors who can be compared to Sri Ramanuja in their organisational efficiency or the impact created by them on the society. It is stated that for the spread of Sri Vaishnavism and for performing Pancha Samskaras, Sri Ramanuja appointed 74 Simhasanadhipatis, 700 Jeers, 12000 Ekantis and a number of persons for doing various services in Vaishnava temples and for managing them. It will not be an exaggeration to say that he was mainly responsible for the revival and growth of the ancient Sri Vaishnava faith during the past millennium in our country. The commentaries of Sri Ramanuja on the Brahma Sutras and several portions of the Upanishads have been accepted by many scholars in our country and abroad as scholarly, logical and in conformity with the views and experience of our ancient Rishis, Yogis and Alwars. Dissertations on the important aspects of Sri Ramanuja Siddhanta are expected to be presented in the Sadas, which has been arranged during these functions. I shall not, therefore, refer to the cardinal tenets of Sri Ramanuja Siddhanta at the moment. However, I would like to mention one or two things from the personal life of Sri Ramanuja, which I believe, conveys an important message to our present generation.

srivatsam

Sri Ramanuja was born in a Vedic Brahmin family and was well versed in all the Vedas and Shastras. However, he was absolutely free from ego with regard to his high caste or attainments in scriptural knowledge. There was a person by name Thirukkachi Nambi in a place called Poovirundavalli, near Madras, who belonged to the Vaisya caste. He was engaged in temple services in the Shrine of Sri Devaraja in Kanchipuram. Sri Ramanuja considered this humble devotee as his Acharya and longed very much to invite him to his house, feed him and partake of the Bhagavata Sesha. He had to walk 18 times to Thirukkottiyur to request the great Acharya Nambi to impart the meaning and significance of the Mula Mantra. After obtaining the required knowledge from Sri Thirukkottiyur Nambi, Sri Ramanuja invited all the citizens of the town to the local temple and revealed to them the Mula Mantra, its significance and meaning, in spite of the fact that his Guru had ordered him not to reveal the same to anybody. The Acharya got angry on hearing this news and summoned Sri Ramanuja to seek an explanation for this transgression of his orders. Sri Ramanuja humbly replied that he was prepared to go to hell for the sake of countless individuals, who were ensured of salvation by listening to and practising the teachings. The Acharya was greatly moved by the great love which Sri Ramanuja entertained for his fellow-men and blessed him for the success of his mission. During this auspicious occasion, when we are celebrating the 961st Birthday of the great Acharya, let us remember his overwhelming love for his follow-beings, his great humility by which he considered himself the servant of all Bhaktas, his great devotion to the path of the Vedas and the Vaishnava faith,



srivatsam

ஸ்ரீ ராமாநுஜர் தமது த்ரிதண்டம் என்று பாராட்டிய முதலியாண்டான் அவதார ஸ்தலம். பேட்டை என்கிற வரதராஜபுரம்



ஸ்ரீ ராமாநுஜர் தமது பவித்ரம் என்று பாராட்டிய கூரத்தாழ்வான் அவதார ஸ்தலம், கூரம்



ஸ்ரீ பார்த்தஸாரதி, ஸ்ரீ ஆண்டாள் (போகி திருக்கல்யாணம்)


srivatsam

ஸ்ரீ கைரவணியில் திருப்பள்ளியோடம் (தெப்பம்)

ப்ருந்தாரண்ய, நிவாஸாய பலராமாநுஜாய ச ।
ருக்மிணீ, ப்ராணநாதாய பார்த்தஸூதாய மங்களம் ॥

ஸ்ரீமந் மஹாபூதபுரே ஸ்ரீமத் கேசவ யஜ்வந : ।
காந்திமத்யாம் ப்ரஸூதாய யதிராஜாய மங்களம் ॥

and his resolves to establish them among the people and his great God-love through which he absolutely surrendered himself to the Divine and made himself an instrument in His hands. May the Lord Almighty give us the privilege to understand and tread the path laid out by him for the fullfilment of human life.

I wish to offer a suggestion to the Sri Vaishnava Sabhas in this City, as a programme to be followed, in commemoration of the 961st Birthday of the great saint. Efforts should be taken by all the Sabhas to spread among numbers of our younger generation, the teachings of Sri Ramanuja and the way of life which he has shown for the realisation of the Supreme purpose of man. Whatever knowledge or practice is implanted in our youth, is capable of bearing fruit when they grow old. Today, our younger generation is drifting like a ship without direction, absolutely neglecting the great teachings of our scriptures and the various practices contained in them for the realisation of the Supreme purpose of human life. The one great service which persons who desire the welfare of our society should do is, the promotion of discipline in our younger generation, the spread of the teachings of great sages like Bhagavad Ramanuja among them and the inculcation of the many religious disciplines laid down in our scriptures upon our youth for adherence throughout their life. I am sure that all the Sri Vasihnava Sabhas will come forward to undertake this laudable work, following these celebrations.

I thank the organisers of these celebrations for giving me an opportunity to inaugurate and take part in this function.

srivatsam



Srimathee Ramanujaya Namaha !

# 17. THE CLARION CALL OF SRI RAMANUJA

(By Sri A. S. Narasimhachariar, Vasudevapuram.
Vice-President, The Triplicane Thengalai Srivaishnava
'Brahmins' Sabha, Madras-5.

Bhakti is not mere emotionalism but includes training of the will as well as the intellect. It is knowledge of God as well as obedience to His will. It finds its culmination in an intuitive realisation of God. The influence of this Bhakti cult and the sermons/directions of our Great Seers and Saints cannot be so easily analysed. It should be enjoyed in full measure by every individual. In the words of Swami Vivekananda "Influence is like the gentle dew that falls unseen and unheard and yet brings into blossom, the fairest of roses, has been the contribution of India to the thought of the world. Silent, unperceived, yet omnipotent in its effect, it has revolutionised the thought of the world". The message of Sri Ramanuja is not merely for a particular sect, clan or some division in society. It is universal in appeal and the message is valued in great measure even now applicable to the modern world.

The current trend in world thought is that any branch of knowledge whether of science or of other discipline has no importance unless it has proven social benefits. In spite of the antagonism towards this trend from votaries of fundamental (scientific) knowledge, the current trend in the world thought is a welcome one. It is an era of questioning the logic behind and the utility of any action ordained by any religion. In the modern world ritualistic practices are losing their significance. Such practices, conventions and other systems would be respected only when they are logically examined, analysed and proved to be beneficial to the society at large. In this context, the message of Sri Ramanuja should be valued great. His greatness lies in propounding a philosophy which besides being universal, concentrates on the core social values with due recognition of the flexibility for a change in these values. No other Indian system of philosophy is so much broad based in its coverage of social life and in that respect the philosophy of our great Master Sri Ramanuja shines bright and still survives in spite of the onslaught by the so-called Rationalistic theories.

Buddhism and Jainism concern only Ahimsa while Advaita shuns social aspects under the garb of Maya Theory. Along with his spiritual contribution to philosophy, Sri Ramanuja exhibited that his tenets and philosophy were so much involved with religion that they should be practised. In brief, they are behavioral. Numerous instances could be cited from Sri Ramanuja's life to substantiate the statement that his message is universal in tone and content and in particular for the betterment of the masses without any discrimination of caste/clan and its impact on society is something magnetic in effect. This impact cannot be easily described in words. His message speaks volumes in this respect.

Truth is beauty of life. Life without Truth is like a well furnished, well decorated and well ventilated palatial building which has no resident in it, which is vacant and for that reason looks desolate. Sri Ramanuja's message and pronouncements are Truth and the effect of Truth cannot be so easily questioned or destroyed. Mahatma Gandhi believed in God. He used to say, "No one can join the Non-cooperation movement unless he is first a believer in God." Belief in Truth is alone the salvation for mankind. Thus the message of Sri Ramanuja is Truth and is applicable even in the modern world.

Music in India is being treated as an offering to God. However competent a musician might be, he would never rise to the highest plane unless he offered his music to God. Milton in his great Epic "Paradise Lost" prays to God of Music for his triumph in writing and completing his great epic. Even westerners have such a faith in God is Love and God is Truth. Sri Thyagayya's utterance "Nithi sala sowkyama-Ramudu Sannidhi Sala sowkyama" brings forth the value of music. Nalayira Divyaprabandam set to music is really invigorating and enchanting and keeps the singer in highest realms of ecstasy and the scintillating effects of pasurams full of rythmic tones and rhyming words are the offering to God and one could feel such pleasures in attending the Prabanda Goshti reciting the hymns in Temples. From Guruparambarai, we learn that Sri Nammalwar had in his dream the vision of Periaperumal showing an idol Bhavishyat Acharya and declaring that Sri Ramanuja would be born soon to purify the society and for the well-being of the humanity at large. Sri Nammalwar in his ecstasy praised the Lord and issued forth his "Poliga Poliga.". Probably the benefit to society at large should not suffer a set-back because of undesirable divisions in society was God's will. This truth was put in the pious mouth of Sri Nammalwar to pronounce "Irukkar mozhiyal ........." (Thiruviruttam). Sri Thondaridippodi Alwar preached Paraspra sesha bhavam (mutual respect) cutting through the caste barriers. It is clear in his pasuram "Amaravorangamarum"! (Thirumalai). Sri Ramanuja's disregard for caste-barriers is evident from his preference to put his hand round the shoulder of Pillai Urangavilli Dasa after his bath to perform puja and his sishyabhava under Thirukkachi Nambigal. It is rather late in the day that we have realised that caste division has stood in the way of social development in mental and behavioral spheres.

The tenets of Sri Ramanuja's philosophy can in fact be put in a few lines since they are completely drawn in the drop of social life. Still when once we begin to examine the implications of his message, greater and greater pious conclusions are drawn and there can be no end to such an analysis. It is fathoms and fathoms deep and one's whole life may not be sufficient to understand the truth behind his philosohpy and moral teachings and pronouncements. Moral life is real and with no eye witness's report of what happens after the soul leaves the body. Thirumangai Alwar puts the realities of life in his doctrinal

philosphy of Bagavata kainkaryam above Bagavat kainkarysm. In this context we should note the broad-mindedness of our Acharyas. "Unninru Uyirkku Utranavey Seithu— —" "Palluyirkkum Vinnin Thalai Ninru Veedalippan - Emmirrmanujan" (Ramanuja Noorandadhi). It is befitting that the contemporaries of Sri Ramanuja and later Acharyas kept to the conventions of the unity of Vaishnavites under the banner of Sri Ramanuja Dasan. It is therefore now the time for this universel brotherhood to be consolidated so as to spread throughout the globe the message of Sri Ramanuja to enlighten mankind on principles of truth, piety and absolute faith in God. The Pingala year is really fortunate in witnessing the celebrations of Sri Ramanuja's 961st birthday by all Vaishanavites.

The Udayavar Kaikarya Sabha, Triplicane is really to be congratulated for celebrating the 961st birthday of Sri Ramaunja in all its prestine glory cnd perfect piety and devotion to the great Master. It is also gratifying to note that this Sabha, a premier institution is carrying on the kainkaryam at the lotus feet of Sri Ramanuja for pretty long years, the sponsers of the sabha being Ashtagotram family known for their charitable endowments, with its governing body having scholars and in particular Sri T. S. Rajagopala Iyengar, the erudite scholar as the president, assisted by the secretaries Sri C. Parthasarathy Iyengar and K.V. Srinivasan and Sri Venkatesa Iyengar and also by the enthusiastic T.A. Theruvenkatachariar of T.V S. Above all it is befitting that this governing body of the sabha is also directed by a special committee for the celebrations , with Sri N. Krishnaswamy Reddiar, Retd. High Court Judge, as the chairman. The Sabha has done an excellent piece of service true to its name in celebrating the 961st Birth of Sri Ramanuja.

*Emberumanar Thiruvadigalae Saranam.*
*Jeer Thiruvadigalae Saranam.*



srivatsam

*The Editorial Board Expresses its grateful thanks to*

Sri **BHARANIDARAN**, *for Photographs of Melkote, to the*

*Printers of the Various Sections of the Souvenir*

*and in paritcular to*

VASANTHA AGENCIES, BALAJI POWER PRESS, LAKSHMI VIJAYAM PRESS, RATNAM PRESS, AND TO THE BALUSSERY PRESS FOR PRINTING COLOUR BLOCKS AND WRAPPER.

srivatsam

— : o : —

